# சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்கள்

காரைககுடி அழகபபா பலகலைககழக முனைவர் படடததிறகாக

(Ph.D) அளிக்கபெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**R.இளங்கோ**


பதிவு எண் : அ4/P.HD517/9285


நெறியாளர்

முனைவர் **மு.பாண்டி**






**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

காரைககுடி


**நவம்பர் 2005**

முனைவர் மு.பாண்டி எம்.ஏ., எம்.,ஏ., எம்.ஃபில்., பி.எச்.டி.,
இணைப்பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630 003.

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

**'சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்கள்'** என்னும் பொருளில் முனைவர் (Ph.D.) பட்டத்திற்காக திரு. ஆர். இளங்கோ அவர்கள் செய்துள்ள இவ்வாய்வு காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறையில் (பகுதிநேரம்) அவரால் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும், இவ்வாய்வின் மீது வேறு எந்தப்பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்படவில்லை என்றும், நான் அறிந்தவரை இப்பொருளில் இதுவரை வேறு எவரும் ஆய்வு செய்யவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.

இடம்: காரைக்குடி
நாள் : 03.11.05

(மு. பாண்டி)
மேற்பார்வையாளர்.

துறைத்தலைவர்
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி-630 003.

துறைத்தலைவர்
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி-630 003.

**R.** இளங்கோ எம்.ஏ, எம்.ஏ., எம்ஃபில்., எம்.எட்., பி.எல்.,
முதுநிலை விரிவுரையாளர்,
ஆறுமுகம்பிள்ளை சீதையம்மாள் கல்லூரி,
திருப்பத்தூர்.

# ஆய்வாளரின் உறுதிமொழி

**'சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்கள்'** என்னும் பொருளில் முனைவர் (Ph.D.) பட்டத்திற்காகச் செய்யப்பட்டுள்ள இவ் ஆய்வு என் சொந்த முயற்சியில் உருவானதேயாகும். இதற்குமுன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ் ஆய்வேடு அளிக்கப்படவில்லை என்று உறுதி கூறுகின்றேன்.

இடம்: காரைக்குடி

நாள் : 03.11.07

R. [signature]
(R. இளங்கோ)
ஆய்வாளர்

உறுதிக் கையொப்பம்.

**மேற்பார்வையாளர்**

[signature]

துறைத் தலைவர்
...துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி-630 003.

# நன்றியுரை

**"சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்கள்"** என்னும் தலைப்பில் ஆய்வினை மேற்கொள்ளுவதற்கு ஒப்புதல் அளித்த காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் அவர்களுக்கும் பதிவாளர் அவர்களுக்கும், நன்றி.

காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகத்தில் பகுதிநேர ஆய்வாளராச் சேர்ந்து **"சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்கள்"** என்னும் தலைப்பில் ஆய்வு மேற்கொள்ளுவதற்கு ஒப்புதல் அளித்த அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் துறைத்தலைவர் முனைவர் **மு.பாண்டி** அவர்களுக்கு என் உள்ளார்ந்த நன்றியினை தெரிவித்துக்கொள்கிறேன்.

காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகத்தில் பகுதிநேர ஆய்வாளராகச் சேர்ந்து முனைவர் பட்டத்திற்காக ஆய்வு செய்வதற்கு இசைவளித்துப் பல்லாற்றானும் ஊக்கப்படுத்திய திருப்பத்தூர் ஆறுமுகம்பிள்ளை சீதையம்மாள் கல்லூரியின் தாளாளர் **நா. ராமேஷ்வரன்** அவர்களுக்கும் கல்லூரியின் முதல்வர் அவர்களுக்கும் பெரிதும் நன்றி.

இவ் ஆய்வுமுயற்சி தொடங்கப்பெற்று முழுமைப்பெறத் தோன்றாத் துணையாய் விளங்கிய எனது ஆய்வு நெறியாளர் முனைவர் **மு.பாண்டி** அவர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வு தொடங்கிய நாள் முதல் பல்லாற்றானும் உதவிகள் புரிந்தும், தட்டச்சுப் படிகளைத் திருத்தியும் உதவிய மதுரை யாதவர் கல்லூரித் தமிழ்

உயராய்வு மையத்தின் பேருரையாளர் முனைவர் **வீ. மோகன்** அவர்களுக்கும் என் அன்பு கலந்த நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

கள ஆய்வில் தகவல் சேகரிப்பின் போது வேண்டிய தகவல்களைக் கொடுத்துதவிய தகவலாளர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்வுக்கு வேண்டி நூல்களைக் கொடுத்துதவிய மதுரை காமராசர் பல்கலைக்கழக நூலகத்தார்க்கும், காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழக நூலகத்தாருக்கும் மதுரை மத்திய நூலகத்தார்க்கும், திருப்பத்தூர் ஆறுமுகம்பிள்ளை சீதையம்மாள் கல்லூரி நூலகத்தாருக்கும் என் நன்றி.

ஆய்வேட்டினைத் தெளிவாகவும் செம்மையாகவும் தட்டச்சுச் செய்து கொடுத்துதவிய மதுரை **அழகர் கம்ப்யூட்டர்ஸ்** நிறுவனத்தார்க்கும் நன்றி.

R. **இளங்கோ**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம் | - | அகநானூறு |
| இளம் | - | இளம்பூரணர் |
| உரை.ஆ | - | உரையாசிரியர் |
| கலி | - | கலித்தொகை |
| கழகம் | - | திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் |
| கிளவி | - | கிளவியாக்கம் |
| குறள் | - | திருக்குறள் |
| குறுந் | - | குறுந்தொகை |
| சிலப் | - | சிலப்பதிகாரம் |
| செ | - | செய்யுள் |
| சொல் | - | சொல்லதிகாரம் |
| திருமுருகு | - | திருமுருகாற்றுப்படை |
| தொகு.ஆ | - | தொகுப்பாசிரியர் |
| தொல் | - | தொல்காப்பியம் |
| நச்சி | - | நச்சினார்க்கினியர் |
| நற் | - | நற்றிணை |
| நாலடி | - | நாலடியார் |
| ப. | - | பக்கம் |
| பக் | - | பக்கங்கள் |
| பட்டினப் | - | பட்டினப்பாலை |
| பதி.ஆ | - | பதிப்பாசிரியர் |
| பா.எண் | - | பாடல் எண் |
| புறம் | - | புறநானூறு |
| பெரும்பாண் | - | பெரும்பாணாற்றுப்படை |

# உள்ளுறை

# ஆய்வு அறிமுகம்

மனிதனுடைய தேவைகள் மனிதனைச் சமூக உயிரியாக மாற்றி இருக்கின்றன. மனிதன் கூடிவாழும் போது தன் தேவைகளை நிறைவு செய்து கொள்ளவும், தங்களுக்குள் ஏற்படும் சிக்கல்களையும், பிணக்குகளையும் தீர்த்துக் கொள்ளவும் ஒரு குழுவை அமைத்தான். அக்குழு கால வளர்ச்சியில் சமூக அமைப்பாக உருவாகியது. சமூக வளர்ச்சியில் 'அரசு' என்ற நிருவாக அமைப்புத் தோன்றியது. சமூக அமைப்பு முறை ஒழுங்கு பெறவும், அரசு நிருவாகம் முறையாகச் செயல்படவும் அடித்தளமாக அமைந்தவை சிற்றூர்கள் ஆகும். சிற்றூர் மக்களின் வாழ்வியல் நெறிமுறைகளை, ஒழுக்கங்களை பண்பாட்டினைப் பேணிக்காக்கவும், சமுதாயக் கட்டுக்கோப்பை ஒழுங்குபடுத்தி, மக்களின் வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்துவதற்காகவும் 'கிராம வழக்கு மன்றங்கள்' தோன்றின. இம்மன்றங்கள் 'அரசு' என்ற அமைப்புத் தோன்றுவதற்கு முன்னரே கிராமங்களில் தோன்றியவை. இம்மன்றங்களே தொன்று தொட்டுக் கிராமங்களில் 'ஊராட்சி முறை' செழிக்கக் காரணமாயின.

## ஆய்வுப் பொருள்

'நாட்டுப்புறவியல்' என்பது பல்வேறு கூறுகளைத் தன்னகத்தே கொண்டது. 'கிராம வழக்கு மன்றங்கள்' நாட்டுப்புறவியலின் அடிப்படைக் கூறுகளுள் ஒன்றாகும். அம்மன்றங்கள் நாட்டுப்புற மக்களின் வாழ்க்கை முறைகளையும், சமூகப் பண்பாட்டுப் பழக்க வழக்கக் கூறுகளையும் தன்னகத்தே கொண்டு திகழ்வன. வட்டாரத்திற்கு வட்டாரம் தனித்தன்மைகள் உண்டு. சிவகங்கை மாவட்ட மக்களின் வாழ்க்கை முறைகளையும் பண்பாட்டுக் கூறுகளையும் கண்டறியும் நோக்கில் ''சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்கள்'' என்பது ஆய்வுத் தலைப்பாக

அமைகின்றது. ஒரு வட்டாரப் பகுதியில் வாழும் மக்களின் பண்பாட்டையும், கிராம வழக்கு மன்றங்களின் நடைமுறைகளையும் ஆய்வு செய்யும் நோக்கிலும், கால அளவு கருதியும் சிவகங்கை மாவட்ட கிராமங்களிலுள்ள வழக்கு மன்றங்கள் என்று ஆய்வுப்பொருள் வரையறை செய்யப்பட்டுள்ளது. இம்மாவட்டம் பல்வேறு இன மக்களும், வேளாண்மையை முதன்மைத் தொழிலாகக் கொண்ட பொருளாதார நிலையில் ஏற்றத்தாழ்வுகளைக் கொண்ட மக்களும் வாழும் பகுதியாகும். சிற்றூர், நாட்டுப்புறம், ஊரகம், கிராமம் என்ற பலசொற்கள் ஊரைக்குறித்த போதிலும் 'கிராமம்' என்ற சொல் பெருவழக்காக இருப்பதால் இச்சொல் கையாளப்பெற்றுள்ளது.

## ஆய்வின் நோக்கம்

பழங்குடி மக்களின் பண்பாட்டு வடிவங்களாகவும் பழக்க வழக்கங்களின் எச்சங்களாகவும் விஞ்சியிருப்பவை கிராம வழக்கு மன்றங்களாகும். 'பஞ்சாயத்து' என்பது 'சிற்றூர் வழக்கு மன்றம்' என்றும், 'கிராம வழக்கு மன்றம்' என்றும் அழைக்கப்படுகின்றது. அது ஐந்திற்கும் மேற்பட்ட நடுநிலையான ஊர்ப்பெரியவர்கள் கூடி விவாதிக்கும் 'நியாய சபை' யாகும். ஒரே பண்பாட்டு இயல்புடைய சிற்றூரைச்சேர்ந்தவர்கள் அவர்களுக்குள் தோன்றும் சிக்கல்களைத் தீர்க்க ஏற்படுத்தப்பட்ட அமைப்பு 'சிற்றூர்ப் பஞ்சாயத்து' ஆகும். அது கிராம மக்களின் வழக்காடு மன்றமாக அமைந்திருப்பதால் அதனைக் 'கிராம வழக்காடு' எனக் குறிப்பிடுவர். பழங்காலத்தில் மனிதர்கள் நாடோடிகளாகக் காடுகளில் வேட்டைத் தொழிலை மேற்கொண்டு வாழ்ந்து வந்தார்கள். பின்னர் நீர்நிலைகள் கொண்ட செழிப்பான ஆற்றுப் பகுதிகளை நாடி ஓரிடத்தில் நிலையாகத் தங்கி வாழத் தொடங்கினர்கள். இவ்வாறு மனிதர்கள் கூட்டம் கூட்டமாக வாழத் தொடங்கிய வாழ்க்கை முறையினையே வரலாற்று ஆய்வாளர்கள் 'இனக்குழு' வாழ்க்கை முறை

எனச் சுட்டிக் காட்டியுள்ளனர். இவ்வாழ்க்கை முறையில் மனிதன் தமக்கென்று வீடுகளை கட்டி வாழத்தலைப்பட்டான். இவ்வாறு ஓரிடத்தில் நிலையாக வாழ்ந்த இனக்குழுவே பின்னர் சிற்றூராகப் பரிமாண வளர்ச்சி பெற்றது. 'வழக்கு மன்றம்' என்ற அமைப்பு முறையானது கிராமம் என்ற அமைப்பு மனிதன் கூடி வாழத் தலைப்பட்ட போது தோன்றியிருக்க வேண்டும். அம்மன்றங்கள் கிராம மக்களிடையே ஏற்பட்ட சிறு சிறு சிக்கல்களையும், கிராமக் குழுக்களிடையே ஏற்பட்ட சிக்கல்களையும் தீர்க்கும் நோக்கத்தைக் கருத்தில் கொண்டு தோன்றியுள்ளது.

இலக்கியம் மற்றும் கல்வெட்டுச் சான்றுகளைக் கொண்டு நோக்கும் போது (கிராம) சிற்றூர் வழக்கு மன்றங்கள் 'மன்றம்' 'பொதியில்' 'அம்பலம்' 'அவை' 'அறங்கூறவையம்' 'அறக்களம்' முதலான பல்வேறு பெயர்களில் சங்ககாலம் முதல் சோழர் காலம் வரையில் தொடர்ந்து இருந்து வந்துள்ளமையை அறியமுடிகிறது. இச்சிற்றூர் வழக்கு மன்றங்கள், நீதிமன்றங்கள் பெருகியுள்ள தற்காலத்திலும் மக்களின் நம்பிக்கையைப் பெற்றிருப்பது சுட்டத்தக்கதாகும். இக்கிராம வழக்கு மன்றங்களின் அமைப்புமுறைகள், செயற்பாடுகள், பணிகள், நீதி வழங்கும்முறைகள், தண்டனைகள் ஆகியவற்றைக் கண்டறிந்து வெளிப்படுத்துவதும், இக்கிராம வழக்கு மன்றங்களின் மூலமாக வெளிப்படலாகும் மக்களின் வாழ்க்கை முறைகளையும் பண்பாட்டுக் கூறுகளையும் எடுத்துரைப்பதும் இவ் ஆய்வின் நோக்கமாகும். இவ்வாய்வில் கிராம வழக்கு மன்றங்கள் என்பது சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களையே குறிக்கும்.

### ஆய்வுக்களம்

இவ் ஆய்வின் களமாக சிவகங்கை மாவட்ட ஊர்கள் (கிராமங்கள்) அமைகின்றன. சிவகங்கை மாவட்டத்தில் இளையாண்குடி, மானாமதுரை,

சிவகங்கை, தேவகோட்டை, காரைக்குடி, திருப்பத்தூர், ஆகிய ஆறு வருவாய் வட்டங்களும், இளையாண்குடி, காளையார் கோவில், மானாமதுரை, திருப்புவனம், சிவகங்கை, கல்லல், கண்ணங்குடி, தேவகோட்டை, சாக்கோட்டை, திருப்பத்தூர், சிங்கம்புணரி ஆகிய பதினொன்று ஒன்றியங்களும் அமைந்துள்ளன. இவற்றுள் சாக்கோட்டை, தேவகோட்டை, கண்ணங்குடி, ஆகிய மூன்று ஒன்றியங்கள் நீங்கலாக எஞ்சியுள்ள எட்டு ஒன்றியங்களில் அமைந்துள்ள கிராமங்கள் அடங்கிய பகுதியே இந்த ஆய்விற்குரிய களம் ஆகும். இந்தக் கிராமங்களுள் 120 கிராமங்களை மாதிரி முறையில் (Sampling Methods) தெரிவு செய்து முந்நூற்றுக்கும் மேற்பட்ட தகவலாளர்களைச் சந்தித்துப் பேட்டிகளின் மூலம் ஆய்விற்குரிய அடிப்படைத் தகவல்கள் திரட்டப்பட்டுள்ளன.

**ஆய்வு முன்னோடிகள்**

கிராம மக்கள் பண்பாடு மிக்க கண்ணியமான மரபு வாழ்க்கையினை வாழ்பவர்கள். அவர்கள் தங்கள் உடல் உழைப்பில் சமூகத் தேவைகளைக் கூட்டுறவுடன் நிறைவேற்றி வாழ்ந்து வருபவர்கள். அவர்கள் வாழ்வியலை நெறிப்படுத்தி ஒழுங்கு முறையில் அமைவதற்குக் 'கிராம வழக்கு மன்றங்கள்' துணைநிற்கின்றன. தமிழகத்தில் இதுவரை ஒன்றிய, வட்டார அளவில் சில எம்ஃபில்., ஆய்வுகளும், கட்டுரைகளும் இப்பொருள் பற்றி வெளி வந்துள்ளன. சான்றுகளாக, சு. காவேரி, மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் 'சட்டத் தமிழ்' (1987) என்ற தலைப்பில் எம்ஃபில்., பட்டத்திற்காகவும், வே. முருகேஸ்வரி, மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் 'சிற்றூர் வழக்கு மன்றத்தின் அமைப்பும் செயல்பாடும்' (1955) என்னும் தலைப்பில் எம்ஃபில்., பட்டத்திற்காகவும் சமர்ப்பித்துள்ள ஆய்வேடுகளைக் குறிப்பிடலாம். மாவட்ட அளவில் சிவகங்கை மாவட்ட வழக்கு மன்றங்கள் பற்றிய இவ் ஆய்வே முதல் முன்னோடி ஆய்வாக அமைகின்றது.

## ஆய்வு ஆதாரங்கள் (SOURCES)

### முதன்மை ஆதாரங்கள் (Primary Sources)

சிவகங்கை மாவட்டத்திலுள்ள ஆறு வட்டங்களில் 120 கிராமங்களில் வாழும் கள்ளர், தேவர், அகமுடையார், மறவர், கோனார், செட்டியார், நாடார், நாயுடு, முதலியார், கவுண்டர், பிள்ளை, (வெள்ளாளர், துளுவ வெள்ளாளர்), ரெட்டியார், பண்டாரம், குயவர், ஆசாரி, பள்ளர், பறையர், சக்கிலியர், குறவர், சாணார், பளியர் ஆகிய சாதியினரைச் சேர்ந்த முந்நூறுக்கும் மேற்பட்ட தகவலாளர்களிடம் பேட்டியின் மூலம் (Interview) பெற்றப்பட்ட கிராம வழக்குகள், வழக்குகள் தொடர்பான தகவல்கள் இவ்ஆய்வின் முதன்மைச் சான்றாதாரங்களாகும். கிராம வழக்கு மன்றங்களின் நடைமுறைகள், செயற்பாடுகள், பணிகள், தீர்ப்பு வழங்கும் முறை, தண்டனைகள், தண்டனைகளை நிறைவேற்றும் முறை ஆகியனவற்றில் ஆய்வாளர் உற்று நோக்குதலின் மூலம் (Participatant Observation) கண்டறிந்த தகவல்களும் இந்த ஆய்விற்கு முதன்மைச் சான்றாதாரங்களாகும்.

### துணைமை ஆதாரங்கள் (Secondary Sources)

இவ்ஆய்வுப் பொருள் தொடர்பாக இதுகாறும் வெளிவந்துள்ள இலக்கியங்கள், வரலாற்றுச் சான்றுகள், கல்வெட்டுக்கள், திறனாய்வு நூல்கள், ஆய்வுக் கட்டுரைகள், இதழ்களில் இடம் பெற்ற செய்திகள் ஆகியன துணைமைச் சான்றுகளாகக் கொள்ளப்பட்டுள்ளன.

### ஆய்வு அணுகுமுறைகள் (Approaches)

கிராம வழக்கு மன்றங்களின் தோற்றம் மற்றும் வளர்நிலைக் காணும் நிலையில் வரலாற்றியல் அணுகுமுறையும் (Historical Approach), நாட்டுப்புற மக்களின் வாழ்வியலைக் காணும் வகையில் சமுதாயவியல் அணுகுமுறையும்

(Sociological Approach), வழக்குகளிலும் பாதிக்கப்பட்ட மற்றும் தண்டனை பெற்றவர்களின் மன உணர்வுகளை வெளிக்கொணரும் பொருட்டு உளவியல் அணுகுமுறையும் (Psychological Approach) பயன்படுத்தப்பட்டுள்ளன. கிராம வழக்கு மன்றங்கள் பற்றிய ஆய்வாகையால் நாட்டுப்புறவியல் நெறிமுறையில் (Folklore Research Methodology) தேவையான இடங்களில் பகுப்புமுறைத் திறனாய்வும் (Analytical Criticism), விளக்கமுறைத் திறனாய்வும் (Descriptive Criticism) பின்பற்றப்பட்டுள்ளன.

## இயல் பகுப்பு

ஆய்வேடு முன்னுரை, ஆய்வு முடிவுரை நீங்கலாகப் பின்வரும் ஆறு இயல்களை உள்ளடக்கியுள்ளது.

1. கிராம வழக்கு மன்றங்கள் - தோற்றமும் வளர்ச்சியும்
2. கிராம வழக்கு மன்றங்களின் வகைகள்
3. கிராம வழக்குகளின் வகைகள்
4. சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களின் செயல்பாடுகள்
5. சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களும் இக்காலச் சட்ட நடைமுறைகளும் - ஒப்பீடு
6. சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களும் மக்கள் வாழ்வியலும்

## ஆய்வு அறிமுகம்

ஆய்வு அறிமுகத்தில் ஆய்வுப் பொருள், நோக்கம், களம், முன்னோடிகள், ஆதாரங்கள் (முதன்மை, துணைமை), அணுகுமுறைகள், இயல்பகுப்பு பற்றிய செய்திகள் விளக்கப்பட்டுள்ளன.

'கிராம வழக்கு மன்றங்களின் தோற்றமும் வளர்ச்சியும்' என்னும் முதல் இயலில் 'பஞ்சாயத்து' சொல்லும் பொருளும், இனக்குழுச் சமுதாய வாழ்க்கை, கிராமங்களின் தோற்றம், தொல்காப்பியர் காலம் முதல் ஆங்கிலேயர் காலம் வரை கிராம வழக்கு மன்றங்களின் வளர்ச்சி, நீதிமுறை, அரசு நீதி மன்றங்களின் தோற்றமும் செயல்பாடுகளும், கிராம வழக்கு மன்றங்கள் பற்றிய வரலாறு கல்வெட்டுச் சான்றுகள், தமிழ் இலக்கியங்களில் காணப்படும் வழக்கு மன்றங்கள் பற்றிய சிந்தனைகள் இடம் பெற்றுள்ளன.

'கிராம வழக்கு மன்றங்களின் வகைகள்' என்னும் இரண்டாம் இயலில் அமைப்பு விளக்கம், சிற்றூர் வழக்கு மன்றத்தின் அமைப்பு, குடும்பப் பஞ்சாயத்து, சாதிப்பஞ்சாயத்து, ஊர்ப்பஞ்சாயத்து, கிராமப் பஞ்சாயத்து, நாட்டுப் பஞ்சாயத்து ஆகிய பஞ்சாயத்துக்களின் அமைப்பு முறை வகை தொகைப்படுத்திக் கொடுக்கப்பட்டுள்ளன.

'கிராம வழக்குகளின் வகைகள்' என்னும் மூன்றாம் இயலில், ஆய்வாளர் களத்தில் (Field Study) சேகரித்த வழக்குகள் வகைப்படுத்தி விளக்கப்பட்டுள்ளன. வழக்குகளின் உள்ளடக்கச்செய்திகளையும் அடிக்கருத்துக்களையும் அடிப்படையாகக் கொண்டு உரிமையியல் வழக்குகள், குற்றவியல் வழக்குகள், குடும்ப வழக்குகள், பொதுப்பிரச்சினைகள் தொடர்பான வழக்குகள் என பகுக்கப்பட்டுள்ளன.

'சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களின் செயற்பாடுகள்' என்னும் நான்காம் இயலில் வழக்குகளின் தொடக்கம், வழக்குகளை முன் வைத்தல், மண்டுப் பணம் வைத்தல், பண்டாரத்தின் மூலம் ஓலை அனுப்புதல், பரம்பரை உரிமை, அஞ்சூர் நாட்டு வழக்கு மன்றம், பஞ்சாயத்து முறை, பூவந்திக் கிராம வழக்கு மன்றம், அரசனூர்க் கிராம வழக்கு மன்றம், தமராக்கி நாட்டு வழக்கு மன்றம், பஞ்சாயத்தும் இளவட்டங்களும், அல்லி நகரம்-வழக்குமன்றம் சிவகங்கை ஒன்றியம்

ஆறூர் நாட்டு வழக்கு மன்றம், பாகனேரி நாட்டின் கிராமங்கள், பாகனேரிக் கள்ளர் நாடுகளும், மறவர் நாடுகளும் நாட்டுக்கூட்டம், நாட்டுக் கூட்டத்தின் செயற்பாடு, வழக்குகளைத் தீர்த்தல், கிராமக் கூட்டம், வாசல் வழி நிருவாக அமைப்பு, தேசத்தார் கூட்டம், வழக்கு விசாரணை, பிரதிவாதியின் மறுப்பு, சாட்சிகள், வழக்கு மன்ற விவாதங்கள், வழக்கு மன்றம் செயல்படும் விதம், கிராம வழக்கு மன்றங்கள்-தீர்ப்புகள் வழங்கும் முறைகள், தீர்ப்புகளை ஏற்றுக் கொள்ளுதல், தண்டனைகளின் இன்றியமையாமை, சங்ககாலத் தண்டனை முறைகளும் சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களின் தண்டனை முறைகளும்-ஒப்பீடு என்பன பற்றிய செய்திகள் சுட்டப்பட்டுள்ளன.

'சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களும் இக்காலச் சட்ட நடைமுறைகளும்-ஒப்பீடு' என்னும் ஐந்தாம் இயலில், நீதி மன்றம், நீதிபதி, அரசின் அதிகாரங்கள், வழக்கு வகைகள், வழக்கு முறையீடு, நீதிமன்ற நெறிமுறைச் சட்டம், நீதிமன்ற நெறிமுறை, சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களில் முறையீடு, குற்றவியல் வழக்குகளும் உரிமையியல் வழக்குகளும், வழக்குரைப்போர் வாதி, எதிர்வாதி அல்லது பிரதிவாதி, விவாதம் நடைபெறும் முறை, சான்றுகள், சான்றுகளின் வகைகள், சான்றுகளை மதிப்பிடுதல், நீதிமன்றத்தின் முன் சான்றினை வைத்தல், மறுவிசாரணையும் மேல்முறையீடும், தீர்ப்பும் தீர்ப்பினை நிறைவேற்றுதலும், இக்கால நீதிமன்ற நடைமுறைகள், சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களின் நடைமுறைகள்-ஒப்பீடு, கிராம வழக்கு மன்றங்களின் நன்மைகள், தீமைகள், இன்றைய நீதிமன்றச் சட்ட நெறியும் அன்றைய அறநெறியும் ஆகிய செய்திகள் தெளிவுப்படுத்தப்பட்டுள்ளன.

'சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்ற வழக்குகளும் மக்கள் வாழ்வியலும்' என்னும் ஆறாம் இயலில், கிராம வழக்கு மன்ற வழக்குகளின் வாயிலாக வெளிப்படும் மக்களின் வாழ்வியல் செய்திகள் விளக்கப்பட்டுள்ளன. வழக்குத்

தொடுப்பதன் நோக்கம், பாதிப்பு, பொறாமை, பழிவாங்கல் முதலான உளவியல் காரணங்களாகும். வழக்குகளில் வெளிப்படும்-வாழ்வியல் பிரச்சினைகள் உண்மையானவை. வழக்குத் தொடுத்தல், தீர்ப்பு, முடிவு, ஏற்பு, மேல்முறையீடு, தீர்ப்பின் எதிர்பார்ப்புகள் மனநிறைவு அல்லது நிறைவின்மை போன்றவை வழக்குகளின் வெளிப்பாடுகளாகும். தீர்ப்பின் விளைவுகளாகத் தெய்வத்திடம் முறையீடு, மண்தூற்றல், பலிபோடுதல், காசு வெட்டுதல், சத்தியம் செய்தல் முதலான செயல்கள் நடைபெறுகின்றன. கிராம வழக்கு மன்றங்களின் வழக்குத் தீர்ப்புக்களை அடிப்படையாகக் கொண்டு சமூக இயக்கம் அமைகின்றது. சாதிகள் இணைப்பு, குடும்பங்கள் இணைப்பு, கிராமம், ஊர் இயக்கம் முதலான கிராம வழக்கு மன்றங்களைச் சார்ந்தும் மையமிட்டும் அமைந்துள்ளன. கிராம மக்களின் பழக்க வழக்கங்கள், உணவுகள், உடைகள், அணிகலன்கள், விழாக்கள், வழிபாடுகள், சமூக மதிப்புகள், படிநிலைகள், ஏற்றத்தாழ்வுகள், குடிகள் இருப்பிடம், ஊர் அமைப்பு, இனசாதிய வேறுபாடுகள், உறவுமுறை, பாலியல் என்ற நிலைகளிலும், தொழில்கள் உரிமைகள், கடமைகள், உரிமைகள் மறுப்பு முதலானவைகளும் இவ்வியலில் நோக்கப்பட்டுள்ளன.

'ஆய்வு முடிவுரை' என்னும் பகுதியில் 'சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்கள்' என்னும் இந்த ஆய்வில் கண்டறிந்த ஆய்வு முடிபுகள் நிரல்படத் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

ஆய்வுக்குப் பயன்பட்ட தமிழ், ஆங்கில நூல்கள் அகராதிகள், இதழ்கள், கட்டுரைகள் துணைநூற்பட்டியலில் இடம் பெற்றுள்ளன.

'பின்னிணைப்பு'ப் பகுதியில் தகவலாளர் பட்டியல், களஆய்வு மேற்கொண்ட ஊர்களின் பட்டியல், சிவகங்கை மாவட்ட வரைபடம், சேகரித்த வழக்குகள் ஆகியன இடம்பெற்றுள்ளன.

# இயல் - 1

# கிராம வழக்கு மன்றங்களின் தோற்றமும் வளர்ச்சியும்

சிற்றூர்கள் இந்தியாவின் முதுகெலும்பாகவும் உயிர்நாடியாகவும் விளங்குகின்றன. இந்திய நடுவணரசும் 1955ஆம் ஆண்டு சிற்றூர்களின் இன்றியமையாமையைக் கருத்தில் கொண்டு சிற்றூர்களுக்குத் தன்னாட்சி உரிமையினை வழங்கியுள்ளது. பண்டைக்காலத்தில் ஒவ்வொரு சிற்றூரும் நிதி, நீதி, நிருவாகம் ஆகிய மூன்று நிலைகளிலும் தன்னிறைவு பெற்று விளங்கியுள்ளது. சிற்றூர்களை நிருவகிப்பதற்கென்று மக்கள் தாங்களாகவே ஓர் அமைப்பினை ஏற்படுத்திக் கொண்டு நிருவாகம் செய்து வந்துள்ளனர். அது 'கிராம சுயாட்சி' என அழைக்கப்பட்டுள்ளது. பண்டைய சிற்றூர் நிருவாக அமைப்புகள் 'ஊர்ச்சபை', 'பஞ்சாயத்து மன்றம்', 'நாட்டுக்கூட்டம்' எனப் பல பெயர்களில் அழைக்கப்பட்டன. இத்தகைய அமைப்பு முறைகள் சிற்றூர் மக்களிடையே தோன்றிய சிக்கல்களுக்கும், அவர்களிடையே நிலவிய கருத்து வேறுபாடுகளினால் ஏற்பட்ட முரண்பாடுகளுக்கும் தீர்வு காண்பதற்குப் பயன்பட்டன. 'பஞ்சாயத்து' என்ற சொல்லாட்சி 'ஊராட்சி மன்றம்' என்னும் பொருளிலும், சிற்றூர் மக்களின் 'வழக்கு மன்றம்' என்னும் பொருளிலும் இன்றும் ஆளப்பட்டு வருவதைக் காணலாம்.

இவ்வியல் 'பஞ்சாயத்து'-சொல்லும் பொருளும், வழக்கு மன்றங்களின் தோற்றம், இனக்குழுச் சமுதாய வாழ்க்கை, கிராமங்களின் தோற்றம், இலக்கியச் சான்றுகள், ஆட்சியாளர்கள் ஆட்சிமுறையில் சிற்றூர் வழக்கு மன்றங்கள், கிராம வழக்கு மன்றங்களின் தோற்றம், வளர்ச்சி நிலைகளை எடுத்துரைப்பதாக அமைகின்றது.

**'பஞ்சாயத்து' - சொல்லும் பொருளும்**

" 'பஞ்சாயத்து' என்னும் சொல்லிற்கு 'Village Jury' என்றும் 'An assembly of fire or more persons' என்றும் தமிழ்-ஆங்கில அகராதிகள் பொருள் விளக்கம் தருகின்றன."[1] "இது பெரும்பாலும் ஐந்திற்கும் மேற்பட்ட நடுவர்கள் கூடி விவாதிக்கும் 'நியாயசபை' எனத் தமிழ் சொற்களஞ்சியமும்"[2] விளக்கம் தருகின்றது. "இன்றைய மக்கள் வழக்காற்றில் இதனைச் 'சாதிப் பஞ்சாயத்து' என்றும் 'சாவடிக்கோர்ட்' என்றும் அழைக்கின்றார்கள்."[3] இதுவே 'கிராம வழக்கு மன்றம்', 'கிராமப் பஞ்சாயத்து', 'நாட்டுப் பஞ்சாயத்து', 'கட்டப் பஞ்சாயத்து' என்னும் பொருள்களில் இவ்ஆய்வுரையில் சுட்டப்படுகின்றது.

மேலே சுட்டிக்காட்டப்பட்ட கருத்துக்களிலிருந்து 'பஞ்சாயத்து' என்பது 'சிற்றூர் வழக்கு மன்றம்' என்றும், 'கிராம வழக்கு மன்றம்' என்றும் அழைக்கப்படுவதனையும், அது ஐந்திற்கும் மேற்பட்ட நடுநிலையான ஊர்ப் பெரியவர்கள் கூடி விவாதிக்கும் 'நியாயசபை' என்றும் அழைக்கப்படுகின்றது. ஒரே பண்பாட்டு இயல்பு கொண்ட சிற்றூர் மக்கள், அவர்களுக்குள் தோன்றும் சிக்கல்களைத் தீர்க்க ஏற்படுத்தப்பட்ட அமைப்பாக அது செயல்பட்டுவருவதனால் அதனை 'ஊர்ப்பஞ்சாயத்து' என்றும் கூறுவர். பெரும்பாலும் ஊருக்குப் பொதுவான இடமாகிய சாவடியில் (மந்தைத்திடல்) நடைபெறுவதனால் அதனைச் 'சாவடிக் கோர்ட்' என்றும், கிராமப் பெரியவர்களின் வழக்காடு மன்றமாக அமைந்திருப்பதனால் 'வழக்கு மன்றம்' என்றும் பல்வேறு பெயர்களால் அழைக்கப்பட்டு வந்திருப்பதைக் காணலாம். 'சாதிப்பஞ்சாயத்து' என்பது வேறு; 'ஊர்ப்பஞ்சாயத்து' என்பது வேறு; முன்னது ஒரே சாதிக்குள் நடக்கும் பஞ்சாயத்து

அமைப்பு முறையாகும். பின்னது ஊரிலுள்ள அனைத்துச் சாதியினருக்கும் பொதுவானதாகும்.

**வழக்கு மன்றங்கள் - தோற்றம்**

வழக்கு மன்றங்களையும் அங்கு நடைபெற்று வந்த பஞ்சாயத்துக்களின் தோற்றம் பற்றியும் ஆராய்வதற்கு முன்னர் சிற்றூர்களின் (கிராமங்கள்) தோற்றம் பற்றி எடுத்துரைப்பது இன்றியமையாததாகும். ஏனெனில் சிற்றூர்கள் தோன்றிய பின்னரே வழக்கு மன்றங்கள் தோன்றியிருத்தல் வேண்டும்.

**'இனக்குழு'ச் சமுதாய வாழ்க்கை**

''மனிதன் தொல்பழங்காலத்தில் நாடோடிகளாகக் காடுகளில் விலங்குகளை வேட்டையாடியும் இயற்கையாகக் கிடைக்கும் காய், கனி, கிழங்கு ஆகியனவற்றை உண்டும் வாழ்ந்து வந்தான். இதனை 'வேட்டைச் சமூகம்' என்பர். பின்னர் நீர்நிலைகள் கொண்ட செழிப்பான ஆற்றுப் பகுதிகளை நாடி ஓரிடத்தில் நிலையாகத் தங்கி வாழத் தொடங்கினான். இவ்வாறு மனிதர்கள் கூட்டம் கூட்டமாக வாழத் தொடங்கினர். இவர்களின் வாழ்க்கை முறையினையே வரலாற்று ஆய்வாளர்கள் 'இனக்குழு வாழ்க்கை முறை' எனச் சுட்டியுள்ளனர்.''[4]

**கிராமங்களின் தோற்றம்**

'கிராமம்' என்பது வடசொல்லாகும். தமிழில் இதனைச் 'சிற்றூர்' எனவும் 'பட்டி' எனவும் கொள்ளலாம். ''வேட்டைச் சமூகத்தில் காடுகளிலும் குகைகளிலும் நாடோடிகளாக வாழ்ந்துவந்த மனிதன் இனக்குழுச் சமூக வாழ்க்கையில் தமக்கென்று வீடுகட்டிக் கொண்டு வாழத் தலைப்பட்டான். இவ்வாறு ஓரிடத்தில் நிலையாக வாழ்ந்த இனக்குழுவே பின்பு சிற்றூராகப் பரிணாம வளர்ச்சி பெற்றது.

இவ்வாறு மனிதன் சிறிய கூட்டமாகக் கூடி வாழத் தலைப்பட்ட போது, மனிதனுடைய சமுதாயத் தேவைகளும் அதிகமாயின. எல்லோராலும் தனித்தனியாக அனைத்துத் தேவைகளையும் நிறைவு செய்து கொள்ள முடியவில்லை. எனவே, மனிதர்களுடைய தேவைகளை நிறைவு செய்து கொள்ளும் பொருட்டு ஒருவர் உதவி மற்றவர்களுக்குத் தேவைப்பட்டது. இவ்வாறு மனிதனுடைய தேவைகளின் பொருட்டு மனித சமுதாய உறவுகள் ஏற்பட்டன. இந்த உறவுகளின் அடிப்படையில் குடும்ப வாழ்க்கை ஏற்பட்டது''[5] என்பர். குடும்ப வாழ்க்கையில் கணவன்-மனைவியர் உறவு நிலைத்த இடத்தினைப் பெற்றது. குடும்பத்தின் தலைவனாகக் கணவன் இருந்தான். இக்குடும்பப் பொறுப்புக்களையும் நிருவாகத்தினையும் கணவன் ஏற்று நடத்தி வந்தான்.

''மனிதன் கூடிவாழத் தலைப்பட்டபோது பல்வேறு சிக்கல்களும் பிரச்சினைகளும் தோன்றலாயின. இச்சிக்கல்கள் குடும்பத்திலும் குழுவிலுமாகத் தோன்றின. இத்தகையச் சிக்கல்களைத் தீர்த்துக் கொள்ளுவதற்காக ஒரு குழுவிலுள்ள அனைத்துக் குடும்பத் தலைவர்களும் ஒன்று கூடி தங்களுக்குள் ஒருவனை வீரத்தின் அடிப்படையில் தேர்வு செய்தனர். அவனே அக்குழுவிற்குத் தலைவன் என்று அழைக்கப்பட்டான்''[6]என்பர். அக்குழுவின் தலைவன் தன் குழுவிலுள்ள குடும்பங்களில் ஏற்படும் பிரச்சினைகளையும், குழுவிற்குள் ஏற்பட்ட ஒட்டுமொத்தமான பொதுச் சிக்கல்களையும் மற்றவர்களுடன் கூடிக் கலந்து ஆலோசித்துத் தீர்த்து வைத்தான்.

மனிதனுடைய இந்த வளர்ச்சி நிலையே வழக்கு மன்றத்தின் (பஞ்சாயத்து) தோற்றம் ஆகும். வழக்கு மன்றம் என்ற அமைப்பு முறையானது சிற்றூர் என்ற அமைப்புத் தோன்றி மனிதன் கூடி வாழத் தலைப்பட்ட போது தோன்றியிருக்க வேண்டுமென்றும், அம்மன்றங்கள் ஊர்மக்களிடையே ஏற்பட்ட சிறுசிறு

சிக்கல்களையும், கிராமக் குழுக்களிடையே ஏற்பட்ட ஒட்டுமொத்தமான சிக்கல்களையும் கருத்தில் கொண்டு தோன்றியது என்பதையும் அறிய முடிகின்றது. இவ்வமைப்பு முறையானது சிற்றூர்களிடையே தோன்றி விளங்கியதனால் 'சிற்றூர்ப் பஞ்சாயத்து' எனவும் அழைக்கப்படுகின்றது. சங்ககாலம் முதல் தமிழ்நாட்டில் சிற்றூர் வழக்கு மன்றங்கள் இருந்துள்ளன என்பதை இலக்கியச் சான்றுகள் வழி அறிய முடிகின்றது. இலக்கியங்கள் வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாகவும், மக்களின் சமுதாய வாழ்க்கை முறைகளிலிருந்து தோன்றுவதகாவும் அமைகின்றன. ஒவ்வொரு காலக் கட்டத்திலும் நடக்கக் கூடிய சமுதாய நிகழ்வுகளையும் வாழ்வியல் மெய்ம்மைகளையும் இலக்கியங்கள் பதிவு செய்து, அவற்றைப் பிரதிபலித்துக் காட்டுகின்றன. கடந்த கால வரலாற்றினையும் சமுதாய அமைப்பு முறையினையும் புரிந்து கொள்ளுவதற்கு இலக்கியங்களே முக்கியமான ஆவணங்களாக அமைகின்றன.

**தொல்காப்பியர் காலம்**

தொல்காப்பியர் தம் காலத்தில் நிலவிய சிற்றூர் வழக்கு மன்றங்களை 'அவையம்'[7] என்ற சொல்லால் குறிப்பிட்டுள்ளார். இது 'அவையம்' என்ற பகுதியில் விரிவாக இடம் பெற்றுள்ளது.

**சங்க இலக்கியங்கள்**

சங்ககாலத் தமிழகச் சிற்றூர்களில் ஏற்பட்ட வழக்கு மன்றங்களின் அமைப்பு முறையினையும், அவை செயல்பட்ட முறையினையும், அதன் பல்வேறு பெயர்களையும் அதற்கான காரணங்களையும் அறிவிக்கும் சான்றுகளாகவும் ஆவணங்களாகவும் சங்க இலக்கியங்கள் அமைகின்றன. பண்டைய தமிழகத்தில் சிற்றூர் நிருவாகத்தைக் கவனிக்க ஊர்ப்பொதுமக்கள் ஒன்று கூடி தங்களுக்குள் மூத்த பெரியவர்களைக் கொண்டு ஓர் அமைப்பினை ஏற்படுத்திக் கொண்டனர்.

அக்காலத்தில் சிற்றூர் நிருவாகத்திற்கென்று வரையறுக்கப்பட்ட நீதிமன்றங்கள் போன்ற அமைப்புகள் இல்லை. எப்பொழுது சிக்கல்கள் எழுகின்றதோ அப்பொழுது கிராமத்திலுள்ள பெரிய மனிதர்கள் ஒன்று கூடித் தீர்வுகளைக் கண்டுள்ளார்கள். இது வழி வழியாகவும் பரம்பரை பரம்பரையாகவும் வந்த ஓர் அமைப்பு முறையாகும்.

'சிற்றூர் விவகாரங்களை மேற்பார்த்தல்' என்னும் பொருள் நிலையில் 'மன்றம்', 'பொதியல்', 'அம்பலம்', 'அவை' என்னும் சொல்லாட்சிகள் சங்க இலக்கியங்களில் பயின்று வந்துள்ளன. இவை ஒரு பொருள் குறித்த பல சொற்களாகும். திருமுருகாற்றுப்படையில் மன்றமும் அம்பலமும் வெவ்வேறு நிறுவனங்கள் போலக் கூறப்படுகின்றன. ''உரையாசிரியராகிய நச்சினார்க்கினியர் 'மன்றம்' என்பது சிற்றூர் மக்கள் யாவரும் வந்து வீற்றிருக்குமாறு ஊர் நடுவில் அமைந்த 'மரத்து அடி' என்று கூறிப் 'பொதியில்', 'அம்பலம்' ஆகிய இரண்டையும் ஒன்றாகக் கருதுகின்றனர். அவர் கருத்துப்படி 'அம்பலம்' என்பது உயர்த்திக்கட்டிய திண்ணை போன்றதாகும்.''[8] ''அவர் 'மன்றம்' அல்லது 'மன்று' என்பதை 'அம்பலம்' எனக் குறிப்பிட்டுள்ளார்.''[9] 'மதுரைக்காஞ்சி தலகாரியங்களைக் கவனிக்க 'அவை'[10] கூடிற்று எனக் குறிப்பிடுகின்றது. ஔவையார் புறநானூற்றுப் பாடலில் 'முன்னூர்ப் பொதியிலைப்''[11] பற்றிக் குறிப்பிட்டுள்ளார். 'அப்பாடலில் சிற்றூரின் முன் அமைந்துள்ள பொதியிலில் ஏதிலாரும், யாத்ரிகரும், பாணரும் தங்குவதைக் குறிப்பிடுகின்றார். பொதுவில் யாவரும் வழிபடுவதற்குரிய இடம் 'பொதியில்' என்பது நச்சினார்க்கினியர்[12] விளக்கம் ஆகும். 'பொதியில்' என்னும் சொல் 'பொதுஇல்' என்பதிலிருந்து பெறப்பட்டதாகும்.'[13] 'நிழல் தரும் மரத்தின் அடியில் ஆன்ம விசாரம், லௌகிக விசாரம் என்பனவற்றை மேற்கொண்ட புத்தர் ஞானம் பெறுதல், சிவபெருமான் யோகம் பயிலல், சிற்றூர் முதியோர் கூடுதல் போன்றவை

நிகழ்ந்தன. மரத்தைச் சுற்றி உயர்த்திக் கட்டப்பட்ட இருக்கை இருப்பினும் அம்மரமும் மன்றம் அல்லது பொதியிலின் ஒரு பகுதியே ஆகும். வேப்ப மரத்தின் அடி மன்றம் பலர் கூடுதற்கு ஏற்ற இடமாகும். அம்மரம் நோய் தீர்க்கும் பண்புடைத்தாகும்.'[14]

சங்க இலக்கியச் சான்றுகளை நோக்கும் போது 'பொதியில்' என்பது சிற்றூரில் பெரும்பாலும் அதற்கு வெளியில் அமைந்த ஓரிடமாகும். அவ்விடம் மரத்தடியில் இருந்தது. அவ்விடத்தில் இளைப்பாற வருவோரும், பொழுது போக்காக, வம்பு பேச வருவோரும் பொறுப்புள்ள அரசியல் பேசுவோரும், அரசியல் நீதிமன்றப் பணிகளோடு தொடர்புடைய கிராமப் பொதுமக்களும் கூடும் இடமாகும். அது முற்றிலும் ஒரு சிற்றூர் நிறுவனமாகும். இருப்பினும் அங்குத் தலை நகரிலுள்ள 'அறக்களத்து அவைபோல' நீதி, நிருவாக விவகாரங்கள் விவாதிக்கப்பட்டுள்ளன. சிற்றூர்களில் எழுந்த சிறு சிறு சிக்கல்களையும் பிரச்சினைகளையும் தீர்த்து வைக்கும் சிற்றூர் நிறுவனங்களாக மன்றமும் பொதியிலும் ஈடுபட்டு வந்துள்ளன. இக்காலத்துப் பஞ்சாயத்து அமைப்புக்களை விட அவற்றிற்கு மிகுந்த அதிகாரம் இருந்துள்ளது. 'மன்றம்' மற்றும் 'பொதியில்' வழக்கு மன்றத்தார் தீர்ப்புகளுக்கு எதிராக மேல்முறையீடு செய்யும் அமைப்பு சங்க காலத்தில் இல்லை. சிற்றூர் முதியவர்கள் இவ்வமைப்பில் முழுமையான அதிகாரம் செலுத்தி வந்துள்ளனர்.

சங்க காலத் தமிழகத்தில் ஒவ்வோர் சிற்றூரிலும் இத்தகைய 'ஊராட்சி மன்றம்' இருந்து வந்துள்ளது. ஊராட்சி மன்ற உறுப்பினர்கள் ஊர் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டனர். வாக்காளர் ஊரின் பகுதிக்குரிய பிரதிநிதிகளின் பெயர்களை எழுதிக் குடத்தில் போடுவர். அதிகாரிகள் குடத்தின் முத்திரையை நீக்கி ஒவ்வொரு ஓலையாகப் படிப்பர். இதனை,

இக்காலக் கட்டத்தில் பக்தி இலக்கியம் ஒன்றே மேலோங்கி வளர்ந்தது. அவற்றுள் சைவ நூல்களாகிய பன்னிரு திருமுறைகளும், பன்னிரு ஆழ்வார்களின் பாடல் தொகுப்புகளாகிய நாலாயிர திவ்வியப் பிரபந்தமும் குறிப்பிடத்தக்கவையாகும். இந்நூல்களில் சங்க இலக்கியங்கள் மற்றும் நீதி இலக்கியங்களில் பயின்று வந்துள்ள 'மன்றம்', 'அவை', 'அம்பலம்' போன்ற சொல்லாட்சிகளே 'சிற்றூர் வழக்கு மன்றம்' என்ற பொருளில் ஆளப்பட்டிருக்க வேண்டும். இவை பற்றிய இலக்கியச் சான்றுகள் கிடைக்கவில்லை. ஆனால், பல்லவர் காலத்திய சிற்றூர் வழக்கு மன்றங்கள் பற்றிய செய்திகள் கிடைக்கின்றன.

## காப்பிய இலக்கியங்கள்

தமிழ்க் காப்பிய இலக்கியங்களில் 'ஐம்பெருங்குழு', 'எண்பேராயம்' பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன. சிலப்பதிகாரம்[22], மணிமேகலை[23]யில் ஐம்பெருங் குழுவினரையும் எண்பேராயத்தினரையும் பற்றிய குறிப்புக்கள் இடம் பெற்றுள்ளன. 'பெருங்கதை'[24]யிலும் இவை பற்றிய குறிப்புள்ளது. சேக்கிழாரின் பெரிய புராணத்தில் (தடுத்தாட்கொண்ட புராணம்) 'மன்றாடி'[25] என்னும் சொல்லாட்சி இடம் பெற்றுள்ளது.

சிற்றிலக்கியங்கள் மற்றும் தற்கால இலக்கியங்களான சிறுகதை, புதினம், கவிதை ஆகியனவற்றிலும் சிற்றூர் வழக்குமன்றங்கள், அவற்றின் செயற்பாடுகள் பற்றிய செய்திகள் பயின்று வந்துள்ளன. ஆய்வுச் சுருக்கம் கருதி இவ்வியலில் அவை பற்றிய செய்திகள் தவிர்க்கப்பட்டுள்ளன.

## சங்க மூவேந்தர் கால ஆட்சிமுறை

மக்களாட்சியை அடுத்த மன்னராட்சியில் மன்னனே வலிமை மிக்கவன் ஆவான். அவனைக் கட்டுப்படுத்தியதாகக் கூறப்படும் கட்டுப்பாடுகள்

கொள்கையளவிலேயே இருந்தன. அவற்றை மன்னன் ஏற்றுக்கோடலைவிடப் புறக்கணித்தலே பெரும்பான்மையாக இருந்தன. ஆதலால் சங்க மூவேந்தர் கால ஆட்சியில் மன்னனின் நற்பண்புகளைப் பொறுத்தே நல்லாட்சி நடைபெற்று வந்துள்ளது. "வரி இறுத்தற்காகவும் பொது அமைதியைக் குலைப்போரிடமிருந்து காக்கவுமே மன்னன் தனது அரசின் எல்லைப் பகுதிகளோடும் தொடர்பு கொண்டிருந்தான். அவை நீங்கலாக, மக்கள் பெரும்பாலும் தங்கள் ஊர்ப்பொதுக் காரியங்களைத் தாங்களே கவனித்துக் கொண்டனர். ஆதலால் மன்னனால் எல்லா விதத்திலும் கவனிக்க முடியாத கிராமத்திலுள்ளோர் தமது ஊரிலுள்ள செல்வந்தர், அனுபவமுடையோர், செல்வாக்குடையோர், அறிஞர் என்போர் வாயிலாகத் தங்களைத் தாங்களே ஆண்டு கொண்டனர். இவையே அக்காலக் கிராம சுயாட்சி, தல தன்னாட்சி என்பனவற்றிற்கு அடிப்படைக் காரணங்கள்"[26] என்பது நோக்கத்தக்கதாகும். ஆனால் பிற்கால அரசியல் முறையான சுயாட்சிக்கருத்தை ஆதிகால நிறுவனங்களுக்குப் பயன்படுத்துதல் பொருந்தாது. 'திருக்குறளில் கூறப்பட்டிருத்தல் போல, சங்க கால ஆட்சிமுறையில் ஒரு மத்திய அரசும், தல நிறுவனங்களும் அடங்கின.'[27] என்று வி.ஆர். இராமச்சந்திர தீக்ஷிதர் கூறுகின்றார். திருக்குறளில் தல நிறுவனங்கள், மத்திய அரசு என்பன பற்றிய குறிப்புக்களே இல்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

"கிராமம் என்பதே இந்தியாவில் எப்போதும் போல ஆட்சி நிருவாகத்தின் அடிப்படைப்பகுதியாகும். பொதுவாகக் கிராமம் தனது விவகாரங்களைத் தானே கவனித்துக் கொண்டது. 'ஊர்' என்பது நகரமாக இருக்கலாம்; ஆனால் அது 'சேரி'யை விடப் பெரியதாகும். சேரி என்பது ஒருபக்க ஊரேயாகும்."[28] கிராமப் பிரச்சினைகளை மேற்பார்த்தல் என்னும் நிலையில் சங்க இலக்கியங்களில் பின்வரும் சொற்கள் ஆளப்பட்டுள்ளன.

**மன்றம்**

'மன்றம், பொதியில், அம்பலம், அவை என்பவை ஒரு பொருள் பல சொற்களாகும். 'மதுரைக்காஞ்சி'யில் தல காரியங்களைக் கவனிக்க 'அவை' கூடிற்று[29] என்னும் குறிப்பு வந்துள்ளது. திருமுருகாற்றுப்படையில் மன்றமும் அம்பலமும் வெவ்வேறு நிறுவனங்கள் என்பது போலச் சுட்டப்பட்டுள்ளன. அதன் உரையாசிரியரும் 'மன்றம்' கிராமத்து மக்கள் யாவரும் வந்து வீற்றிருக்குமாறு ஊர் நடுவில் அமைந்த மரத்தடி என்று கூறிப்பொதியலையும் அம்பலத்தையும் ஒன்றாகக் கருதுகின்றார். அவர் கருத்துப்படி 'அம்பலம்' என்பது உயர்த்திக்கட்டிய திண்ணை போல்வதாகும்.'[30] மலைபடுகடாத்திற்கு உரையெழுதிய நச்சினார்க்கினியர் 'மன்றம்' அல்லது 'மன்று' என்பதை 'அம்பலம்' என்கிறார்.[31] அன்றியும் அம்பலத்தில் எங்கும் திரிதரும் கூத்தர் தங்குவதையும் காட்டுகின்றார். ஊரில் பெரியவர்கள் ஒன்று கூடும் போது அவ்விடத்திற்கு 'மன்று' அல்லது மன்றம் என்பது பெயராகும். இச்சொல் வழக்குச் சங்க இலக்கியங்களில் பரவலாகக் கையாளப்பட்டுள்ளன. இதற்குச் சான்றுகளாகப் பின்வரும் தொடர்களைக் குறிப்பிடலாம்.

''மன்று நிறையு நிரை''[32] -எனப் புறநானூறும்,

''மன்று தொறு நின்று குரவை''[33] -என மதுரைக் காஞ்சியும்,

''மன்றில் குரவை பிணைந்த மால்''[34]-எனப் பெரியாழ்வார் திருமொழியும்,

''முதூர் வேம்பிணென்குழை மலைந்து''[35]-எனப் புறநானூற்றுப் பாடலடிகளும்,

''மன்ற வேம்பின் மாச்சினை யொண்டளிர்
நெடுங்கொடி யுழிஞைப் பலரோடு மிடைந்து
செறியத் தொடுத்த தேம்பாய் கண்ணி''[36]

எனப் புறநானூற்றுப் பாடலடிகளும் 'மணந்து', 'மன்றம்' என்னும் சொற்களை எடுத்தாண்டிருப்பது இவ்விடத்தில் சுட்டத்தக்கதாகும்.

**மன்றம், மன்றாடியார்**

'மன்றம் என்றும் சொல்லுக்குச் சபை, நியாய சபை, ஊருக்கு நடுவாய்யுள்ள மரத்தடிப் பொதுவிடம் முதலிய பொருள்கள் தமிழ்ப் பேரகராதியில் இடம் பெற்றுள்ளன.'[37] 'பொதுச்சபையில் வழக்கினை எடுத்துப் பேசுவோர்க்கும் வழக்கினைத் தீர்ப்பவர்க்கும் 'மன்றாடி' என்ற பெயர் வழங்கியதாகச் செ. இராசு கூறுகின்றார்.'[38] ''பழைய மன்றாடி போலுமிவன்''[39] எனப் பெரியபுராணம் கூறுகின்றது. ''ஊரின் பொதுவிடத்தில் அமைந்துள்ள அவையாகிய மன்றத்தில் அமர்ந்து வழக்குகளை ஆராய்ந்து தீர்ப்பு வழங்குபவர் 'மன்றாடி' எனப் பெயர் பெறுகின்றார். மன்றத்தில் அமர்ந்து வழக்குகளை ஆராய்ந்து தீர்ப்பு வழங்கிய ஆயர் மன்றாடி எனப் பெற்றனர்''[40] என்று அ. முத்துசாமி குறிப்பிடுகின்றார். ந. சுப்பிரமணியன், ''மன்றம் என்பது சிற்றூரின் நடுவில் ஒரு பெரிய மரத்தடியில் அதைச்சுற்றி அமைக்கப்பட்ட திண்ணை. இந்தத் திண்ணை ஒரு மேடை போன்றிருக்கும். ஆகவேதான் பிற்காலத்தில் நாடக மேடைகளை மன்றம் என்றனர். இம்மன்றத்தில் கிராமத்திலுள்ள இடையர்கள் தங்கள் மாடுகளைக் கொணர்ந்து கட்டிவைப்பர். ஆதலால் மாட்டிடையர்களுக்கு 'மன்றாடிகள்' என்னும் பெயர் உண்டு.''[41] என்று சுட்டுகின்றர். அவர் ஆடு, மாடுகளைக் கொண்டு வந்து மன்றத்திலே கட்டி வைத்த காரணத்தால் 'மன்றாடி' என்னும் பெயர் அமைந்தது என்று குறிப்பிடுவது பொருத்தமாகத் தோன்றவில்லை.

அம்பலம் செய்பவர் அம்பலக்காரர் எனவும், கருத்து மாறுபாடுற்றுப் பிணக்குக் கொண்டவர்களைச் சேர்த்து வைப்பவர் 'சேர்வை' எனவும் சுட்டப்பெறுவது போல்

மன்றத்திலமர்ந்து வழக்காடி நீதி வழங்குபவர் 'மன்றாடி' எனக்கொள்ளுவதே பொருத்தமுடையதாகும். மன்றாடி என்னும் சொல் உயர்வுப் பன்மைக்குரிய 'ஆர்' என்னும் விகுதி பெற்று மன்றாடியார் என வழங்கப் பெற்றது. மன்றாடியார் எனப்பட்டப் பெயர் கொண்ட ஆயர் தமிழகத்தில் கோவை மாவட்டத்தில் ஆங்காங்கே மிகச் சிலர் மட்டுமே உள்ளனர். தொழில் காரணமாக அமைந்த இப்பட்டப் பெயர் கள்ளர், கவுண்டர் முதலிய பிற சாதியினரிடத்தும் காணப்பெறுகின்றது.

**பொதியில்**

'முன்னூர்ப் பொதியிலைப்'[42] பற்றிக் கூறும் ஔவையார் கிராமத்தின் முன் அமைந்துள்ள பொதியிலில் ஏதிலாரும், யாத்ரிகரும், பாணரும் தங்குவதைக் குறிக்கின்றார். பொதுவில் ''யாரும் வழிபடுவதற்குரிய இடம் 'பொதியில்' என்பது நச்சினார்க்கினியர் விளக்கமாகும்.''[43] ''வேடர்களாகிய எயினர்கள், கிராமத்து மன்றங்களில் அவர்கள் பெயர்த்து வந்த மாடுகளைக் கட்டிவைத்தனர்.''[44] ''பொதியிலில் உள்ள மரத்தில் யானைக் கன்றுகள் கட்டப்பட்டு நிற்றலைப் புறநானூறு கூறுகின்றது.''[45] ''அதன் அருகில் மாட்டுக் கொட்டில் ஒன்று இருக்கும்; அதில் பசுக்களைக் கட்டிவைத்தனர். ஆதலால் மாட்டிடையர்களுக்கு மன்றாடிகள் என்பது பெயராயிற்று.''[46]

**வேதிகை**

''நாலடியாரில் 'வேதிகை' என்னும் இடம் குறிக்கப்படுகின்றது. அது ஊர் நடுவில் மரங்களைச் சுற்றியமைந்த வட்டமான, நீள்சதுரமான அல்லது சதுரமான ஒரு கட்டடம் ஆகும்.''[47] ''வழிப்போக்கர்களுக்குத் தங்குமிடமாக வேதிகை

பயன்பட்டுள்ளது. இதிலிருந்து பிற்காலத்து மன்றம் எழுந்ததாகக் கருதலாம். ஏனெனில் மன்றம் என்பது அதன் தொடக்க காலத்தில் ஒரு திண்ணை போன்ற உயர்ந்த மேடையாகவே இருந்துள்ளது. பொதியிலை மேற்பார்வையிட போரில் சிறைபிடிக்கப்பட்ட மகளிரை பயன்படுத்தினர்; அவர்கள் அதனைச் சாணத்தால் மெழுகிச் சுத்தமாக வைத்திருந்தனர்.''[48] '' 'பொதியில்' என்னும் சொல் பொது இல் என்பதினின்றும் பெறப்பட்டது.'[49] 'நிழல் தரும் மரத்தின் அடியில் ஆன்ம விசாரம், லௌகிக விசாரம் என்பனவற்றை மேற்கொண்ட கௌதமபுத்தர் ஞானம் பெறுதல், சிவபிரான் யோகம் பயிலல், கிராமத்து முதியோர் கூடுதல் போன்றன நிகழ்ந்தன. மரத்தைச் சுற்றி உயர்த்திக் கட்டப்பட்ட இருக்கையிருப்பினும், அம்மரமும் மன்றம் அல்லது பொதியிலில் ஒரு பகுதியாகும். வேப்ப மரத்தின் அடி மன்றம் பலர் கூடுவதற்கு ஏற்ற இடமாகும். ஏனெனில் நோய் தீர்க்கும் பண்பினைக் கொண்டிருந்தது.'[50]

பொதியில் என்பது சிற்றூர் வெளியில் அமைந்த ஓரிடமாகும். அது மரத்தடியில் அமைந்திருந்தது. அது இளைப்பாற வருவோர்க்கும், பொழுது போக்கிற்காக வம்பு பேச வருவோர்க்கும், பொறுப்புள்ள அரசியல் பேசுவோர்க்கும் அரசியல் மற்றும் நீதிமன்ற அலுவல்களோடு தொடர்புள்ள ஊர் பொதுமக்களும் கூடும் இடமாகத் திகழ்ந்தது. ''இவ்விடம் பண்டைய சமய அலுவல்களோடு ஒன்றியமைந்த இடமாகும். அது முற்றிலும் ஒரு கிராம நிறுவனமாகும். ஆயினும் அதனைத் தலைநகரிலுள்ள 'அவை'யோடு பொருத்தி, அங்கு மன்னனது அறக்களத்து அவைபோல நீதி-நிருவாகப் பிரச்சினைகளை விவாதித்துள்ளனர். க.அ. நீலகண்ட ''சாஸ்திரி கூறுவது போல, பிற்காலத்தில் சோழர் ஆட்சியில் நடைபெற்ற விரிவான உயர்தர கிராம சுயாட்சி அமைப்பு முறை ஓரளவே இத்தொடக்கக் கால நிறுவனங்களினின்றும் பிறந்ததாகக் கருதலாம்.''[51]

*கிராமங்களில் எழுந்த சிறுசிறு தகராறுகளையும் பிரச்சினைகளையும் கிராம நிறுவனங்களான மன்றமும் பொதியிலும் தீர்த்து வைப்பதில் ஈடுபட்டன என்பதைத் தெளிய முடிகின்றது. இக்காலத்துப் பஞ்சாயத்துக்களை விட அவற்றிற்கு மிகுந்த அதிகாரம் இருந்தது; ஏனெனில் நவீன காலத்தில் போன்று, அவர்கள் தீர்ப்பிற்குப் பிறகு மேல்முறையீடு செய்து விண்ணப்பஞ்செய்து கொள்ளப் படிப்படியான அதிகார வர்க்கம் ஒன்று இல்லை. வேறு வழியின்றிக் கிராமத்து முதியோர்கள் ஏராளமான அதிகாரங்களைச் செலுத்தியுள்ளனர். பணம், சாதி, வயது அடிப்படையில் அம்முதியோர்கள் செயல்பட்டனர். அவர்கள் தங்களைத் தாங்களே தேர்ந்து கொண்டனர். அவர்கள் முதியோராகவும், செல்வாக்குடையோராகவும், செல்வந்தராகவும் இருந்த காரணங்களினால் கிராமத்திலுள்ளவர்கள் அவர்கள் தலைமையை எதிர்க்கவில்லை. அவ்வதிகாரங்களையேற்ற முதியோர்களுக்கு எவ்விதப் பிரதிபலனும் அளிக்கப்படவும் இல்லை. அவர்கள் அவையத்தார்களாக இருந்து பொதுப்பணிகளைச் செய்து வந்துள்ளனர்.*

**மண்டலங்கள்**

*"அரசு மாநிலங்கள், மாவட்டங்கள், வட்டங்கள், பிரிவுகள் என்று நிருவாக முறையில் சங்க காலத்தில் பிரிக்கப்படவில்லை. மொத்த அரசும் 'மண்டலம்' என்றழைக்கப்பட்டுள்ளது. சிலப்பதிகாரத்தில் மன்னர்களை 'மண்டில மாக்கள்'[52] என்று குறிக்கப்பட்டுள்ளது. 'திருக்குறளில் இம்மண்டலங்கள் பற்றிய குறிப்புக்கள் இல்லை. சோழ மண்டலம், சேர மண்டலம், பாண்டி மண்டலம், கொங்கு மண்டலம், தொண்டை மண்டலம் ஆகிய மண்டலங்கலாக அன்றையத் தமிழகம் விளங்கியது. கொங்கு மண்டலமும், தொண்டை மண்டலமும் முற்காலத்தில் கொங்கு நாடாகவும், தொண்டை நாடாகவும் இருந்து பின்னர் மண்டலங்கள் ஆகியிருக்கலாம். 'நாடு' மண்டலத்தின் ஒரு பகுதியாகும். மண்டலத்திற்கு அடுத்தாற் போல உயர்ந்த பிரிவு*

நாடு ஆகும். அக்காலத்தில் 'கூற்றம்' என்னும் ஒரு பிரிவும் இருந்துள்ளது. வி.ஆர். இராமச்சந்திர தீக்ஷிதர் குறிப்பிடுவது போல 'நாடு' என்பது கூற்றத்தின் ஒரு பகுதி என்று உறுதியாகக் கூறமுடியாது.'[53] "உ.வே. சாமிநாதையர் குறிப்பிடுவது போல கூற்றம் என்பது நாடு என்பதன் பகுதி என்றும் சொல்லிவிட முடியாது"[54] கூற்றம் என்பது மருவிப் பிற்காலத்தில் 'கோட்டம்' என்றாயிற்று. "கூறு (பிரிவு), கோடு (கிளை) என்பனவற்றிற்கு இணையான சொற்களாகக் கருதலாம். 'ஊர்', என்பது நகரமாகும். பெரிய கிராமம் 'பேரூர்' ஆகும்."[55] "சிறிய கிராமம் 'சிறூர்' ஆகும்."[56] "பழைய கிராமம் 'மூதூர்' ஆகும்."[57]

## ஐம்பெருங்குழுவினர்

சங்ககால அரசியலைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளுவதற்கு ஐம்பெருங் குழுவும், எண்பேராயமும் துணைபுரிகின்றன. சிலப்பதிகாரம்[58], மணிமேகலை[59], மதுரைக்காஞ்சி[60] ஆகிய சங்க இலக்கியங்களில் ஐம்பெருங் குழுவினரையும் எண்பேராயத்தினையும் பற்றிய குறிப்புக்கள் இடம் பெற்றுள்ளன. 'பெருங்கதையிலும்'[61] இவை பற்றிய குறிப்பு உள்ளது. ஆனாலும் சங்க இலக்கியங்களில் இந்நிலையங்களின் அமைப்பு, செயற்பாடுகள், அதிகாரங்கள் ஆகியனபற்றிய குறிப்புக்கள் மட்டுமே இடம் பெற்றுள்ளன. "ஐம்பெருங் குழுவினர்கள் புரோகிதர், படைத்தலைவர், தூதுவர், ஒற்றர், அமைச்சர் ஆகியோர் ஆவார்கள்."[62] 'வே. கனகசபை ஐம்பெருங்குழுவினரைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது, இக்குழுவினரை மனத்தில் கொண்டு ஆட்சி முறை வல்லாட்சியிலிருந்து முற்றிலும் வேறுபட்டது; அரசனுடைய அதிகாரங்கள் ஐந்து மன்றங்களால் கட்டுப்படுத்தப் பெற்றது; மக்கள் பிரதிநிதிகள், புரோகிதர், மருத்துவர், சோதிடர் அல்லது சகுனம் பார்ப்போர், அமைச்சர் என்போர் ஆவார் என்று குறிப்பிடுகின்றார்.

பிரதிநிதி சபை மக்களின் உரிமைகளையும், சலுகைகளையும் பாதுகாத்தது. தலைநகரில் இவ்வொவ்வொரு குழுவும் கூடுதற்கும் அலுவலகப் பணிகளை மேற்கொள்ளுதற்கும் தனித்தனி இடங்கள் ஒதுக்கப்பட்டிருந்தன என்றும் சுட்டிக்காட்டியுள்ளார்.'[63]

எஸ்.கே. ஐயங்கார் 'ஐம்பெருங்குழு என்பதும் ஐந்து பகுதிகள் கொண்ட, அங்கீகரிக்கப்பட்ட மக்களின் சபை என்பதும், அது மறைமுகமாகச் செயல்பட்டது என்பதும் தெளிவு'[64] என்று குறிப்பிட்டுள்ளார். மேலும் அவர் 'ஐம்பெருங் குழுவினரை 'அவை மன்னனிடை நிகழ்ந்த மன்றம்; எல்லா முக்கியமான செயற்பாடுகளுக்கும் அதனைக் கலந்தாலோசிப்பது மன்னனுடைய கடமை' என்றும் சுட்டிக்காட்டியுள்ளார்.'[65] 'இவ்வாறு குறிப்பிட்ட எஸ்.கே. ஐயங்கார் பின்னர் இதனை மறுத்துக் கூறுவதனைப் போன்று மன்னன் இவர்களில் முக்கியமானவர்களைப் பொறுக்கியிருக்க வேண்டும்; அல்லது சிலவகை அதிகாரிகளை எல்லோருடைய நலன்களையும் பாதுகாக்கும் முறையில் அமைக்கும் ஏற்பாடுகள் இருந்திருக்க வேண்டும்; இவர்கள் மன்னர்கள் விரும்பியபோது அவர்களுக்கு அறிவுரை வழங்கினர்'[66] என்று குறிப்பிட்டுள்ளார். முதற்பகுதியில் இம்மன்றத்திற்கு அறிவுரை வழங்க உரிமை உண்டு எனக் கூறிய அவர் இரண்டாம் பகுதியில் கலந்தாலோசிக்கும் சலுகை மன்னனுடையது என்பதால் இவை ஒன்றுக்கொன்று முரணானவையாகத் தோன்றுகின்றன.

'வி.ஆர். இராமச்சந்திரதீக்ஷிதர் ஐம்பெருங்குழுவினரைப் பற்றிக் குறிப்பிடும் போது, 'தடைகள், மன்றம், புரோகிதர், பொதுமக்கள் கருத்து என்பவற்றால் அரசனது அதிகாரம் மிகுதியாகக் கட்டுப்படுத்தப்பட்டமையினால் அவன் தனது அதிகாரத்தைத் தவறாகப் பயன்படுத்தத் துணியவில்லை' என்று குறிப்பிட்டுள்ளார்.'[67]

'வே. கனகசபை மேற்கோள்காட்டி வி.ஏ. ஸ்மித் என்னும் வரலாற்று ஆய்வாளர், 'தமிழ் மன்னர்களுடைய வரம்பில்லா ஆட்சியைக் கட்டுப்படுத்த மக்கள்', புரோகிதர், கணி, மருத்துவர், அமைச்சர் என்போர் கூடிய ஐந்து பெரிய மன்றங்கள் இருந்தன'[68] எனச் சுட்டிக்காட்டியுள்ளார்.

'மதுரைக்காஞ்சியில் ஐம்பெருங்குழுவைப் பற்றிய குறிப்புள்ளது.'[69] "அப்பாடலின் உரையாசிரியர் குறிப்பிடுவதைப் போல முன்னரே 499ஆம் அடியில்[70] அமைச்சர் கூறப்பட்டுவிட்டமையால் எஞ்சிய நான்கு பகுதிகள் இங்குக் கூறப்பட்டன. நச்சினார்க்கினியர் கருத்துப்படி அவர்கள் 'புரோகிதர், தானைத் தலைவர், தூதுவர், ஒற்றர் என்போர் ஆவார். இப்பட்டியல் அடியார்க்கு நல்லார் கூறுவதோடு ஒக்கும். பிற்கூறிய உரையாசிரியர் மக்கள், அந்தணர், மருத்துவர், நிமித்தர், அமைச்சர் என்னும் இன்னொரு பட்டியலைக் கூறி அது ஏற்கவியலாது என்று நீக்கியுள்ளார். அங்ஙனம் நீக்கியது பொருத்தமாகவே உள்ளது. ஏனெனில் அப்பட்டியல் விநோதமானது. அதில் 'மக்கள்' யாவரும் சேர்க்கப்பட்டிருப்பதோடு அரசியலில் யாதொரு தொடர்பும் இல்லாத மருத்துவர், கணி என்போரையும் சேர்த்துள்ளது. நச்சினார்க்கினியரும் அடியார்க்கு நல்லாரும் உரையாசிரியர்களாதலின், அவர்கள் மரபு தவறாமல் பொருத்தமான பட்டியலைத் தந்திருப்பர் என நம்பலாம்."[71]

ஐம்பெருங்குழு அமைச்சர், புரோகிதர், சேனாதிபர், தூதர், ஒற்றர் என்போரைக் கொண்டதாகும். இப்பட்டியல் திவாகரத்திலிருந்து பெறப்பட்டதாகும். இப்பட்டியிலில் அரசியல் பணிகளை மேற்கொள்ளுபவர்களே சேர்க்கப்பட்டுள்ளனர். அமைதிக்கால நிருவாகப் பொறுப்பேற்போர், அறநூல் வாதிகளைச் சமயநோக்கால் விளக்குவோர், இராணுவம், வெளிநாட்டுப் பிரச்சினைகள், இரகசியமாக

வேவுபார்த்தல் என்னும் துறையினர் ஐம்பெருங்குழுவினர் ஆவர். நச்சினார்கினியரும் அடியார்க்குநல்லாரும் தந்துள்ள பட்டியல் ஒழுங்காகவும் முறையாகவும் அமைந்திருப்பதனால் இவ்வைந்து அரசியல் அலுவலர்களும் சேர்ந்த குழுவினை 'ஐம்பெருங்குழு' என்று கொள்ளலாம்.

'ஐம்பெருங்குழுவினரைப் 'பஞ்சமாவர்க்கம்' என்று வடமொழிப் படுத்தியுள்ளனர். வடநாட்டு ஆட்சி மரபில் இத்தகைய நிலையம் ஒன்று காணப்படாமையால் இது இவ்விடத்தில் பொருந்தாது. எஸ்.கே. ஐயங்கார் குறிப்பிடும் பஞ்சமகாப் பிரதாணி''[72] என்பது ஐம்பெருங்குழு அன்று; ஏனெனில் குழு பிரதானியன்று.

'வீரசோழனுடைய பித்தாபுரம், செல்லூர்ப் பட்டயங்களிற் கூறப்படும் 'பஞ்சப்பிரதான்' என்பதும் ஐம்பெருங்குழுவன்று'[73] அதே போன்று மராட்டியரது 'அஷ்டப்பிரதான்' என்பதும் எண்பேராயம் அன்று.

**எண்பேராயத்தினர்**

''நச்சினார்க்கினியர் சரணத்தலைவர், கருமகாரர், கனகச் சுற்றம், கடை காப்பனார், நகரமாந்தர், படைத்தலைவர், யானைவீரர், இவுளி மறவர் என்போர் கூடியது எண்பேராயம்''[74] என்று குறிபிட்டுள்ளார். ''இப்பட்டியலை அடியார்க்கு நல்லாரும் ஏற்றுக்கொண்டுள்ளார்.''[75] இப்பட்டியலும் திவாகரத்தைப் பின்பற்றியதே ஆகும். ''சிலப்பதிகாரப் பழைய உரையாசிரியர் (அரும்பத உரையாசிரியர்) இப்பட்டியலையும் மாற்றிப் பின்வருபவர்கள் தான் மன்னடைய அணுக்கர்கள் என்று குறிப்பிட்டுள்ளார். சாந்து, பூ, கச்சு, ஆடை, பாக்கு, இலை, கஞ்சுகம் (சட்டை), நெய் என்பனவற்றை அரசனுக்குத் தருவோர் அரசனுடைய

ஏவலாளர்களாகவே இருந்துள்ளனர். இவர்கள் அரசியல் நிருவாக முக்கியத்துவம் பெற்றவர்கள் அல்லர். இவர்களை என்பேராயத்தோடு சேர்த்து ஐம்பெருங் குழுவினர் எனப் பேசியிருக்கமாட்டார்கள். ஆதலால் அனுபவம் மிக்க பெரிய உரையாசிரியர்கள் தரும் பட்டியலே மிகுதியும் ஏற்றுக்கொள்ளத்தக்கதாகும். அப்பட்டியல் பின்வருமாறு: 1. கரணத்தியலவர் (கணக்கர்கள்), 2. கருமகாரர் (செயலக அலுவலர்), 3. கனகச் சுற்றம் (பொக்கிஷ அதிகாரிகள்), 4. கடைகாப்பாளர் (கோயில் காவலர்), 5. நகரமாந்தர் (நகரத்திலுள்ள பெரியோர்கள்; இவர்களிடம் அரசன் மக்களது நலன்களைக் கேட்டு அறிந்து கொள்வான்), 6. படைத்தலைவர் (காலாட்படைத் தலைவர்), 7. யானைவீரர், 8. இவுளி மறவர் (குதிரை வீரர்கள்).''[76]

'நகரமாந்தர்' என்போர் நகரத்திலுள்ள எல்லா மக்களும் ஆவர். ஐம்பெருங்குழு, எண்பேராயம் ஆகியனவற்றை நச்சினார்கினியர், அடியார்க்கு நல்லார் போன்ற உரையாசிரியர்கள் கூறியிருப்பதால் அவற்றை ஏற்றுக் கொள்ளலாம். இப்பதின் மூவர் மட்டுமே சங்ககால அரசியலில் இடம் பெறுவதற்குத் தகுதியுடையவர்களாக விளங்கியுள்ளனர். இக்குழுவினர் ஒவ்வொருவருக்கும் தனிப்பட்ட பொறுப்பு இருந்துள்ளது.

### 'பொதியில்', 'அம்பலம்'

இம்மன்றமானது 'பொதியில்' அல்லது 'அம்பலம்' என்னும் சொற்களால் வழங்கப்பட்டுள்ளது. 'மன்றம்', 'பொதியில்', 'அம்பலம்' ஆகியவை ஒரே பொருளைக் குறிக்கும் சொற்கள் போலத் தோற்றமளிக்கின்றன. எடுத்துக்காட்டாக மதுரைக்காஞ்சியில்,

> ''அவை இந்த பெரும் பொதியில்
> சான்றோரிருந்த பெரிய அம்பலம்''[77]

என்று குறிப்பிடப்படுவதைக் கொண்டு சிற்றூர் 'அவை' எனப்படும், நிருவாக சபை எனப்பொருள் கொள்ளலாம். ''திருமுருகாற்றுப்படையில் 'மன்றம்', 'அம்பலம்' ஆகியவை வெவ்வேறானவை என்பது போலத் தனித்தனியே குறிப்பிடப்பட்டுள்ளன.''[78] திருமுருகாற்றுப்படை உரையாசிரியர் 'மன்றம்' என்பது கிராமத்தின் நடுவில் எல்லா மக்களும் வந்து அமர்ந்த 'மரத்தின்அடி' என்று குறிப்பிடுவதோடு, 'பொதியில்' என்பது அம்பலத்திற்குச் சமம் எனப்பொருள் கொண்டு 'அம்பலம்' என்பது சற்று உயரமாகப் போடப்பட்ட மண்மேடை என்று குறிப்பிடுகின்றனர். ஆதலால் அக்காலத்தில் 'மன்றம்', 'அம்பலம்', ஆகியவை ஒன்றெனவே கருதப்பட்டுள்ளமை புலனாகின்றது. மலைபடுகடாமிற்கு உரையெழுதிய நச்சினார்க்கினியர் அம்பலத்தில் தங்கியிருந்து நடமாடுவோர் பற்றியும் குறிப்பிட்டுள்ளார்.

**பட்டப் பெயர்கள்**

''முல்லை நில மக்களின் பட்டப்பெயர்களாக அம்பலகாரர், கரையாளர், கீதாரி, கோன் அல்லது கோனார், சேர்வை, தாஸ், நம்பி, நாயுடு, பிள்ளை, மணியக்காரர், மந்திரி அல்லது மந்தடி, மன்றாடியார், யாதவ், ரெட்டி போன்றவை வழக்கில் உள்ளன. இவையேயன்றி 'முகுந்தன்' என்னும் பட்டப்பெயர் ஒன்றும் இவர்களிடையே காணப்பெறுவதாக இரா. தேவஆசீர்வாதம் குறிப்பிடுகின்றார்.''[79] இப்பட்டப்பெயர்களுள் பல்வேறு சமுதாயப் பிரிவினர்களுக்கும் பட்டப்பெயர்களாக அமைந்துள்ளன. இன்று தமிழகத்திலுள்ள ஒவ்வொரு பிரிவினரிடையேயும் ஒன்றுக்கு மேற்பட்ட பட்டப்பெயர்கள் காணப்படுகின்றன.

''சங்ககாலத்தில் எந்தவொரு சமுதாயப் பிரிவினரிடத்தும் பட்டப்பெயர்கள் வழங்கப்பெறவில்லை. இவையனைத்தும் இடைக்காலத்துத் தோன்றியவை என

ந.மு. வேங்கடசாமிநாட்டாரும்''[80] ''குலப்பட்டங்களும் மரபுப் பெயர்களும் அண்மைக் காலத்திலேயே தோன்றின; அவற்றுக்கு என்ன பொருள் கண்டாலும் அவை தோன்றியதற்கான அடிப்படைக் காரணம் அறிய முடியவில்லை என டபுள்யூ. பிரான்சிசும்''[81] குறிப்பிட்டுள்ளனர். ஆதலால் பட்டப்பெயர்கள் மிகவும் பிற்காலத்தில் தோன்றியவையே என்பதை அறியமுடிகின்றது.

இன்று காணப்பெறும் குலப்பட்டங்களைப் போன்று பழங்காலத்தில் சிறப்புப் பட்டங்கள் வழக்கில் இருந்துள்ளன. அப்பட்டங்கள் அனைத்தும் இன்று போல் பெயருக்குப் பின்னரே இடம் பெறாமல் பெயருக்கு முன்னே இடம் பெற்றுள்ளன. இதனால் தொல்காப்பியர்,

''சிறப்பி னாகிய பெயர்நிலைக் கிளவிக்கும்
இயற்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்''[82]

என்ற வரையறையினை ஏற்படுத்தியுள்ளார். இவ்வரையறைப்படி சங்ககாலத்தில் கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதி, பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி போன்ற சிறப்புப் பெயர்கள் இயற்பெயருக்கு முன்னர் வழங்கி வந்துள்ளன. தமிழ் வேந்தர் தமிழகத்தை ஆட்சி செய்த போது அவர்தம் சிறப்பான ஆட்சிக்கு உறுதுணைபுரிந்த அரசியல் மற்றும் படைத்தலைவர்களுக்கு ஏனாதி, காளிங்கராயன், காவிதி, மழவராயன், மூவேந்தவேளாண், பல்லவராயன் போன்ற சிறப்புப் பட்டங்கள் வழங்கப்பட்டுள்ளன. இச்சிறப்புப் பட்டங்கள் எவரெவர்க்கு வழங்கப்பெற்றனவோ அவரவர் மட்டுமே அவற்றைத் தத்தம் பெயர்களுக்கு முன்னர் கொண்டிருந்தனர். இவ் வகையில் 'அம்பலகாரர்' என்பதும் ஒரு சிறப்புப் பட்டப் பெயரேயாகும்.

**அம்பலகாரர்**

''அம்பலம்' என்னும் சொல்லுக்கு ஊரவை, கற்றோரவை, பலர்கூடும் வெளியிடம், சிற்றூர் அலுவல்வகை முதலிய பொருள்கள் கூறப்பட்டுள்ளன.''[83]

ஊரவையில் அமர்ந்து தம் நுண்மாண் நுழைபுலத்தால் மற்றவர்களுடைய வழக்குகளை ஆராய்ந்து நீதி வழங்கும் ஒருவரே ஊரவைத் தலைவராக விளங்க முடியும்; அவரைத் தலைவராகக் கொண்டே அவ்வூரும் இயங்கும்.

"அறிவுடை யோனா றரசுஞ் சொல்லும்"[84]

என்னும் புறநானூற்றுப் பாடல் உறுதி செய்கின்றது.

"சில ஊர்களில் அறிவுடைய ஒருவரை, அவர் எவ்வினத்தவராக இருந்தாலும் 'அம்பலகாரர்' என அழைக்கும் வழக்கம் உள்ளது. அம்பலகாரர் என்னும் பட்டம் அவர் ஒருவரை மட்டுமே சாரும். ஆயருள்ளும் இத்தகுதி பொருந்தியவர் 'அம்பலகாரர்' என்று அழைக்கப்பெறுகின்றார். இப்பட்டப்பெயர் பூண்டுள்ள ஆயர்கள் இராமநாதபுரம், விருதுநகர், சிவகங்கை முதலிய மாவட்டங்களில் சில ஊர்களில் காணப்பெறுகின்றனர். அம்பலகாரர் என்னும் பட்டப்பெயர் கள்ளர், வலையர் முதலிய சாதியினரிடத்து இன்று மிகுதியாகக் காணப்பெறுகின்றது"[85] என அ. முத்துசாமி சுட்டிக்காட்டியிருப்பதும் இவண் மனங்கொள்ளத்தக்கதாகும்.

**அவை**

"சங்ககாலத்தில் மக்கள் ஒன்றுகூடி பொதுவாழ்வு பற்றி விவாதித்து ஆராய்ந்து செயல்பட்ட இடம் 'அவை', 'அவையம்' என்ற சொற்களால் குறிக்கப்பட்டுள்ளது."[86] "இந்த 'அவையம்' அரசன் பங்கேற்ற அவையம், அரசனால் அமர்த்தப்பட்டோர் அவையம், பொதுமக்கள் மட்டும் பங்கேற்ற அவையம், உற்றார் உறவினர் கூடிச் செயல்பட்ட அவையம் எனப் பல திறத்தவையாகக் காணப்படுகின்றது. அவையின் தன்மை பற்றிய பல கருத்துக்கள் இதனால் தெளிவாகின்றன."[87] "இலக்கியங்களில் 'அவை' என்பது மக்கள் கூடி இருக்கும் ஓர் அமைப்பு"[88] என்றும் "அது 'அவைக்களம்'"[89] என்றும் கூறப்பட்டுள்ளன.

"நல்லவர்கள் கூடியிருக்கும் அவை 'நல்லவை'"[90] எனப்பட்டது. வயது முதிர்ந்தோர்களுக்குப் பொதுவாக அவையில் முதன்மையிடம் அளிக்கப்பட்டுள்ளது. அக்கால மக்கள் சான்றோர் கூடி இருக்கும் அவை பிறரது துன்பங்களை விரைவில் போக்கும் என நம்பிக்கை கொண்டிருந்தனர் என்பதைப் புறநானூற்றுப் பாடல்"[91] தெளிவுப்படுத்துகின்றது.

மக்கள் மட்டும் பங்கேற்ற அவையங்கள் ஊர்ப்பகுதியில் இருந்தன. செங்கண்மா (செங்கம்) என்னும் ஊரில் மக்கள் கூடிப் பொது வாழ்வைப் பற்றி உரையாடி ஓர் அவையில் வீற்றிருந்ததை, "நல்லோர் குழீஇய நூறவில் அவையம்"[92] என்னும் மலைபடுகடாம் பாடலடி சுட்டிக்காட்டுகின்றது. "இது அரசன் இருந்த 'நாள்மகிழ்' இருக்கை அவையிலிருந்து வேறுபட்டது என்பது தெளிவாகக் காட்டப்பட்டுள்ளது. மதுரை நகரிலும் இதுபோன்ற 'அவையம்' இருந்ததாக மதுரைக்காஞ்சியில் குறிப்புள்ளது."[93]

"கான்டூர்' என்னும் ஊரில் தவறு செய்த ஒருவனுக்கு மக்கள் அவை முறை செய்த நிகழ்ச்சியினை அகநானூற்றுப் பாடல் விளக்கமாக எடுத்துக் கூறுகின்றது."[94] "உழவர் போர் அடித்துத் தூற்றினர். கடுங்காற்று வீசியதால் அதிலிருந்து கிளம்பிய தூசி அருகிலுள்ள பரதவரின் உப்பளங்களில் படிந்து அவர்கள் விளைவித்த உப்பை மாசுபடுத்தியது. இதனால் உழவர்களுக்கும், பரதவர்களுக்கும் பூசல் ஏற்பட்டது. சேற்றை வாரி இறைத்துக் கொண்டு ஒருவருக்கொருவர் சண்டைபோட்டுக் கொண்டனர். இதனைக் கண்ட நரைமுதாதையர் அவர்களிடையே தோன்றிய சண்டையை விலக்கி விட்டனர். தூசியைப் போக்கிக் கொள்ளும் உழைப்பிற்குத் தெம்பூட்டும் கூலியாக பூவைக் காய்ச்சி இறக்கிய தேறலைப் பரதவர்களுக்குக் கொடுக்கச் செய்தனர்."[95]

**தொல்காப்பியர் காலத்தில் அவையம்**

தொல்காப்பியர் வாகைத் திணையைப் பற்றிக் குறிப்பிடுகையில் எட்டு வகையான 'அவையம்' பற்றியும் குறிப்பிடுகின்றார். அவர் வாகைத் திணையில் அறத்தால் வெற்றி பெறுவோர் பற்றிக் குறிப்பிடும் போது,

''எருதும் எருமையும் கைக்கொண்டு உழுதொழிற் சிறப்பால் வெற்றி பெறுவோரும், யானை, குதிரை முதலிய விலங்கினங்களைக் கொண்டு பகை நீக்கி வெற்றி பெறுவோரும், அரசுரிமையைக் கைவிட்டு அருளியல் நெறியைக் கடைப்பிடிப்போரும், குடிபிறப்பு கல்வி, ஒழுக்கம், வாய்மை, தூய்மை, நடுநிலைமை, அழுக்காறின்மை, அவாவின்மை ஆகிய எண்குணங்களை 'உடையராய்' 'நடுநிலைமை தவறாது' பகை நொதுமல் நட்பு ஆகிய முத்திறத்தாரையும் ஒப்பக் கருதித் தீர்ப்பு வழங்கும் அவையத்தோரும், இல்லறத்தார்க்கு உரியவாகக் கூறப்பெற்ற ஒழுக்க நெறிகளில் தவறாது நிலைபெற்று அவ்வொழுக்க நெறிகளைக் காத்து நிற்போரும், பெரும்புகழ் தரும் பயக்கும் இடையீடில்லாத கொடையை வழங்குவோரும், தம்மைப் பழித்தோரைத் தாம் பொறுக்கும் தகைமையோரும், படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண் ஆகிய ஆறானும் சிறப்புற்று விளங்கும் அரசரும், அருளொரு பொருந்தி துறவு நெறி மேற்கொண்டோரும், எப்பொருள்களிலும் பற்றற்று நிற்போரும் அறத்தின் பாற்பட்ட வெற்றியினைப் பெற்றோர் ஆவர்''[96] எனக்குறிப்பிட்டுள்ளார். இதனால் தொல்காப்பியர் அறநெறிப்பட்ட நீதி நெறிமுறைகளில் நம்பிக்கை கொண்டிருந்தார் என்பது புலனாகின்றது.

தொல்காப்பியர் புறத்திணையியலில்,

''எட்டுவகை நுதலிய அவைத்தானும்''[97]

எனக் குறிப்பிட்டுள்ளார். இதற்கு உரையெழுதிய நச்சினார்க்கினியர், ''எண்வகைக் குணத்தினைக் கருதிய அவையத்தாரது நிலைமையானும்; அவை குடிப்பிறப்பு, கல்வி,

ஒழுக்கம், வாய்மை, தூய்மை, நடுவுநிலைமை, அழுக்காறின்மை, அவாவின்மை என விடையராய், அவைக்கண் முந்தியிருப்போர் வெற்றியைக் கூறுதல்"[98] எனக் குறிப்பிட்டுள்ளார். ஆதலால் தொல்காப்பியர் காலத்தில் பகை, நொதுமல், நட்பு ஆகிய முத்திறத்தாரையும் ஒப்பக்கருதித் தீர்ப்பு வழங்கும் அறங்கூறும் அவையம் இருந்துள்ளமை புலனாகின்றது.

"சங்கநூல்களிலும் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களிலும் 'ஊராண்மை' பற்றிய செய்திகள் காணப்படுகின்றன."[99] "அவையம் பொதுவாக நீதிமன்றங்களாகவே செயல்பட்டுள்ளன. நெறிமான அவையம், அறங்கூறு அவையம், நாளோலக்க மண்டபம் என்ற பெயர்களில் அவையம் வழங்கப்பட்டு வந்துள்ளன. பக்தி நெறி மேலோங்கிய காலத்தில் கோயில்கள் நீதி மன்றங்களாகச் செயல்பட்டன. இந்த மன்றங்களில் அரசன் நீதி வழங்கியதாகவும், அரசர் இல்லாத போது சிற்றூர்களில் உள்ள மன்றங்களில் புத்திக்கூர்மையுடைய பிராமணர்கள் தீர்ப்புக் கூறியதாகவும்"[100] கூறப்படுகின்றது.

"உரைமுடிவு காணான் இளமையோன் என்ற
நரைமுது மக்கள் உவப்ப நரைமுடித்துச்
சொல்லால் முறை செய்யின் சோழன்"

எனப்பழமொழி நானூறு சுட்டுகிறது. கரிகாற்சோழன் இளமைக் காலத்தில் நீதி வழங்கிய திறத்தை மா. இராசமாணிக்கம் எடுத்துக்காட்டியுள்ளார்."[101] சிற்றூர்க் காரியங்களை நரை முதிர்ந்த மக்கள் கவனித்து வந்துள்ளனர். கரிகால் சோழன் சிறியவனாகையால் வழக்கின் உண்மையான முடிவை ஆராயும் அறிவு நிரம்பப் பெறாதவன் என இகழ்ந்த முதியோர்கள் மனம் மகிழும்படி நரைமுடிதரித்து முதியவர் போல் வேடமிட்டு வழக்கை நல்லமுறையில் விசாரித்துச் சரியான தீர்ப்பை

*வழங்கினான் என்பதைப் பழமொழி நானூறில் வரும் இப்பாடல் சுட்டிக் காட்டுகின்றது.*

*"சிலப்பதிகாரத்தில் பாண்டியன் நெடுஞ்செழியன் ஆராயாமல் தவறுதலாக நீதி வழங்கிய முறையை 'வழக்குரைகாதை' விளக்கமாக எடுத்துப் பேசுகின்றது."*[102] *சேக்கிழாரின் பெரிய புராணம் தடுத்தாட் கொண்ட புராணத்தில் கிழவடிவம் பூண்டு வந்த சிவபெருமான் சுந்தரமூர்த்தி நாயனாரை ஆட்கொண்டவிடத்து திருவெண்ணெய் நல்லூர் சபையில் நியாயம் கூறிய விதத்தைச் சேக்கிழார் விரிவாகவும் விளக்கமாகவும் எடுத்துரைத்துள்ளார். இந்த வழக்குகள் மூலம் சிற்றூர் மன்றங்களில் (நல்லூர்) நல்ல முறையில் வழக்கினை விசாரித்துத் தீர்ப்புக் கூறியுள்ள முறையினை அறிய முடிகின்றது.*

*"விஜய நகரப் பேரரசின் ஆட்சிக்காலத்தில் பல ஊர்களில் நியாய மன்றங்கள் இருந்ததாக அறியமுடிகின்றது. 'நாயக்' என்ற பட்டத்துடன் ஓர் உத்தியோகஸ்தர் மட்டும் இந்தப் பணியில் ஈடுபட்டிருந்தார் என்று தெரிகின்றது."*[103] *இவ்வாறு காலந்தோறும் தமிழ்நாட்டில் கிராமங்களில் 'நியாயசபை' இருந்துள்ளமையையும், அங்கு நீதி வழங்கப்பட்ட முறையினையும் தமிழக வரலாற்றுச் சான்றுகள் நிறுவிக் காட்டுகின்றன.*

**நீதிமன்றம்**

*இந்தியாவின் அரசியல் நிலையங்கள், பிறநாட்டு அரசியல் நிலையங்களினின்றும் முற்றிலும் வேறுபட்டிருந்தன. இதற்கு அடிப்படையான காரணம் இந்தியாவின் தனிப்பட்ட சமுதாய அமைப்பு எனலாம். பண்டைய இந்தியாவில் 'சட்டம்' இயற்றப்படவில்லை; சமூகத்தில் தொன்று தொட்டு நிலவி*

வந்த 'நேர்மை', 'நேர்மையற்றது', 'முறையானது', 'முறையற்றது' என்னும் கருத்துக்கள் மட்டுமே வேருன்றியிருந்தன. இதனை ந. சுப்ரமணியன்,

"இந்தியாவிற்கே உரித்தான தனிப்பட்ட சாதி அடிப்படையில் அமைந்த சமுதாய அமைப்புக் காரணமாகச் சட்டம், நீதிமன்றங்கள், நீதி வழங்குதல் போன்றனவற்றில் ஓரளவு விரைப்பு (நெகிழாத்தன்மை) காணப்படுவது இயல்பே. சிறப்புரிமைகளும் கடப்பாடுகளும் அறியப்பட்டன; அவற்றை எடுத்துக்கூறினர். சமுதாய அமைப்பை மாறாமல் பார்த்துக் கொள்ளும் வெளிப்படையான பொறுப்பையுடைய அரசன் அவற்றை உறுதிப்படுத்தி நடைமுறையும் படுத்த வேண்டியிருந்தது"[105] என்று குறிப்பிடுகின்றார். ஆதலால் நெடுங்காலமாக இங்ஙனம் நிறுவப்பெற்ற சமூக மரபுகளைப் போற்றுவதே சட்டத்தின் தன்மையாயிற்று. நிறுவப்பட்ட சமுதாய ஒழுங்கிணைப்பு (Social Norms) புரட்டும் முயற்சி அனைத்தையும் அடிப்படையான குற்றம் எனக் கருதினர். மிக அதிகமான தண்டனைகள் இத்தகைய குற்றங்களுக்கு அளிக்கப்பட்டன.

பிற குற்றங்களுக்கு எளிமையான தண்டனைகள் வழங்கப்பட்டன. சமுதாய ஒழுங்குநிலை தடுமாறினால் மிகவும் பாதிக்கப்படுவது மன்னனேயாதலால் அத்தடுமாற்றம் நடைபெறாமல் மன்னன் பார்த்துக் கொண்டான். நாட்டின் எழுதாச் சட்டத்தின் அதிகாரத்தைக் கொண்டும், படைகளின் பலத்தைக் கொண்டும் அரசன் சட்டத்தையும், ஒழுங்கையும் தனது ஆட்சியில் இயன்றவரை அமைதியாகவும் தேவையான போது வன்முறையிலும் நிலைநாட்டியுள்ளான். உலகியல் அதிகாரங்களைத் தன்னகத்தே கொண்ட மன்னன் நீதியின் மூலமாக விளங்கினான்; நீதி நிருவாகத்திற்குப் பொருத்தமானவர்களைத் தேர்ந்து அவர்கள் மூலம் நீதியை நிருவாகித்து வந்துள்ளான். நகரங்களிலும் கிராமப்புறங்களிலும் நீதியை வழங்கும் மன்றங்கள் இருந்துள்ளன. தலைநகரில் மன்னனும் பிற இடங்களில் அவனுடைய

பிரதிநிதிகளும் இம்மன்றங்களின் தலைமைப் பொறுப்பினை ஏற்று நீதி வழங்கியுள்ளனர். அக்காலத்தில் நாட்டுத் திட்டம் என்பது பறையறைந்து அறிவிக்கப்பட்ட மன்னனின் ஆணைகள் ஆகும்.

**ஆராய்ச்சி மணி**

'தலைநகரங்களில் இருந்த நீதி மன்றங்களை 'அவை' என்றனர். கிராமங்களில் நீதி எளிமையாக வழங்கப்பட்ட இடம் 'மன்றம்' எனப்பட்டது. நீதிபதிகளின் கடமைகளையாற்றத் தனிப்பட்ட அலுவலர்கள் நியமிக்கப்பட்டனர்'[106] என்னும் கருத்தினை வலியுறுத்தும் சான்றுகள் இல்லை. ''மன்னனது 'அரண்மனையின் முன்றில்' அவனது அவை கூடிய நீதிமன்றமாகவும் விளங்கியுள்ளது. மன்னனது அரண்மனை வாயிலில் ஆராய்ச்சி மணியொன்றும் கட்டப்பட்டிருந்தது. தன் மகன் ஒரு பசுவின் கன்றினைக் கொன்றதாக அவன்மீது குற்றம் கண்டு கொலைத்தண்டம் விதித்த மனுநீதிச் சோழனது அரண்மனை வாயிலில் ஆராய்ச்சி மணியொன்றிருந்தது. வழக்குத் தொடர்ந்த பசு ஆராய்ச்சி மணியையடித்து மன்னனுக்கு அறிவித்தது.''[107] பாண்டியன் நெடுஞ்செழியனின் மனைவியான கோப்பெருந்தேவி தான்கண்ட தீக்கனாவினைக் கூறும் போது,

> ''நங்கோன்றன் கொற்றவாயின் மணிநடுங்க
> நடுங்கும் உள்ளம்''[108]

என்கின்றனர். ''ஆராய்ச்சி மணி ஆங்கு இருந்தபோதும், அரண்மனை வாயிலாக நெருங்கிய கண்ணகி வருத்தமிகுதியில் அதனைப் பொருட்படுத்தாமல்''[109] வாயிலோனைக் கூவி அழைத்து அவள் கூற்றை மன்னனுக்குத் தெரிவிக்குமாறு பணிக்கின்றாள்.[110] ''இந்நிகழ்ச்சியால் யாதொரு வழக்கினையும் வற்புறுத்தாமல்

வழக்காளரைத் தம்முன் கொண்டு வர ஆணையிட்டமை புலனாகின்றது.''[111] இந்த எடுத்துக் காட்டுக்களால் சோழ, பாண்டி அரண்மனைகளில் இத்தகைய ஏற்பாடு காணப்பட்டமையை உணரலாம். பொதுவாக, அரண்மனைக் காவலர்கள் புறத்தாரையும் முன் அனுமதி பெறாதவர்களையும் அரண்மனைக்குள் விட மாட்டார்கள் என்பதனால் இவ் ஆராய்ச்சி மணி தேவைப்பட்டது எனலாம்.

**அறங்கூறவையமும் மன்னனின் தலைமையும்**

''தலைநகரத்தில் அறங்கூறவையத்திற்கு மன்னனே தலைமை தாங்கினான். இம்மன்றங்களில் நீதிபதியாக விளங்குவதற்குத் தனிப்பட்ட சில அலுவலர்கள் நியமிக்கப்பட்டதாக சான்றுகள் இல்லை. சீர்மையும், கல்வியும், பண்பும் நிறைந்த 'அறிஞர்குழு' ஒன்று இந்த அறங்கூறவையங்களில் செயல்பட்டுள்ளது. மன்னனுக்கு நீதிகளை எடுத்துரைத்தல் அவர்களது கடமையாகும். வயதில் இளைய மன்னனாகிய கரிகாற் சோழனைக் குறிக்கும் போது பழமொழி நானூறு 'உரைமுடிவுகாணான் இளையோன்'''[112] என்று குறிப்பிடுகின்றது. ''இதனால் 'உரை' என்பது 'வாதி மற்றும் பிரதிவாதிகளின் வாதங்கள்' என்பதனையும், 'உரை முடிவு' என்பது 'தீர்ப்பு' என்பதனையும், அறிவுடை அமைச்சர்களின் வாதங்களைக் கேட்டுத் தீர்ப்புக்கூற வேண்டியது மன்னனுடைய கடமை என்பதனையும் அறியலாம். நீதி வழங்குவதற்காகக் கூட்டும் அரசவை 'அறக்களம்' என்றழைக்கப்பட்டது. பிற்கால உரையாசிரியர்கள் இத்தொடரினைத் 'தருமாசனர்' என்று மொழி பெயர்த்துள்ளனர்.''[113] ''கற்றுவல்ல நீதி அறிவுரையாளர்களைப் பொதுவாக 'அறங்கூறு அவையம்'''[114] 'அறக்களத்து அந்தணர்'[115] என்றனர். பிந்திய தொடரினைச் சிலப்பதிகார அரும்பத உரைகாரர் 'தருமாசனத்துக் கருத்தாக்கள்' அதாவது 'அறங்கூறவையத்து அலுவலாளர்' என்று விளக்கியுள்ளார். அறங்கூறவைத்தார் சில

வரலாற்றாய்வாளர்கள் குறிப்பிடுவது போல[116] பிராமணர்கள் இருந்துள்ளனர் என்பதற்குச் சான்றுகள் இல்லை. மதுரைக் காஞ்சியில் காவிதிப் பட்டம் பெற்ற அமைச்சர்கள் அறங்கூறவையத்தில் இருந்தமை பேசப்படுகின்றது. திருவள்ளுவர் 'அந்தணர்' என்னும் சொல்லினை,

"அந்தணர் என்போர் அறவோர் மற்று எவ்வுயிர்க்கும்
செந்தன்மை பூண்டு ஒழுகலான்"[117]

என்று குறிப்பிட்டுள்ளார். "ஆதலால் 'அந்தணர்' என்போர் அறக்களத்தோர் என்றும் நேர்மையும் நியாய உணர்ச்சியும் கொண்டவர்கள் என்பதும் பெறப்படுகின்றன. இளகிய உள்ளமும், தாராள மனப்பான்மையும், நீதி வழங்கும் திறனும், நியாய உணர்ச்சியும் பெற்ற நீதி அறிவுரையாளர்கள் 'அந்தணர்' எனப்பட்டனர். இது பின்னர் சாதியைக் குறிக்கும் சொல்லாயிற்று. கிடைக்கும் இலக்கியச் சான்றுகளைக் கொண்டு அணுகும் போது மன்னர்களில் பெரும்பாலோர் தக்கோராலேயே அறிவுறுத்தப் பெற்றுள்ளனர் என்பது புலனாகின்றது."[118] இருவர் தம்முள் முரண்பட்டு வந்தால் அவர்களது வழக்கை நடுநிலை பிறழாதிருந்து கேட்டு, நன்கு ஆராய்ந்து உண்மையைத் தெளிந்து முடிவாகத் தீர்ப்புக் கூறும் இடமே அறங்கூறவையும் ஆகும். இதனை மதுரைக் காஞ்சி,

"சிறந்த கொள்கை அறங்கூ றவையம்"[119]

எனச் சுட்டுகின்றது. "அந்த அவையத்திலிருந்தோர் கல்வி, கேள்வி, ஒழுக்கம் ஆகியனவற்றில் சிறந்த அறவோராக, நடுவுநிலைமை கொண்டோராக இருந்தனர்."[120] இதனைப் புறநானூறு பல பாடல்கள் சுட்டிக்காட்டுகின்றது.

"சான்றோ ரிருந்த அவையத்து"[121]

"அறமறக் கண்ட நெறிமாண் அவையம்"[122]

"மறங்கெழு சோழ குறந்தை அவையத்
தறநின்று நிலையிற்று"[123]

சான்றோர் இருந்த அவையம் என்பதனால் அறிவும் ஒழுக்கமும் நேர்மையுமுடைய சான்றோர்கள் அந்த அவையத்தில் இருந்தனர் என்பதைப் புறநானூறு சுட்டிக் காட்டுகின்றது. உறந்தையில் இருந்த அறங்கூறவையத்தில் அறம் நிலை கொண்டிருந்தது என்பதனால் அறநெறி வழுவாது அங்கு நீதி வழங்கியுள்ளனர் என்பதும் புலனாகிறது.

அறிவால் நிறைந்த சான்றோர்களைத் தேர்ந்தெடுத்து அரசனே அறங்கூறவையத்தில் அமர்த்தி வைத்தான். அவர்கள் அறநெறி தவறாது நீதி வழங்கியுள்ளனர். இதனை,

> ''அறநிலை திரியா அன்பின் அவையத்துத்
> திறனில் ஒருவனை நாட்டி மெலிகோல்
> செய்தே னாகுக''[124]

என்று ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன் கூறிய வஞ்சின மொழியால் உணரலாம். மன்னர்கள் குடிமக்களுக்கு நீதி வழங்குவதை முதன்மையான பணியாகக் கருதி, அறங்கூறவையத்தை விழுமிய முறையில் நடத்தி வந்துள்ளனர் என்பதைப் புறநானூற்றுப் பாடல்களின் மூலம் அறியலாம்.

''சங்க காலத்தில் நீதி மன்றம் 'அவை' அல்லது 'அவையம்' என்றழைக்கப்பட்டது. நியாயம் வழங்கும் நிலையில் செல்வாக்கும் நல்கூர்ந்தவர்களுக்குமிடையே வேறுபாடு காண்டல் தவறு என்று அறங் கூறவையத்தினர் எச்சரிக்கப்பட்டுள்ளனர்.''[125] 'அவை'யுடன் கலக்காமல் மன்னனே தீர்ப்புக்கள் வழங்கியதும் உண்டு. ஆனால் சங்க இலக்கியங்களைப் பொறுத்தவரை மன்னனின்றி அவையத்தாரே தீர்ப்பு வழங்கிய 'அவையங்கள்' இல்லை.

## நீதி வழங்கிய முறை

"அவையத்திடம் தொடர்ந்த வழக்கு 'குறை' எனவும், வழங்கிய நியாயம் 'முறை' எனவும் பட்டன."[126] "முறைபிறழாமை பெரியதோர் பண்பாகப் போற்றப்பட்டது. மாதவர் நோன்பும் மடவார் கற்பும் வான்பிழையாமையும் மன்னவன் கோலை நோக்கி நிகழ்ந்தன"[127] என்று புலவர்கள் குறிப்பிட்டுப் பாடல்களை இயற்றியுள்ளனர். "சாட்சி கூறியவன் 'கரி' அல்லது 'கரியோன்' எனப்பட்டன. அவன் கூறிய சாட்சி 'கரி' எனப்பட்டது."[128]

"குறை நேர்ந்தவர்கள் அனைவரும் நீதிமன்றத்தை அணுகியுள்ளனர். காதலில் ஏமாற்றமடைந்தவர்கள் தங்கள் காதலியை அடைய நீதிமன்றத்தை நாடியுள்ளார்."[129] அவ்வாறு மன்றத்தை நாடிய காதலற்குக் காதலி உரியவள் என்று மன்றம் கருதினால், "அம்மன்றமே அவர்களுடைய மன்றலுக்கும் ஏற்பாடுகளைச் செய்தன. அம்மணம் ஊர்ப்பொது மன்றத்தில் நடைபெற்றுள்ளது. தான் மணக்க விரும்பிய மகளுக்கு முளை விலை அளிக்க வேண்டியதை மன்றம் (அவை) எடுத்துரைத்தது."[130]

## அறங்கூறவையத்தார் தகுதிகள்

"வயதும் அனுபவமும் அறங்கூற வையத்திலுள்ள நீதிபதிகளுக்குரிய தகுதிகள் என்று பொதுமக்கள் கருதியுள்ளனர்."[131] ஆங்கிலச் சொற்களான 'செனட்' (Genate) 'கவுன்சில் ஆப் எல்டர்ஸ்' (Council of Elders) என்னும் சொற்களும் இக்கருத்தினையே வலியுறுத்துகின்றன. "இதற்குச் சான்றாக இளம் வயதிலேயே அரசனாகப் பட்டமெய்திய சோழ மன்னன் கரிகாலன் நீதிபதியாக அவையத்தில் அமர்ந்து நீதி வழங்கியமையைக் குறிப்பிடலாம். வழக்குத் தொடர்ந்தவர்களும்

அவையத்தாரும் அம்மன்னது இளம்வயது, அவனது நீதி வழங்கும் திறமைக்கு இடையூறாக இருக்குமோ என்று ஐயப்பட்டனர். இளையவனாகிய நுண்புலமைமிக்க மன்னன் இதனைக் கண்டு, அவையின்று விலகிச் சென்று ஒரு நரைமுடியணிந்து முதியவனாகத் திரும்பி வந்து வழக்கினைக் கேட்டுத் தன்னைக் குறைகண்டவர்களும் வியக்க நியாயம் வழங்கினான். இதனைப் பழமொழி நானூறு தெளிவாக எடுத்துக் கூறுகின்றது.''[132] இக்கதையின் வரலாற்று உண்மை எவ்வாறு அமைந்திருப்பினும், வயதும் மதிநுட்பமும் அனுபவமுமே நீதி கூறும் அறங்கூறவையத்தார் தகுதிகள் என்பதை இக்கதையின் மூலம் அறிய முடிகின்றது. அத்துடன் மக்களின் முறையீடுகளை மன்னனே விசாரித்துத் தீர்ப்புக் கூறியுள்ளான் என்பதையும் அறிய முடிகின்றது.

**காவிதிப்பட்டம் பெற்ற அமைச்சர்கள்**

''அவையத்தாரிடையே காவிதிப் பட்டம் பெற்ற அமைச்சர்களும் இருந்துள்ளனர்; அவர்கள் அறத்தை அறிந்தமைக்கு அறிகுறியாக அவர்களுக்கு இப்பட்டம் வழங்கப் பெற்றுள்ளது. அவர்கள் நன்மை, தீமைகளை நன்கு உணர்ந்திருந்தனர்; மன்னனுடைய குணத்தையும் அறிந்திருந்தனர். இருப்பினும் தமது எண்ணங்களை அவர்கள் எளிதில் வெளிப்படுத்தவில்லை. அவர்கள் இரக்கம், நீதி ஆகிய பண்புகளிலிருந்து சிறிதும் வழுவாதவர்கள். அவர்தம் நற்பண்புகளால் அவர்கள் புகழ் அடைந்துள்ளனர்.''[133] அவர்கள் அவையில் அமர்ந்திருந்த போது ''அவர்துகில்'' என்னும் ஒருவகைத் தலைக்கணி அணிந்திருந்தனர். அது இக்காலத்தில் வழக்கறிஞர்கள் கருஞ்சட்டை அணிதல் போலக் காட்சியளித்தது.''[134]

**குற்றமும் தண்டனையும்**

''கோவலனைக் கொன்று வருமாறு பாண்டியன் நெடுஞ்செழியன் ஆணையிட்ட போது விசாரணை, தீர்ப்பு, அறிவுரை, ஆலோசனை என்பனவற்றில்

யாதொன்றும் மேற்கொள்ளப்படவில்லை. அது மன்னன் மனம் போனவாறு இட்ட ஆணையாகும். இந்த 'அநீதியை' கண்ணகி பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு அறிவுறுத்திய பொழுது 'கள்வனைக் கோறல் கடுங்கோலன்று' என்று கூறி அவள் கூற்றை மறுக்கின்றான். ஆயினும் குற்றம் அறங்கூறவையத்தில் நிரூபிக்கப்படவில்லை என்பதை மறந்து பாண்டியன் அங்ஙனம் கூறுகின்றான்.''[135] ''இதனால் பாண்டியன் நெடுஞ்செழியனுக்குக் கிடைத்த தண்டனை அவன் தனக்குத் தானே மேற்கொண்டதாகும். மன்னன் குற்றவாளியாகும் போது அக்குற்றவாளியையும் மன்னன்தான் தண்டிக்க முடியும். குற்றம் செய்த தனது கையைத் தானே அரிந்து கொண்டே குலசேகரபாண்டியனின் வரலாற்றுச் செய்தி, 'தனக்குத்தானே விதித்துக் கொள்ளும் ஒறுப்பிற்கு' ஓர் எடுத்துக்காட்டாகும்.''[136]

''அரசனின் காவல் தோட்டத்திலிருந்து ஆற்றோடு சென்ற மாங்காய் ஒன்றினைத் தின்ற குற்றத்திற்காக ஒரு பெண்ணைப் பல்குன்றக் கோட்டத்துத் தலைவனான நன்னன்சேய் நன்னன் என்பான் கொல்லுவித்தான். அவளது பெற்றோர்கள் அப்பெண்ணைத் தண்டனையிலிருந்து விடுவிப்பதற்காக என்பத்தொரு களிறுகளையும் அவள் எடையுள்ள தங்கப் பதுமையொன்றினையும் தருவதற்கு ஒப்பியும் அதனைக் கேளாது அப்பெண்ணைக் கொல்லத் துணிந்தான் அம்மன்னன்.''[137] ஆயினும் இம்மன்னனின் இவ்விந்தையான நடத்தை, பண்பாடும் நல்லெண்ணமும் கொண்ட சான்றோர்களால் வெறுக்கப்பட்டமையும் சிந்திக்கத் தக்கதாகும். ''பல தலைமுறைகளுக்குப் பின்னர் பெருந்தலைச் சாத்தனார் என்னும் புலவர் இளங்கண்டீரக்கோ, இளவிச்சிக்கோ என்னும் இரண்டு சிற்றரசர்களைக் கண்டபோது முந்தியவனை அன்போடு தழுவிப் பிந்தியவனைத் தொடவும் கூச்சப்பட்டார். இவ்வேறுபட்ட அணுகுமுறைக்குப் பிந்தியவனாகிய இளவிச்சிக்கோ காரணம் கேட்டபோது, 'இளவிச்சிக்கோ கொடியோனான நன்னனின்

வழித்தோன்றலாதலால் தொலைவில் நிறுத்தத் தக்கவன்' என்றார் பெருந்தலைச் சாத்தனார்.''[138] ''நேர்மையற்ற நடத்தையை எதிர்க்கும் பண்பு கூர்மையானதாக இருந்ததால் பிற்காலத்தவர்கள் அக்கொடுங்கோலனை, 'பெண்கொலை புரிந்த நன்னன்'''[134] என்றே அழைத்தனர்.

அக்காலத்தில் சொத்துரிமை பற்றிய வழக்குகளும் (Civil), குற்ற வழக்குகளும் (Criminal) தொடரப்பட்டன. ''பாண்டியன் நெடுஞ்செழியனிடம் கண்ணகி முறையிட்ட வழக்கு கொலையோடு தொடர்புடையதாகும். அவையில் வழக்குத் தொடர்வதற்குக் காலவரையறை யாதொன்றும் இல்லை. கோவலன் மதுரையை அடைவதற்கு நெடுநாளைக்கு முன்னரே பொற்கொல்லன் கோப்பெருந்தேவியின் சிலம்பினைத் திருடிவிட்டான்; அவன்மீது பொற்கொல்லன் காலம் தாழ்த்தியே மன்னனிடம் பழி சுமத்துகின்றான். காலவரையறை கடந்ததனால் அவ்வழக்குப் பட்டுப்போகவில்லை. மனுநீதிகண்ட சோழன் வரலாற்றில் குற்றம் நிகழ்ந்த உடனேயே பசு வழக்குத் தொடர்ந்து விட்டதாயினும், மிகப் பிற்பட்ட காலத்தில் தான் மன்னனால் குற்றாவாளியைக் கண்டுபிடிக்க முடிந்தது. அக்கால நீட்டிப்புத் தண்டனையை மறுத்துவிடவில்லை. பழமொழி நானூற்றுப் பாடலொன்று''[140] காலம் கடந்துவிட்ட நீதிநிருவாகச் செயல்முறையைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. ''பல நாட்களுக்கு முன்பு இளவரசன் குற்றம் இழைத்தான் (காலம் கடந்து விட்டதாயினும்) உண்மையையுணர்ந்த மன்னன் கடுந்தண்டனையைக் குற்றவாளிக்கு விதித்தான். இங்குக் 'காலை கழிந்ததன் பின்றையும்' என்னும் தொடரை அப்பாடல் ஆளுகின்றது. இந்த வழக்கின் முடிவையும் 'முறைமைக்கு மூப்பிளமை இல்' என்று சுட்டிக்காட்டுகின்றது.''[141] இங்குக் கூறிய இரண்டு எடுத்துக்காட்டுக்களிலும் 'குற்றவியல்' குற்றங்களே இழைக்கப்பட்டன. ஒன்று

*திருட்டு; மற்றையது கொலையாகும். பொதுவாகக் குற்றங்கள் நாட்கடந்துவிட்டால் 'காலாவதி ஆகிவிடுதல்'* (Law of Limitation) *சொத்துடைமை பற்றிய வழக்குகளில் மட்டுமே தொடர்புடையதாகும். சங்க காலத்தில் சொத்துரிமை பற்றிய வழக்குகளில் 'காலாவதிச் சட்டம்' எம்முறையில் செயல்பட்டது என்பதற்குரிய சான்றுகள் கிடைக்கவில்லை.*

**வழக்கு விசாரணையும் சாட்சிகளும்**

*"'அவை'யில் நடைபெற்ற வழக்கு விசாரணை மிகவும் எளிமையான முறையில் அமைந்திருந்தது. கிராம நீதி சபையான 'மன்றத்தில்' அது அதனினும் எளியமுறையிலேயே அமைந்திருந்தது. வாதி, பிரதிவாதிகள் வழக்கினைத் தாக்கல் செய்த பின்னர் சாட்சிகள் அழைக்கப்பட்டனர்; பின்னர் அவர்கள் வாக்குமூலங்கள் கேட்கப்பட்டன; அல்லது எழுத்து மூலமாகக் குறித்துக் கொள்ளப்பட்டன. அந்தச் சாட்சிகளை அடிப்படையாகக் கொண்டு நியாய சபை அறிவுரையாளர்கள் அவ்வழக்கொடு தொடர்புடைய சட்டத்தை ஆராய்ந்து மன்னனுக்கு அறிவித்தனர். மன்னன் இறுதியாகத் தீர்ப்பளித்துள்ளான். வழக்கோடு தொடர்புடையோரும் சாட்சிகளும் பிரமாணத்தின் பேரில் வாக்கு மூலம் அளிக்குமாறு பணிக்கப் பெற்றனர்."*[142] *"பிரமாணம் என்பது மன்னனுடைய கால்களைத் தொட்டுச் சூளுரை கூறுதல் ஆகும்."*[143]

*"சாட்சிகள் மிகுதியாகக் குறிக்கப்படுகின்றனர். சான்றோர் 'பொய்க்கரி' கூறார் என்பது பொதுவான கருத்தாகும்."*[144] *"புகார் நகரில் இருந்த ஒரு பூதம் பொய்ச்சாட்சி கூறியோரைக் கொன்று தின்று வந்தது என்பது கதையாகும்"*[145] *"பொய்க்கூறுதல் பாவம்; பொய்க்கரி கூறுதல் அதனினும் பெரிய பாவம்; அது சட்டப்படியும் குற்றமாகக் கருதப்பட்டது. சட்டமன்றத்தில் பிரமாணத்தில் பேரில்*

பொய் கூறியவர்களது நா துண்டிக்கப்பட்டது.''[146] ''திரிபுபட்ட அல்லது பொய்யான சாட்சி கூறுதலும் தவறாகும். தேவையான பொருத்தமான சாட்சியைத் தெரிந்தும் கூறாமல் இருத்தலும் தண்டனைக்குரியதாகும்.''[147]

''திருக்குறள் நல்லாட்சியைக் குறிக்கும் 'செங்கோன்மை' என்னும் அதிகாரத்தில் மன்னனது நியாய முறையைப் பற்றிப் பேசுகின்றது.''[148] மன்னனது நீதிக்கு அவனது செங்கோலே ஒரு கட்புலனாய சின்னமாகும். நீதியின் நடுவுநிலைமை (முறை) முதலிய பண்புகளை அது குறித்தது. ஆகவே சங்கத் தமிழர்களுக்கு நல்லாட்சி என்பது நேர்மையான அல்லது செம்மையான (செங்) கோல் என்பதாயிற்று.

**குற்றங்களும் தண்டனைகளும்**

''சங்க காலத்தில் ஆண்முலையறுத்தலும், மகளிர் கருச்சிதைத்தலும், அந்தணர்த்தப்புதலும்''[149] ''பெருங்குற்றங்களாகக் கருதப்பட்டன. நன்று கோறலையே மிகப்பெரிய குற்றமாகத் திருவள்ளுவர் கூறியுள்ளாரெனினும்''[150] 'நன்றிகோறல்' என்பது சட்டப்படி ஒப்பந்தம் மீறுதல் குற்றத்தின் அடங்காததால் அது சட்டத் தண்டனைக்குப் புறம்பானதே ஆகும். சிலப்பதிகாரத்தில் குற்றம் சாட்டப்பட்ட கோவலன் அரசன் ஆணைப்படி உடனடியாகக் கொலைத்தண்டனையைப் பெற்றான். ஏனெனில் திருட்டுப்போன சிலம்பு அரசிக்குரியதாகும். பல்குன்றக் கோட்டத்து நன்னன் சிறுமியைக் கொல்வித்த வரலாறும் இத்தகையதே. அந்தச் சிறுமி ஆற்றில் வீழ்ந்து போன மாங்கனி ஒன்றினை எடுத்துத் தின்றது குற்றமாகும். ஏனெனில் திருட்டுப்போன மாங்கனி மன்னனுடையதாகும். ஆதலால் சங்க காலத்தில் களவுக்குத் தண்டனை திருடியவர்களின் தலைகளை வெட்டி விடுதல் என்பது உறுதியாகின்றது.

"'பிறனில் பிழைதல்' கடுங்குற்றமாகக் கருதப்பட்டதாயினும் 'வரைவின் மகளிர்' செயற்பாடு ஒரு தொழிலாகவே கொள்ளப்பட்டது. அவர்கள் தண்டிக்கப்படவில்லை. ஆனால் பிறனில் விழைதல் குற்றத்திற்குத் தண்டனை சிரச்சேதமாக இருந்துள்ளது."[151] "வேற்று நாட்டு அல்லது பகைப்புலத்து ஒற்றர்கள் பிடிபட்டால் அவர்கள் உடனடியாகக் கொல்லப்பட்டனர்"[152] "மன்னனுடைய உடைமைப் பொருள் திருட்டுப்போனால் குற்றம் சாட்டப்பட்டவனுடைய எடைக்கு நிகரான தங்கப்பதுமைகளை அதற்கு ஈடாக அளிக்கும் மரபும் அக்காலத்தில் இருந்துள்ளது என்பதைப் 'பெருங்கதை'"[153] சுட்டிக்காட்டுகின்றது.

"சேக்கிழாரின் பெரியபுராணத்தில்-தடுத்தாட்கொண்ட புராணத்தில்"[134] "சிவபெருமான் சுந்தரமூர்த்தி நாயனாரிடம் அவர் தமது அடிமை என்று கூறிய வாதமும், அவ்வாதத்தையொட்டி நிகழ்ந்த சட்ட விசாரணை முறைகளும் பிற்கால வழக்கின்பாற்பட்டவையே."[155] ஆயினும் அவ்வழக்கு அவையில் ஒரு வழக்கினைக் கூறுதல், அவையத்தார் தொடர்புடைய குறிப்புக்களை ஆய்தல், சாட்சிகளின் வாக்கு மூலங்களை எழுதிக்கொள்ளுதல், வாதி, பிரதிவாதிகளின் வாக்கு மூலங்களையும் குறித்துக் கொள்ளுதல், பிறகு விரைவாக வழக்கினை விசாரித்துத் தீர்ப்புக் கூறுதல் போன்றனவெல்லாம் தொடக்க நிலைகளிலேனும் சங்க காலத்திலும் காணப்பட்டன எனக் கொள்ளலாம்.

மன்னன் ஆணைப்படி மணிமேகலை சிறையிருத்தப்பட்டாள். அச்சிறைச் சாலையை "அதிர்கழல் வேந்தன் அடிப்பிழைத்தாரை, ஒறுக்குந் தண்டத்துறு சிறைக் கோட்டம்"[156] என்று வருணித்துள்ளார் அதன் ஆசிரியர். சிறையிருத்தலே ஒரு தண்டனை என்று கருதப்பட்டதா? அல்லது சிறைச்சாலையின் மறைவிடத்தில்

பொதுமக்கள் கண்ணில்படாமல் குற்றவாளிக்குக் கடும் தண்டனை வழங்கப்பட்டதா? என்பது புலனாகவில்லை.

"சங்ககாலத்தில் ஐயப்பட்ட குற்றவாளிகளும் கொடிய முறையில் தண்டிக்கப்பட்டுள்ளனர். சோழன் கிள்ளிவளவன் தனது பகைவனான மலையமானின் இருமக்களையும் யானைக்கிடுமாறு ஆணையிட்டான். இது வழக்கு மன்றத்தின் அருகாமையில் நடைபெற இருந்தது. அப்போது கோவூர்கிழார் குறுக்கிட்டு அவ்விருவரையும் கொடும் மரணத்திலிருந்து காப்பாற்றியுள்ளார்."[157] மனுநீதிச்சோழன் கதையை நோக்குமிடத்து, இம்மனுநீதி கண்ட சோழன் 'ஹமுராபி' சட்டமுறையையே பின்பற்றியுள்ளான்; மனுநெறியைப் பின்பற்றவில்லை என்பது புலனாகின்றது. ஏனெனில் இருகால், நாற்கால் விலங்குகளைக் கொன்ற குற்றத்திற்கான தண்டனையைக் குறிப்பிடவந்த மனு,

"ஒரு மனிதன் கொல்லப்பட்டால், கொலையாளியின் குற்றம் ஒரு திருடனுடைய குற்றம் போன்றதே; பெரிய விலங்குகளான பசுக்கள், யானைகள், குதிரைகள் கொல்லப்படின் அதிற்பாதிக் குற்றமாம்; சிறு ஆடு, மாடுகளை உடற்கு ஊறு செய்யின் இருநூறு பணம் அபராதமாம்."[158] என்று குறிப்பிட்டுள்ளார். மனுவைப் பின்பற்ற வேண்டுமென்ற எண்ணம் மனுநீதிகண்ட சோழனுக்கு இருந்திருக்குமேயானால், அவன் தனது மகனுக்கு இருநூறுபணம் அபராதம் விதித்திருப்பானேயன்றி அவனைத் தேர்க்காலிற் கடத்திக் கொன்றிருக்க மாட்டான். இவற்றைக் கருத்தில் கொண்டு நோக்கும் போது சங்க காலத்தில் "தண்டனைகள் நியாயமானவைகளாகவும் எளிமையானவைகளாகவும் இருந்தன"[159] என்னும் கூற்றை ஏற்றுக் கொள்ள முடியவில்லை.

உருத்திரங் கண்ணனார் என்னும் சங்கப்புலவர் தொண்டைமான் இளந்திரையன் என்னும் மன்னனைப் பற்றிக் குறிப்பிடும் போது, அவன் முறை

வேண்டி வருவோர்க்கும் குறைவேண்டி வருவோர்க்கும் அவரவர் விரும்புபவனவற்றை வழங்குவான் என்பதை,

> "முறைவேண்டு நர்க்குங் குறைவேண்டு நர்க்கும்
> வேண்டுப வேண்டுப வேண்டினார்க் கருளி"[160]

என்று குறிப்பிடுகின்றார். இவற்றையெல்லாம் நோக்கும்போது பண்டைய தமிழ் மன்னர்கள் காட்சிக்கு எளியவராக இருந்து, குறைகேட்டு, அறம் தவறாத வகையில் நீதி வழங்கியுள்ளனர் என்பதையும் மறுக்க முடியவில்லை. தம்முள் முரண்பட்டு வருவோர்க்கு நீதி வழங்கும் அறங்கூறவையத்தில், தாமே அவற்றை எடுத்துக்கூறி முறை செய்யும் சான்றோரும் இருந்துள்ளனர். முறைவேண்டி வருவோர் தமது குறையைக் கேட்போர்க்கு நன்கு விளக்கும் வகையில் முறைபடக் கூறும் திறமை இல்லாதவராக இருப்பின், அவர்கூறுவதைக் கேட்டு, அவர்க்காகத் தாமே நின்று திறம்படக் கூறி முறை செய்யும் சான்றோரும் அவையத்தில் இருந்தனர் என்பதை,

> "நல்லோர் குழீஇய நாநவில் அவையத்து
> வல்லா ராயினும் புறமறைத்துச் சான்றோரைச்
> சொல்லிக்காட்டி சோர்வின்றி விளக்கி
> நல்லதின் இயக்குமவன் சுற்றத் தொழுக்கம்"[161]

என்னும் புறநானூற்றுப் பாடல் விளக்குகின்றது.

கள்ளூர் என்னும் ஊரில் நெறிதவறிய ஒருவன் செய்த தவற்றினை அவ்வூர் மன்றத்தார் கேட்டறிந்து, அக்கொடியவனை மரக்கிளையில் இறுகப் பிணைத்தனர். அவன் தலையில் சாம்பலைப் பெய்து அவமானப்படுத்தித் தண்டித்தனர் என்பதை,

> "கரும்பகல் படப்பைப் பெரும்பெயர்க் கள்ளூர்த்
> திருநுதற் குறுமகள் அணிநலம் வவ்விய
> அறணி லாள னறியே னென்ற
> திறனில் வெஞ்சூ லறிகரி கடாஅய்
> முறியார் பெருங்கிளை செறியப் பற்றி

நீநுதலைப் பெய்த ஞான்றை
வீநுசா லவையத் தார்ப்பினும் பெரிதே"[162]

என்னும் அகநானூற்றுப் பாடல் தெளிவுப்படுத்துகின்றது. இதிலிருந்து ஊர் அவையினர் குற்றம் செய்தோரை அவமானப்படுத்தித் தண்டித்தமையை அறியலாம்.

**சோழர் கால நீதிமுறை**

"சோழ மன்னன் வாய்மொழியாகப் பிறப்பித்த ஆணையைக் கோட்டத்து அவையினரான நாட்டார்கள், பிரமதேயக் கிழவர்கள், தேவதானத்து ஊர்களிலார், பள்ளிச் சந்தங்கள், கண முற்றூட்டு, வெட்டிப்பேறு, நகரர்கள் ஆகியவர்கள் நிறைவேற்றி வைத்துள்ளார்கள். நாட்டாரின் சபையான நாடும், பிரமதேயத்தின் சபையும், ஊர்ச்சபையான ஊராரும், அரசாணையின் மேல் பிறப்பித்த கட்டளைகளை மத்தியஸ்தனும், கரணத்தானும் ஆவணத்தில் எழுதி வைத்துள்ளார்கள். சபையின் தலைவனுக்குத் 'திருவடிகள்' என்று பெயர். சபையின் கூட்டங்களுக்கு உறுப்பினர் அனைவரும் வந்து அதன் நடவடிக்கைகளில் கலந்து கொள்ள வேண்டும் என்ற கட்டுப்பாடு உண்டு. அப்படிக் கலந்து கொள்ளாதவர்களுக்குத் தண்டப் பொன் விதிக்கப்பட்டது."[163]

'ஊரார்' தீட்டிய ஆவண ஓலையில் கையொப்பமிட வேண்டிய பொறுப்பு மத்தியஸ்தனைச் சார்ந்தது. இம்மத்தியஸ்தனுக்குக் 'கரணத்தான்' என்றும், 'வேட்கோவன்' என்றும், 'கரணத்தான் வேட்கோவன்' என்றும் வேறுபெயருண்டு.

**சிற்றூர் நிருவாகம்**

சிற்றூர்கள் அனைத்தும் மத்திய அரசின் உறுப்புக்களாகவே விளங்கின. பல சிற்றூர்கள் சேர்ந்தது கூற்றமாகும்; கூற்றத்திற்குக் 'கோட்டம்' என்றும், 'நாடு' என்றும் பெயருண்டு. பல கூற்றுக்கள் சேர்ந்தது ஒரு வளநாடாகும். பல

வளநாடுகள் சேர்ந்தது ஒரு மண்டலம் ஆகும். மன்னனுக்கு அருகாமையிலேயே எப்பொழுதும் காத்துக் கொண்டிருக்கும் சில நிருவாக அலுவலர்களுக்கு 'உடன் கூட்டம்' என்று பெயர்.''[164]

'நீதி வழங்கும் பொறுப்பு ஊர்ச்சபையினரிடமும், குலப்பெரிய தனக்காரரிடமும் ஒப்படைக்கப்பட்டிருந்தது. வழக்குகளை விசாரிக்கவும், தீர்ப்பு வழங்கவும் விதிகளும் முறைகளும் வகுக்கப்பட்டிருந்தன. கரணத்தான் துணையுடன் நீதிமன்றங்கள் செயல்பட்டன. ஆவணச் சான்றுகளைக் கொண்டும், பிறர்கூறும் சான்றுகளைக் கொண்டும், தாங்கள் நேரில் கண்டனவற்றைக் கொண்டும் நீதிமன்றத்தினர் வழக்குகளை விசாரித்துத் தீர்ப்புக் கூறினர்.'[165] நீதிபதிகள் தம்மிடம் விசாரணைகள் இருந்து வந்த வழக்குகளில் தாங்கள் நேரில் கண்டனவற்றையும், தனிப்பட்ட முறையில் அறிந்தனவற்றையும் கொண்டு தீர்ப்புக்கள் கூறுவது இன்றைய இந்திய சாட்சிய சட்டத்திற்கு முரணானதாகும் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

'உயிரைப் பற்றிய குற்றங்கள் என்றும், உடைமைகளைப் பற்றிய குற்றங்கள் என்றும் இப்போது செய்யப்பட்டுள்ள பாகுபாடுகள் சோழர்காலத்தில் இல்லை. குற்றங்களைப் பெரும்பாலும் கிராம நீதிமன்றங்களே விசாரித்துத் தீர்ப்புக் கூறின. குற்றங்களுக்குரிய தண்டனையாகக் குற்றவாளிகளின் உடைமைகளைப் பறிமுதல் செய்வதைத்தான் 'கிராம அவை' முறையாகக் கொண்டிருந்தன. திருட்டு, பொய்க் கையொப்பம், விபச்சாரம் ஆகியவை கொடுங்குற்றங்களாகக் கருதப்பட்டன.'[166] இக்குற்றங்களைச் செய்து தண்டனைகளைப் பெற்றவர்கள் ஊராட்சி அவைகளில் அமரும் தகுதியை இழந்தவர்கள் ஆவர். குற்றங்களுக்குப் பெரும்பாலும் சிறைத்தண்டனைகள் விதிக்கப்படுவதில்லை. குற்றவாளிகள் கோயில்களுக்கும்,

மடங்களுக்கும் இவ்வளவு தானம் கொடுக்க வேண்டுமென்று தீர்ப்புகள் வழங்கப்பட்டன.

**கிராமதல சுய ஆட்சிமுறை (Autonomous Rural Institutions)**

*'சோழர் காலத்தில் நாட்டாச்சி முறையில் (கிராம தலசுய ஆட்சிமுறை) கிராம நிருவாகத்திற்குச் சிறப்பிடம் கொடுக்கப்பட்டது. கிராமத்தின் நிருவாகம் நாட்டின் அரசாட்சிக்கு அடிப்படையாக அமைந்திருந்தது. முதலாம் பராந்தகனின் உத்தரமேரூர்க் கல்வெட்டொன்று இந்தக் கிராம தலசுய ஆட்சி முறையின் அமைப்பையும், அது கொண்டிருக்க வேண்டிய பொறுப்புக்களையும் சுட்டிக் காட்டுகின்றது.'*[167] *'இந்த முறையானது கி.பி.800ஆம் ஆண்டிலேயே பாண்டிய நாட்டில் பிராமணருடைய கிராமங்களில் கையாளப்பட்டு வந்ததாகத் திருநெல்வேலி மாவட்டத்தில் மானூரில் கண்டெடுக்கப்பட்ட மாறஞ்சடையனின் கல்வெட் டொன்று'*[168] *குறிப்பிடுகின்றது.*

*உழுதுண்டு வாழ்ந்து வந்த வேளாண் மக்கள் குடியிருந்த இடத்திற்கு 'ஊர்' என்று பெயர். அவ்வூர் ஆட்சியை நடத்தி வந்த குழுவினருக்கு 'ஊரார்' என்றும் 'ஊரவர்' என்றும் பெயர். பிராமணரின் குடியிருப்புகள் அகரம், பிரமதேயம், சதுர்வேதி மங்கலம் என்றழைக்கப்பட்டன. அக்குடியிருப்புக்களுக்குக் 'கிராமங்கள்' என்று பெயர். ''கிராமங்களின் ஆட்சியை நடத்தி வந்த குழுக்களுக்கு, 'சபை' என்று பெயர். வணிகர் மிகுதியாக வாழ்ந்த இடத்தில் 'நகரம்' என்ற சபை ஊராட்சிப் மேற்கொண்டிருந்த வேளாண்குடிமக்களுடைய குழுக்கள் 'சித்திரமேழி' என்ற பெயரில் நடைபெற்று வந்தன. அக்குழு உறுப்பினர்கள் 'சித்திரமேழிப் பெரிய நாட்டினர்' என்றழைக்கப்பட்டனர். 'நானாதேசி' என்னும் 'திசையாயிரத்து*

ஐந்நூற்றுவர்', தச்சர், கம்மாளர், கைவல் கம்மியர் ஆகியோர் தமக்குள் அமைத்துக் கொண்ட 'இரதகாரர்' ஆகிய நிறுவனங்கள் குணநலம், குலநலம், வாணிகநலம் ஆகியனவற்றிக்குத் தொண்டுபுரிந்து வந்துள்ளன.'[169]

ஊராட்சிகள், கிராம சபைகள், சித்திரமேழிகள் ஆகியவை அனைத்தும் பண்டைய பழக்க வழக்கங்கள், அறவொழுக்கம், புண்ணியம், பாவம் என்ற சமயச்சார்புள்ள நம்பிக்கைகளின் அடிப்டையிலேயே செயல்பட்டு வந்துள்ளன. அவற்றுக்கென்று தனிச்சட்டங்களும் விதிகளும் வகுக்கப்படவில்லை. அச்சபைகள் செய்த விசாரணைகளும், அவை மேற்கொண்ட முடிபுகளும் ஊர்க்குடிமக்கள் அனைவரையும் கட்டுப்படுத்தக்கூடியன. அம்முடிபுகள் காலம் தாழ்த்தப்படாமல் உடனுக்குடன் நிறைவேற்றி வைக்கப்பட்டன. தற்சார்பு, ஒருபக்கத் தீர்ப்பு ஆகியனவற்றை இச்சபைகளின் நடவடிக்கைகளிலும், தீர்ப்புக்களிலும் காண்பதறிது.

## குற்றமும் தண்டனையும்

"சோழர் காலத்தில் குற்றங்கள் அறநூலுக்கு மாறானவை, அரசியலுக்கு மாறானவை, தெய்வத்திற்கு மாறானவை என மூவகைப்படுத்தப்பட்டன. குடி, பொய், களவு, காமம், கொலை ஆகிய குற்றங்கள் அறநூலுக்கு மாறானவை. இவை ஐம்பெருங்குற்றங்கள் எனப்பட்டன, பிறரிடம் வாங்கிய பொருளை மறுத்தலும், தன்னிடம் உள்ள பிறர் பொருளை மறைத்தலும், கள்ளக் கையெழுத்தும், ஆள்மாறாட்டமும் பொய்யுள் அடங்கும். இறையிறுக்காமையும், உறுபொருள் கவர்தலும், பகையொற்றும், அறைபோதலும் அரசனது பொருளைக் கவர்தலும், அரசனது இன்பப் பொருளை நுகர்தலும், ஊருக்கு அல்லது நாட்டிற்கு இரண்டகம் செய்தலும் அரசற்கு இரண்டகம் செய்தலும் அரசாணையை மீறலும் கொள்ளையடித்தலும் கலகம் செய்தலும் அரசியலுக்கு மாறான குற்றங்களாகும்."[170] இக்குற்றங்களுக்குத் "தண்டம், மானக்கேடு, வேதனைப்பாடு, சிறைப்பு,

வேலைநீக்கம், கொலை ஆகியன தண்டனைகளாக வழங்கப்பட்டன. அவற்றுள் 'தண்டம்' என்பது தொகையிறுப்பு, தண்டத் தீர்வை, கோயில் விளக்கெரிப்பு என மூவகைப்படும். 'தொகையிறுப்பாவது' ஒரு குறித்த தொகையை மொத்தமாகச் செலுத்துவதாகும். 'மானக்கேடு' என்பது முகத்தில் செம்புள்ளி, கரும்புள்ளி குத்திக் கழுதை மேலேற்றி ஆன்மயந் தோய்ந்த அலகாலடித்து ஊர்வலம் வருவித்தலும் குலத்தினின்று விலக்கி வைத்தலும் ஆகும். 'வேதனைப்பாடு' என்பது குற்றவாளிகளைத் தூணில் கட்டி வைத்து ஐம்பது முதல் நூறு அடிவரை அடித்தல், கல்லேற்றுதல், கிட்டிபூட்டல், நடைவிளக்கெரித்தல் எனப் பலவகைப்படும். 'நடைவிளக்கெரித்தல்' என்பது தலையில் அகல்விளக்கேற்றி ஊர்வலம் வருவித்தல் ஆகும். 'கிட்டி' என்பது கெண்டைக்காலை நெருக்கும் ஒருவகைக் கருவியாகும். 'சிறைப்பு' என்பது தளையிட்டுச் சிறைக்கோட்டத்தில் வைத்தலாகும். 'கொலை' என்பது வெட்டல், கழுவேற்றல், விலங்கால் கொல்வித்தல், சித்திரவதை செய்தல் என நால்வகைப்படும். யானையைவிட்டு மிதிப்பித்தல், விலங்கால் கொல்வித்தல் ஆகும். எருமைக்காலில் கட்டியோட்டுதலும், வண்டிச்சக்கரத்தில் கட்டியோட்டுதலும் போல்வன சித்திரவதையாகும். ஞா. தேவநேயனின் இக்கூற்றுக்கு இலக்கியச் சான்றுகளோ, கல்வெட்டுச் சான்றுகளோ கிடைக்கவில்லை.[171] இத்தகைய குற்றங்களும் அக்குற்றங்களுக்குரிய தண்டனைகளும் சங்ககாலத்திலும் சோழர் காலத்திலும் நடைமுறையில் இருந்துள்ளன.

''சோழர் காலத்தில் இம்மூவகைக் குற்றவாளிகளுக்கே 'குடவோலையிடப் பெற்றமை' பொதுத் தண்டனையாகும்.''[172] கட்குடிக்கும் இதனைத் தவிர வேறு தண்டனையில்லை.

**பாண்டியர்கால நீதிமுறை**

பாண்டிய மன்னர்கள் காட்சிக்கு எளியவராக இருந்து குடிமக்களின் முறையீடுகளைக் கேட்டு முறை வழங்கி வந்தனர் என்பதைச் சிலப்பதிகாரத்தில் கண்ணகி முறையீட்டில் அறியலாம். குடிமக்கள் மன்னனிடம் குறைகளை முறையிடுதற் பொருட்டுப் பாண்டியர் அரண்மனைப் புறவாயிலில் ஆராய்ச்சி மணி கட்டப்பட்டிருந்தது. அரசன் எக்காரியத்தைச் செய்தாலும் ஐம்பெருங் குழுவினரையும் எண்பேராயத்தினரையும் கலந்து ஆலோசித்தப் பின்னரே செய்வான். நாட்டுப் பெருவிழாக்களிலும், நாட்டுப் பெருஞ்செயல்களிலும் இக்குழுவினர் பங்கு கொண்டிருந்தனர்.

''பாண்டிய மன்னர்களின் நிருவாகத்தில் 'ஊர்ச்சபையார்', 'நாட்டதிகாரிகள்', 'கோயில்கண்காணிப்பாளர்' ஆகியோர் முக்கியப் பங்கு பெற்றிருந்தனர். நாட்டதிகாரிகள் தம் நாட்டைச் சுற்றிப்பார்த்து, அங்குள்ள ஊர்ச்சபையார், கோயிற் கண்காணிப்பாளர், அறநிலையப் பாதுகாப்பாளர் ஆகியோர் தத்தங் கடமைகளைச் செவ்வனே நிறைவேற்றி வருகின்றனராவெனக் கண்காணிப்பதும், ஊர்க்கணக்கு, கோயிற்கணக்கு, அறநிலையக் கணக்கு முதலியனவற்றைத் தணிக்கையிடுவதும், குற்றம் கண்டவிடத்துத் தண்டிப்பதும், ஆங்காங்குள்ள வழக்குகளைத் தீர்த்து வைப்பதும், அரசாணைகளை நிறைவேற்றுவதும், ஊாச்சபைத் தேர்தலை முன்னின்றி நடத்தி வைப்பதும்''[173] நாட்டதிகாரிகளின் பணிகளாகும்.

''சிற்றூர்கள் நாட்டதிகாரிகளின் கண்காணிப்பிலும் பேரூரான நகரங்கள் மன்னனது நேரடிக் கண்காணிப்பிலும் இருந்தன. ஊர்ச்சபையாருள், ஒவ்வொரு வாரியத்தாரும் தத்தம் கடமையைச் செய்து வந்தனர். 'ஊர் வாரியத்தினர்' உரிமை வழக்கு, குற்ற வழக்கு ஆகிய இருவகை வழக்குகளையும் விசாரித்துத் தீர்க்கவும் தண்டிக்கவும் முழு அதிகாரம் பெற்றிருந்தனர். அவரால் தீர்க்க முடியாத

வழக்குகளும், தீர்த்த வழக்குகளின் மேல் முறையீடுகளும் (Appeal) அரசனிடம் கொண்டு செல்லப்பட்டன.''[174] ஊர்க்குடியிருப்பையும் வெள்ளாண்மையையும் இரவில் காவல் செய்வதற்கு ஊர்ச்சபையினரால் 'பாடிகாவலன்' நியமிக்கப்பட்டனர். ஊரவையாரின் ஊராட்சி 'ஊராண்மை' என்றும் 'ஊரமை' என்றும் அழைக்கப்பட்டன. ஊர்ச்சபைக் கூட்டம் காளமூதியும் பறைசாற்றியும் அறிவிக்கப்பட்டன. ஊர் வழக்குகளைத் தீர்ப்பதற்கும், ஊரில் சட்ட திட்டங்களை ஏற்படுத்துவதற்கும் ஊர்த்தலைவன் கூட்டிய கூட்டம் ஊர் மண்டபத்திலோ, ஒரு மரத்தடியிலோ, வெள்ளிடையிலோ நடைபெற்றுவந்தன.

''ஆள்நிலப்பிரிவான ஒரு கூட்டூரின் பகுதியாக ஒரே குலத்தார் அல்லது ஒரே இனத்தார் பெரும்பான்மையினராகச் சிற்றூரில் அவ்வக்குலம், இனம், இடத்திற்கேற்ப அம்பலக்காரன், ஊராளி, கவுண்டன், கிழவன், குடும்பன், சேர்வை, நாடாள்வி, நாட்டம்பலம், நாட்டாண்மைக்காரன், பட்டத்துப் பிள்ளை, பண்ணாடி, பெரிய தனக்காரன், மணியக்காரன், மன்றாடி, மூப்பன் முதலிய பெயர்களில் ஒன்றைப் பூண்டு, ஊராரால் தேர்ந்தெடுக்கப்படாமல் தந்தையினின்று மகனுக்கு வரும் வழிமுறை உரிமைப்படி ஊர்த்தலைவனாக இருந்தவன், தன் ஊர் வழக்குகளில் கொலையொழிந்த பிற வழக்குகளையெல்லாம் தானே தீர்த்து வைத்துள்ளான்''[175] என்பார்.

''ஊர்ச்சபையார், அவ்வப்போது சில குற்றங்களையும் செய்து வந்துள்ளனர். தம் குற்றத்தை மறைத்தற்பொருட்டும், தம்மேல் குற்றத்தை ஏற்றாமல் பாதுகாத்தற் பொருட்டும் ஊர்ச்சபையார் நாட்டதிகாரிகளுக்கும், தம்மை வினவ வரும் மேலதிகாரிகளுக்கும் கையூட்டும் கொடுத்து வந்துள்ளனர் என்பதைச் சடவர்மன் சுந்தரபாண்டியன் ஆட்சிக்காலத்தில், ஓர் ஊர்ச்சபையார், வாரப் பற்றிலிருந்தும், கடமைப் பற்றிலிருந்தும் வரும் வாரத்தையும் கடமையையும், சடாவர்மன்

சுந்தரபாண்டியனுடைய அதிகாரிகளின் நட்பைப் பெறச் செலவிட்டனர்''[176] என ஞா. தேவநேயன் எடுத்துக் காட்டியிருப்பதிலிருந்து அறியலாம்.

**அறங்கூறவையத்தார் நீதிவழங்கிய முறை**

''தலைநகரிலிருந்த அறங் கூறவையத்தில், பொதுவகையான வழக்குகளை யெல்லாம் அவ் அவையத்தாரே தீர்த்து வைத்துள்ளனர். இதற்குச் சான்றாகப் பரஞ்சோதிமுனிவரின் திருவிளையாடற்புராணத்தில் தனபதிச் செட்டியார் வழக்கை மதுரை அறங்கூறவையத்தாரே தீர்த்து வைத்திருப்பதைக் குறிப்பிடலாம்.''[177] சிறப்பானதும் மன்னனொடு தொடர்புடையதுமான வழக்குகளை மன்னனே இம்மன்றத்திலிருந்து தீர்த்து வைத்துள்ளான். ''நகரங்களிலிருந்த அறமன்றத்தார், வழக்காளி (Plaintift) எதிர்வழக்காளி (Defendant) ஆகிய இருவரின் வாக்கு மூலங்களையும் பலமுறை கேட்டு, கரியும் (Witness), சான்றும் (Evidence) இருப்பின் அவற்றை அடிப்படையாகக் கொண்டும், நடுநிலைமையாய்த் தீர்த்தும் முறை செய்து வந்தனர்.

இதனை, ''இருவர்தம் சொல்லையும் எழுதாங் கேட்டே''

என்று அதிவீரராம பாண்டியனும்,

''இருவர் சொல்வழக்கு நோக்கி யனுவதித் திரண்டு நோக்கி''

என்று பரஞ்சோதிமுனிவரும் எடுத்துக்காட்டி இருப்பதன் மூலம் அறியலாம்.''[178] ஆதலால், பாண்டியர் கால வழக்குகளில் கரியும் சான்றும் இல்லாத 'நாலுத்திப் பட்டறிவு' (சுருதியுக்தியனுபவம்) கொண்டு நடுநிலைமையாகத் தீர்ப்புகள் சொல்லப்பட்டுள்ளன எனலாம். வழக்கை நன்றாக அறிந்து கொள்வதற்கும்,

வழக்காளரின் உண்மையைக் கண்டறிவதற்கும், அறங்கூறவையத்தார் வழக்கைப் பலமுறை கேட்டுள்ளனர் என்பதையும் இதன் மூலம் அறியலாம்.

**பல்லவர்கால நீதிமுறை**

பல்லவர் ஆண்ட தமிழ்நாட்டில் 'கோட்டம்', 'நாடு', 'ஊர்' என்னும் நாட்டுப்பிரிவுகள் காணப்படுகின்றன. ஆந்திர நாட்டுப் பகுதிகளின் பெயர்களையும், தமிழ்நாட்டுப் பகுதிகளின் பெயர்களையும் நோக்கும் போது பல்லவர், தமக்கு முன்பிருந்த தமிழ் மன்னர்கள் தொண்டை நாட்டுப்பிரிவுகளுக்கு வைத்திருந்த பெயர்களை அப்படியே தங்கள் ஆட்சியிலும் கையாண்டு வந்துள்ளனர் என்பது புலனாகின்றது. தொண்டை நாடு பல்லவர்களுக்கு முன்னரே இருபத்து நான்கு கோட்டங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது.

''பல்லவப் பெருநகரங்களில் அறங்கூர் அவையங்கள் இருந்தன. அவை 'அதிகரணங்கள்' எனப் பெயர் பெற்றிருந்தன என்பதை மகேந்திரவர்ம பல்லவன் எழுதியுள்ள 'மத்தவிலாசப் பிரகசனம்' என்ற நூலால் அறியலாம். அறங்கூர் அவையத்துத் தலைவர் 'அதிகரண போசகர்' எனப்பட்டனர். 'அதிகரணம்' என்பது பெரிய அறங்கூர் அவையாகும். கரண அலுவலாளர் (தலைவர்) 'அதிகாரிகள்' எனப்பட்டனர்.''[179] சிற்றூர்களில் சான்றோர் அறங்கூர் அவையத் தலைவர்களாக இருந்தனர். மூன்றாம் நந்திவர்மன் (கழற்சிங்கன்) காலத்தில் திருவெண்ணெய் நல்லூரில் 'ஊரவை' இருந்தது. அது வழக்கை விசாரித்து முடிவு கூறியதைப் பெரியபுராணம் விரிவாகப் பேசுகின்றது. வழக்கில் முடிவு கூற ஆட்சி, ஆவணம், அயலார் காட்சி ஆகிய மூன்று சான்றுகள் தேவைப்பட்டன. இவற்றுள் 'ஆட்சி' என்பது நீண்ட காலமாகக் கையாண்டு வரும் ஒழுக்கமாகும். ' 'ஆவணம்' என்பது வழக்கை முடிவு செய்ய உதவும் சுவடி, ஓலை முதலிய எழுத்துச் சீட்டுகளாகும்.

அயலார் காட்சி' என்பது வழக்கு நிகழ்ச்சியைக் கண்ணால் கண்டவர் கூறுவதாகும். ஒப்பந்தம் 'இசைவு' (will) எனப்படும். அந்தந்த ஊரார் கையெழுத்துக்களையும் கையொப்பங்களையும் தனியாக ஊர்ப்பொது அரசாங்க அறச்சாலைப் பாதுகாப்பில் வைக்கும் பழக்கம் அக்காலத்தில் இருந்தது. சிற்றூர்களில் இந்த அறங்கூர் அவைய அலுவலாளன் 'காரணத்தான்' எனப்பட்டான். பத்திரங்களில் சாட்சிகளாகக் கையொப்பமிட்டவர் 'மேல் எழுத்திட்டவர்' எனப்பட்டனர்.''[180]

''இத்தகைய அறங்கூர் அவையங்களில் லஞ்சம் தாண்டவமாடியது என்பதை மகேந்திரவர்மனின் 'மத்தவிலாசம்' என்ற நூல் குறிப்பிடுகின்றது. பல்லவர் காலத்தில் இந்த உயர்நீதி மன்றம் 'தருமாசனம்' எனப்பட்டது. அது பல்லவப் பேரரசின் பொதுமன்றம் ஆகும். அது அரசனது நேரான மேற்பார்வையில் இருந்தது. 'அதிகரணம்' என்றும் அறங்கூர் அவையம் குற்ற வழக்குகளை விசாரிக்கும் மன்றம் எனவும், 'தருமாசனம்' என்னும் உயர்நீதி மன்றம் பிற வழக்குகளை விசாரிக்கும் மன்றம் எனவும் குறிப்பிடுகின்றனர்.''[181]

பல்லவரின் அரசியலில் மன்னனே நீதியின் தலைவனாகச் செயல்பட்டான். கோட்டங்களிலும், சிற்றூர்களிலும் நீதி மன்றங்கள் இயங்கி வந்தன. காஞ்சிபுரத்தில் நடைபெற்ற நீதி மன்றத்திற்கு 'அதிகரணம்' என்று பெயர். கோட்ட நீதி மன்றங்கள் விதித்த தண்டனை 'அதிகரண தண்டம்' என்றும், சிற்றூர்களில் நடைபெற்றுவந்த நீதி மன்றங்கள் விதித்த தண்டனை 'கரணதண்டம்' என்றும் அழைக்கப்பட்டன.

**நாடும் ஊரும்**

'நாடு' என்பது சிற்றூரை விடப் பெரியதாகும். கோட்டத்தைவிடச் சிறியதாகும். 'நாட்டார்' என்பவர் அப்பகுதிக்கு உரிய சான்றோர் ஆவார். 'ஊரார்'

என்பர் சிற்றூரைச் சேர்ந்த அறிஞர் ஆவார். ஊரை ஆண்ட அவையினர் 'ஆள்வார்' எனப்பட்டார். ஒரு நாட்டிற்கு உட்பட்ட எந்தச் சிற்றூரைப் பற்றிய செய்தியானாலும் இம்முத்திறத்தாரும் கலந்தே தங்கள் கருத்துக்களைத் தெரிவித்து வந்துள்ளனர்.

''ஊரார் சிற்றூர்ச் சபையாருடன் (ஆள்வார்) கலந்து வேலைகளைச் செய்தனர். ஊர் அவையார் 'பெருமக்கள்' எனப்பட்டனர். இப்பெருமக்கள் உழவு, கோவிற்பணி, அறங்கூறல் (நீதி வழங்கல்) முதலான பணிகளை மேற்கொண்டு வந்துள்ளனர். ஊர் அவை பல உட்பிரிவுகளாகப் பிரிந்து பல துறைகளிலும் சிற்றூர் ஆட்சியைத் திறம்படச் செய்து வந்துள்ளது. அக்காலத்தில் இத்தகைய ஊர் அவைகள் இருபது இருந்தன எனப்பட்டங்களும் கல்வெட்டுக்களும் குறிப்பிடுகின்றன. இத்தகைய ஊர் அவைகளே கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் சுந்தரர் காலத்தில் திருவெண்ணெய் நல்லூரிலும், திரு நீலகண்ட நாயனார் காலத்தில் சிதம்பரத்திலும் இருந்ததைப் பெரியபுராணம் குறிப்பிடுகின்றது.''[182]

## ஊர் அவைப்பிரிவுகள்

ஊர் அவைக்குள் பல பிரிவுகள் இருந்தன. ஒவ்வொரு பிரிவும் 'வாரியம்' (Committee) எனப்பட்டது. 'ஏரிவாரியப் பெருமக்கள்', 'தோட்ட வாரியப் பெருமக்கள்' எனப் பல வகுப்புப் பெருமக்கள் கொண்ட முழு அவையே 'ஊரவை'யாகும். சிற்றூர்களை நேரடியாக அரசியல் பொறுப்புக்கு உட்பட்டு ஆண்டவர்கள் 'ஆளுங்கணத்தார்' எனப்பட்டனர். இவர் ஊரவையாரின் வேறானவர் ஆவார். இவ்வாறு பல்லவர் ஆட்சிக்காலத்தில் சிற்றூர் வழக்கு மன்றங்கள் செயல்பட்டு வந்திருப்பதைக் காணலாம்.

## பிற்காலச் சோழர்கள் நீதிமுறை

பிற்காலச் சோழப் பேரரசு "நிருவாக வசதிக்காகப் பல மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அரச குமாரர்கள் அல்லது நெருங்கிய உறவினர்கள் மாநில ஆளுநர்களாக நியமிக்கப்பட்டனர். மண்டலங்களிலுள்ள நிதி, நீதி நிருவாகங்கள், அறப்பணி, ஆலயப்பணி ஆகியனவற்றில் கீழ்மட்ட நிருவாகப் பிரிவுகளையும் நிருவாகிகளையும் இவர்கள் கண்காணித்தனர். மண்டலங்கள் பல கூற்றங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தன. நாடுகள் பல சேர்ந்தது 'கூற்றம்' அல்லது 'வளநாடுகள்' எனப்பட்டன. இவை பற்றிய தெளிவான விளக்கங்கள் இவ்வியலில் 'சோழர் கால நீதிமுறை', 'சிற்றூர் நிருவாகம்', 'கிராமதலசுய ஆட்சிமுறை', 'குற்றமும் தண்டனையும்' என்றும் உட்பிரிவுகளில் இடம் பெற்றுள்ளன.

## விசயநகர மரபினர் கால நீதிமுறை

"முதலாம் அரிகரன் காலத்தில் விசய நகர மன்னனின் ஆதிக்கம் தமிழகத்தில் ஏற்பட்டது. மாயூரம் வட்டத்தில் அம்மன்னனுடைய கோமல் தரிசனம் கிடைத்துள்ளது. அம்மன்னன் தமிழகத்தை வென்றவுடன் சிற்றூர் நிருவாகப் பொறுப்பிலிருந்த வேளாண் குடிமக்களையும், பொற்கொல்லர்களையும் அகற்றி விட்டு அவ்விடங்களில் பிராமணர்களை நியமித்தான்"[183] குமார கம்பணன்காலம் முதல் தமிழகம் விசயநகரத்தின் தென்மண்டலமாக்கப்பட்டது. கம்பணன் மகாமண்டலாதிபதியானான். தலசுயாட்சி நிறுவனங்களாகிய சிற்றூர் சபைகளும் நாட்டவைகளும் செயலிழந்தன. மகாமண்டலாதிபதியும் மண்டலாதிபதிகளும் படைமானிய நிருவாக முறையைத் தமிழகத்தில் புகுத்தினர். 'சுற்றூர் மன்றங்களின் தல சுய ஆட்சியை விரும்பாத அவர்கள் 'பிரதானி'களையும், 'தலநாயகர்'களையும், பத்திரதாரர்களையும் துணையாகக் கொண்டு நாட்டை நிருவகித்தனர். அதிகாரப்

பரவல் தவிர்க்கப்பட்டு, அதிகார மைய ஈர்ப்பு ஏற்பட்டது. மண்டலங்களை நாயக்கத் தானங்களாகப் பிரித்து அதில் நாயங்கார முறையை ஏற்படுத்தினர். மண்டலாதிபதிகள் இடம் விட்டு இடம் மாற்றப்பட்டனர். நாயக்கர்கள் அவ்வாறு மாற்றப்படவில்லை. நாயக்கர்கள் ஊரகச் சொத்தைப் படைமானியச் சொத்தாக மாற்றினார்கள். தமிழகத்தில் நாயக்கர்களின் ஆதிக்கத்தில் வந்தன. நாயக்கர்கள் மன்னனுக்கும் விவசாயிகளுக்கும் நடுவில் செயல்பட்டனர். போர்க்காலங்களில் நாயக்கர்கள் மன்னர்களுக்குப் படையுதவி புரிந்தனர். விசயநகரப் பேரரசில் தமிழகத்தில் நிலவிய இந்த நாயக்காரமுறை அடக்குமுறைக்கு இலக்கணமாகிய முகர்முறை (Agency) நிருவாகமாகச் செயல்பட்டது. சிற்றூர்களிலும் புகுத்தினர். அம்முறைப்படி பன்னிரெண்டு பணியாட்கள் கிராம நிருவாகத்தை நடத்தினர்.'[184] 'அவர்களுள் போட்டையில் (Potail) கர்ணம், தலையாரி, தோட்டி, நீர்கந்தி ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர். போட்டையில் நிதி மற்றும் நீதி நிருவாகியாகவும், கர்ணம் பதிவாளனாகவும், தலையாரி சிற்றூர் மற்றும் கிராமப் பாதுகாவலனாகவும், தோட்டி பயிர்களின் காவலனாகவும், நீர்கந்தி பாசனப் பொறுப்பாளனாகவும் இருந்தனர். இவர்களுக்கு ஊதியம் நிலமானியமாகக் கிடைத்தது. இவர்கள் சிற்றூர்களின் காப்பாளர்களாகக் கருதப்பட்டாலும் கீழ்மட்ட நிருவாகிகளாகவே விளங்கினர். பல சிற்றூர்களுக்கும் கிராமங்களுக்கும் பொதுவாகச் 'சாவடி' என்ற அரசு அலுவலகம் இருந்தது.'[185]

இசுலாமியர் ஆதிக்கத்திற்கு எதிரான ஒரு வலிமை மிக்க அரணாக விளங்கிய விசய நகரப் பேரரசில் வருணாச்சிரம அடிப்படையிலான சமூக அமைப்பு புத்துயிர் பெற்றது. பிராமணர் உயர்வு பெற்றனர்.

**நாயக்கர்கால நீதிமுறை**

விசய நகரப் பேரரசின் நிருவாக அமைப்பின் வழி தமிழகத்தில் நாயக்கர் ஆட்சி தோன்றியது. விசய நகரத்தில் ஏற்பட்ட அரசுரிமைப் போட்டி காரணமாகத்

தமிழகத்தில் நாயக்கர்களின் சுயாட்சி ஏற்பட்டது. ''விசய நகர மன்னர்கள் தமிழகத்தில் படைமானிய முறையை அறிமுகப்படுத்தினர். அதன் வழியில் தோன்றிய நாயக்கர்கள் பாளையப்பட்டு முறையை அறிமுகப்படுத்தினர். விசுவநாத நாயக்கன் (1529-1564), அரியநாத நாயக்கன் ஆகியோர் நாட்டை 72 பாளையங்களாகப் பிரித்து, அவற்றைப் பாளையக்காரர்களிடம் ஒப்படைத்தனர். பாளையக்காரர்களுக்குரிய பாளையங்கள் மீது முழு நிருவாக உரிமையும் வழங்கப்பட்டது. அமைதிகாப்பதும், நீதி வழங்குவதும் வரி வசூலிப்பதும் பாளையக்காரர்களின் முக்கியப் பணிகளாகும்.''[186]

''நாயக்கர் ஆட்சியில் சிற்றூர்கள் கிராமம், மங்கலம், சமுத்திரம், குடி, ஊர், புரம், குலம், குறிச்சி, பட்டி என்னும் பல பெயர்களில் அழைக்கப்பட்டன. சிற்றூர்களில் மக்களால் மதிக்கப்பட்ட நீதி நிருவாக அதிகாரிகள் இருவர் இருந்தனர். நாயக்கர் ஆட்சியில் அதிக அளவு சுயாட்சியும் இருந்தது என்று பேராசிரியர் சத்தியநாதய்யர் குறிப்பிடுகின்றார்.''[187] சிற்றூர்களில் காவல், நீதி, நிருவாகம் ஆகியனவற்றைக் கர்ணம், மணியக்காரன், தலையாரி முதலிய சிற்றூர் அலுவலர்களே நிருவாகத்தினர். சிற்றூர்களில் வரிக்கணக்கு மற்றும் நிலக்கணக்குகளைக் கர்ணம் பராமரித்தார். சிற்றூர்களின் எல்லை, நிலப்பரப்பு, தோட்டங்கள், இறையிலி நிலங்கள், இடுகாடு, கிணறு, வாய்க்கால் முதலியனவற்றின் கணக்குப் பதிவும் வரிவருவாய்க் கணக்குப் பதிவும் கர்ணத்தின் பொறுப்பில் இருந்தன. மணியக்காரர் கர்ணத்தின் துணையுடன் வரி வசூலித்தார். சிற்றூர்களில் வசூலிக்கப்பட்ட வரிகள் சாவடிகளில் செலுத்தப்பட்டன. ஊர்க்காவல் தலையாரியிடம் இருந்தது. இவர்கள் மூவரும் அரசு அலுவலர்கள் ஆவர்.

''நாயக்கர் ஆட்சியில் நீதி வழங்குவது மன்னனுடைய தலையாய கடமையாக இருந்தது. மன்னனும், தளவாயும், பிரதானியும் தலைநகரில் நீதி வழங்கினர்.

பாளைப்பட்டுக்களில் பாளையக்காரர்களே நீதி வழங்கும் பணியை மேற்கொண்டிருந்தனர். வழக்காறு, ஆவணம், சாட்சி ஆகியனவற்றின் அடிப்படையில் பாளையக்காரர்கள் நீதி வழங்கினர் என்பதைச் சீவில்லிபுத்தூர் சாசனம் (கி.பி.1577) குறிப்பிடுகின்றது.''[188] நாயக்கர் ஆட்சியில் அடித்தட்டு மக்கள் நீதியைப் பெறமுடியவில்லை.

**ஆங்கிலேயர் கால நீதிமுறை**

ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் குழுமத்தினர் உரோமானிய முறையைத் தழுவி நீதி நிருவாகத்தை உருவாக்கிச் செயல்படுத்தினர். பொது நீதி நிறுவனங்கள் மூலம் மக்களின் உரிமைகளைப் பேணும் மரபை உருவாக்கினர். ''குற்றவியல், உரிமையியல் என்று சட்டங்களிலும், நீதிமன்றத்திலும், நீதிமன்ற நடைமுறைகளிலும் மாறுபாடுகளை ஏற்படுத்தினர். சென்னையில் வணிக உரிமையைப் பெற்றிருந்த வணிகக் கம்பெனியாள் தங்களுக்கென கி.பி.1661க்குப் பின் குற்றவியல் நீதிமன்றத்தை உருவாக்கினர். கம்பெனி ஆளுநரும் அவருடைய ஆலோசனைக்குழு உறுப்பினர்களும் குற்றவியல் நீதிமன்ற நடுவர்களாகச் செயல்பட்டனர். 1687-இல் சென்னை நகராண்மைக் கழகமாக மாற்றப்பட்டது. நகரத்தந்தையை நடுவராகக் கொண்டு நீதிமன்றம் செயல்படத் தொடங்கியது. இம்மன்றம் குற்றவியல், உரிமையியல் வழக்குகள் மீது நீதி வழங்கியது. மேற்கத்திய முறையில் வழக்குரைஞர்கள் குற்றம் சாட்டப்பட்டவர்களுக்காக வாதாடினர். இந்த நீதிமன்றங்கள் ஆங்கிலேயர் பொருட்டான வழக்குகளை மட்டுமே ஏற்று நீதி வழங்கின.''[189]

''1801க்குப் பின்னர் வணிகக் கம்பெனியார் ஆட்சியாளர்களாக மாறினர். மாவட்ட அளவிலான நீதிமன்றத்தின் தேவை ஏற்பட்டது. மாவட்டத் தலைநகரங்களில் கம்பெனியின் பொறுப்பிலான மாவட்ட நீதிமன்றங்கள் (Zilla

Courts) தோற்றுவிக்கப்பட்டன. இம்மாவட்ட நீதிமன்றங்கள் குற்றவியல், உரிமையியல் வழக்குகள் மீது நீதி வழங்கின. ஆங்கிலேயர்களே மாவட்ட நீதிபதிகளாகவும் மாவட்ட அமைதிக்காப்பு நடுவர்களாகவும் விளங்கினர்.''[190] இந்நீதிமன்றங்கள் ஆங்கில நீதிமன்ற மரபுகளையும், பல சட்டங்களையும், நடைமுறைகளையும் கையாண்டதால் சாதாரண எளியமக்கள் பல்வேறு நடைமுறைச் சிக்கல்களைச் சந்தித்தனர்.

**கல்வெட்டுச் சான்றுகள்**

கல்வெட்டுக்களின் காலம் கி.பி.ஏழாம் நூற்றாண்டு ஆகும். அக்கல்வெட்டுக்களில் 'ஊரவை' பற்றியும், ஊரவையினரின் பணிகள் பற்றியும் செய்திகள் காணப்படுகின்றன.

''சங்ககால நீதிமன்றம் 'மன்றம்', 'அவை', 'அவைக்களம்', 'அறக்களம்' எனப் பல பெயர்களில் அழைக்கப்பட்டது. நீதிபதிகளைச் சிலப்பதிகாரம் 'அறக்களத்து அந்தணர்' எனக் குறிப்பிடுகின்றது.''[191] பல்லவர் காலத்தில் உயர்நீதிமன்றம் 'தர்மாசனம்' எனப் பெயர் பெற்றது. ''கிராமங்களில் ஊர் அவைகள் இருந்தன. ஊர் அவையினரே ஊர் வழக்குகளைத் தீர்த்தனர். உரிய தண்டனைகளையும் வழங்கியுள்ளனர். 'யானும் என் மரபினரும் இவருக்கு அடிமை' என்று சுந்தரரின் பாட்டனார் எழுதிக் கொடுத்திருந்தமையால், சுந்தரர் தமக்கு அடிமை என்று வாதிட்ட கிழவேதியர் வழக்கைத் திருவெண்ணெய் நல்லூர்ச் சபையினரே நடுவுநிலையிலிருந்து விசாரித்துத் தீர்த்தனர். இவ்வாறே சிறுவரான விசார தருமர் செய்த தவற்றுக்கு அவர் தந்தை விசாரிக்கப்பட்டார். அவர் அவையோரிடம் மன்னிப்பு வேண்டினார் என்று பெரியபுராணம் பேசுகின்றது.''[192]

''விசய நகர ஆட்சிக்காலத்தில் பிரதானி (முதலமைச்சன்) நீதிமன்ற உயர் அதிகாரியாக இருந்தான். சில சமயங்களில் அரசனும் பிரதானியும் நீதிபதிகளாக அமர்ந்து வழக்கினைத் தீர்ப்பதுண்டு. மதுரை வீரப்ப நாயக்கர் ஆட்சியில் ஒவ்வொரு கிராமத்திலும் நீதிபதிகள் இருவர் இருந்தனர். அவர்கள் ஊர் மக்களால் மிகவும் மதிக்கப்பட்டனர்.''[193] ''ஒரு நாட்டைச் சேர்ந்த ஒவ்வொரு மாகாணத்திலும் மாகாண ஆளுநர் அல்லது அரசப் பிரதிநிதி மாகாண நீதிமன்றத்தில் தலைமை தாங்கி 'முறை' செய்து வந்தனர். ஊராட்சி மன்றத்தார், கோவில் அதிகாரிகள், சங்கத்தார், சாதித் தலைவர்கள் என்பவர் ஊர் வழக்குகளைத் தீர்த்தனர். இத்தகைய ஊர் மன்றங்கள் முடிவு செய்யும் வழக்குகளில் சில அரசனைத் தலைவனாகக் கொண்ட உயர்நீதிமன்றத்திற்கும் செல்வது உண்டு.''[194]

''திருவதிகைத் திருவீரட்டானேசுவரர் கோவிலைச் சேர்ந்த தானத்தார், மாகேசுவரர் ஆகியோருக்கும் அதிராஜ மங்கலியபுரத்து நகரத்தார்க்கும் எல்லை பற்றிய வழக்கு ஒன்று நடந்தது. வீரபாண்டிய தேவன் காலத்தில் செய்யப்பட்ட முடிவை நகரத்தார் ஒப்புக் கொள்ளவில்லை. இரண்டாவதாகவும் மூன்றாவதாகவும் செய்யப்பட்ட முடிவுகளை மாகேசுவரரும் தானத்தாரும் ஒப்புக் கொள்ளவில்லை. எனவே அரசாங்க அதிகாரிகளான உடையார் காலிங்கராயர், நரசிங்கதேவ முதலியார், திருமஞ்சன மாளிகையார், விசுவநாததேவர் என்பவர்கள் அவ்வழக்கை விசாரித்து முடிவு செய்தன என்று ஒரு கல்வெட்டு கூறுகின்றது.''[195]

''வழக்கினை விசாரித்து முடிவு கூறுவோர் இடத்திற்கேற்பவும் வழக்கிற்கேற்பவும் வேறுபட்டிருந்தனர். உடையார்குடிக் கோயில் வழக்குகளைத் தீர்க்க அக்கோயில் மாகேசுவரர் பல கோயில்களைச் சேர்ந்த அதிகாரிகள், நாட்டின் பல பகுதிகளைச் சேர்ந்த யாத்ரிகர், உடையார் குடியில் இருந்த கைக்கோள

முதலிகள் முதலியோர் நடுவர்களாக இருந்தனர் என்று ஒரு கல்வெட்டுக் கூறுகின்றது.''[196]

''இத்தகைய வழக்கு முடிவுகளில் அமைதி பெறாதவர், மண்டலத் தலைவனுக்கோ அல்லது அரசனுக்கோ விண்ணப்பம் செய்து கொள்ளலாம். அவர்கள் தாமாகவே முடிவுகூற முடியாதபோது, சுற்றுப்புற ஊர்களைச் சேர்ந்த மகாசனங்கள் வழக்கை விசாரித்து முடிவு செய்வார்கள்; விசய நகர ஆட்சிக் காலத்தில் சேலம் மாவட்டத்தைச் சேர்ந்த ஆரகனூர் சிவன் கோவில் வழக்கு ஒன்று மேற்கொள்ளப்பட்ட முறையில் தீர்த்து வைக்கப்பட்டுள்ளது.''[197]

''கொலை, களவு, கோரம், மாற்றுக் கையெழுத்திடுதல் முதலியவை குற்ற வழக்குகளைச் (Criminal) சேர்ந்தவை. இக்குற்றங்களைச் செய்தவர் அரசாங்க வேலைக்குத் தகுதியற்றவர் என்றும் தீர்மானிக்கப்பட்டது என்பதையும் ஒரு கல்வெட்டுக் குறிப்பிடுகின்றது.''[198] ஏனைய வழக்குகளைப் போலவே கடும் தண்டனைக்குரிய வழக்குகளும் ஊர் மன்றங்களிலும் நாட்டு மன்றங்களிலும் விசாரித்து முறை வழங்கப்பட்டுள்ளன. தேவை ஏற்படின் அரசனும் அமைச்சனும் நேரில் விசாரித்து நீதி வழங்கியுள்ளனர்.

''அதிகாரிகள் முன்னிலையில் குற்றவாளிகளே தம்முள் ஒரு முடிவுக்கு வருதலும் உண்டு. புதுக்கோட்டைச் சீமையைச் சேர்ந்த தெற்குப் பகுதி மக்களுக்கும் வடக்குப் பகுதி மக்களுக்கும் மாறுபாடும் மோதலும் உண்டானது; அதனால் பல கொலைகள் நிகழ்ந்தன. வட பகுதியினர் மிக்க அட்டூழியம் செய்தனர். அதனால் அவர்கள் தங்கள் மக்களில் சிலரைத் தெற்குப் பகுதியினரிடம் ஒப்படைத்தனர். அவர்கள் கோவில் அதிகாரிகள் முன்னிலையில் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டனர். அதன்படி இரு திறத்தாரும் ஒருவருக்கொருவர் தீங்கிழைக்கலாகாது என்றும், இதற்கு

மாறாக நடந்தால் இரு திறத்தாரும் கூடித்தீமை செய்பவர் நிலங்களைச் கைப்பற்றிக் கோவிலுக்குத் தானமாக விடலாம் என்றும், அங்ஙனம் தானமாக விடப்பட்ட நிலங்களுக்கும் அந்தக் குற்றவாளிகளே வரி செலுத்த வேண்டுமென்றும், இவற்றோடு ஊரவைக்கும், அரசனுக்கும் அவன் தண்டனை செலுத்தவும் நேரலாம் என்றும் ஒப்பந்தம் செய்தனர்''[199] ''அரசத் துரோகம் செய்தவர் சொத்து அரசாங்கத்தினரால் கைப்பற்றப்பட்டது. அத்துரோகிகள் சில சமயங்களில் கொல்லப்பட்டனர். அவர்கள் நிலம் ஏலம் விடப்பட்டன.''[200]

''குடுமியான் மலைக்கோயில் கருவறையிலிருந்து விலையுயர்ந்த நகை களவாடப்பட்டுவிட்டது. ஐயுறப்பட்ட சிவப்பிராமணரைப் பக்கத்துச் சிற்றரசர்கள், பேரூர்கள், நாடுகள் இவற்றினைச் சேர்ந்த தலைவர்கள் கூடி விசாரித்தனர். பெரிய பட்டர்களையும் கலந்து ஆலோசித்தனர். அம்மண்டலத்தலைவன் முன்னிலையில் இவ்விசாரணை நடைபெற்றது. குற்றவாளிகள் காய்ச்சிய இரும்பினைப் பிடிக்கும் படி கட்டளையிடப்பட்டனர். நால்வர் கைகளில் காயம்பட்டது. மற்றொரு குற்றவாளி தன் குற்றத்தை ஒப்புக்கொண்டான். குற்றவாளிகள் அனைவரும் 'சிவத்துரோகிகள்' எனத் தீர்மானிக்கப்பட்டுச் சிறையில் அடைக்கப்பட்டனர். அவர்களுடைய நிலங்களும் பிற உடைமைகளும் 'திருநாமத்துக்காணி' என்ற பெயரில் கோவிலுக்குச் சேர்க்கப்பட்டன. அச்சொத்துக்கள் மீது முன்பே பணம் கொடுத்தவர்களுக்குக் கோவிலிலிருந்து பணத்தைப் பெற்றுக் கொண்டு, தங்கள் அடமானத்தை விடும்படிக் கட்டளை பிறப்பிக்கப்பட்டது.''[201] ''சிலப்பதிகாரம் கல்வெட்டுக்களிலிருந்து கோவில் அதிகாரிகளும் ஊர் அவையினரும் திருட்டு முதலிய குற்ற வழக்குகளை விசாரிக்கும் உரிமை பெற்றிருந்தனர் என்பதை அறியமுடிகின்றது. ஒரு கோவில் திருட்டு வழக்கில் குற்றவாளியின் சொத்து பறிமுதல் செய்யப்பட்டது; அவனது ஒரு கை வெட்டப்பட்டது; அவன்

*கிராமத்திலிருந்து விரட்டப்பட்டான்.''*[202] *இவ்வாறு கல்வெட்டுக்களில் 'ஊரவை' மற்றும் ஊரவையினரின் பணிகள், செயற்பாடுகள் பற்றிய செய்திகள் குறிப்பிடப்பட்டுள்ளன.*

**சிற்றூர்களில் ஊர்க்காவலர்**

*''சிற்றூர்களில் 'ஊர்க்காவலர்' காவலர்* (Police) *வேலைகளைச் செய்து வந்துள்ளனர். இவ்வாறே 'நாடு' என்னும் பெரும்பிரிவினை 'நாட்டுக் காவலர்' காத்து வந்துள்ளனர். இவர்கள் முறையே 'பாடிகாவலர்' என்றும் 'நாடுகாவலர்' என்றும் கல்வெட்டுக்களில் பெயர் பெற்றனர். இவர்களுக்கு ஊரைச் சேர்ந்த ஒவ்வொரு வீட்டாரும் ஆண்டுக்கு இவ்வளவு நெல் என்று கொடுத்து வந்துள்ளனர். பல ஊர்களில் 'ஊரவையினர்' இவர்களுக்கென்று நிலத்தைச் சொந்தமாக விட்டிருந்தனர். ஊர்க்காவலும், நாடுகாவலும் பரம்பரை வேலையாக இருந்து வந்துள்ளது. அக்காவலர்கள் அரசத்துரோகம் செய்தால் அவர்களின் வேலை பறிக்கப்படும். நிலமும் பறிக்கப்படும். ஊரார் காவலருக்குக் கொடுப்பது நெல் மட்டுமன்று. பராக்கிரம பாண்டியன் காலத்தில் நெல்விளையும் ஒவ்வொரு 'மா' நிலத்திலும் ஒரு கலம் நெல்லும். ஒவ்வொரு பாக்கு மரத்திற்கும் வீசம் பணமும், கரும்பு, மருக்கொழுந்து, இஞ்சி, வாழை விளையும் ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஐந்து பணமும், ஒவ்வொரு வீட்டிற்கும் இரண்டு பணமும் ஊர்க்காவலருக்குக் கொடுக்கப்பட்டன என்று ஒரு கல்வெட்டுக் கூறுகின்றது.''*[203] *''ஊரின் அளவுக்குத் தக்கபடி ஊர்க்காவலர் சிலராகவும் பலராகவும் இருந்து வந்துள்ளனர். திருவொற்றியூரில் நாற்பத்தெட்டு காவல்காரர்கள் பணியாற்றி வந்துள்ளனர்.''*[204]

*''நாடு என்னும் பெரும்பரப்பை ஆண்டு வந்தான் 'நாடாள்வான்' எனப்பட்டான். அவன் தன்கீழ்க் காவலர் பலரைத் 'தலையாரிகள்' என்ற பெயரில்*

நியமித்து நாடுகாவல் வேலையைக் கண்காணித்து வந்துள்ளான். முன்னர் குறிப்பிட்ட முறையில் வரும் நாடுகாவல் வருமானம் அவனைச் சேர்ந்தது. அவன் அத்தொகையிலிருந்து தன் ஆட்களுக்குத் திங்கள் தோறும் பணமாகவோ, நெல்லாகவோ ஊதியம் கொடுத்து வந்தான். விசய நகரத்துப் பாளையக்காரர்கள் ஆட்சியில் நகரத்தில் திருட்டும் கொள்ளையும் நடந்தால் ஊர்க்காவலர்களே கடுமையாகத் தண்டிக்கப்பட்டுள்ளனர்.''[205] பெரு நாட்டில் சிறப்புப் பகுதிகளில்- எல்லைப்புறப் பகுதிகளில் அரசாங்க நிலைப்படைகள் வைக்கப்பட்டிருந்தன. அவர்கள் அப்பகுதிகளில் நாடுகாவற் பணியைச் செய்து வந்துள்ளனர். இவையாவும் கல்வெட்டுக்கள் தரும் செய்திகளாகும்.

சோழர் காலக் கல்வெட்டுக்களில் கிராமச் சபைகளின் அமைப்பு முறைகளும் அதன் செயற்பாடுகளும் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன. அவற்றுள் உத்தரமேரூர்க் கல்வெட்டுக்கள் குறிப்பிடத்தக்கதாகும். இக்கல்வெட்டுகளிலிருந்து பின்வரும் செய்திகள் வெளிப்படுகின்றன. உத்தரமேரூர்க் கிராமம் முப்பது தொகுதிகள் அல்லது 'குடும்பு'களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. இக்குடும்புகள் ஒவ்வொன்றும் கிராம சபைக்குத் தேர்ந்தெடுப்பதற்கான தகுதியுடையவர் ஒருவரை நியமனம் செய்யவேண்டும். அவர்கள் குறைந்த அளவு கால்வேலி நிலத்துக்காவது உரிமை கொண்டிருக்க வேண்டும். அவர்கள் குடியிருந்த வீட்டுமனை அவர்களுக்கே சொந்தமானதாக இருக்க வேண்டும். அவர்களுடைய வயது முப்பத்தைந்துக்குக் குறைந்திருக்கக் கூடாது. எழுபதுக்கு மேற்பட்டிருக்கக் கூடாது. அவர்கள் வேதத்துடன் தொடர்புடைய மந்திர பிராமணங்களைக் கற்றிருக்க வேண்டும். . . . . ஏதேனும் ஒரு சபை அல்லது வாரியத்தில் மூன்றாண்டுகள் ஒருவர் உறுப்பினராக இருந்திருந்தால் அவர் மீண்டும் உறுப்பினராக நியமனம் பெறும் உரிமையை இழந்தவர் ஆவார். ஏற்கனவே ஒரு குழு அல்லது வாரியத்தில் உறுப்பினராக இருந்து ஒழுங்காகக் கணக்குக் காட்டத் தவறியவர்களும் அவர்களுடைய

சுற்றத்தார்களும் பிறருடைய உரிமைகளைப் பறித்துக் கொண்டவர்களும் இழிந்த ஒழுக்கமுடையவர்களும் நியமனம் பெற உரிமையற்றவர்கள் ஆவார்கள்.

குடும்புகளால் நியமனம் செய்யப்பட்டவர்கள் அனைவரும் கூடிக் குடும்புக்கு ஒருவராக மொத்தம் முப்பது உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பார்கள். இக்காலத்தைப் போலவே அக்காலத்திலும் வாக்குப் பதிவு முறையொன்று பிராமணர் கிராமங்களில் கையாளப்பட்டது. அம்முறைக்குக் 'குடவோலை முறை' என்று பெயர். இக்குடவோலை முறையில்தான் கிராமச் சபையின் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களுள் ஆண்டிலும் அறிவிலும், அனுபவத்திலும் முதிர்ச்சியடைந்தவர்களான பன்னிருவர், ஏற்கனவே தோட்ட வாரியம், ஏரி வாரியம் ஆகியனவற்றின் உறுப்பினராக இருந்து அனுபவம் பெற்றவர்களாயின் வாரியத்துக்கு உறுப்பினராக அமர்த்தப்படுவார்கள். ஏனையோர் அறுவர் ஏரி வாரியத்துக்கும் பன்னிருவர் தோட்ட வாரியத்துக்கும் நியமனம் செய்யப்படுவார்கள். பஞ்சவார வாரியம், பொன்வாரியம், உதாசீன வாரியம் என வேறு வாரியங்களும் அமைக்கப்பட்டிந்தன. 'மகாசபை'க்குப் 'பெருங்குறி' என்றும், வாரிய உறுப்பினர்களுக்கு 'வாரியப் பெருமக்கள்' என்றும் பெயர். சபைகளும் வாரியங்களும் பொதுவாகக் குளத்தங்கரைகளிலும் மரத்தடிகளிலும் கூடுவது வழக்கம். கிராமப் புறம்போக்கு நிலங்களையும் கண்காணிக்கும் உரிமை இச்சபைகளுக்கு இருந்தன. அரசாங்கம் ஏற்பாடு செய்த நில விற்பனை, நிலதானம் போன்ற உரிமை மாற்றங்கள் ஒழுங்காக முடிவு பெறுவதற்கு இச்சபைகள் துணைபுரிந்தன. நிலங்களின் வருமானத்தைக் கணக்கிடுதல், வரிவிகிதங்களை அறுதியிடுதல், வரி தண்டுதல், வரி செலுத்தத் தவறியவர்களின் நிலங்களைக் கைப்பற்றி விற்று விற்பனைத் தொகையைக் கொண்டு வரி நிலுவைக்கு ஈடுகட்டிக் கொள்ளுதல் ஆகிய பணிகள் கிராம சபையினரிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தன. காடுகொன்று நாடாக்குதல், தரிசு

நிலங்களை உழவு நிலங்களாக மாற்றுதல், குடி மக்களின் நிலவுரிமைகள், பாசன உரிமைகள் ஆகிய வேளாண்மை உரிமைகளை அறுதியிடுதல், குடிமக்களின் வழக்குகளைத் தீர்த்து வைத்தல் ஆகிய பணிகளையும் இம்மகாசபைகள் புரிந்து வந்தன. நில அளவைகளை மத்திய அரசாங்கமே மேற்கொண்டதெனினும், நில அளவையின் போது ஆய்ந்து அறிந்து கொள்ள வேண்டிய நிலவளம், நிலத்தரம் ஆகியவற்றிற்கு இச்சபையின் உடன்பாட்டை மத்திய அரசாங்கம்''[206] பெற்றாக வேண்டும்.

உறையூரில் உள்ள கல்வெட்டில்,

> ''மறங்கெழு சோழர் உறந்தை யவையத்து
> அறம்நின்ற நிலை யிற்றா கலன்'' (புறம்.39)

என்ற குறிப்புக் காணப்படுகின்றது. ''உத்தரமேரூர், திருப்பனந்தாள், தஞ்சை மாவட்டம் தழையனூர் ஆகிய இடங்களில் காணப்படும் கல்வெட்டுக்கள், 'சிற்றூர் அவை' பற்றி விளக்குகின்றன. ஊரவை கூடும் இடம் அவை, மண்டபம், மன்றம், மரநிழல் எனவும், முரசு அறைந்தும் கொம்பு ஊதியும் ஊரவை கூடுவதைத் தெரிவிப்பார்கள் எனவும் கல்வெட்டுக்கள் கூறுகின்றன. பகல், இரவு எனத் தேவை ஏற்பட்ட போதெல்லாம் ஊரவை கூட்டப்பட்டுள்ளது என நாகபட்டினக் கல்வெட்டுக் கூறுகின்றது. இக்கல்வெட்டுக்கள் மூலம் பாண்டியர், சோழர் ஆட்சிக் காலங்களில் சிற்றூர் வழக்கு மன்றங்கள் சிறப்பாக நடைபெற்றுள்ளன''[207] என்பதை அறியலாம்.

இக்கல்வெட்டுக்களின் வாயிலாக ஊரவை உறுப்பினர்கள் தேர்வு செய்யப்பட்ட முறையினையும் அவர்களின் பணிகள் பற்றிய செய்திகளையும் அறிய முடிகின்றது. பண்டைய தமிழக மன்னர்கள் அறம் தழுவி அரசு புரிந்த

முறைமையினையும், அறங்கூறவையத்தின் நடைமுறைகளையும், ஊரவையின் செயல்முறைகளையும் இக்கல்வெட்டுச் சான்றுகள் தெளிவுப்படுத்துகின்றன.

**தொகுப்புரை**

'பஞ்சாயத்து' என்பது 'சிற்றூர் வழக்கு மன்றம்' என்றும், 'கிராம வழக்கு மன்றம்' என்றும் அழைக்கப்படுகின்றது. அது குறைந்தது ஐந்திற்கும் மேற்பட்ட நடுநிலையான ஊர்ப்பெரியவர்கள் கூடி விவாதிக்கும் 'நியாய சபை'யாகும். ஒரே பண்பாட்டு இயல்புடைய சிற்றூரைச் சேர்ந்தவர்கள் அவர்களுக்குள் தோன்றும் சிக்கல்களைத் தீர்க்க ஏற்படுத்தப்பட்ட அமைப்பு 'சிற்றூர்ப் பஞ்சாயத்து' ஆகும். அது கிராமத்துப் பெரியவர்களின் வழக்காடு மன்றமாக அமைந்திருப்பதனால் அதனைக் 'கிராம வழக்கு மன்றம்' எனக் குறிப்பிடலாம்.

பழங்காலத்தில் மனிதன் நாடோடிகளாகக் காடுகளில் வேட்டைத் தொழிலை மேற்கொண்டு வாழ்ந்து வந்தான். பின்னர் அவன் நீர்நிலைகளைக் கொண்ட செழிப்பான ஆற்றுப் பகுதிகளை நாடி ஓரிடத்தில் நிலையாகத் தங்கி வாழத் தொடங்கினான். இவ்வாறு மனிதர்கள் கூட்டம் கூட்டமாக வாழத் தொடங்கிய வாழ்க்கை முறையினையே வரலாற்று ஆய்வாளர்கள் 'இனக்குழு வாழ்க்கை முறை' எனச் சுட்டிக்காட்டியுள்ளனர். இனக்குழுச் சமுக வாழ்க்கையில் மனிதன் தமக்கென்று வீடு கட்டிக்கொண்டு வாழத் தலைப்பட்டான். இவ்வாறு ஓரிடத்தில் நிலையாக வாழ்ந்த இனக்குழுவே பின்னர் கிராமமாகப் பரிணாம வளர்ச்சிப் பெற்றது.

'வழக்கு மன்றம்' என்ற அமைப்பு முறை கிராமம் என்ற அமைப்புத் தோன்றி மனிதன் கூடிவாழத் தலைப்பட்ட போது தோன்றியிருக்க வேண்டுமென்றும், அம்மன்றங்கள் கிராம மக்களிடையே ஏற்பட்ட சிறு சிறு சிக்கல்களையும், கிராமக்

குழுக்களிடையே ஏற்பட்ட ஒட்டு மொத்தமான சிக்கல்களையும் கருத்தில் கொண்டும் தோன்றியது என்பதனையும் அறியமுடிகின்றது.

சங்ககாலப் பொதுவாழ்வியல் மன்னராட்சியில்தான் அடங்கியிருந்தது. மன்னனே வலிமை மிக்கவன்; அவனைக் கட்டுப்படுத்தியதாகக் கூறப்படும் கட்டுப்பாடுகள் கொள்கையளவிலேயே இருந்தன; வரி இறுத்தற்காகவும் பொது அமைதியைக் காப்பதற்காகவும் மன்னன் தனது அரசின் எல்லாப் பகுதிகளோடும் தொடர்பு கொண்டிருந்தான்; இருப்பினும் சிற்றூர்களில் மக்கள் தங்கள் ஊர்ப்பொதுக் காரியங்களைத் தாங்களே கவனித்துக் கொண்டனர். மன்னனால் எல்லா விதத்திலும் கவனிக்க முடியாத நிலையில் கிராமத்திலுள்ளோர் தமது ஊரிலுள்ள செல்வந்தர், அனுபவமுடையோர், செல்வாக்குடையோர், அறிஞர் என்போர் வாயிலாகத் தங்களைத் தாங்களே ஆண்டு கொண்டனர். இவையே அக்காலக் கிராம சுயாட்சிக்கு அடிப்படையாகும்.

சங்க இலக்கியங்களில் 'மன்றம்', 'பொதியில்', 'அம்பலம்', 'அவை'. 'அறங்கூறவையம்' போன்ற சொற்கள் இடம் பெற்றுள்ளன. இவை கிராம வழக்கு மன்றங்களைக் குறிக்கும் ஒருபொருள் குறித்த பல சொற்களாகும். ஊரில், ஊர்ப் பெரியவர்கள் ஒன்றாகக் கூடும் பொது இடத்திற்கு 'மன்று' அல்லது 'மன்றம்' என்பது பெயராகும். இச்சொல் வழக்கு சங்க இலக்கியங்களில் பரவலாகப் பயின்று வந்துள்ளது. பொதுச் சபையில் வழக்கினை எடுத்துப் பேசுவோர்க்கும் வழக்கினைத் தீர்ப்பவர்க்கும் 'மன்றாடி' என்றும், 'அவை'யாகிய மன்றத்தில் அமர்ந்து வழக்குகளை ஆராய்ந்து தீர்ப்பு வழங்குபவர் 'மன்றாடி' என்றும் பெயர்பெறுகின்றனர். கருத்து மாறுபாடுற்றுப் பிணக்குக் கொண்டவர்களைச் சேர்த்து வைப்பவர் 'சேர்வை' எனக் கொள்ளலாம். பொதுவில் யாரும் வழிபடுவதற்குரிய இடம் 'பொதியில்' ஆகும். நாலடியாரில் வழிப்போக்கர்கள் தங்கும் இடமாக 'வேதிகை' குறிக்கப்பட்டுள்ளது.

பொதியில் என்பது மரத்தடியில் அமைந்திருந்தது. கிராமங்களில் எழுந்த சிறுசிறு தகராறுகளையும் பிரச்சினைகளையும் கிராம நிறுவனங்களான மன்றமும் பொதியிலும் தீர்த்து வைத்துள்ளன.

'ஊர்' என்பது நகரமாகும். பெரிய கிராமம் 'பேரூர்' என்றும், சிறிய கிராமம் 'சீறூர்' என்றும், பழைய கிராமம் 'மூதூர்' என்றும் அழைக்கப்பட்டுள்ளன. பண்டைய தமிழகத்தில் நீதியை நிருவாகம் செய்வதற்கு மன்னர்களுக்கு உறுதுணையாக ஐம்பெருங்குழுவினரும் எண்பேராயத்தினரும் இருந்துள்ளனர். ஐம்பெருங்குழு, எண்பேராயம் ஆகியனவற்றை நச்சினார்க்கினியர், அடியார்க்கு நல்லார் போன்ற உரையாசிரியர்கள் கூறியிருப்பதனால் அவற்றை ஏற்றுக் கொள்ளலாம்.

'அம்பலம்' என்னும் சொல்லிற்கு ஊரவை, கற்றோரவை, பலர் கூடும் வெளியிடம், சிற்றூர் அலுவல்வகை முதலான பொருள்கள் உள்ளன. ஊரவையில் அமர்ந்து தம் நுண்மாண் நுழைபுலத்தால் மற்றவர்களுடைய வழக்குகளை ஆராய்ந்து நீதிவழங்கியவரே 'அம்பலகாரர்' எனப்பட்டார். அம்பலகரார் என்னும் இப்பட்டப் பெயர் கள்ளர், வலையர் முதலிய சாதியாரிடத்து இன்று மிகுதியாகக் காணப்படுகின்றது.

தொல்காப்பியர் புறத்திணையியல் வாகைத் திணையைப் பற்றிக் குறிப்பிடும் போது குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், வாய்மை, தூய்மை, நடுவுநிலைமை, அழுக்காறின்மை, அவாவின்மை என்னும் எண்வகைக் குணங்களைக் கொண்ட அவைக்கண் முந்தியிருப்போர் வெற்றியையும் குறிப்பிட்டுள்ளார். 'அவையம்' பொதுவாக அக்காலத்தில் நீதி மன்றங்களாகவே செயல்பட்டு வந்துள்ளன. பக்தி நெறி மேலோங்கிய பல்லவர் காலத்தில் கோயில்கள் நீதிமன்றங்களாகச் செயல்பட்டுள்ளன.

தலைநகரத்தில் அறங்கூறவையத்திற்கு மன்னனே தலைமை தாங்கினான். அவையத்திடம் தொடர்ந்த வழக்கு 'குறை' எனவும், வழங்கிய நியாயம் 'முறை' எனவும் அழைக்கப்பட்டன. சாட்சி கூறியவன் 'கரி' அல்லது 'கரியோன்' என்றழைக்கப்பட்டான். வயதும் அனுபவமுமே அறங்கூறவையத்தில் நீதிபதிகளுக்குரிய தகுதிகளாகும். அவையத்தாரிடையே 'காவிதிப் பட்டம்' பெற்ற அமைச்சர்களும் இருந்துள்ளனர். அவர்கள் அறத்தை அறிந்தமைக்கு அறிகுறியாக அவர்களுக்கு இப்பட்டம் வழங்கப் பெற்றுள்ளது.

பண்டைய தமிழகத்தில் குற்ற வழக்குகளே மிகுந்திருந்தன. சங்ககாலத்தில் ஐயப்பட்ட குற்றவாளிகளும் கொடிய முறையில் தண்டிக்கப்பட்டுள்ளனர். சோழர் கால ஆட்சியில் நீதி வழங்கும் பொறுப்பு ஊர்ச்சபையினரிடமும், குலப்பெரிய தனக்காரரிடமும் ஒப்படைக்கப்பட்டிருந்தது. கரணத்தான் துணையுடன் நீதி மன்றங்கள் செயல்பட்டுள்ளன.

சோழர் காலத்தில் நாட்டாட்சி முறையில்-கிராம தலசுய ஆட்சி முறையில் கிராம நிருவாகத்துக்குச் சிறப்பிடம் கொடுப்பட்டது. கல்வெட்டுக்களின் காலம் கி.பி.ஏழாம் நூற்றாண்டு ஆகும். அக்கல்வெட்டுக்களில் 'ஊரவை' பற்றியும் ஊரவையினரின் பணிகள் பற்றியும் செய்திகள் காணப்படுகின்றன.

இலக்கியச் சான்றுகளைக் கொண்டும் கல்வெட்டுச் சான்றுகளைக் கொண்டும் நோக்கும் பொழுது '(கிராம) சிற்றூர் வழக்கு மன்றங்கள்', மன்றம், அவை, அவையம், அறங்கூர்அவையம், அறக்களம் முதலான பல்வேறு பெயர்களில் சங்ககாலம் முதல் சோழர்காலம் வரையில் தொடர்ந்து இருந்து வந்துள்ளமையை அறியலாம். சிற்றூர் வழக்கு மன்றங்கள், நீதி மன்றங்கள் பெருகியுள்ள தற்காலத்திலும் மக்களின் நம்பிக்கையைப் பெற்றிருப்பது சுட்டத்தக்கதாகும்.

பாண்டியர் நிருவாகத்தில் 'ஊரச்சபையார்', 'நாட்டதிகாரிகள்', 'கோயில் கண்காணிப்பாளர்' ஆகியோர் முக்கியப் பங்கு பெற்றிருந்தனர். நாட்டதிகாரிகள் சிற்றூர் வழக்குகளைத் தீர்த்து வைத்துள்ளனர். சிற்றூர்கள் நாட்டதிகாரிகளின் மேற்பார்வையிலும், பேரூரான நகரங்கள் மன்னனது நேரடிக் கண்காணிப்பிலும் இருந்தன. ஊர்ச்சபைகள் 'ஊர்வாரியத்தினர்' உரிமை வழக்கு, குற்ற வழக்கு ஆகிய இருவகை வழக்குகளையும் தீர்த்து வைக்கவும், குற்றவாளிகளைத் தண்டிக்கவும் முழு அதிகாரம் பெற்றிருந்தனர். அவர்களால் தீர்க்க முடியாத வழக்குகளும் தீர்த்த வழக்குகளின் மேல்முறையீடுகளும் மன்னனிடம் கொண்டு செல்லப்பட்டன. தலைநகரிலிருந்த அறங்கூர் அவையத்தில் பொதுவகையான வழக்குகளை அவ் அவையத்தாரே தீர்த்து வைத்துள்ளனர். பாண்டிய மன்னன் இம்மன்றத்திலிருந்து நீதி வழங்கியுள்ளான்.

பல்லவர் காலத்தில் 'கோட்டம்', 'நாடு', 'ஊர்' என்னும் நாட்டுப்பிரிவுகள் காணப்பட்டன. பல்லவப் பெரு நகரங்களில் அறங்கூர் அவையங்கள் இருந்தன. அவை 'அதிகரணங்கள்' எனப் பெயர் பெற்றன. சிற்றூர்களில் சான்றோர் அறங்கூர் அவையத் தலைவர்களாக இருந்தனர். பல்லவ மன்னனே நீதியின் தலைவனாகச் செயல்பட்டான். கோட்டங்களிலும் சிற்றூர்களிலும் நீதி மன்றங்கள் இயங்கி வந்தன. காஞ்சிபுரத்தில் இருந்த நீதிமன்றம் 'அதிகரணம்' என்று பெயர் பெற்றது. கோட்ட நீதிமன்றங்கள் விதித்த தண்டனை 'அதிகரண தண்டம்' என்றும், சிற்றூர் நீதி மன்றங்கள் விதித்த தண்டனை 'கரண தண்டம்' என்றும் அழைக்கப்பட்டன. 'நாடு' என்னும் பகுதிக்கு உரிய சான்றோர் 'நாட்டார்' எனப்பட்டார். ஊரை ஆண்ட அவையினர் 'ஆள்வார்' எனப்பட்டார். ஊர் அவையினர் 'பெருமக்கள்' எனப்பட்டனர். அவர்கள் சிற்றூர் வழக்கு மன்றங்களில் நீதி வழங்கி வந்தனர்.

விசய நகர மன்னர் ஆட்சியில் தல சுய ஆட்சி நிறுவனங்களாகிய சிற்றூர் சபைகளும் நாட்டவைகளும் செயலிழந்தன. மகாமண்டலாதிபதியும், மண்டலாதிபதிகளும் 'படைமானிய நிருவாக முறையை'ப் புகுத்தினர். இம்முறைப்படி பிரதானிகள், தனநாயகர்கள், பத்திரதாரர்கள் ஆகியோர் நாட்டை நிருவகிக்கும் 'நாயங்காரமுறை' ஏற்படுத்தப்பட்டது. சிற்றூர்களில் 'ஆயகர் முறை' ஏற்பட்டது. 'போட்டையில்' என்னும் பணியாளர் சிற்றூர்களில் நீதி வழங்கினார். கர்ணம், தலையாரி, தோட்டி, நீர்கந்தி ஆகிய பணியாட்கள் சிற்றூர்களின் காப்பாளர்களாக விளங்கினர். சிற்றூர் வழக்கு மன்றமாகிய 'சாவடி' அரசு அலுவலகமாகச் செயல்பட்டது.

நாயக்க மன்னர்கள், விசய நகர ஆட்சியின் 'படைமானிய முறையை'ப் பின்பற்றித் தமிழகத்தில் 'பாளையப்பட்டு முறையை' அறிமுகப்படுத்தினர். அம்முறைப்படி, நாயக்க மன்னர்கள் நாட்டைச் சிறுசிறு பாளையங்களாகப் பிரித்து அவற்றைப் பாளையக்காரர்களிடம் ஒப்படைத்தனர். பாளையங்கள் மீது பாளையக்காரர்களுக்கு முழு நிருவாக உரிமையும் வழங்கப்பட்டது. நாட்டில் அமைதி காப்பதும், நீதி வழங்குவதும் பாளையக்காரர்களின் முக்கியப் பணிகளாகும். தலை நகரில் மன்னனும், தளவாயும், பிரதானியும் நீதி வழங்கினர்.

ஆங்கில நீதிமன்ற மரபுகளையும், பல சட்டங்களையும், சட்ட நடைமுறைகளையும், வழக்குரைஞர்களின் வாதங்களையும் அடிப்படையாகக் கொண்ட இக்கால நீதிமன்றங்களின் தோற்றத்திற்கும், அதன் வளர்ச்சிக்கும், ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் குழுமத்தினர் வித்திட்டனர். அவர்கள் உரோமானியச் சட்ட நடைமுறையைத் தழுவிட நீதிமன்றங்களையும், நீதி நிருவாகத்தையும் ஏற்படுத்திச் செயல்படுத்தினர்.

## குறிப்புகள்

1. Tamil-English Dictionary, p.646.
2. Tamil Lexicon, Vol.IV, p.2414.
3. பெ. தங்கராஜ், பள்ளர் யார்? பள்ளர் வரலாறு, ப.65.
4. இ.லி. ஆந்திரெயெவ், ஏங்கெல்சின் குடும்பம், தனிச்சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம், ப.238.
5. ஆர். ராமானுஜாசாரி, பிளேட்டோவின் குடியரசு, ப.75.
6. இ.லி. ஆந்திரெயெவ், மு.நூ., ப.239.
7. தொல்.பொருள். புறம்: 17:17.
8. திருமுருகு:426.
9. நச்சி (உரை.ஆ.), மலைபடுகடாம், 492.
10. மதுரைக்:161, அவை:அம்பலம்.
11. புறம்: 390.
12. நச்சி (உரை.ஆ.), பட்டினப்பாலை, 246-289.
13. புறம்: 375.
14. புறம்: 76, 79, 371.
15. அகம்: 77.
16. K.A.N. Sastri, Stuides in Chola History and Administration, p.76.
17. குறள்: 728.
18. பழமொழி நானூறு, 206.
19. நாலடி: 96.
20. குறள்: 773.
21. நாலடி: 24.1, 384.2.
22. சிலப்: xxvi: 38-41.

23. மணிமே: I: 17.

24. பெருங்கதை: II: 5-6.

25. சேக்கிழார், பெரியபுராணம், தடுத்தாட் கொண்ட புராணம், செ:48:2.

26. ந. சுப்ரமண்யன், சங்ககால வாழ்வியல் (சங்கத் தமிழரின் அரசு முறையும் சமூக வாழ்வும்), ப.135.

27. V.R. Ramachandra Dikshiter, Studies in Tamil Literature and History, p.17.

28. குறுந்:262, பல வீடுகள் சேர்ந்தது ஒரு சேரியாகும்.

29. மதுரைக்:161, அவை:அம்பலம்.

30. திருமுருகு:426. க.அ. நீலகண்ட சாஸ்திரி மன்றத்தை ஒரு கூடம் என்கிறார். K.A. Nilakanta Sastri, Cholas, p.70.

31. மலைபடு:492; நச்சி., உரை.

32. புறம்:387.

33. மதுரைக்:615.

34. பெரியாழ்வார் திருமொழி, 11-2-2-12.

35. புறம்:70.11, 1-2.

36. புறம்:76.11, 4-6.

37. தமிழ்ப்பேரகராதி, தொகுதி-V, ப.3127.

38. செ. இராசு, செந்தமிழ் வேளிர் எம்.ஜி.ஆர்-ஒரு வரலாற்று ஆய்வு, ப.28.

39. சேக்கிழார், பெரியபுராணம், தடுத்தாட் கொண்ட புராணம், செ:48:2.

40. அ. முத்துசாமி, சங்க இலக்கியத்தில் ஆயர், ப.23.

41. ந. சுப்ரமணியன், தமிழக வரலாறு (கி.பி.1565 வரை), ப.220.

42. புறம்: 390.

43. பட்டினப்: 246-289.

44. சிலப்: 11.

45. புறம்: 389.

46. கலி:100; நச்சி.உரை; குறுந்:64.

47. நாலடி: 96.

48. பட்டினப்:246-249.

49. புறம்: 375.

50. புறம்: 76, 79, 371.

51. K.A. Nilakanta Sastri, Cholas, p.71.

52. சிலப்: viii: 84.

53. V.R. Ramachandra Dikshiter, Op.cit., p.222.

54. புறம்: உ.வே.சா. முகவுரை.

55. பெரும்பாண்: 254.

56. சிலப்: III: 111.

57. புறம்: 324.

58. சிலப்: xxvi: 38-41.

59. மணிமே: I: 17.

60. மதுரைக்:508-510.

61. பெருங்கதை: II: 5-6.

62. கே.கே. பிள்ளை, தமிழக வரலாறு-மக்களும் பண்பாடும், ப.165.

63. V. Kanakasabhai, The Tamils Eighteen Hundred Years Ago, p.109.

64. S. Krishnaswami Iyengar, Evolution of Hindu Administrative Institutions in South India, p.19.

65. Ibid, p.20.

66. Ibid, p.22.

67. V.R. Ramachandra Dikshiter, Op.cit., p.196.

68. V.A. Smith, Early History of India, p.442.

69. மதுரைக்:510.

70. "செம்மை சான்ற காவிதி மாக்களும்", மதுரைக்:499.

71. ந. சுப்ரமண்யன், சங்ககால வாழ்வியல், ப.112.

72. S. Krishnaswami, Iyengar, Beginnings of South India History, p.139.

73. V.A. Smith, Early History of India, p.71.

74. தொல்.சொல்.நூ.57, நச்சி.உரை.

75. சிலம்.V:157, அடியார்க்கு நல்லார் உரை.

76. ந. சுப்ரமண்யன், மு.நூ., ப.113.

கே.கே. பிள்ளை, தமிழக வரலாறு-மக்களும் பண்பாடும், ப.165.

77. மதுரைக்:469-470.

78. ந.க. மங்கள முருகேசன், தமிழக ஆட்சிமுறை, ப.61.

79. இரா. தேவ ஆசீர்வாதம், மூவேந்தர் யார்?, ப.227.

80. ந.மு. வேங்கடசாமி நாட்டார், கள்ளர் சரித்திரம், ப.18.

81. "Caste Titles and Names are However of Recent Origin and Little can be Inferred from them Whatever their Meaning may be Shown to be"

- W. Francis, Census of India 1901, Vol.XB, Part-I Report, p.78.

82. தொல்.சொல்., கிளவி.41.

83. ஞா. தேவநேயப்பாவாணர், செந்தமிழ் சொற்பிறப்பியல், பேரகர முதலி, ப.248.

84. புறம்: 183.

85. அ. முத்துசாமி, சங்க இலக்கியத்தில் ஆயர், ப.17.

86. தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு, தமிழ் நாட்டு வரலாறு, ப.586.

87. மேலது.

88. புறம்: 4:3, கலி:140:22.

89. சிலப்: 30:93-94.

90. குறள்: 728.

91. புறம்: 266:8-9.

92. மலைபடு:77.

93. மதுரைக்:61, 404.

94. அகம்: 256.15-20.

95. தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு, தமிழ் நாட்டு வரலாறு, பக்.587-588.

96. கு. சுந்தரமூர்த்தி,(பதி.ஆ.), தொல்காப்பியம் பொருளதிகாரம்-அகத்திணையியல் புறத்திணையியல் (நச்சினார்க்கினியர் உரைக்குறிப்புக்களுடன்), ப.237.

97. தொல்.பொருள். புறம்: 17:17.

98. மேலது, நச்சி.உரை.

99. குறள்.773: நாலடி.24.1, 384.2.

100. R. Kasirajan, "Legar Aspects in Perunkatai", The Legal Heritage of the Tamils, National Seminar Paper, 1994.

101. மா. இராசமாணிக்கம் பிள்ளை, பழமொழி நானூறு, ப.6.

102. வேங்கட கிருஷ்ணய்யங்கார், உரைநடைச் சிலம்பு, ப.206.

103. அ. சுவாமிநாதன், தமிழ் நாட்டு வரலாறு, ப.156.

104. மு. ஆரோக்கியசாமி, தென்னிந்திய வரலாறு, பக்.182-183.

105. ந. சுப்ரமண்யன், சங்ககால வாழ்வியல், ப.217.

106. V. Kanakasabhai, Op.Cit., p.111.

107. சேக்கிழார், திருத்தொண்டர் புராணம்-மனுநீதி கண்ட புராணம், பா.எண்.27, சிலப்: xx, 53-55.

108. சிலப்: xx:10.

109. சிலப்: xx: 24-29.

110. V. Kanakasabhai, Op.Cit., p.111.

111. சிலப்: xx:45. மன்னனை நேரில் காணவிடாமல் தடுக்கும் வாயிற் காவலரையும் அரண்மனைக் காவலரையும் மீறி மன்னனுக்கு வழக்கின் நிகழ்ச்சியைத் தெரிவிக்க உதவுவதே இந்த ஆராய்ச்சி மணியன் நோக்கமாக இருந்திருக்க வேண்டும்.

112. பழமொழி நானூறு, 24.

113. சிலம்.V., அடியார்க்கு நல்லார் உரை.

93. மதுரைக்:61, 404.

94. அகம்: 256.15-20.

95. தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு, தமிழ் நாட்டு வரலாறு, பக்.587-588.

96. கு. சுந்தரமூர்த்தி,(பதி.ஆ.), தொல்காப்பியம் பொருளதிகாரம்-அகத்திணையியல் புறத்திணையியல் (நச்சினார்க்கினியர் உரைக்குறிப்புக்களுடன்), ப.237.

97. தொல்.பொருள். புறம்: 17:17.

98. மேலது, நச்சி.உரை.

99. குறள்.773: நாலடி.24.1, 384.2.

100. R. Kasirajan, "Legar Aspects in Perunkatai", The Legal Heritage of the Tamils, National Seminar Paper, 1994.

101. மா. இராசமாணிக்கம் பிள்ளை, பழமொழி நானூறு, ப.6.

102. வேங்கட கிருஷ்ணய்யங்கார், உரைநடைச் சிலம்பு, ப.206.

103. அ. சுவாமிநாதன், தமிழ் நாட்டு வரலாறு, ப.156.

104. மு. ஆரோக்கியசாமி, தென்னிந்திய வரலாறு, பக்.182-183.

105. ந. சுப்ரமண்யன், சங்ககால வாழ்வியல், ப.217.

106. V. Kanakasabhai, Op.Cit., p.111.

107. சேக்கிழார், திருத்தொண்டர் புராணம்-மனுநீதி கண்ட புராணம், பா.எண்.27, சிலப்: xx, 53-55.

108. சிலப்: xx:10.

109. சிலப்: xx: 24-29.

110. V. Kanakasabhai, Op.Cit., p.111.

111. சிலப்: xx:45. மன்னனை நேரில் காணவிடாமல் தடுக்கும் வாயிற் காவலரையும் அரண்மனைக் காவலரையும் மீறி மன்னனுக்கு வழக்கின் நிகழ்ச்சியைத் தெரிவிக்க உதவுவதே இந்த ஆராய்ச்சி மணியன் நோக்கமாக இருந்திருக்க வேண்டும்.

112. பழமொழி நானூறு, 24.

113. சிலம்.V., அடியார்க்கு நல்லார் உரை.

138. புறம்:151.

139. குறுந்:292.

140. பழமொழி நானூறு, 93.

141. மேலது.

142. T.V. Mahalingam, South Indian Polity, p.203.

143. சிலம்:xii. வேட்டுவரி-'துடியொடுசிறுபறை'-எனத் தொடங்கும் பாடலில் 'அடிதொட்டுச் சூளுறல்' என்னும் தொடர் வருகின்றது.

144. குறுந்:184; கலி:34, 10.

145. சிலம்:xv, 78.

146. சிறுபஞ்ச:9, "கொடுங்கரி போவான் நாச்சாம்."

147. நற்:196.

148. குறள்:55ஆம் அதிகாரம்.

149. புறம்:34.

150. குறள்:110.

151. நாலடி:81.

152. புறம்:47.

153. பெருங்: 1:40; 371-373.

154. சேக்கிழார், பெரியபுராணம், தடுத்தாட் கொண்ட புராணம், இப்புராணத்தின் ஆசிரியரான சேக்கிழார் இரண்டாம் குலோத்துங்க சோழன் காலத்தவர்.

155. T.V. Mahalingam, Op.Cit., pp.215-216.

156. மணி.xix.42-43.

157. புறம்:46.

158. ந. சுப்ரமண்யன், சங்ககால வாழ்வியல் (மேற்கோளாக ஆளப்பட்டது), ப.237.

159. V.R. Ramachandra Dikshiter, Op.cit., p.221.

160. பெரும்பாண்: 443-444.

161. புறம்:331.

162. அகம்:256:15-21.

163. கே.கே. பிள்ளை, தமிழக வரலாறு-மக்களும் பண்பாடும், ப.301.

164. மேலது, பக்.301-302.

165. K.A. Nilakanta Sastri, A History of South India, pp.202-204.

166. Ibid, p.205.

167. Ibid, pp.205-206.

168. EP.Ind.xxii.No.3.

169. கே.கே. பிள்ளை, தமிழக வரலாறு-மக்களும் பண்பாடும், பக்.303-304.

170. ஞா. தேவநேயன், பழந்தமிழாட்சி, ப.116.

171. ஞா. தேவநேயன், மு.நூ., பக்.116-117.

172. மேலது, ப.117.

173. மேலது, ப.72.

174. தேவநேயபாவாணர், பழந்தமிழர் அரசியல் கோட்பாடுகள், ப.83.

175. தேவநேயபாவாணர், மு.நூ., ப.84.

176. ஞா. தேவநேயன், மு.நூ., ப72.

177. பரஞ்சோதி முனிவர், திருவிளையாடற் புராணம், மாமனாக வந்து வழக்குரைத்தப் படலம், பா.எண்.28, 30, 31.

178. ஞா. தேவநேயன், மு.நூ., ப.76.

179. மா. இராசமாணிக்கம் பிள்ளை, பல்லவர் வரலாறு, ப.224.

180. C.K. Subramania Mudaliar's "Sekkilar" (Madras University Lectures), pp.68-72.

181. C. Minakshi's Administration and Social Life Under the Pallavas, pp.53-55.

182. R. Gopalan, Pallavas of Kanchi, pp.154-156.

183. K.A.N. Sastry, History of South India, p.254.

184. T.V. Mahalingam, Administration and Social Life Under Vijayanagar, Part-II, p.225.

185. Ibid, p.191.

186. வே.தி. செல்லம், தமிழக வரலாறும் பண்பாடும், ப.381.

187. S. Sathiyanatha Iyer, History of Nayaks of Madura, p.241.

188. வே.தி. செல்லம், மு.நூ., ப382.

189. மேலது, பக்.460-461.

190. மேலது, ப.462.

191. சிலப்.22:8.

192. சேக்கிழார், பெரியபுராணம், தடுத்தாட் கொண்ட புராணம், பா.எண்.469; சண்டேசுவரர் புராணம், பா.எண்.40-43.

193. மா. இராசமாணிக்கம் பிள்ளை, தமிழக ஆட்சி, ப.82.

194. T.V. Mahalingam, South Indian Polity, p.208.

195. 380 of 1914; 69 of 1924; S.I. Polity, p.214.

196. 570 of 1920; A.R.E. 1921, Para 40.

197. 413 of 1913; A.R.E. 1914, Para 26.

198. A.R.E. 1899, Para 63.

199. Inscription of Pudukkottai State 683.

200. 112 of 1911; 246 of 1917; 506 of 1918; 279 of 1927.

201. Inscription of Pudukkottai State, 691.

202. Ibid, 867.

203. 407 of 1921, A.R.E. 1921.

204. 240 of 1912, A.R.E.1912.

205. T.V. Mahalingam, South Indian Polity, pp.244-247.

206. S.J.J. VI. No.295.

207. ஆ. இராமகிருஷ்ணன், தமிழக வரலாறும் பண்பாடும், ப.228.

# *இயல்–2*

# சிவகங்கை மாவட்டக் கிராம வழக்கு மன்றப் பஞ்சாயத்துக்களின் வகைகள்

# இயல்-2

# சிவகங்கை மாவட்டக் கிராம வழக்கு மன்றப் பஞ்சாயத்துக்களின் வகைகள்

சிவகங்கை மாவட்டக் கிராம மக்களிடையே ஏற்படும் பல்வேறு வழக்குச் சிக்கல்களை இம்மாவட்டக் கிராமங்களிலுள்ள பஞ்சாயத்து அமைப்புக்கள் நன்கு ஆராய்ந்து அலசிப் பார்த்து அவற்றிற்குத் தக்க தீர்ப்புகளை வழங்கி வருகின்றன. இம்மாவட்டக் கிராம வழக்கு மன்றப் பஞ்சாயத்துக்களின் வகைகளையும் அவற்றின் அமைப்பு முறைகளையும் விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும். இவ் ஆய்விற்குக் களமாக அமைந்த இம்மாவட்டக் கிராமங்களில் நிகழ்ந்து வருகின்ற கிராம வழக்கு மன்றங்களின் அமைப்புக்கள் (Structure) அக்கிராமங்களில் வாழும் பல்வேறு இனமக்களின் மக்கள் தொகை, அதன் காரணமாக அவர்கள் அக்கிராமங்களில் பெற்று வருகின்ற செல்வாக்குப் போன்றவற்றைப் பொறுத்ததாகவே அமைகின்றன.

## அமைப்பு விளக்கம்

வடிவமும் அமைப்பும் (Form and Structure)என்ற சொல் இலக்கியத் திறனாய்வில் அடிக்கடி விவாதிக்கப்படுகின்ற சொல்லாகும். இச்சொல்லிற்குப் பல்வேறு விதமான பொருள்களும் கொடுக்கப்படுகின்றன. இந்தச் சொல்லைப் பெரும்பாலும் குறுகிய பொருளில் பயன்படுத்தப்படும் போது அது ஓர் இலக்கிய வகையைத் தன்னுணர்ச்சி பாடல், காப்பிய வகைகள் போன்றவற்றையோ அல்லது எதுகை, மோனை, வரிகள் அமைக்கப்படும் பாங்கினையோ (செய்யுள், பாடல், பத்தி போன்றவற்றினையோ) குறிக்கும். ஒரு நூலின் வடிவம் என்பது அதனை உருவாக்கும் அடிப்படை விதியாகும்.

வடிவம் என்பது ஒரு நூலின் நுவல் பொருளை (Subject Matter) இட்டு வைக்கும் வெறும் கொள்கலம் அன்று என ஆய்வாளர்கள் அனைவரும் ஒப்புக் கொள்கின்றனர்.[1] பதினெட்டாம் நூற்றாண்டைச் சார்ந்த பல இலக்கியத் திறனாய்வாளர்கள் ஒரு நூலின் வடிவம் என்பது அதனுடைய பல உறுப்புகளின் கூட்டுத்தொகுதியாகும் என்று கருதினர். இதனுடைய அடிப்படைக் கொள்கையினை மரபு ஒழுங்கு (Decorum) என்றழைக்கலாம். ஏனெனில் அரிஸ்டாடில் காலத்திலிருந்தே ஓர் இலக்கிய நூலின் கட்டமைப்பு மனித உடலின் அமைப்பைப் போல் ஒழுங்கு முறைக்கு உள்ளடக்கியது என்றே நம்பப்பட்டு வருகின்றது.[2] இலக்கிய வடிவின் கோட்பாட்டை மிகச் சிறந்தமுறையில் மெய்ப்பொருள் அடிப்படையில் விளக்கியவர் பத்தொன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஆங்கிலக் கவிஞரும் இலக்கியத் திறனாய்வாளருமான கோல்ரிட்ஜ் ஆவார். உருவம் அல்லது கட்டமைப்பினை அவர் பின்வரும் இரண்டு வகையாகப் பிரித்து விளக்கியுள்ளார். அவை,

1. செய்கை அமைப்பு
2. இயற்கை அமைப்பு

என்பனவாகும். களி மண்ணில் ஓர் உருவத்தை உண்டாக்குவதற்கு அதனை ஓர் அச்சில் (Mould) வார்க்கின்றோம். களி மண்ணால் ஆன உருவம் களி மண்ணிலிருந்து வந்தது அன்று, அது ஏற்கனவே அச்சில் உள்ள உருவம் ஆகும். ஆதலால் களி மண்ணின் உருவம் என்பது ஒரு செயற்கை அமைப்பாகும். கோல்ரிட்ஜின் கூற்றுப்படி இயற்கை அமைப்பு செயற்கை அமைப்பிலிருந்து முற்றிலும் மாறுபட்டதாகும். அவர் கவிதை இயற்கை அமைப்பினைக் கொண்டது எனக் கூறுகின்றார். ஏனென்றால் ஒரு கவிதையின் உருவமே அதன் உயிர் நாடியாகும். அவ்வுருவத்திலிருந்துதான் கவிதை அங்கம் அங்கமாகப் பிறக்கின்றது.

ஒரு கவிதையின் உள்ளமைப்பு வெளி அமைப்பு ஒன்றே ஆகும். வெளி அமைப்பு உள்ளமைப்பைப் பிரதிலிக்கின்றது. மேலும் கோல்ரிட்ஜ் ஒரு நல்ல கவிதையை நன்றாக வளரும் செடிக்கு ஒப்பிடுகின்றார். தன்னகத்தே உள்ள ஒரு சக்தியால் உந்தப்பட்டுச் செடி வளர்வது போலக் கவிதையும் வளர்கின்றது. ஆதலினால் செடியின் அமைப்பினைப் போல், கவிதையும் கற்பனைச் சக்தியின் மூலம் வளர்கின்றது. எனவே கவிதையின் உருவம் அதன் உயிர்ப்பின் ஒருமையே (Organic Unity) ஆகும்.[3]

வடிவம் (Form), கட்டமைப்பு (Structure)என்ற இரண்டு சொற்களையும் அமெரிக்கப் புதுத்திறனாய்வாளர் குழு ஒரே பொருளில் பயன்படுத்திய போதும், 'கட்டமைப்பு' என்ற சொல்லை அவர்கள் மிகுதியும் விரும்பிக் கையாளுகின்றனர். இவர்களின் திறனாய்வுக் கொள்கைப்படி கட்டமைப்பு என்பது ஒரு கவிதையின் வெளி அமைப்பைக் குறிப்பதன்று. ஒரு கவிதையில் பயன்படுத்தப்படும் பலதரப்பட்ட சொற்களும்,உருவங்களும் (Images) முரண்குறிப்பு (Irony) மூலமும், முரணுரை (Paradox) மூலமும் ஓர் இழுவிசையினை (Tension) உண்டாக்கி, அந்த இழுவிசையே கவிதையில் ஒரு சமநிலையை ஏற்படுத்துகின்றது. ஒரு கவிதை கற்பனை நயத்தினாலும், பொருள் மயக்கத்தினாலும் பல பொருள்களைப் பல்வேறு படிநிலைகளில் கொண்டுள்ளது. ஆனால் இந்தப் படிநிலைகள் எல்லாம் ஒன்றுக்கொன்று இணைந்து ஒரு முழு அமைப்பாகவும் தோன்றுவதற்குக் காரணம் இழுவிசை மூலம் ஏற்படும் சமநிலையே ஆகும். ஆகையால், ஒரு கவிதையில் முழுப்பொருண்மைக்கு (Totality of Meaning) இந்தச் சமநிலையே அடிப்படை என்று புதுத்திறனாய்வாளர்கள் கருதுகின்றார்கள்.[4] மூலப்படிவ (Archetype) இலக்கியத் திறனாய்வாளர்கள் ஓர் இலக்கிய நூலின் அமைப்பு புராணம், மதச் சடங்கு, கனவு

ஆகியனவற்றில் மீண்டும் மீண்டும் தோன்றும் அடிப்படையான மனித அனுபவக் கூற்றிலிருந்தே வருவதாகக் குறிப்பிடுகின்றனர்.

'வடிவம்' பற்றிய அரிஸ்டாட்டிலின் கருத்திற்குப் புத்துயிர் கொடுத்து அதனை விரிவுபடுத்தியவர் சிக்காக்கோ குழுவின் தலைவரான ஆர்.எஸ்.கிரேன் (R.S.Crane) என்பவராவார். அவர் வடிவம், கட்டமைப்பு இவற்றினிடையேயுள்ள வேறுபாட்டை நுட்பமாக உணர்த்தியுள்ளார். ஒவ்வொரு இலக்கிய நூலும் வாசகர்களிடையே ஒவ்வொரு வித உணர்ச்சியை ஏற்படுத்துகின்றது. இந்த உணர்ச்சி ஆற்றலே அவ்விலக்கிய நூலினை உருவாக்கும் கோட்பாடாகும். உருவம் பற்றிய இக்கோட்பாடு ஒரு இலக்கிய நூலின் அமைப்பைக் கட்டுப்படுத்தி இணைக்கின்றது. அதன் எல்லாப் பகுதிகளையும் இணைத்துச் சீர்படுத்திப் பொருள்படும் வகையில் அமைத்து ஒரு முழுமையான எழில்சேர் படைப்பாகச் செய்கின்றது. இயற்கையோ, செயற்கையோ, வடிவமானது கட்டமைப்பு உடையதாகவோ அல்லது இழையோட்டத்துடனோ (Texture) இருக்க வேண்டும். முன்னது, விரிவானது, காரணம் அது புற அமைப்பாகும். பின்னது குறுகியதாகும். அது கலைஞனின் மனநோக்கினால் உருவாகும் அக அமைப்பாகும். கட்டமைப்பு என்பது அதன் அடிப்படைப் பொருளில் ஒரு நூலின் எலும்புக் கூடாகும். இழையோட்டம் என்பது அதன் அடிப்படைப் பொருளில் எலும்பின் போர்வையாக அமையும் தோல் ஆகும்.[5]

கட்டமைப்பு என்பது 'ஒழுங்குபடுத்துதல்' என்பதால், நூலின் அடக்கத்தைக் காலத்திற்குக் கட்டுப்படும்படி சீர்படுத்துவதையும் அது குறிக்கும். எந்த ஒரு இலக்கியப் படைப்பும் கால, இட, வரம்புகளுக்குக் கட்டுப்பட்டதேயாகும். இலக்கியத்தின் கட்டமைப்புப் பற்றிய இத்தகைய விளக்கங்கள் அமைப்புச் சார்ந்த அனைத்திற்கும் பொருந்தக் கூடியதாகும்.

அமைப்பு (Structure) அல்லது வடிவம் (Form) என்பது தனிப்பட்ட ஒன்றல்ல. அது ஒன்றுக்கு மேற்பட்ட பல கூறுகளின் (Elements) ஒட்டுமொத்தமாகும். பல கூறுகள் சேர்ந்து செயல்படும் கூட்டு அமைப்பில் ஏதேனும் ஒரு கூறு சரிவர இயங்காமல் போனால் அது ஒட்டுமொத்த அமைப்பையே பாதிக்கும்.[6] என்றும் வெ.சாமிநாதசர்மா அமைப்பைப் பற்றிய விளக்கத்தினைத் தந்துள்ளார். அமைப்புப் பற்றிப் பல்வேறு அறிஞர்கள் பல்வேறு விளக்கங்களைத் தந்துள்ளனர்.

ஒன்றில் பல உறுப்புக்கள் இருக்கும். அவை தமக்குள் ஒன்றோடொன்று எவ்வாறு முழுமையோடு இணைகின்றன? என்பதே அமைப்பியல் என்பார் விளாடிமிர் பிராஃப்.[7]

அமைப்பு என்பது ஒரு குறிப்பிட்ட அமைப்பின் இயல்புகளை வெளிக்காட்டுவது என்றும், அது பலவற்றின் சேர்க்கையால் உருவானது என்றும் கிளாடு லெவிஸ்திராஸ் என்னும் அறிஞர் குறிப்பிடுகின்றார்.[8] சிவகங்கை மாவட்டக் கிராம வழக்கு மன்றங்களின் பஞ்சாயத்து வகைகளும் அவற்றின் அமைப்பு முறைகளும் இந்த அமைப்புப் பற்றிய விதிகளுக்கும் விளக்கங்களுக்கும் உட்பட்டதேயாகும்.

**கிராம வழக்கு மன்றங்களின் பஞ்சாயத்து வகைகள்**

கிராம வழக்கு மன்றங்களின் பஞ்சாயத்தைப் பின்வரும் நான்கு வகைகளாகப் பிரித்துக் கொள்ளலாம். அவை,

1. கிராமப் பஞ்சாயத்து
2. ஊர்ப் பஞ்சாயத்து
3. சாதிப் பஞ்சாயத்து
4. குடும்பப் பஞ்சாயத்து

என்பனவாகும்.

1. கிராமப் பஞ்சாயத்து

*கிராமப் பஞ்சாயத்து என்பது ஒன்றுக்கும் மேற்பட்ட சிற்றூர்களைக் கொண்டு விளங்கும் கட்டமைப்புடைய ஒன்றாகும். அது கிராமங்கள் ஏற்படுகின்ற ஒட்டு மொத்தமான சிக்கல்களையும் தீர்த்துக் கொள்வதற்காக பல சிற்றூர்களிலும் உள்ள பஞ்சாயத்துக்கள் சேர்ந்து ஏற்படுத்திக் கொள்கின்ற பஞ்சாயத்து அமைப்பு முறையாகும். ஒவ்வொரு தலைக் கிராமத்திலும் ஒன்றுக்கும் மேற்பட்ட சிற்றூர்கள் (குக்கிராமங்கள்) அடங்கியுள்ளன. ஒவ்வொரு கிராமத்திலும் பல்வேறு இனத்தவர்களும் வாழ்ந்து வருகின்றனர். அத்தலைமைக் கிராமத்திலுள்ள அனைத்துச் சிற்றூர்களிலும் ஏற்படுகின்ற அடிப்படையான பொதுச் சிக்கல்களையும் பிரச்சனைகளையும் ஆராய்ந்து தீர்த்து வைக்கும் அமைப்பு முறையே 'கிராம பஞ்சாயத்து' ஆகும். சிவகங்கை மாவட்டத்தில் பெரும்பான்மையான கிராமங்களில் கிராமப் பஞ்சாயத்து அமைப்பு முறையே பிரதானமாகக் காணப்படுகின்றன.*

*கிராமப் பஞ்சாயத்து அமைப்பில் அக்கிராமத்திற்குச் சொந்தமான அனைத்துச் சிற்றூர்களிலும் வாழும் அனைத்துச் சாதியைச் சேர்ந்தவர்களும் பங்கேற்கும் ஒரு முறையினைக் காணமுடிகின்றது. இந்த அமைப்பு முறையில் சிற்றூர்களிலுள்ள அனைத்துச் சாதித் தலைவர்களுக்கும் பெரியவர்களுக்கும் சமமான முக்கியத்துவம் கொடுக்கப்படுகின்றன. அவர்கள் கிராமப் பஞ்சாயத்து அமைப்பு முறையில் பங்கேற்றுத் தங்களுடைய கருத்துக்களைப் பரிமாற்றம் செய்து கொள்கின்றனர்.*

*இந்த அமைப்பில் கிராமத்திலுள்ள ஒட்டுமொத்தமான சிக்கல்களும் விவாதிக்கப்படுகின்றன. கிராமங்களுக்கிடையே நீர் பங்கீடு, உறவு, சாதிச் சிக்கல்கள், வாக்குச் சாவடி அமைத்தல், ஊராட்சி மன்றத் தலைவரைத் தேர்வு செய்தல், கிராமத்திற்குக் குடிநீர்த் தொட்டி அமைத்தல், ஊராட்சி மன்றக் கட்டிடம் கட்டுதல், பொது நூலகம் அமைத்தல், தொலைக்காட்சிப் பெட்டி வைக்க ஏற்பாடு செய்தல், கிராமத்திற்குச் சாலை வசதிகளை ஏற்படுத்திக் கொடுத்தல், கோயில்*

திருவிழாக்களை நடத்துதல், சிறுதொழில் கூடங்களை அமைத்தல், மின்சார வசதிகளை ஏற்படுத்திக் கொடுத்தல் முதலான பொதுப் பிரச்சனைகள் கிராமப் பஞ்சாயத்து அமைப்பு முறையில் விவாதிக்கப்படுகின்றன.

கிராமப் பஞ்சாயத்து அமைப்பு முறையில் அனைத்துச் சிற்றூர்களிலும் வாழும் மக்கள் கலந்து கொள்வதால் இது ஒரு பெரிய பஞ்சாயத்து அமைப்பு முறையாகக் கருதப்படுகின்றது. பெரிய அளவிலான விவாதங்களும் சர்ச்சைகளும் ஏற்படக் கூடிய வாய்ப்பும் உள்ளது. பெரும்பாலும் கிராமப் பஞ்சாயத்து அமைப்பு பகல் நேரங்களிலேயே கூடுகின்றது. அனைத்து ஊர்களுக்கும் பொதுவான இடமாகிய ஊராட்சி மன்ற அலுவலங்களின் முன்பாகவோ அல்லது மந்தைத் திடல்களின் முன்பாகவோ கோயில் அல்லது வேறு ஒரு பொதுவான இடத்திலேயோ கூடும்.

கிராமப் பஞ்சாயத்து அமைப்பு

கிராம அனைத்துச் சாதிப் பஞ்சாயத்து அமைப்புத் தலைவர்கள்




கிராமப்பஞ்சாயத்து அமைப்பு முறையின் எல்லைக்கு உட்பட்ட அனைத்துச் சிற்றூர்களிலும் வாழும் அனைத்துச் சாதிப் பொது மக்களும் இதன் தீர்ப்புகளுக்குக் கட்டுப்பட்டவர்கள் ஆவர். இது பொதுநலனைக் கருத்தில் கொண்டே செயல்பட்டு வருகின்றது.

2. ஊர்ப் பஞ்சாயத்து

*ஊர்ப் பஞ்சாயத்து என்பது அனைத்துச் சாதிகளைச் சார்ந்த மக்கள் வாழும் ஓர் ஊரில் ஏற்படும் ஒட்டுமொத்தமான சிக்கல்களையும், அவ் ஊரில் வாழும் பெரியவர்களும் முக்கியத் தலைவர்களும் ஒன்றுகூடி இணைந்து விவாதித்துத் தீர்ப்புக்களை வழங்கும் அமைப்பு முறையாகும்.*

*ஒவ்வொரு ஊரிலும் ஒன்றுக்கு மேற்பட்ட சாதிகளைச் சார்ந்த மக்கள் வாழ்ந்து வருகின்றனர். அவர்கள் அனைவருக்கும் சேர்த்து ஏற்படுத்தப்படுகின்ற பஞ்சாயத்து அமைப்பு முறையே 'ஊர்ப்பஞ்சாயத்து' என அழைக்கப்படுகின்றது. இதில் ஊரிலுள்ள அனைத்துச் சாதியைச் சேர்ந்த தலைவர்களும், பெரியவர்களும், பொது மக்களும், பங்கு கொள்கின்றனர். ஊர்ப் பொதுப் பிரச்சனைகள் விவாதிக்கப்படுகின்றன. இம்முறையில் சாதிகள் மேலாதிக்கம் செலுத்துகின்றன. சாதிக்கலவரங்கள் ஏற்பட வாய்ப்புள்ளதால் பங்கேற்கும் அனைவரும் விழிப்புணர்வுடனும் முன்னெச்சரிக்கையுடனும் செயல்பட்டு வருகின்றனர்.*

*ஊருக்குப் பொதுவான கோயில் அல்லது அனைத்துச் சாதியினருக்கும் பொதுவான இடமாகப் பார்த்துப் பஞ்சாயத்தைக் கூட்டுகின்றனர். சிவகங்கை மாவட்டக் கிராமங்களிலுள்ள ஊர்களில் இது நாள் வரையில் பெரும்பாலும் ஊர்ப் பஞ்சாயத்துக் கூட்டங்கள் மேல்சாதிக்காரர்களுக்குச் சொந்தமான இடங்களிலேயே நடைபெற்று வருகின்றன. தாழ்த்தப்பட்டவர்கள் வாழும் இடங்களில் பெரும்பாலும் நடைபெறுவதில்லை. இரவு நேரங்களைக் காட்டிலும் பகல் நேரங்களிலேயே அதிகமாக நடைபெற்று வருகின்றன. தீர்ப்புகள் அனைத்துச் சாதித் தலைவர்களால் ஒரு மனதாகக் கூடி இணைந்து நன்கு விவாதிக்கப்பட்டுத் தீர்மானிக்கப்படுகின்றன. தீர்ப்புகளுக்கு ஊரின் அனைத்துச் சாதிகளைச் சேர்ந்த மக்களும் கட்டுப்பட்டவர்கள் ஆவர்.*

**ஊர்ப் பஞ்சாயத்து அமைப்பு**

**அனைத்துச் சாதித் தலைவர்கள்**




3. சாதிப் பஞ்சாயத்து

*கிராமங்களிலுள்ள ஒவ்வொரு ஊரிலும் குறிப்பிட்ட ஒவ்வொரு சாதியினரும் தங்களுக்குள் ஏற்படுகின்ற சிக்கல்களைத் தீர்த்துக் கொள்வதற்காகத் தங்கள் சாதிக்குள்ளேயே ஏற்படுத்திக் கொள்கின்ற அமைப்பு முறையாகும்.*

*ஊர்களில் வாழும் ஒன்றுக்கும் மேற்பட்ட சாதிகளைச் சேர்ந்தவர்களும் தங்களுக்குள் ஏற்படுகின்ற பல்வேறு சிக்கல்களைத் தீர்த்துக் கொள்வதற்காகவும், சாதிகளின் நன்மைகளைப் பேணுவதற்காகவும் தங்கள் தங்கள் சாதிகளுக்குள்ளேயே ஏற்படுத்திக் கொண்டிருக்கும் பஞ்சாயத்து அமைப்பு முறையே சாதிப்பஞ்சாயத்து அமைப்பு முறையாகும்.*

**சாதியம்**

*இந்தியாவில் சாதியென்பது சமயத் தொடர்பானது. அது நாடு முழுவதும் தன் ஆதிக்கத்தை நிலைநாட்டி வந்துள்ளது. சாதி, ஒவ்வொருவருக்கும் உரிய 'தர்மம்' என்றும் அது சமயத்தோடும் கர்ம வினையோடும் இரண்டறக் கலந்து கிடக்கின்றது என்றும் நெடுங்காலமாக மக்களால் நம்பப்பட்டு வருகின்றது.*

இறைவனால் படைக்கப்பட்டதாகக் கூறப்படும் நான்கு வர்ணாசிரமங்களே சாதிப்பிரிவுகளுக்கு அடிப்படை என்றும் 'புருஷார்த்தம்' கூறுகின்றது.[9] இந்தியாவில் நடைபெறும் மரபுத் திருமணங்கள் சாதியின் அழுத்தத்தைப் புலப்படுத்துகின்றன.[10] இந்தியச் சமுதாயத்தில் தங்களுக்குள் கொள்வினை, கொடுப்பினைகளை ஏற்படுத்திக் கொள்ளும் அமைப்பே சாதியாகும். ஒரு குழு மற்றொரு குழுவிலிருந்து மாறுபட்டுத் தனக்கென்று சில தனித்த பின்னணிகளைக் கொண்டு இயங்குகின்றது.[11] இக்கூற்று சாதியை அடிப்படையாகக் கொண்டு இயங்கும் கிராமச் சமுதாய அமைப்பிற்கும் ஏற்புடையதாகும்.

'சாதி' என்ற சொல்லுக்கு 'குலம்' என்றும் Caste, class, race என்றும், Attribute common to a class ஓரினப் பொருள்களின் பொதுவாகிய தன்மை என்றும், சாதியரும் பந்துக்களும் Fellow members of a caste relatives[12] என்றும் தமிழ் அகராதி விளக்கம் கூறுகின்றது. 'சாதி' பொதுமக்களின் ஆன்மாவைக் கொல்கின்றது. அது சமுதாயத்தில் பிறரிடம் காட்டும் அன்பையும் கருணையையும் அழிக்கின்றது. பொது மக்களின் ஒருமித்த கருத்து வெளிப்பாட்டிற்கும் ஒற்றுமையுணர்ச்சிக்கும் தடைக்கல்லாக நிற்கின்றது. இந்தியச் சமுதாயத்தின் அனைத்துக் கூறுகளும் சாதியை அடிப்படையாகக் கொண்டு திகழ்கின்றன. இந்துக்களின் வாழ்க்கை நம்பிக்கைகள் அவர்களது சாதியுணர்வின் அடிப்படையில் நிர்ணயிக்கப்படுகின்றன. மனித வாழ்க்கையின் உய்ரிய கூறுகளான சீரிய பண்பு, நல்லொழுக்கம் ஆகிய அனைத்தும் சாதி அபிமானத்துடன் பிணைக்கப்பட்டுள்ளன.[13] என சாதியத்தால் ஏற்படும் சிக்கலைச் சுட்டிக்காட்டியுள்ளார் அம்பேத்கார்.

சாதி பிறப்படிப்படையான செயற்கைச் சமுதாயப் பிரிவு தனி வாழ்வுடைய வகுப்பு[14] என்று தமிழ்- ஆங்கில அகராதி விளக்கம் கூறுகின்றது. இக்கருத்தினை உறுதிப்படுத்தும் வகையில், "உபநிஷத்துக் காலமுதற் கொண்டு இதுவரையில்

எங்களுடைய சமயச்சாரிகள் சாதிச் சுவர்களை இடித்துத் தள்ள விரும்பி இருக்கின்றார்கள். அவர்கள் தகர்க்கப் பார்த்தது ஆதியில் ஏற்பட்ட வர்ணாச்சிரமம் அன்று அவர்கள் அகற்ற விளைந்தது அழுகிக் கெட்டுப்போன ஒன்றே".[15] என்று விவேகானந்தர் கருத்துரைத்துள்ளார். அவர் இந்து சமயத்தின் ஆணிவேராகக் கருதப்படும் வர்ணாச்சிரமம் தர்மத்தைக் குலைத்துவிடாமல் சாதியைப் போக்க விரும்பினர்.

எதையும் காரணகாரிய அடிப்படையில் எண்ணிப் பார்க்காமல் பரம்பரையாகச் சொல்லப்பட்டு வந்த கருத்துக்களை அவ்வாறே ஏற்றுக் கொள்வது நம்பிக்கையாகும். இதுவே எல்லா மதத்திற்கும் அடிப்படையாகும். இந்தியாவில் சமயத்தில் பிரிக்க முடியாத கூறாகச் சாதி இடம் பெற்றுள்ளது. இந்தியாவில் மூவாயிரத்திற்கும் மேற்பட்ட சாதிப்பிரிவுகள் உள்ளன.[16] இத்தகைய சாதியை அடிப்படையாகக் கொண்ட கிராமங்களில் சாதிப் பஞ்சாயத்து அமைப்பு முறையே பெரிதும் வழக்கில் காணப்படுகின்றது.

சாதிப்பஞ்சாயத்து அமைப்பு முறையில் ஒரே சாதிக்குள் வரும் பிரச்சனைகளை விவாதித்துத் தீர்ப்புக்களை வழங்கி வருகின்றனர். சில ஊர்களில் வெவ்வேறு சாதிகளைச் சார்ந்த குடும்பங்களிலேயே ஏற்படக்கூடிய சிக்கல்களாக இருந்தாலும் சாதிப்பஞ்சாயத்து அமைப்புக் கூடி விவாதிக்கின்றது. இப்பஞ்சாயத்து அமைப்பிற்கு முக்கியமாக அந்தந்தச் சாதிகளைச் சார்ந்த அனுபவம் மிக்க மூத்தவர்கள் தலைவர்களாக இருக்கின்றனர். கலந்து கொள்ளும் சாதிக்காரர்கள் 'பஞ்சாயத்து தலைவர்' என்றும் 'உறுப்பினர்கள்' என்றும், 'வாரியன்' என்றும் அழைக்கின்றனர்.

பள்ளர் இனத்தில் பஞ்சாயத்துத் தலைவர் 'குடும்பன்' என்றும் 'காலாடி' எனவும் அழைக்கப்படுகின்றனர். கள்ளர், தேவர், மறவர், அகமுடையர், கோனார்,

வெள்ளாளர், போன்ற சாதிய இனங்களில் பஞ்சாயத்துத் தலைவர் 'அம்பலம்' என்றும் 'பெரிய அம்பலக்காரர்' என்றும், 'நாட்டமைக்காரர்' என்றும் அழைக்கப்பட்டுவருகின்றனர். இப்பட்டம் ஒரு சாதியைச் சேர்ந்த ஒரு குடும்பத்திற்குப் பரம்பரை பரம்பரையாகத் தொடர்ந்து வரக்கூடிய மரியாதைப் பதவியாகும். இந்தப் பதவியில் இருந்து தீர்ப்புகளைச் சொல்லும் இவர்களுக்கு ஊதியம் கிடையாது. இந்தப் பதவி அந்தந்தச் சாதிக்காரர்களாகப் பார்த்துத் தரக்கூடிய ஒரு மரியாதை நியமனப் பதவியாகும். இதனைப் போன்றே உள்ளூர்க் கோயில்களில் பூசாரிகளாக விளங்குபவர்கள் 'ஊர்ப் பூசாரிகள்' என்றும், பிள்ளையார், அய்யனர், கோயில்களில் பூசாரிகளாக இருப்பவர்கள் 'பண்டாரம்' என்றும் அழைக்கப்பட்டு வருகின்றனர். இதுவும் ஊர் மக்களாகப் பார்த்துத் தரக்கூடிய பதவியே ஆகும்.

சாதிப்பஞ்சாயத்து அமைப்பு முறையில் 'ஒடும்பிள்ளை' அல்லது 'வாரியன்' என்னும் பதவி கிராமத்தின் சாதிக்காரர்கள் அனைவரும் சேர்ந்து தாழ்த்தப்பட்ட குடும்பத்தைச் சேர்ந்த ஒரு நபருக்குக் கொடுக்கக் கூடிய பதவியாகும். கிராமங்களில் பறையர் இனத்தைச் சார்ந்தவர்கள் இப்பதவியைப் பரம்பரையாகப் பெற்று வருகின்றனர். சில கிராமங்களில் ஒடும்பிள்ளையைத் 'தோட்டி' எனவும் அழைக்கின்றனர். சில கிராமங்களில் தாழ்த்தப்பட்ட சாதியினரான பொதர வண்ணான் இனத்தவர்களும் இப்பதவியை அனுபவித்து வருகின்றனர். இவருடைய வேலை ஊரைச் சாட்டுவதாகும். 'ஊரைச் சாட்டுவது' என்பது வாதி, பிரதிவாதி ஆகிய இவர்களது பெயர்களையும் குறிப்பிட்டு இன்றைக்கு இன்ன இடத்தில் இவர்களது வழக்குத் தொடர்பான பஞ்சாயத்துக் கூட்டம் நடைபெறும். அனைவரும் கூட்டத்திற்கு வருக என்று தெருத்தெருவாகச் சென்று தெரியப்படுத்துவதாகும்.

இச்செய்தியைச் சில கிராமங்களில் பறையடித்தும், சில கிராமங்களில் வாயாலே சத்தம் போட்டும் தெரியப்படுத்தி வருகின்றனர்.

'ஓடும்பிள்ளை'இதனைத் தவிர பருவப்பெண்கள் யாராவது பூப்படைந்தாலும், பெண்களுக்குப் பரிசம் போடுதல், ஊர்த் திருவிழா போன்ற சுபகாரியங்களையும், இறப்பு, இழவு, கருமாதி போன்ற துக்கச் செய்திகளையும் ஊர்மக்களுக்கு அறிவிக்கின்றார். இந்தச் செய்திகளை இரவு 6.30 மணிக்கு மேல் தெரிவிக்கின்றார். இச்செய்திகளைக் கேட்டு ஊர்ப்பொதுமக்களும் பெரியவர்களும் இரவு உணவு முடித்த பின்னர் 9.00 மணிக்கு மேல் ஊர்ப்பொதுவிடத்தில் கூடுகின்றனர். ஓடும்பிள்ளை கூட்டத்திற்கு வராத பெரியவர்களையும் மற்றும் முக்கியப் புள்ளிகளையும் அவரவர்கள் வீட்டிற்குத் தனித்தனியே சென்று கூட்டம் நடக்கும் இடத்திற்குக் கூட்டிக்கொண்டு வர வேண்டும். ஓடும்பிள்ளை கூட்டம் முடியும்வரை நின்றுகொண்டே இருக்க வேண்டும். சில கிராமங்களில் ஓடும்பிள்ளை இருவராகக் கூட இருப்பர். ஓடும்பிள்ளையானவர் வாதி மற்றும் பிரதிவாதிகளுக்குத் தலைவர் இடும் கட்டளையை நிறைவேற்றுமாறு சொல்லுகின்றார். வாதியும் பிரதிவாதியும் கூட்டத்தில் முறி வைப்பது (நடுவுப்பணம் அல்லது மண்டுப்பணம்) மேலாடையைக் களையச் சொல்வது, கிராம வழக்கு மன்றச் சபையாரைக் கும்பிட்டு விழுந்து வணங்கச் சொல்வது ஆகிய வேலைகளையும் ஓடும்பிள்ளையே நிறைவேற்றச் சொல்லுகின்றார். சில வேளைகளில் ஒரே சாதியைச் சேர்ந்த வெவ்வேறு ஊரைச் சேர்ந்தவர்களானால் இரண்டு ஊரிலுள்ள முக்கியச் சாதித் தலைவர்களும், பெரியவர்களும், ஊர்ப் பொது மக்களும் கலந்து கொள்கின்றார்கள்.

சாதிப்பஞ்சாயத்து அமைப்பிற்கு வரக்கூடிய வழக்குகள் பெரும்பாலும் குடும்பச் சிக்கல்கள், கணவன்-மனைவி மணவிலக்கு, பாகப்பிரிவினைச் சிக்கல்கள், பெண்ணை ஏமாற்றிக் காதலித்துத் திருமணம் செய்து கொள்ள மறுத்தல், சாதிப் பொதுக் காரியங்களான குலதெய்வத்தைக் கும்பிடுதல், கோயிலைப் புதுப்பித்தல்,

ஊருக்குப் பொதுவிடமாகிய மந்தை கட்டுதல், இட ஒதுக்கீடு, நீர்ப்பங்கீடு, சாதி நன்மைக்காக அரசாங்கத்தை அணுகுதல், திருட்டு வழக்குப் போன்ற வழக்குகள் விவாதிக்கப்பட்டு வருகின்றன.

**சாதிப்பஞ்சாயத்து**




மேற்கூறப்பட்ட அமைப்பு சாதிப்பஞ்சாயத்து அமைப்பு முறையில் எல்லாச் சாதிகளுக்கும் பொதுவாகக் காணப்படுகின்றது.

3. குடும்பப் பஞ்சாயத்து

குடும்பப் பஞ்சாயத்து அமைப்பு முறை என்பது குடும்பத்தினர் அனுபவமும் அறிவும் முதிர்ந்த மூத்த குடும்பத் தலைவரைக் கொண்டு, குடும்பத்தில் ஏற்படுகின்ற சிறு சிறு பிரச்சனைகளையும் தகராறுகளையும் தீர்த்து வைக்கும் பஞ்சாயத்து அமைப்பு முறையாகும். சிவகங்கை மாவட்டத்திலுள்ள கிராமங்களில் இத்தகைய குடும்பப் பஞ்சாயத்து அமைப்பு முறையைக் காண முடிகிறது.

'குழு' என்ற சொல்லிலிருந்தே 'குடும்பம்' என்ற சொல்லாட்சி உருவாகியிருக்க வேண்டும். 'குடும்பம்' என்ற சொல்லுக்கு உறவு, ஒருகுடியில் உள்ளார், மனைவி, வீடு, சமுசாரம், உறவினர், குலம், குடி, இனத்தார், ஒரு குடிசையிலுள்ளோர் என்று அகராதிகள் பொருளுரைக்கின்றன.[17] குடும்பமாவது

ஒருவனைச் சூழ்ந்த அகச்சுற்றம் என்றும் குலம் என்பது புறச்சுற்றம் என்றும் நுட்பமான உரைவேறுபாடும் சுட்டிக் காட்டப்படுகின்றது.[18] சங்ககாலத்தில் 'குடி' என்ற சொல்லே 'குடும்பம்' என்ற பொருளில் கையாளப்பட்டுள்ளது.[19] முதன் முதலில் திருக்குறளில் குடும்பம் என்ற சொல் ஓரிடத்தில் பயின்று வந்திருப்பினும்[20] 'குடி' என்ற சொல்லே திருக்குறளில் மிகுதியான இடங்களில் பயின்று வந்திருக்கின்றது. திருக்குறள் காலத்திற்குப் பின்னர்தான் 'குடும்பம்' என்ற சொல் செல்வாக்குப் பெற்றது எனக் கருதலாம்.

நடைமுறை வாழ்க்கையில் ஒரு வீட்டில் வாழ்ந்துவரும் இரத்த உறவுடைய உறவினர்கள் அனைவரையும் குறிக்கக் 'குடும்பம்' என்ற சொல் பயன்படுத்தப்படுகின்றது. 'ஒரு வாழ்விடத்தில் ஒருவனைச் சார்ந்து வாழும் அகச்சுற்றம்' என்று இச்சொல்லுக்குப் பொருள் விளக்கம் தருவது பொருத்தமுடையதாகும்.

"குடும்பம் என்பது இயக்கமுள்ள சித்தாந்தத்தையே குறிக்கின்றது. அது என்றைக்கும் இயங்காதிருப்பதில்லை. சமுதாயம் கீழ் நிலையிலிருந்து மேல்நிலைக்கு முன்னேற முன்னேற அதுவும் கீழான நிலையிலிருந்து மேலான வடிவத்திற்கு முன்னேறிச் செல்கின்றது."[21] என்பார் எங்கெல்ஸ்.

"வரலாற்றுக் காலத்தில் குடும்பம் அடைந்துள்ள பரிமாண வளர்ச்சி இருபாலருக்கிடையே பொதுமணம் நிலவிய வட்டம் இடையறாது குறுக்கிக் கொண்டே வந்ததில்தான் அடங்கியிருக்கிறது. ஆரம்பத்தில் குலம் முழுவதுமே இவ்வட்டத்திற்குள் இருந்தது. முதலில் நெருங்கின உறவனர்களையும் பிறகு மேலும் மேலும் தூரமான உறவினர்களையும் ஒருவர் பின் ஒருவராக விலக்கி வைத்தும் குழுமணத்தின் ஒவ்வொரு வடிவமும் நடைமுறையில் சாத்தியமற்றுப் போகும்படிச்

செய்யப்பட்டது. முடிவில் எஞ்சியது ஒரேயொரு தாம்பத்ய ஜோடிதான்"[22] என்று வரலாற்று அடிப்படையில் குடும்பங்களின் வளர்ச்சி நிலைகளை விளக்கிச் செல்கின்றனர்.

"குடும்பம் என்பது ஒரே இரத்த உறவுடைய திருமணத்தால் கட்டுப்பட்டமாந்தர் குழுவாகும்". அவர்கள் ஒரே வீட்டில் வாழ்பவராக இருப்பர். ஒத்த செயலுடையவராக இருப்பர். சமுதாயத்தில் கணவன், மனைவி, தாய், தந்தை, மகன், மகள், உடன்பிறந்தவர்கள் என்ற உறவுடனும் பொதுவான பண்பாட்டுடனும் வாழ்வர்[23] என்பர் சு. சண்முக சுந்தரம். தமிழ் இலக்கியங்கள் குடும்பத்தைக் குடி, குலம், குலன் என்ற சொற்களால் குறிப்பிடுகின்றன. கூடி வாழ்வதால் 'குடும்பம்' என்ற சொல் பிறந்தது.[24] எனலாம்.

'குடும்பம்' என்ற சொல்லுக்கு House hold, family including husband, wife and children என்று தமிழ்ப் பேரகராதி விளக்கம் அளிக்கின்றது.[25] ஆளுமையை அடிப்படையாகக் கொண்டு குடும்பங்களைத் தாய்வழிக்குடும்பம் (Matrilineat) தந்தைவழிக் குடும்பம் (Patrilinest) என இரண்டாகப் பிரிக்கலாம். தமிழகத்தில் குறிப்பாகச் சிவகங்கை மாவட்டக் கிராமங்களில் தந்தை வழிக் குடும்பங்களே காணப்படுகின்றன.

குடும்ப அமைப்புக்களைப் பற்றி ஆராய்ச்சி செய்யும் ஆய்வாளர்கள் தத்தம் ஆய்வுக் களத்தின் தன்மைகளுக்கேற்பத் தனிக்குடும்பம் (Nuclear family), இணைக் குடும்பம் (Compound family), கூட்டுக் குடும்பம்( Joint family), விரிவாக்கக் குடும்பம் (Extended family) எனக் குடும்பத்தின் வகைப்பாடுகளைக் கூட்டியும் குறைத்தும் தந்துள்ளனர்.[26]

**கூட்டுக்குடும்பம்**

"ஒரே மரபு வழிச் சார்ந்த இரத்த உறவுடைய (Lineally related kinsotk) இருவரோ அல்லது அதற்கு மேற்பட்டவர்களோ ஒரே வீட்டில் ஒரே தலைமையின் கீழ் தங்கள் மனைவியர்களுடனும் குழந்தைகளுடனும் கூடி வாழ்தலையே கூட்டுக் குடும்பம் [27] என்பர். ஒருவன் தன் மனைவியுடனும் மணமான மகன்கள், அவர்தம் மனைவியர், அவர்தம் குழந்தைகள் ஆகியோருடனும் ஒரே வீட்டில் ஒன்றாக நீண்டகாலம் வாழ்ந்து வருதலை இத்தகைய கூட்டுக் குடும்பத்திற்குச் சான்றாகக் கொள்ளலாம். கிராமங்களில் பல தலைமுறைகளைச் சேர்ந்த முப்பது நாற்பது பேர் ஒரே வீட்டில் கூட்டாக வாழ்ந்து வருவதும் உண்டு. இத்தகைய குடும்ப அமைப்பைத் 'தந்தை வழிக்குடும்பச் சமூகம்' என்றழைக்கின்றனர். தமிழகத்தில் பல தலை முறைகள் சேர்ந்து வாழும் 'குடும்பச் சமூகங்கள் மிக மிக அருகிய நிலையிலேயே காணப்படுகின்றனர். குடும்பச் சமூகங்களைப் பெரிய கூட்டுக் குடும்பங்கள்' என்று கொண்டால் தமிழகக் கிராமங்களில் மிகுதியாகக் காணப்படும் கூட்டுக் குடும்பங்களைச் 'சிறிய கூட்டுக் குடும்பங்கள்' என்று கொள்ளலாம். இத்தகைய கூட்டுக் குடும்ப அமைப்பில் தாய், தந்தை, மணமான, மணமாகாத மகள்கள், மகன்கள், பேரப்பிள்ளைகள் போன்றோர் வாழ்ந்து வருகின்றனர்.

**தனிக்குடும்பம்**

குடும்பத்தின் மூலக்கூறுகளான கணவன், மனைவி, ஆகிய இருவரோடு அவர் தம் பிள்ளைகளைக் கொண்ட குடுபத்தைத் தனிக் குடும்பம் என்று அழைக்கலாம்.[28] கூட்டுக் குடும்பத்தின் சிதைவில் தனிக்குடும்பம் தோன்றுகின்றது. இக்குடும்பத்திலுள்ள ஆண் குழந்தைகள் வளர்ந்து அவர்கள் மணந்து கொள்ளும் வரை தனிக்குடும்பம் நிலைக்கின்றது. அவர்கள் மணந்து கொண்ட பின் கூட்டுக்

குடும்பம் உருவாகின்றது. அக்குடும்ப அமைப்பில் பூசல்கள் ஏற்பட்டு மீண்டும் தனிக்குடும்பம் தோன்றுகிறது. இவ்வாறு மாறி மாறி கூட்டுக் குடும்ப அமைப்பும் பின்னர் தனிக்குடும்ப அமைப்பும் தமிழகக் கிராமங்களில் நடைபெற்று வருகின்றன.

கூட்டுக் குடும்பம் பொருளாதார மேம்பாடுடையவர்களிடமும் தனிக்குடும்பம் உடைமையற்ற எளிய மக்களிடமும் மிகுதியாகக் காணப்படுகின்றன. குடும்பத்திலுள்ள இளைய உறுப்பினர்கள் வளர்ந்து உழைக்கும் தகுதியைப் பெறும் வரை அல்லது அனைவர்க்கும் மணமாகும்வரை இத்தகைய கூட்டுக் குடும்பங்கள் சிதைந்து விடாமல் தடுக்கக் குடும்ப மூத்த உறுப்பினர்கள் முயல்வர். இம்முயற்சியின் விளைவால் போராட்டப் பூசல்களோடு பல கூட்டுக் குடும்பங்கள் உடையாமல் நிலைத்திருத்தலைக் காணலாம். குடும்பத்தின் பொதுக் கடமைகள் நிறைவேறும் வரை மட்டுமே இது சாத்தியக் கூறாகும். அதற்கு மேல் கூட்டுக் குடும்பங்கள் உடைவதைப் பற்றிக் குடும்ப உறுப்பினர்கள் யாரும் வருத்தப்படுவதில்லை. ஏனெனில் கூட்டாக வாழ்வதிலுள்ள நடைமுறைச் சிக்கல்களை உணர்ந்துள்ளனர். கூட்டுக்குடும்பங்கள் ஒற்றுமையாகச் சிதையாமல் இருப்பது சிரமமிக்கது. என்ற பொருளில் தான்' கூடிக்குடியிருந்துபார், கூட்டுப்பயிர் இட்டுப்பார், என வழங்கும் பழமொழியும் தோன்றியுள்ளது எனலாம். இவ்வாறு கூட்டுக் குடும்பங்கள் சிதைந்து தனிப்பட்ட குடும்பங்களை நோக்கிச் செல்லும் நிலை, சமுதாயத்தில் மிகுதியாகக் காணப்படுவதால் தான் கூட்டுக் குடும்ப நன்மையையும் அவசியத்தையும் உணர்ந்து 'கூடிவாழ்ந்ததால் கோடி நன்மை' போன்ற பழமொழிகளும் தோன்றின.

குடும்பத்தில் ஏற்படுகின்ற சிறு சிறு பிரச்சனைகளையும் தகராறுகளையும் குடும்பப் பஞ்சாயத்து அமைப்பு முறை தீர்த்து வைக்கும். ஒரே சாதியைச் சேர்ந்த பெண்ணைக் கூட்டிக் கொண்டு உடன்போக்குத் திருமணம் செய்து கொள்ளல், பெண்ணின் திருமணத்தை முறைமாமன் தடுத்தல், காதலித்த பெண்ணைத் திருமணம்

செய்து கொள்ள மறுத்தல், கணவன் மனைவி குடும்பத் தகராறு, பிரிந்து வாழ்தல், கணவன், மனைவி நடத்தை ஒழுகலாறுகளில் ஐயுறவு கொள்ளல், கணவன் குடித்துவிட்டு வந்து தன் மனைவியைக் கொடுமைப்படுத்துதல், மாமியார் மருமகளைக் கொடுமைப்படுத்துதல், திருமணத்திற்குப் பின்னர் கணவன்-மனைவியிடம் வரதட்சிணை கேட்டல், தகாத பாலுறவுச் சிக்கல், குடும்பப் பெண் நடத்தை கெட்டவளாக இருத்தல், கணவன் மற்றொரு பெண்ணுடன் தொடர்பு வைத்திருத்தல், மணமுறிவு வேண்டல், அண்ணன்-தம்பி பிரச்சனை, தந்தை-மகன் பிரச்சனை, பாகப்பிரிவினைத் தகராறு, சொத்துப்பிரச்சனை, வரப்புச் சண்டை, நீர்ப்பாய்ச்சுதலில் ஏற்படும் தகராறு போன்ற சிறுசிறு பிரச்சனைகளைத் தீர்த்து வைக்கும் அமைப்பு குடும்பப் பஞ்சாயத்து அமைப்பு முறையாகும்.

குடும்பப் பஞ்சாயத்து அமைப்பு ஒரு மிகச் சிறிய அமைப்பாகும். இது சிற்றூர்ப் பஞ்சாயத்தின் அடிப்படை அமைப்பாகும். தலைவராக வயதிலும் அனுபவத்திலும் முதிர்ந்த அந்த வீட்டிற்குப் பெரியவர் ஒருவர் இருக்கின்றார். வயதிலும் அனுபவத்திலும் முதிர்ச்சிபெற்றவர் என்ற காரணத்தினாலும் அந்தக் குடும்பத்தைப் பற்றி நன்றாகவும் குறிப்பாகவும் அறிந்தவர் என்ற காரணத்தினாலும் அவர்தான் முக்கியமானவராகக் கருதப்படுகின்றார். அந்த வீட்டிற்குப் பக்கத்து வீடுகளில் வாழும் இரண்டு மூன்று குடும்பங்களின் பெரியவர்களும், மேலும் அக்குடும்பத்துடன் அதிக நட்புகொண்ட வேறு வேறு சாதிகளைச் சேர்ந்த குடும்பத்தலைவர்களும் பங்கு கொள்கின்றனர். முழுக்க முழுக்க இரண்டு மூன்று பெரியவர்களைக் கொண்ட சிறிய அமைப்பாகவே அமைகின்றது.

குடும்பப் பஞ்சாயத்து அமைப்பு முறையில் வாதி, பிரதிவாதி, ஆகியோரும் இடம்பெறுவர். தண்டனைகள் நிலையாக இராது. முழுக்க முழுக்கக் குடும்பப் பெரியவர்கள் வழக்கினை விவாதித்துத் தீர்த்து வைக்கின்றனர். முழு அதிகாரம் அக்குடும்பத்தைச் சேர்ந்த பெரியவருக்கே உண்டு. பொதுவாகத் தாழ்த்தப்

பட்டவர்கள் குடும்ப பஞ்சாயத்துக்களில் வேறு சாதிக்காரர்கள் யாரும் பங்கு கொள்வது கிடையாது. சில நேரங்களில் நட்பின் காரணமாகவும், உயர்ந்த சாதிக்காரன் என்ற அடிப்படையிலும் மேல்சாதிக்காரர்கள் பங்கேற்பதுண்டு.

மேல்சாதிக்காரர்களுக்குள் குடும்ப பஞ்சாயத்து வழக்குகள் நடைபெறும்போது தாழ்த்தப்பட்டவர்களை அவர்கள் அனுமதிப்பதில்லை. குடும்பப் பிரச்சனைகளை அவர்கள் சாதிக்காரர்களுக்குள்ளேயே பேசி முடிவெடுத்துக் கொள்கின்றார்கள். குடும்பப் பஞ்சாயத்துக்கள் பெரும்பாலும் மந்தைதிடல், ஊர்ப்பொதுவிடம், கிராம வழக்கு மன்றங்களில் நடைபெறுவதில்லை. வீடு, திண்ணை என்ற அளவிலேயே இருக்கும்.

குடும்பப் பஞ்சாயத்து அமைப்பு முறையில் குடும்ப ஒற்றுமை சிதையாமல் பேணிக்காக்கப்படுகின்றது. குடும்ப உறுப்பினர்களுக்கிடையே ஏற்படும் சிறு சிறு பிரச்சனைகள், நெருடல்கள், மணவருத்தங்கள், கூட எளிதாகவும் அமைதியாகவும் தீர்த்து வைக்கப்படுகின்றன. குறிப்பாகக் குடும்பச் சண்டை காரணமாகப் பிரிந்து வாழும் கணவன் மனைவியரைச் சேர்த்து வைக்கின்றது.

குடும்பப் பஞ்சாயத்து அமைப்பு



*சிவகங்கை மாவட்டக் கிராமங்களில் குடும்பப் பஞ்சாயத்து அமைப்பு அனைத்துச் சாதிகளிலும் காணப்படுகின்றது. தவிர சிவகங்கை மாவட்டக் கிராம வழக்கு மன்றப் பஞ்சாயத்துக்களில் நாட்டுப் பஞ்சாயத்து, நாட்டார் பஞ்சாயத்து, அல்லது நாட்டுக்கூட்டம், நகரத்தார் பஞ்சாயத்து முதலான பஞ்சாயத்து வகைகளும் நடைமுறையில் காணப்படுகின்றன.*

**நாட்டுப் பஞ்சாயத்து**

*சிவகங்கை மாவட்டத்தில் கள்ளர், அகமுடையர், மறவர், முதலான இனத்தவர்கள் மிகுதியாக வாழும் கிராமங்களில் நாட்டுப் பஞ்சாயத்து அமைப்பு முறை காணப்படுகின்றது. இந்த வகைப் பஞ்சாயத்து அமைப்பு முறையில் மேற்குறிப்பிட்ட சாதியர்களுள் செல்வாக்குப் பெற்ற ஒரு சாதியைச் சேர்ந்தவர் வழக்கு மன்றத் தலைவராக இருப்பார். இவ் உரிமை மரபு வழிப்பட்ட பரம்பரையானதாகும்.*

*நாட்டுப் பஞ்சாயத்துத் தலைவரை மக்கள் 'அம்பலம்' 'அம்பலக்காரர்', 'பெரிய அம்பலக்காரர்' 'நாட்டாமை' என்றும் மரியாதையுடன் அழைக்கின்றனர். தலைவராகிய அம்பலக்காரர், நாட்டாமை கூறும் தீர்ப்பே இறுதியானதாகும். அவருக்குத் துணையாக ஐந்துக்கும் மேற்பட்ட பஞ்சாயத்து உறுப்பினர்கள் உள்ளனர். பஞ்சாயத்துத் தலைவராகிய நாட்டாமையின் தீர்ப்புகளுக்கு வாதி, பிரதிவாதி, ஆகியோரும் கிராமப் பொதுமக்களும் கட்டுப்பட்டவர்கள் ஆவர். தலைவரின் தீர்ப்புகளை மீறுபவர்கள் ஊரைவிட்டு ஒதுக்கி வைக்கப்படுவார்கள், அல்லது ஊரைவிட்டே வெளியேற்றப்படுவார்கள். இது மிகவும் கடுமையான தண்டனையாகும்.*

*நாட்டுப் பஞ்சாயத்து சிவகங்கை மாவட்டத்தில் சிவகங்கை ஒன்றியம், அரசனூர், படமாத்தூர், மதகுபட்டி, கண்டாங்கிபட்டி, தமராக்கி, குமாரபட்டி, ஆகிய*

கிராமங்களிலும் கல்லல் ஒன்றியம் பாகனேரியிலும், காளையார்கோவில் ஒன்றியம் கட்டாணி, மானாமதுரை ஒன்றியம் வேம்பத்தூர், மாத்தூர், பச்சேரி, சிங்கம்புணரி, ஒன்றியம் பிராண்மலை, திருபத்தூர் ஒன்றியம் பிள்ளையார் பட்டி, திருப்புவனம் ஒன்றியம் ஏனாதி, பூவந்தி, லாடனேந்தல், ஆகிய கிராமங்களிலும் மிகவும் சிறப்பான முறையில் செயல்பட்டு வருவதைக் காணமுடிகிறது. நாட்டுப் பஞ்சாயத்து அமைப்பு முறை ஒரு வலிமைமிக்க அமைப்பாகும். தலைவர்கள் கூறும் தீர்ப்புகள், நீதிமன்றத் தீர்ப்புகளுக்கு இணையான மதிப்புடையவையாக மக்களால் போற்றப்படுகின்றன.

**நாட்டார் பஞ்சாயத்து அல்லது நாட்டுக் கூட்டம்**

'நாட்டார்' என்னும் சொல் வழக்கு கள்ளர், சமுதாயத்தினரையே குறிக்கும் நாட்டார் பஞ்சாயத்து அல்லது நாட்டுக்கூட்டம் என்ற பஞ்சாயத்து அமைப்பு முறையும் நாட்டுப் பஞ்சாயத்து அமைப்பு முறையும் ஒன்று போலவே காணப்படுகின்றன. நாட்டார் பஞ்சாயத்து அல்லது நாட்டுக்கூட்டம் என்ற பஞ்சாயத்து அமைப்பு முறையில் 'கள்ளர்' சமுதாயத்தினர் மட்டுமே பஞ்சாயத்துத் தலைவராகவும், பெரிய அம்பலக்காரராகவும், நாட்டாமையாகவும் இருந்து வழக்குகளில் தீர்ப்புகளை வழங்கி வருகின்றனர். இந்த உரிமை மரபு வழிப்பட்டதாகும். சிவகங்கை மாவட்டத்தில் கல்லல் ஒன்றியம் கல்லல், வெளியாத்தூர், ஆகிய கிராமங்களில் இப்பஞ்சாயத்து அமைப்பு முறை சிறப்பான முறையில் செயல்பட்டு வருகின்றது. காரைக்குடி அருகேயுள்ள கோவிலூரைச் தலைமையிடமாகக் கொண்டு தொண்ணூற்று ஆறு ஊர் நகரத்தார் பஞ்சாயத்து மிகவும் சிறப்பான முறையில் செயல்பட்டு வருவதைக் காணலாம்.

**நகரத்தார் பஞ்சாயத்து**

'நகரத்தார்' என்னும் சொல் வழக்கு செட்டியார் சமுதாயத்தினரைக் குறிக்கும். நகரத்தார் பஞ்சாயத்து அமைப்பு முறையில் செட்டியார் சமுதாயத்தினர் மட்டுமே

பஞ்சாயத்துத் தலைவராகவும், பெரிய அம்பலக்காரராகவும், நாட்டாமையாகவும், இருந்து வழக்குகளில் தீர்ப்புகளை வழங்கி வருகின்றனர். இந்த உரிமை பரம்பரையானதாகும். கல்லல் ஒன்றியம் கல்லலிலும் நகரத்தார் பஞ்சாயத்து அமைப்பு முறை செயல்பட்டு வருகின்றது.

**தொகுப்புரை**

சிவகங்கை மாவட்டக் கிராமங்களில் நிகழ்ந்து வருகின்ற கிராம வழக்கு மன்றப் பஞ்சாயத்துக்களின் அமைப்புகள் அவ்வக் கிராமங்களில் வாழும் பல்வேறு இன மக்களின் மக்கள் தொகை, அதன் காரணமாக அவர்கள் அவ்வக் கிராமங்களில் பெற்று வருகின்ற சமூகச் செல்வாக்குப் போன்றனவற்றைப் பொறுத்ததாக அமைகின்றன.

வடிவமும் கட்டமைப்பும் பற்றிய மேலை நாட்டுத் திறனாய்வாளர்களின் கோட்பாடுகள் சுட்டப்பட்டுள்ளன. 'வடிவம்' என்பதை அதனுடைய பல உறுப்புக்களின் கூட்டுத்தொகையாகும் என விளக்கம் தந்துள்ளனர். இயற்கையாகவோ, செயற்கையாகவோவடிவம் என்பது கட்டமைப்பு உடையதாகும். 'கட்டமைப்பு' என்பது 'ஒழுங்குபடுத்துதல்' ஆகும். கவிதை முதலான இலக்கியத்தின் கட்டமைப்புப் பற்றிய இத்தகைய விளக்கங்கள் அமைப்புச் சார்ந்த கிராம வழக்கு மன்றப் பஞ்சாயத்துக்களின் வகைகளுக்கும் பொருந்தும்.

அமைப்பு அல்லது வடிவம் என்பது ஒன்றுக்கு மேற்பட்ட பல கூறுகளின் கூட்டுதொகுதியாகும். பல கூறுகள் சேர்ந்து செயல்படும் கூட்டு அமைப்பில் ஏதேனும் ஒரு கூறு சரிவர இயங்காமல் போனாலும் அது ஒட்டுமொத்த அமைப்பையும் பாதிக்கும். பஞ்சாயத்துத் தலைவர் வழக்குமன்ற உறுப்பினர்கள், வாதி, பிரதிவாதி, சாட்சிகள், பொது மக்கள் என்ற படிநிலையான அமைப்புக்களைக் கொண்ட கிராம வழக்கு மன்றத்திற்கும் அவை ஒன்றோடொன்று இணைந்து செயல்படும் முழுமைத்

தன்மையே அமைப்பியலாகும். இவற்றில் ஏதேனும் ஒரு கூறு சரிவர இயங்காமல் போனாலும் அது வழக்கு மன்றத்தின் ஒட்டுமொத்தமான அமைப்பையும் பாதிக்கக் கூடியதாக அமையும்.

ஒரு கிராமம் என்பதில் ஒன்றுக்கும் மேற்பட்ட சிற்றூர்கள் அடங்கியுள்ளன. கிராமப் பஞ்சாயத்து என்பது ஒன்றுக்கும் மேற்பட்ட சிற்றூர்களைக் கொண்டு விளங்கும். கிராமங்களில் ஏற்படுகின்ற ஒட்டுமொத்தச் சிக்கல்களையும் தீர்த்துக் கொள்வதற்காக அனைத்துச் சிற்றூர்களிலுமுள்ள அனைத்துச் சாதிக்காரர்களும் ஏற்படுத்திக் கொண்ட பஞ்சாயத்து அமைப்பு முறையாகும். இவ்வமைப்பில் அனைத்துச் சாதிக்காரர்களும் பங்கேற்கின்றனர்.

ஊர்ப்பஞ்சாயத்து என்பது சாதிகள் வாழும் ஓர் ஊரில் ஏற்படுகின்ற ஒட்டுமொத்தமான பிரச்சனைகளைத் தீர்ப்பதற்காண அமைப்பாகும். அந்த ஊரில் வாழ்கின்ற அனைத்துச் சாதிப் பெரியவர்களும் ஒன்று கூடி விவாதிக்கின்ற பஞ்சாயத்து அமைப்பு முறையாகும்.

சாதிப்பஞ்சாயத்து என்பது ஒவ்வொரு கிராமத்திலும் வாழ்ந்து வருகின்ற குறிப்பிட்ட ஒவ்வொரு சாதியினரும் தங்களுக்குள் ஏற்படுகின்ற பிணக்குகளைத் தீர்த்துத் கொள்வதற்காகத் தங்கள் இனப் பெரியவர்களைக் கொண்டு ஏற்படுத்திக் கொள்கின்ற சாதிய அமைப்பாகும்.

குடும்பப் பஞ்சாயத்து அமைப்பு என்பது அந்தந்தக் குடுபங்களின் தலைவர்களைக் கொணடு குடும்பங்களில் ஏற்படுகின்ற சிறு சிறு பிரச்சனைகளைத் தீர்த்து வைத்துக் குடும்ப ஒற்றுமையைக் காக்கும் பஞ்சாயத்து அமைப்பு முறையாகும்.

தாழ்த்தப்பட்டவர்களின் குடும்பப் பஞ்சாயத்து வழக்குகளில் நட்பின் காரணமாகவும், உயர்ந்த சாதிக்காரர் என்ற அடிப்படையிலும் மேல்சாதிக்காரர்கள்

*பங்கேற்கின்றனர். ஆனால் மேல்சாதிக்காரர்களின் குடும்ப வழக்குகளில் தாழ்த்தப்பட்டவர்கள் யாரும் அனுமதிக்கப்படுவதில்லை.*

*நாட்டுப் பஞ்சாயத்து அமைப்பு முறையில் கள்ளர், அகமுடையர், மறவர், முதலான இனத்தவர்கள் முக்கியத்துவம் பெறுகின்றனர். நாட்டுக் கூட்டம் அல்லது நாட்டார் பஞ்சாயத்து அமைப்பு முறையில் கள்ளர் சமுதாயத்தினர் மட்டுமே வழக்கு மன்றத் தலைவராகச் சிறப்புப் பெறுகின்றனர். நகரத்தார் பஞ்சாயத்து அமைப்பு முறையில் செட்டியார் இனத்தவர் வழக்கு மன்றத் தலைவராகச் சிறப்புப் பெறுகின்றனர்.*

*சிவகங்கை மாவட்டக் கிராம வழக்குமன்றப் பஞ்சாயத்துக்களின் அமைப்புகள் மரபு வழிபட்டதாகும்.*

## குறிப்புக்கள்

1. வை.சச்சிதானந்தன், மேலை இலக்கியச் சொல்லகராதி, ப.93.
2. வை. சச்சிதானந்தான், மு.நூ.,ப.93.
3. W.P.Ker Form and Style in Poetry. pp.32-33.
4. வை. சச்சிதானந்தான், மு.நூ.,ப.94.
5. R.S. Crane, The Languages Criticism and the Structure of Poerty. pp.88-89.
6. வெ.சாமிநாத சர்மா, பிளேட்டோவின் அரசியல் (இரண்டாம் பாகம்) ப.87.
7. ஆ.தே.லூர்து நாட்டார் வழக்காற்றில் ஆய்வுகள், தொகுதி-1 ப.26.
8. Claude Levistrauss, Structual Anthropology, pp.279-280.
9. கில்பர்ட் பாஸ்கல், சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், ப.456.
10. G.S. Ghurye, Caste, and Religion in India, p.17.
11. Andrew Beterlee, Caste, Old and New, p.125.
12. Tamil Lexion, vol, III, part-II, p.1369.
13. P. Thangaraj (Editor) Selected Thought of Dr.Ambedkar, p.9.
14. A.C. Chettiar, English- Tamil Dictionary, p.153.
15. சுவாமி விவேகாந்தர், ஞானதீபம், சுடர், 3 ப.396.
16. K.M.Panickkar, Hindu Society at Gross Roads, p.13.
17. தமிழ்ப் பேரகரதி, சென்னைப் பல்கலைகழக வெளியீடு, ப.349.
18. புலவர் இளங்குமரன், (தொகு.ஆ) உரையாசிரியர்கள் கண்ட சொற்பொருள் நுண்மை விளக்கம், 'குடி' ப.118.
19. புறம்:183.
20. குறள்:1029.
21. எங்கல்ஸ், குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம், ப.48.
22. மேலது, ப.76.

23. சு. சண்முகசுந்தரம், திருநெல்வேலி மாவட்ட நாட்டுப்புறப் பாடல்களில் சமுதாய அமைப்பு, ப.109.

24. மேலது, ப.110.

25. Tamil Lexicocn,vol. III, part-II, p.1367.

26. Kathleen Heasman, The Study of Society, p.31.

27. International Encyclopedia of the Social Sciences, vols.5-6 p.998.

28. International Encyclopedia of Social Sciences, vol.5-6, p.999.

# இயல்-3

# கிராம வழக்குகளின் வகைகள்

*களஆய்வில் தரவுகளைத் தொகுத்தலும் அவற்றை வகைப் படுத்தலும் இன்றியமையாததாகும். சிவகங்கை மாவட்ட 'கிராம வழக்குகளின் வகைகள்' என்னும் இவ்வியலில் ஆய்வாளர் களத்தில்* (Field Study) *சேகரித்த வழக்குகள் வகைதொகைப்படுத்தி விளக்கப்படுகின்றன. வழக்குகளின்* (Cases) *உள்ளடக்கச் செய்திகளையும் அடிக்கருத்துக்களையும் அடிப்படையாகக் கொண்டு அவற்றை உரிமையியல் வழக்குகள், குற்றவியல் வழக்குகள், குடும்ப வழக்குகள், பொதுப்பிரச்சனைகள் தொடர்பான வழக்குகள்*[1] *என வகைப்படுத்தலாம்.*

## உரிமையியல் வழக்குகள்

*இவ் வழக்குகளைச் சொத்து, கொடுக்கல்-வாங்கல் வழக்குகள் எனக் கூறலாம். கிராம வழக்குகளில் இடம் பெறும் அனைத்துப் பிரச்சினைகளும் உரிமையியல் சிக்கல்களாக இடம்பெற்றுள்ளன.*

### அ) சொத்து வழக்குகள்

*சொத்து வழக்குகளில் நடைபாதைத் தகராறு, இடப்பிரச்சனை, நிலப்பிரச்சனை, பாகப்பிரிவினை, வீட்டுமனைப் பிரச்சனை முதலான உரிமையியல் சிக்கல்கள் அடங்கும்.*

### நடைப்பாதைத் தகராறு

*கிராம உரிமையியல் வழக்குகளில் நடைபாதைத் தகராறு பற்றிய ஒரு வழக்கு உள்ளது.*[2] *பனையூர் கிராமத்தைச் சேர்ந்த கருப்பசாமி என்பவர் தன்னுடைய இடத்தில் ஊர்மக்கள் நடப்பதாகவும், நடைபாதையாக இருந்த இடத்தை நாடியான்*

என்பவர் அடைத்துவிட்டதாகவும் இதனைக் கேட்டு நீதி வழங்க வேண்டுமெனவும் 1999 ஆம் ஆண்டு வைகாசிமாதம் 20ம் தேதி பனையூர் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தார். கருப்பசாமியிடமும் நாடியானிடமும் பஞ்சாயத்தார் விசாரித்தனர். மூப்பர் இனத்தவர் அனைவரும் கலந்து பேசினர். விசாரனையில் கருப்பசாமி, நாடியான் ஆகிய இருவர் இடத்திற்குமிடையே நடைபாதை இருந்தது தெரியவந்தது. குழாய் தண்ணீரும் கழிவுநீரும் அங்குவந்து தேங்கியதால் நாடியான் தன்னுடைய இடத்தை அடைத்துப் பாதைவிட மறுத்துவிட்டார். இதனையறிந்த பஞ்சாயத்தார் குழாய்க் கழிவுநீர் செல்ல இருவர் இடத்திற்கும் நடுவிலும் சிறுவாய்க்கால் போட்டுப் பொது மக்கள் நடைபாதையாகப் பயன்படுத்த இருவரும் சமமாக இடத்தை விட்டுக் கொடுக்க வேண்டுமெனத் தீர்ப்புக் கூறினர். அத்தீர்ப்பினை இருவரும் ஏற்றுக்கொண்டனர்.

இடப்பிரச்சனை

கிராம உரிமையியல் வழக்குகளில் இடப்பிரச்சனை பற்றியவைகளாக எட்டு வழக்குகள் கிடைத்துள்ளன.[3] சிவகங்கை ஒன்றியம் மேலப்பூங்குடி கிராமத்தில் பறையர் இனத்தைச் சேர்ந்த மாயாண்டி, முணியாண்டி ஆகிய இருவரது இடத்தினையும் அதே ஊரில் வாழும் கள்ளர் சமுதாயத்தைச் சேர்ந்த இராக்கன் என்பவர் ஆக்கிரமித்துக் கொண்டதால் மேலப்பூங்குடிப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1995 ஆம் ஆண்டு ஆடி மாதம்27ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தனர். மாயாண்டியும் முணியாண்டியும் பஞ்சாயத்தார்களிடம் தங்கள் வீட்டுமனையை இராக்கன் என்பவர் எடுத்துக்கொண்டு தங்களை மிரட்டுவதாகவும், பஞ்சாயத்தார் எப்படியாவது தங்களுடைய இடத்தினை மீட்டுத் தரவேண்டுமென்றும் முறையிட்டு வேண்டிக் கொண்டனர். இராக்கன் என்பவர் பஞ்சாயத்தார்களிடம் தான் ஐந்து வருடங்களாக அந்த இடத்தை அனுபவிப்பதாகவும் அந்த இடம் தனக்குத்தான் சொந்தம் என்றும் வாதாடினார். பஞ்சாயத்தார் அந்த இடத்தை நேரில்

பார்வையிட்டனர். அந்த இடம் ஆக்கிரமிக்கப்பட்டிருந்தது தெளிவாகப் புலனாகியது.[4] பஞ்சாயத்தார் அந்த இடத்தில் கல் ஊன்றி மாயாண்டிக்கும் முனியாண்டிக்கும் அவ்விடத்தை மீட்டுக் கொடுத்தனர்.

காளையார்கோவில் ஒன்றியம் செங்குளம் கிராமத்தைச் சேர்ந்த ஆரோக்கியத்தாய் என்பவர் அதே ஊரைச் சேர்ந்த இருதயசாமி என்பவருக்குச் சொந்தமான இடத்தில் தேநீர் கடை நடத்தி வந்தார். பின்னர் அவ்விடத்தைப் புறம்போக்கு இடம் எனப்பட்டாப் போட்டு ரசீதும் பெற்றுவிட்டார். இருதயசாமி தனக்குச் சொந்தமான அந்த இடத்தை மீட்டுத்தர வேண்டுமென்று 1997 ஆம் ஆண்டு மார்கழி மாதம் 11 ஆம் தேதி செங்குளம் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தார். பஞ்சாயத்தார் இருதயசாமிக்குச் சொந்தமான அவ்விடத்தை ஆரோக்கியத்தாய் விட்டுக் கொடுக்க வேண்டுமென்று தீர்ப்புக் கூறினர். ஆரோக்கியத்தாய் பஞ்சாயத்தார் தீர்ப்பினை ஏற்றுக்கொள்ளமல் காவல் நிலையம் சென்றார். பஞ்சாயத்தாரிடம் விசாரித்த காவல்துறையினர் அந்த வழக்கினை ஊர்ப் பஞ்சாயத்தில் தீர்த்துக்கொள்ளுமாறு அனுப்பிவிட்டனர். பஞ்சாயத்தார் தமது தீர்ப்பில் இருதயசாமி இடத்தினை ஆக்கிரமித்ததும், ஊர்க்கட்டுப்பாட்டை மீறிக் காவல்துறையினரிடம் சென்றமைக்காக ஆரோக்கியத்தாய்க்கு ரூபாய் இருநூறு அபராதம் விதித்தனர். அந்த இடத்தை மீட்டு இருதயசாமியிடம் ஒப்படைத்தனர்.[5] காவல்துறையினரிடம் சென்ற வழக்கு இறுதியில் கிராம வழக்கு மன்றத்திலேயே தீர்க்கப்பட்டுள்ளது என்பது சுட்டத்தக்கது.

காளையார்கோவில் ஒன்றியம் செம்பனூர்க் கிராமத்தைச் சேர்ந்த கேசவன் என்பவர் மீது பங்காளிகள் நிலத்தை அதிகமாக எடுத்துக் கொண்டுவிட்டதாக பங்காளிகளில் ஒருவரான ஆர்.இராமச்சந்திரன் என்பவர் செம்பனூர் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1997 ஆம் ஆண்டு சித்திரை மாதம் 20ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தார். கேசவன் அதனை மறுத்தார். நிலத்தை நேரடியாகப் பார்வையிட்ட பஞ்சாயத்தார்

சர்வேயரைக் கூட்டி வந்து அளந்து பங்காளிகளுக்குச் சமமாகப் பிரித்துக் கொடுத்தனர்.[6] இளையான்குடி ஒன்றியம் திடியமங்கலம் கிராமத்தைச் சேர்ந்த கருப்பையா என்பவர் அதே ஊரைச் சேர்ந்த பாண்டி என்பவருக்கும் தனக்குமுள்ள இடப்பிரச்சனையைத் தீர்த்து வைக்க வேண்டுமென்று 10.3.98 இல் திடியமங்கலம் பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தார். அவர்கள் இருவரும் பங்காளிகள். ஆதலால் பஞ்சாயத்தார் பொது இடம், பொது வீடு இரண்டையும் அளந்து சமமாகப் பகிர்ந்து கொடுத்துத் தீர்ப்பு வழங்கினர். மறுநாள் மீண்டும் சண்டையிட்டுக் கொண்டனர். மீண்டும் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. சீட்டுப்போட்டுக் குலுக்கி எடுத்துப் பஞ்சாயத்தார் அவர்கள் பிரச்சனையைத் தீர்த்து வைத்தனர்.[7] இருவரும் பஞ்சாயத்தார் தீர்ப்பை முழுமனதாக ஏற்றுக் கொண்டனர்.

கல்லல் ஒன்றியம் கட்டக்கான்பட்டிக் கிராமத்தைச் சேர்ந்த மாதவன் என்பவர் மனைவியை இடப்பிரச்சனையில் அதே ஊரைச் சேர்ந்த முத்தையா என்பவர் அடித்து மண்டையை உடைத்துவிட்டார் என்று கட்டக்கான்பட்டி கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 2000ஆம் ஆண்டு ஆவணி மாதம் 7ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தார். வழக்கினை விசாரித்த பஞ்சாயத்தார் இடப்பிரச்சனையில் ஆணாகிய முத்தையா பெண்ணை (மாதவன் மனைவியை) அடித்தது தவறு என்று கூறி; முத்தையாவுக்கு ரூபாய் நூறு அபராதம் விதித்து இனிமேல் இவ்வாறு நடந்து கொள்ளக்கூடாது என அறிவுரையும் கூறினர்.[8] சிங்கம்புணரி ஒன்றியம் காளாப்பூர் கிராமத்தைச் சேர்ந்த மு.மு.சின்னழகு என்பவர் தனது இடத்தை அதிகமாக எடுத்துக்கொண்டு தகராறு செய்வதாகப் பிச்சை என்பவர் மீது காளாப்பூர் பஞ்சாயத்துத் தலைவரிடம் 18.6.2000இல் வழக்குத் தொடுத்தார். வழக்கை விசாரித்த பஞ்சாயத்தார் இடத்தின் பட்டா மற்றும் பத்திரங்களைச் சரிபார்த்து யாருக்கு எவ்வளவு இடம் என முடிவு செய்து ஓர் ஆசாரியைக் கூட்டி வந்து

*அளந்து இடத்தின் முன்பக்கத்தை மு.மு.சின்னழகுவிற்கும் பின்பக்கத்தைப் பிச்சைக்கும் பிரித்துக் கொடுத்துத் தீர்ப்புக்கூறினர்.*[9]

*சிங்கம்புணரி ஒன்றியம் மருதிப்பட்டிக் கிராமத்தைச் சேர்ந்த காளமேகம் என்பவர் இடம் விற்பனையில் (நிலம்) தன்னை ஏமாற்றிவிட்டதாகப் பொன்னையா என்பவர்மீது மருதிப்பட்டிக் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1999 ஆம் ஆண்டு வைகாசி மாதம் 7ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தார். நிலத்தை ஒருவருக்கு ஒத்திப்பத்திரம் எழுதிக் கொடுத்துவிட்டு பின்னர் அதே நிலத்தை மற்றொருவரிடம் கிரையம் செய்து கொடுத்து விட்டார் என்பதே இவ்வழக்கின் முக்கியப் பிரச்சனை ஆகும். குற்றம் சாட்டப்பட்ட பொன்னையா தன்னுடைய குற்றத்தை ஒப்புக் கொண்டார். பஞ்சாயத்தார் ஒத்தி வைத்த நிலத்தை அவருக்குத் தெரியாமல் ஏமாற்றி விட்டு மற்றொருவரிடம் கிரையம் செய்தது குற்றம் என்று பொன்னையாவிற்கு ரூபாய் ஆயிரம் அபராதம் போட்டு மூன்றுமாதத்திற்குள் ஒத்திப்பணம் முழுவதையும் ஒரே தவணையில் கட்ட வேண்டுமென்றும் தீர்ப்புக் கூறினர்.*[10] *பஞ்சாயத்தாரின் இத்தீர்ப்பினைப் பொன்னையா ஏற்றுக் கொண்டார். இவ்வாறு இடப்பிரச்சனை தொடர்பான பல வழக்குகளைச் சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்கள் அமைதியான முறையில் தீர்த்து வைத்துள்ளமையைக் காண முடிகிறது.*

நிலப்பிரச்சனை

*நிலப்பிரச்சனை குறித்த ஐந்து வழக்குகள் கிடைத்துள்ளன.*[11] *இளையாண்குடி ஒன்றியம் லெட்சுமிபுரம் கிராமத்தைச் சேர்ந்த முருகவேல் என்பவர் தன்னுடைய நிலத்தை அதே ஊரைச் சேர்ந்த வில்லப்பன் என்பவர் உழவிடாமல் அபகரித்துக் கொண்டார் எனவும், அந்நிலத்தை மீட்டுத்தர வேண்டுமெனவும் லெட்சுமிபுரம் கிராமபஞ்சாயத்துத் தலைவரிடம் 1996 ஆம் ஆண்டு கார்த்திகை மாதம் 9ம் தேதி குற்றஞ்சாட்டினார். வில்லப்பன் முருகவேலின், தாய்மாமன் ஆவார். அவருடைய*

மகளுக்கும் முருகவேலுக்கும் பொருத்தம் சரியில்லாத காரணத்தால் முருகவேல் வேறு பெண்ணைத் திருமணம் செய்து கொண்டார். வில்லப்பன் தன் மகளை வேறிடத்தில் மணம்முடித்துக் கொடுத்தார். இருபது வருடங்களாக வில்லப்பன் அந்நிலத்தை அனுபவித்து வந்துள்ளார். வழக்கினை விசாரித்த பஞ்சாயத்தார் நிலத்தை அளந்து 70 செண்ட் நிலத்தை வில்லப்பன் முருகவேலிடம் ஒப்படைக்க வேண்டுமெனத் தீர்ப்புக் கூறினர்.[12] கிராமப் பஞ்சாயத்தார் தீர்ப்பினை வில்லப்பன் ஏற்றுக் கொண்டார். திருப்புவனம் ஒன்றியம் லாடனேந்தல் கிராமத்தைச் சேர்ந்த மணி என்பவர் தன்னுடைய அண்ணன் ஞானகுரு அதிகமாக நிலத்தை எடுத்துக் கொண்டார் எனவும் சமமாகப் பகிர்ந்து கொடுக்க வேண்டுமெனவும் 2000 ஆம் ஆண்டு ஆனிமாதம் 5ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தார். லாடனேந்தல் நாட்டார் பஞ்சாயத்துத் தலைவர் முன்னிலையில் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார் நிலங்கள் அனைத்தையும் சரியாக அளந்து சமமாகப் பிரித்துக் கொடுத்து, எல்லையில் கல்லை ஊண்டித் தீர்த்து வைத்தனர்.[13] இன்று அவர்கள் சமாதானமாக விவசாயம் செய்து வருகின்றனர் என்கின்றனர்.

மானாமதுரை ஒன்றியம் வி.புதுக்குளம் கிராமத்தைச் சேர்ந்த சமயத்துரை என்பவர் உ.மலைச்சாமி என்பவரிடம் ஒத்திக்கு வாங்கிய நிலத்தைத் தனக்கே கிரையத்திற்குத் தரவேண்டுமென வி. புதுக்குளம் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 25.03.1998 இல் வழக்குத் தொடர்ந்தார். இரு தரப்பு வாதங்களையும் கேட்ட பஞ்சாயத்துத் தலைவர், ஒத்திக்கு வாங்கியவருக்கே நிலத்தைக் கிரையம் கொடுக்க வேண்டுமென்ற அவசியம் இல்லை. ஆதலால் சமயத்துரை ஒத்திப் பணத்தைப் பெற்றுக் கொண்டு நிலத்தை விட்டு வெளியேற வேண்டுமெனத் தீர்ப்புக் கூறினர்.[14] இவ்வாறே சிங்கம்புணரி ஒன்றியம் வையாபுரிப்பட்டியைச் சேர்ந்த போஸ் என்பவர் தன்னுடைய நிலத்தை ஆக்கிரமிப்புச் செய்திருப்பதாக அதே ஊரைச் சேர்ந்த பெரியண்ணன் மீது வையாபுரிப்பட்டிக் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1999

ஆம் ஆண்டு ஆடிமாதம் 15ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தார். வழக்கினை விசாரித்த பஞ்சாயத்தார் நிலத்தை நேரில் பார்வையிட்டனர். பல வருடங்களாக சாகுபடி செய்யாமல் இருந்த அந்நிலத்தில் போஸ் வரிசையாகக் கல்த்தூண்களை ஊண்டியிருந்தார். பஞ்சாயத்தார் அந்தக் கல்த்தூண்களை உடனே பிடுங்கிப் போஸ் அவரது நிலத்திற்குள் ஊண்ட வேண்டுமென்றும், தவறினால் பஞ்சாயத்தார் நடவடிக்கை மேற்கொண்டு அபராதம் விதிப்பார்கள் என்றும் தீர்ப்புக்கூறினர்.[15] போஸ் ஒரு வாரத்திற்குள் அந்தக் கல்லுக்கால்களை அகற்றி விட்டார். இவ்வாறு நிலப்பிரச்சனை தொடர்பான வழக்குகளையும் வழக்கு மன்றங்கள் தீர்த்து வைத்துள்ளமையைக் காணமுடிகின்றது.

சிவகங்கை ஒன்றியம் கொட்டக்குடிக் கிராமத்தில் ஒரு தந்தையின் சொத்தைப் பங்கிடுவதில் அவருடைய மூத்த மகனுக்கும் நான்கு இளைய மகன்களுக்கும் பிரச்சினை ஏற்பட்டது. மூத்த மகன் முத்து என்பவர் தன்னுடைய தந்தையின் சொத்தை சமமாகப் பங்கிட்டுத் தருமாறு பஞ்சாயத்துத் தலைவரிடம் 1989 ஆம் ஆண்டு ஆடி மாதம் 10ஆம் தேதி முறையிட்டார். முத்துவின் தந்தை பதினைந்து வருடங்களுக்கு முன்னர் இறந்துவிட்டார். அவர் எழுதி வைத்த உயிலில் மூத்தவன் படித்துவிட்டு அரசாங்க வேலை பார்ப்பதால், மூத்தமகன் முத்துவிற்குச் சமமாகச் சொத்தைப் பங்கிட வேண்டாம் எனக் குறிப்பிட்டிருந்தார். பாகப் பிரிவினை தொடர்பாக முத்துவின் தந்தை எழுதி வைத்திருந்த உயில் மற்றும் பத்திரத்தின் படியே வழக்கு மன்றத்தார் தீர்ப்பை வழங்கினர்.[16] வழக்கு மன்றத்தாரின் அந்தத் தீர்ப்பினை முத்துவும் அவருடைய நான்கு சகோதரர்களும் ஏற்றுக் கொண்டனர்.

அதே கொட்டக்குடிக் கிராமத்தைச் சேர்ந்த சுந்தரம், கனகு, இருசகோதரர்களும் அவர்களது தம்பிமகன் சுப்பன் இறந்து விட்டதால் ஆண் வாரிசு இல்லாத அவர்களது பெரியப்பாவின் சொத்துக்கள் அனைத்தும் அவர்களுக்கே

சொந்தம் என்று கொட்டக்குடிக் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1990 ஆம் ஆண்டு ஆணி மாதம் 20ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தனர். ஆனால் சுப்பன் இறப்பதற்கு முன்னரே அவருடைய சொத்துக்கள் அனைத்தையும் அவருடைய ஒரே மகளான சாரதாவின் பெயரில் பதிவு செய்து வைத்துவிட்டார். கொட்டக்குடிக் கிராமப்பஞ்சாயத்துத் தலைவரும் பத்திரப் பதிவு அலுவலகத்திற்குச் சென்று கையெழுத்துப் போட்டுள்ளார். இதனைக் கேட்ட வாதிகளான சுந்தரமும் கனகும் பஞ்சாயத்துத் தலைவரிடம் அது செல்லாது என்று வாதிட்டனர். உடனே பஞ்சாயத்தார், 'பெண்ணுக்கும் சொத்துரிமையுண்டு,' ஆதலால் அவருடைய சொத்துக்கள் அனைத்தும் அவருடைய ஒரே மகள் சாரதாவிற்கே சொந்தம்.[17] எனத் தீர்ப்புக் கூறினர்.

மானாமதுரை ஒன்றியம் மானம்பாக்கிக் கிராமத்தைச் சேர்ந்த ஜெயக்குமார், மாரி ஆகிய இருவரும் அண்ணன் தம்பியர். அவர்களுக்குள் நிலம், வீடு ஆகிய சொத்துக்களைப் பாகப்பிரிவினை செய்வதில் பிரச்சனை ஏற்பட்டதால், ஜெயக்குமார் 10.05.1995 இல் மானம்பாக்கிப் பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தார். ஊர்ப்பஞ்சாயத்தார் நிலங்களைப் பாகப்பிரிவினை செய்யும் போது கோயிலில் சீட்டுக் குலுக்கிப்போட்டு எடுத்தனர். வீடு பாகப் பிரிவினை செய்யப்பட்ட போது மூத்தவனான ஜெயக்குமாருக்கு மேற்குப் பக்கத்தையும் இளையவனான மாரிக்குக் கிழக்குப் பக்கத்தையும் பஞ்சாயத்தார் பிரித்துக் கொடுத்தனர்.[18] அவர்கள் இருவரும் பஞ்சாயத்தார் தீர்ப்பை ஏற்றுக்கொண்டனர்.

கல்லல் ஒன்றியம் கள்ளம்பட்டிக் கிராமத்தைச் சேர்ந்த பஞ்சவர்ணம் என்பவர் தன் கணவன் தன்னுடைய சொத்தில் பாதியைத் தருவதாகக் கூறித் தன்னை இரண்டாம்தரமாகத் திருமணம் செய்து கொண்டார். தற்பொழுது தர மறுக்கின்றார். என்று தன்னுடைய கணவன் ஆண்டிக்காளை மீது கள்ளம்பட்டிப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1995 ஆம் ஆண்டு வைகாசி மாதம் 10 ஆம் தேதி வழக்குத்

தொடர்ந்தார். பஞ்சாயத்தாரிடம் ஆண்டிக்காளையின் மூத்ததாரத்தின் நான்கு பெண்களும் இரண்டாம்தாரமாகிய பஞ்சவர்ணத்திற்குச் சொத்து இல்லை என்று வாதிட்டனர். பின்னர் பஞ்சாயத்தார் கலந்து பேசி ஆண்டிக்காளை சொத்தில் பங்கு தருவதாகக் கூறியே பஞ்சவர்ணத்தை இரண்டாம்தாரமாக மணந்து கொண்டார் என்பதால், அவருடைய நான்கு பெண்களுடன் பஞ்சவர்ணத்தையும் சேர்த்து நிலம், வீடு உள்ளிட்ட அனைத்தையும் ஐந்து பங்காகப் பிரிவினை செய்து கொடுத்தனர்.[19] இத்தீர்ப்பினை ஆண்டிக்காளையின் நான்குபெண்களும் பிள்ளையில்லாத அவருடைய இரண்டாம் தாரமாகிய பஞ்சவர்ணமும் ஏற்றுக் கொண்டனர்.

பாகப்பிரிவினை

உரிமையியல் வழக்குகளில் பாகப்பிரிவினைப் பிரச்சனை குறித்தவைகளாக ஏழு வழக்குகள் கிடைத்துள்ளன.[20] கொட்டக்குடிக் கிராமத்தைச் சேர்ந்த அடக்கி என்பவர் தன் கணவன் கருப்பன் இறந்ததும் அவர் சொத்துக்கள் அனைத்தும் தனக்கே சொந்தமென்று 1990 ஆம் ஆண்டு ஐப்பசி மாதம் 10ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தார். பஞ்சாயத்தாரில் பலர் கருப்பனின் மூத்ததாரத்து மகள் வள்ளிக்குத்தான் சொத்துக்கள் உரியது என்றனர். கருப்பனின் இளையதாரமாகிய அடக்கி ஏற்கனவே திருமணமாகி ஒரு பெண் குழந்தையுடன் இருந்தார். அடக்கியைத் திருமணம் செய்து கொண்டான். இந்த விவரம் பஞ்சாயத்துத் தலைவருக்குத் தெரியுமாகையால், கருப்பனின் சொத்துக்களை இரண்டு பாகங்களாகப் பிரித்து அடக்கியின் மகள், வள்ளி ஆகிய இருவர் பெயரிலும் எழுதி அதில் இருபதுபேர்களிடம் கையெழுத்தும் வாங்கிக் கொடுத்தார்.[21] பஞ்சாயத்தார் தீர்ப்பை அடக்கியும் வள்ளியும் ஏற்றுக் கொண்டனர்.

திருப்புவனம் ஒன்றியம் திருப்பாச்சேத்தி கிராமத்தைச் சேர்ந்த எம்.சச்சிதானந்தம் பிள்ளையும் நாராயணபிள்ளையும் நிலம், வீடு ஆகியனவற்றைத் தன்னுடைய அண்ணன் கோட்டைச்சாமி என்பவர் அதிகமாக எடுத்துக் கொண்டு

விட்டார் எனவும், சரியாகப் பாகப்பிரிவினை செய்து வைக்க வேண்டுமெனவும் திருப்பாச்சேத்தி பஞ்சாயத்துத் தலைவரிடம் 1999 ஆம் ஆண்டு ஆடிமாதம் 14 ஆம் தேதி முறையிட்டனர். பஞ்சாயத்தார் வீட்டையும் நிலத்தையும் மூன்று பங்காகப் போட்டுச் சரியாக அளந்து சமமாகப் பாகப்பிரிவினை செய்து கொடுத்தனர்.[22] அதன் பின்னரும் இரண்டு வருடங்களாக அண்ணன் தம்பியர் சண்டையிட்டுக் கொண்டிருந்தனர். தற்பொழுது சமாதானமாக வாழ்ந்து வருகின்றனர்.

திருப்புவனம் ஒன்றியம் வாவியாரேந்தல் கிராமத்தைச் சேர்ந்த க. பெரியகருப்பன் என்பவர் தனக்கும் சி.பாண்டிக்கும் இருபது வருடங்களாக உள்ள நிலத் தாவாவினைத் தீர்த்துச் சமமாகப் பாகப் பிரிவினை செய்ய வேண்டுமென்று வாவியாரேந்தல் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1998 ஆம் ஆண்டு ஆடிமாதம் 21 ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தார். நிலப்பிரச்சனையில் சம்மந்தப்பட்ட க. பெரிய அடைக்கலம் உள்ளிட்ட நான்கு பேர்களையும் பஞ்சாயத்துத் தலைவர் விசாரித்து நிலத்தை அவர்கள் நான்கு பேர்களுக்கும் சமமாகப் பாகப் பிரிவினை செய்து கொடுத்தார்.[23] இருபது வருடங்களாகத் தீராத நிலப் பிரச்சனைகளும் கிராமப் பஞ்சாயத்துக்களில் தீர்க்கப்பட்டதன் மூலம் இதன் வலிமையை உணரலாம்.

மானாமதுரை ஒன்றியம் பச்சேரி கிராமத்தைச் சேர்ந்த துரைராசு, அம்மாப்பிள்ளை ஆகியோரின் மூன்று மகன்களும் தாங்கள் வாங்கி வைத்திருந்த வங்கிக் கடனையும் வட்டிக் கடனையும் கட்டாமல் 4½ ஏக்கர் நிலத்தையும் எடுத்துக் கொண்டார்கள் என்று பச்சேரிக் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 16.03.1998 குற்றஞ் சாட்டினர். பஞ்சாயத்தார் விசாரணையில் அவர்களது மூன்று மகன்களும் கடனைக் கட்ட மறுத்துவிட்டனர். மூன்று மகன்களில் ஒருவர் கூட இருந்த ஒரு ஏக்கர் நிலத்தை எடுத்துக் கொண்டு ரூபாய் 60,000 கொடுக்க மறுத்துவிட்டதாலும், கிராமத்தார்களில் யாரும் ஒரு ஏக்கர் நிலத்தை விலைக்கு வாங்க முன்வராததாலும், பச்சேரிக் கிராமப்பஞ்சாயத்துத் தலைவரே ஒரு ஏக்கர் நிலத்தை எடுத்துக் கொண்டு

ரூபாய் 60,000த்தைக் கொடுத்து அவர்களது கடனைக் கட்டினார். மீதமுள்ள நிலத்தில் ஒரு ஏக்கரையும் மோட்டார் கிணரையும் அவர்களது பெற்றோர்கள் உயிருடன் இருக்கும் வரையில் அவர்களுக்குச் சொந்தமெனவும் தீர்ப்புக்கூறினர்.[24]

தன்னிடம் நீதி கேட்டு வருபவர்களின் துயரங்களைத் தீர்த்து வைக்கும் பஞ்சாயத்துத் தலைவர்களையும் கிராமங்களில் காணமுடிகின்றது.

திருப்பத்தூர் ஒன்றியம் சிறுகூடல்ப்பட்டி கிராமத்தைச் சேர்ந்த வீரப்பணின் முதல் மனைவியாகிய லெட்சுமிக்கும் இரண்டாம் மனைவியாகிய மருதிக்கும் பாகப் பிரிவினை செய்வதில் ஏற்பட்ட பிரச்சனையைச் சிறுகூடல்ப்பட்டி பஞ்சாயத்துத் தலைவர் தீர்த்து வைத்துள்ளார்.[25] கல்லல் ஒன்றியம் வெற்றியூர் கிராமத்தைச் சேர்ந்த எஸ்.பி.ஆதப்பன், எஸ்.பி. வெள்ளைச்சாமி ஆகிய இருவரும் சகோதரர்கள். இவர்களில் அண்ணனாகிய எஸ்.பி ஆதப்பன் தனது சொத்துக்களைப் பாகப்பிரிவினை செய்து கொடுக்க வேண்டுமென்று வெற்றியூர் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 2000 ஆம் ஆண்டு பங்குனி மாதம் 28ஆம் தேதி முறையிட்டார். பஞ்சாயத்தார் தீர்ப்பின்படி அவர்களது அனைத்துச் சொத்துக்களும் இரண்டு பாகங்களாகப் பிரிக்கப்பட்டது.[26] பின்னர் சீட்டுப் போட்டுக் குலுக்கி எடுத்து நிலம், வீடு ஆகியனவற்றைப் பிரித்துக் கொண்டனர். பாகப்பிரிவினை தொடர்பான வழக்குகளையும் கிராம வழக்கு மன்றங்கள் தக்க முறையில் தீர்த்து வைத்துள்ளமையைக் காணமுடிகின்றது.

### வீட்டுமனைப் பிரச்சனை

கிராம உரிமையியல் வழக்குகளில் வீட்டுமனைப் பிரச்சனை குறைந்தவைகளாக மூன்று வழக்குகள் கிடைத்துள்ளன.[27] திருப்புவனம் ஒன்றியம் திருப்பாச்சேத்திக் கிராமத்தைச் சேர்ந்த காந்தி, ரெங்கன் ஆகிய இருவரும் தங்களது வீட்டுமனையில் வீடு கட்டவிடாமல் அதே ஊரைச் சேர்ந்த சங்கரலிங்கம் என்பவர்

அடிதடி, சண்டையில் ஈடுபட்டுத் தடுப்பதாக திருப்பாச்சேத்திக் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1997 ஆம் ஆண்டு ஆடி மாதம் 20ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தனர். பஞ்சாயத்துத் தலைவர் சங்கரலிங்கத்தை விசாரித்த பின்னர் வீட்டடிமனை அமைந்திருந்த இடத்தைநேரில் பார்வையிட்டார். பின்னர் பஞ்சாயத்தார் இடத்தைப் பிரித்துக் குச்சி அடித்து இனிமேல் சண்டை, அடிதடியில் ஈடுபட்டால் கிராமப் பஞ்சாயத்தார் கண்டிப்பான முறையில் மேல் நடவடிக்கை எடுப்பார்கள் எனச் சங்கரலிங்கத்தை எச்சரித்து.[29] அறிவுரை சொல்லி இருவரிடமும் எழுதி வாங்கிக் கொண்டு அந்த வீட்டுமனைப் பிரச்சனையைத் தீர்த்து வைத்துள்ளனர்.

திருப்பாச்சேத்திக் கிராமத்தைச் சேர்ந்த எஸ். சகாதேவன், ராமு ஆகிய இருவரும் வீடு கட்ட வானம் தோண்டிய பொழுது, அவர்களது பக்கத்து இடத்துக்காரரான தனசேகரன் என்பவர் பிரச்சனை செய்து அவர்களை வீடு கட்டவிடாமல் நிறுத்திவிட்டார். இருபத்தைந்து வருடங்களுக்குப் பின்னர் இவ்வழக்கினைத் தீர்த்து வைக்க வேண்டுமென்று எஸ்.சகாதேவனும் ராமும் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1999 ஆம் ஆண்டு ஆடி மாதம் வழக்குத் தொடர்ந்தனர். வழக்கினை விசாரித்த பஞ்சாயத்தார் இடத்தினை நேரில் பார்வையிட்டு வாதி, பிரதிவாதிகளின் பட்டாக்களை வாங்கிச் சரிபார்த்து, இடத்தைச் சமமாக அளந்து இடையில் பாதைக்கு இடம்போட்டு இனி இருதரப்பினரும் வீடு கட்டிக் கொள்ளலாம் எனத் தீர்ப்புக் கூறினர்.[29] இன்று அவர்கள் வீடு கட்டிக் கொண்டு பிரச்சனை இல்லாமல் வாழ்ந்து வருகின்றனர்.

திருப்பத்தூர் ஒன்றியம் இரணியூர்க் கிராமத்தைச் சேர்ந்த இராமகிருஷ்ணன் என்பவர் கிராமத்திற்குச் சொந்தமான பொது இடத்தில் ஊர்ப் பெரியவர்கள் தடுத்தும் கேட்காமல் வீடு கட்டியதால், அவரைக் கிராமத்தார் ஊரை விட்டு ஒதுக்கி வைத்து விட்டனர். 1996 ஆம் ஆண்டு இராமகிருஷ்ணன் மகள் திருமணத்தில் ஊரார்

யாரும் கலந்து கொள்ளக் கூடாது எனக் கிராமத்தார் முடிவெடுத்தனர். இராமகிருஷ்ணனின் வேண்டுதலால் 1996 ஆம் ஆண்டு ஐப்பசி மாதம் 13ஆம் தேதி கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. இராமகிருஷ்ணன் பஞ்சாயத்தாரிடம் தான் ஊர்ப் பொது இடத்தில் மூன்று அடியை ஆக்கிரமித்து வீடு கட்டியிருப்பது தவறு என்றும், தன்னை மன்னித்து அனைவரும் தன் மகள் திருமணத்திற்கு வரவேண்டுமெனவும் பஞ்சாயத்தார் முன்னிலையில் கும்பிட்டு விழுந்தார். பஞ்சாயத்தார் அவருக்கு 1001 ரூபாய் அபராதம் விதித்தனர்.[30] பின்னர் கிராமத்தார் அனைவரும் இராமகிருஷ்ணன் மகள் திருமணத்தில் கலந்து கொள்ளலாம் எனத் தீர்ப்பு கூறினர். இவ்வாறு வீட்டுமனைப் பிரச்சனை குறித்த வழக்குகளையும் சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்கள் தக்க முறையில் தீர்த்து வைத்துள்ளமையைக் காணமுடிகின்றது.

கொடுக்கல் வாங்கல் வழக்குகள்

பணம் கொடுக்கல்-வாங்கல் பிரச்சனை பற்றியவைகளாக நான்கு வழக்குகள் கிடைத்துள்ளன.[31] சிவகங்கை ஒன்றியம் இலுப்பக்குடி கிராமத்தைச் சேர்ந்த அடகன் என்பவர் தன் மூத்த மனைவியின் மகன் கோபால் வெளிநாடு செல்வதற்காக வெளியில் வட்டிக்கு வாங்கி ரூபாய் 60,000 கொடுத்துள்ளார். அந்தப் பணத்தைத் தன் மகன் திருப்பித்தர மறுக்கவே கோபாலிடமிருந்து வாங்கித் தரவேண்டுமெனவும் 1990 ஆம் ஆண்டு ஆடி மாதம் 10ஆம் தேதி இலுப்பக்குடி பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தார். பஞ்சாயத்தாரிடம் கோபால் தான் பணம் வாங்கியது உண்மையென்றும், தனக்குச்சரியான வேலை கிடைக்காததால் திரும்பிவிட்டதாகவும் தன்னிடம் தற்பொழுது பணம் இல்லை என்றும் கூறினர்.[32] பஞ்சாயத்தார் கலந்து பேசி கோபால் வீட்டையும் 50 செண்ட் நிலத்தையும் கடனுக்காகக் எழுதி வாங்கி, அதனை விற்றுக் கடனை அடைக்குமாறு அடகனிடம் ஒப்படைத்தனர்.

கல்லல் ஒன்றியம் செம்பனூர் கிராமத்தைச் சேர்ந்த மூர்த்தி என்பவர் வெளிநாட்டில் தங்கி வேலைபார்த்து வந்தார். அவர் தன் பங்காளியான காசி மகன் தட்சிணாமூர்த்தியிடம் ரூபாய் 1¼ லட்சத்தைக் கொடுத்து அதனைத் தன் தந்தையிடம் கொடுக்குமாறு அனுப்பினார். அந்தப் பணத்தைத் தச்சிணாமூர்த்தி ஆறுமுகத்திடம் கொடுக்கவில்லை. இதனையறிந்த ஆறுமுகம் செம்பனூர்க் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 2000 ஆம் ஆண்டு மார்கழி மாதம் 10ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தார். பஞ்சாயத்தாரிடம் தச்சிணாமூர்த்தி பணம் கொடுத்தது உண்மை யென்றும் ரூ.75,000 கொடுத்தனுப்பினார் என்றும் கூறினார் ஆறுமுகம் மூர்த்தியின் கடிதத்தைக் காட்டி ரூபாய் 1¼ லட்சம் தச்சிணாமூர்த்தி தர வேண்டும் என்றும் கூறினார். பஞ்சாயத்தார் தற்பொழுது தச்சிணாமூர்த்தி ஒத்துக்கொண்ட ரூ.75,000த்தையும் உடனே கட்டியாக வேண்டுமென்று தீர்ப்புக்கூறினர்.[33] தச்சிணாமூர்த்தி பணத்தைக் கொடுக்க இயலாததால் அவருடைய இடம், புஞ்சை ஆகியவைகளை ஈடாக எழுதிக் கையெழுத்து வாங்கி இருவருக்கும் ஆளுக்கொரு பிரதியைக் கொடுத்து வழக்கை முடித்தனர்.

கல்லல் ஒன்றியம் உலுகமங்கலம்பட்டி கிராமத்தைச் சேர்ந்த கருப்பையா என்பவர் வெளிநாடு சென்று வேலை செய்வதற்காகச் சுப்பிரமணியன் என்பவரிடம் பணம் கொடுத்தார். அவர் கருப்பையாவை வெளிநாட்டுக்கு வேலைக்கு அனுப்பாததால் தான் கொடுத்த பணத்தை மீட்டித்தருமாறு கருப்பையா உலுகமங்கலம்பட்டி கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 2000 ஆம் ஆண்டு மார்கழி மாதம் 10 ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தார். சுப்பிரமணியன் பஞ்சாயத்தாரிடம் கருப்பையாவிடம் பணம் வாங்கிய உண்மையை ஒப்புக் கொண்டார். பஞ்சாயத்துத் தலைவர் தமது தீர்ப்பில் ஒரு வார காலத்திற்குள் சுப்பிரமணியன் கருப்பையாவிடம் வாங்கிய பணத்தைக் திருப்பித்தர வேண்டுமெனக் கூறினார். தவறினால் அப்பணத்திற்கு வட்டிபோட்டு வசூலிக்கப்படும் என்றார்.[34] பஞ்சாயத்தார் தீர்ப்பினை

ஏற்றுச் சுப்பிரமணியன் பணத்தைக் கட்டிவிட்டார். பணம் கொடுக்கல்-வாங்கல், பண மோசடி குறித்த வழக்குகளையும் கிராம வழக்கு மன்றங்கள் உரிய முறையில் தீர்த்து வைத்துள்ளமையைக் காணமுடிகிறது.

**குற்றவியல் வழக்குகள்**

கிராம வழக்கு மன்றங்களில் குற்றவியல் வழக்குகளும் தீர்த்து வைக்கப்படுகின்றன. ஆய்வில் சேகரித்த குற்றவியல் வழக்குகளை,

அ) திருட்டு வழக்குகள்
ஆ) வெட்டுக் குத்து வழக்குகள்
இ) அடிதடி, சண்டை வழக்குகள்
ஈ) வாய்க்கால், ஊற்றுக்கால் தகராறு வழக்குகள்
உ) தோட்ட வேலைத் தகராறு வழக்குகள்
ஊ) முன்விரோத வழக்குகள்
எ) மானஇழப்பு வழக்குகள்
ஏ) தீ வைப்பு வழக்குகள்
ஐ) சாராய விற்பனை வழக்குகள்
ஒ) கொலை வழக்குகள்
ஓ) விபத்துப் பற்றிய வழக்குகள்
ஔ) பெண்ணைக் கடத்தல், பாலியல் வன்முறை பற்றிய வழக்குகள்,
ஃ) குடித்துவிட்டுத் தகராறு செய்தல் பற்றிய வழக்குகள்

என வகைமைப்படுத்தி ஆராயலாம். நீதிமன்றங்களில் குற்றவியல் வழக்குகளில் இடம்பெறும் அனைத்துப் பிரச்சனைகளும் கிராம வழக்குகளில் குற்றவியல் சிக்கல்களாக இடம் பெற்றுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

**திருட்டு வழக்குகள்**

குற்றவியல் வழக்குகளில் கோழித்திருட்டு, கடையை உடைத்துத் திருட்டு, பெட்டிக்கடையை உடைத்துத் திருட்டு, தண்ணீர் இறைக்கும் மோட்டார் திருட்டு,

வாழைக்காய்த் திருட்டு, மிளகாய்த் திருட்டு, நாற்றுத் திருட்டு, தென்னங் கன்று திருட்டு, மாடு திருட்டு, மீன் திருட்டு, பணம் திருட்டு. முதலான திருட்டுக்கள் பற்றியவைகளாகப் பன்னிரெண்டு திருட்டு வழக்குகள் கிடைத்துள்ளன.[35] சிவகங்கை ஒன்றியம் கொட்டக்குடிக் கிராமத்தைச் சேர்ந்த தொத்தன் என்பவர் தன்னுடைய கோழியைக் கருப்பன் என்பவர் திருடித்தின்றுவிட்டதாகக் கொட்டக்குடிக் கிராமப்பஞ்சாயத்துத் தலைவரிடம் 1997 ஆம் ஆண்டு பங்குனி மாதம் 5-ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தார். கருப்பன் தான் தொத்தன் கோழியைத் திருடவில்லை என்று பஞ்சாயத்தார் முன்னிலையில் தகராறு செய்தான். பஞ்சாயத்தார் கருப்பனிடம், நீ கோழியைத் திருடவில்லையென்றால் முனியாண்டி கோவிலில் வெள்ளைச் சேவலை அறுத்து இரத்தப் பொட்டு வைத்துத் திருட வில்லை எனச் சத்தியம் செய்தால் போதும்.[36] என்றனர். அதன் பின்னர் கருப்பன், தொத்தன் கோழியைத் திருடிய உண்மையை ஒத்துக் கொண்டான். பஞ்சாயத்தார் ரூபாய் 500 கருப்பனுக்கு அபராதம் விதித்தனர். கருப்பன் தன்னை மன்னிக்க வேண்டுமெனவும் பஞ்சாயத்தாரிடம் கும்பிட்டு விழுந்தான். பஞ்சாயத்தார் ரூபாய் 100 கிராமத்திற்கும் ரூபாய் 100 கோழிக்காரனுக்கும் செலுத்த வேண்டுமெனத் தீர்ப்புக் கூறினர்.

இளையாண்குடி ஒன்றியம் ஆமையனேந்தலைச் சேர்ந்த கருப்பையா என்பவர் தன்னுடைய கடையை உடைத்து நடுவலசைக் கிராமத்தைச் சேர்ந்த முனியாண்டியும் கடும்பலைக் கிராமத்தைச் சேர்ந்த கன்னியப்பனும் திருடிவிட்டதாக நடுவலசைக் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1995 ஆம் ஆண்டு மாசி மாதம் 13ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தார். பஞ்சாயத்தார் திருடிய இருவருக்கும் தலா முந்நூறு ரூபாய் அபராதம் விதித்தனர்.[37] சிங்கம்புணரி ஒன்றியம் பட்டமங்கலம் கிராமத்தார்கள் தமது கிராமத்திலுள்ள பொருள்களும் தண்ணீர் இறைக்கும் மோட்டாரும் திருடு போய்விட்டது என 1966 ஆம் ஆண்டு ஆனி மாதம் 25ஆம் நாள் பட்டமங்கலம் கிராமப்பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தனர்.

விசாரணையில் பிரான்மலை நாட்டைச் சேர்ந்த ஒருவன் அவற்றைத் திருடி ஆற்றில் புதைத்து வைத்துள்ளான் என்பது தெரியவந்தது. பிரான்மலை நாட்டுக்குப் பஞ்சாயத்தார் ஓலையெழுதி அனுப்பி விசாரித்தனர். குற்றவாளி குற்றத்தை ஒத்துக் கொண்டான்.[38] பஞ்சாயத்தார் திருடிய பொருள்களை மீட்டு அவற்றை உரியவர்களிடம் ஒப்படைத்தனர். ஆதலால், அவனை மன்னித்துத் திருந்தி வாழ வேண்டுமென அறிவுரை கூறிப் பஞ்சாயத்தார் அனுப்பி வைத்தனர். சிவகங்கை ஒன்றியம் அரசனூர் கிராமத்தைச் சேர்ந்த பொன்னப்பன் என்பவர் தன்னுடைய வயலிலுள்ள வாழைக்காயை ரமேஷ் திருடிவிட்டான் என்று அரசனூர் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1998 ஆம் ஆண்டு கார்த்திகை மாதம் ஐந்தாம் தேதி வழக்குத் தொடர்ந்தார். வழக்கினை விசாரித்த பஞ்சாயத்தார் ஆடுமேய்க்கும் ரமேஷ் சிறுவன் என்பதால் அவனை மன்னித்து[39] அறிவுரை கூறி அனுப்பி வைத்தனர்.

மானாமதுரை ஒன்றியம் புதுக்குளம் கிராமத்தைச் சேர்ந்த நாகராசு; கருப்பையா என்பவர் தன்னுடைய மிளகாய் மூட்டையைத் திருடிவிட்டார் எனப் புதுக்குளம் பஞ்சாயத்துத் தலைவரிடம் 21.04.1999 இல் முறையிட்டார். கருப்பையா நாகராசுவின் மிளகாயைத் திருடியது உண்மை என்பது சாட்சியுடன் நிரூபிக்கப்பட்டது. பஞ்சாயத்தார் கருப்பையா செய்தது தவறு என்றும், அவர் நாகராசுக்கு ரூபாய் 100 செலுத்த வேண்டுமென்றும் தீர்ப்புக்கூறினர்.[40] திருப்புவனம் ஒன்றியம் லாடனேந்தல் கிராமத்தைச் சேர்ந்த தென்னந் தோப்புக்காரர்கள் தென்னங்கன்றுகளைப் பல நாட்களாகத் திருடி வந்த வெள்ளைக்குட்டியைத் தண்டிக்க வேண்டுமென்று 1997 ஆம் ஆண்டு சித்திரை மாதம் 20ஆம் தேதி வழக்குத் தொடுத்தனர்.[41] வெள்ளைக்குட்டியை விசாரித்தனர். அவரும் தன் தவற்றை ஒப்புக் கொண்டார். பஞ்சாயத்தார் மூன்று மாதங்களுக்கு அவரை ஊரைவிட்டு ஒதுக்கி வைப்பதாகப் தீர்ப்புக் கூறினர்.

திருப்புவனம் ஒன்றியம் லாடனேந்தல் கிராமத்தைச் சேர்ந்த சுந்தரம் என்பவர் தன்னுடைய மாட்டை வேலாங்குளம் கிராமத்தைச் சேர்ந்த சிலர் திருடிவிட்டார்கள் என்று லாடனேந்தல் நாட்டுப்பஞ்சாயத்துத் தலைவரிடம் 1998 ஆம் ஆண்டு பங்குனி மாதம் 10 ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தார். வேலாங்குளம் கிராமத்தைச் சேர்ந்த வடிச்சதண்ணியும் அவனது மகனும் பஞ்சாயத்தாரால் விசாரிக்கப்பட்டனர். அவர்கள் சுந்தரம் மாட்டைத் தாங்கள் திருடியது உண்மையென்றும் அம்மாடு தஞ்சாவூரில் நிற்கின்றது என்றும் ஒத்துக் கொண்டனர்.[42] பஞ்சாயத்தார் அவர்களை உடன் அழைச்சுச் சென்று தஞ்சாவூலிருந்து மாட்டை மீட்டு வந்தனர்.

சிங்கம்புணரி ஒன்றியம் செலநீர் கண்மாயில் மீன்பிடித்ததாக அக்கிராமத்தார் எஸ்.வி.மங்களம் கிராமத்தைச் சேர்ந்த மூன்று பேர்கள் மீது எஸ்.வி. மங்களத்தைச் சேர்ந்த ஐந்து ஊர்ப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1998 ஆம் ஆண்டு ஆனி மாதம் 18 ஆம் தேதி வழக்குத் தொடுத்தனர். பஞ்சாயத்தார் மீன் பிடித்த மூன்று பேர்களுக்கும் தலா ரூபாய் 101 அபராதம் விதித்தனர்.[43] அவர்கள் அபராதத் தொகையைக் கட்டி விட்டுக் கிராமத்தார்கள் முன்னிலையில் கும்பிட்டு விழுந்து மன்னிப்புக் கேட்டனர்.

கல்லல் ஒன்றியம் நரியங்குடிக் கிராமத்தைச் சேர்ந்த முத்து என்பவர் மீது தன்னுடைய 10,000 ரூபாய்ப் பணத்தைத் திருடிவிட்டார் என்று அதே கிராமத்தைச் சேர்ந்த சோணை என்பவர் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1998 ஆம் ஆண்டு சித்திரை மாதம் 19ஆம் தேதி முறையிட்டார். பஞ்சாயத்தார்களிடம் முத்து பணத்தைத் திருடியதை ஒத்துக்கொண்டார்.[44] முத்தரையர் இனத்தைச் சேர்ந்த முத்துவும் சோணையும் நெருங்கிய உறவினர்கள் என்பதால் பஞ்சாயத்தார் முத்துவுக்கு அபராதம் போடாமல் ரூபாய்.10,000த்தையும் சோணைக்கு வாங்கிக் கொடுத்ததனர். முத்துவிற்கு அறிவுரைகூறிக் கண்டித்தனர். குற்றவியல் திருட்டு வழக்குகளையும் மாவட்ட கிராம மன்றங்கள் தக்க முறையில் தீர்த்து வைத்துள்ளமைக்கு இவ்வழக்குகள் சான்றுகளாகும்.

வெட்டுக்குத்து

கிராமத்தார் சிலர் உணர்ச்சி வசப்படும் நிலையில் தங்களிடமுள்ள ஆயுதங்களைக் கொண்டு எதிரியைத் தாக்குவதுண்டு. இத் தாக்குதல்களினால் பாதிக்கப்பட்டோர் நியாயம் வேண்டி இவ் வழக்கு மன்றங்களை நாடுவதுமுண்டு.

வெட்டுக்குத்து வழக்குகளில் மனிதனின் கையை வெட்டுதல், கால் நடைகளை வெட்டுதல். பற்றிய வழக்குகள் கிடைத்துள்ளன.[45] திருப்பாச்சேத்திக் கிராமத்தைச் சேர்ந்த சுப்பன் மகன் காந்தி என்பவரை அதே ஊரைச் சேர்ந்த முத்தையா என்பவர் முன்விரோதம் காரணமாகக் கையை வெட்டிவிட்டார். காந்தி இதனைக் கேட்டுக் கொடுக்க வேண்டுமென திருப்பாச்சேத்திப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 2000 ஆம் ஆண்டு சித்திரை மாதம் 10 ஆம் தேதி வழக்குத் தொடுத்தார். வழக்கு விசாரணையில் முத்தையா குற்றத்தை ஒப்புக் கொண்டு, பஞ்சாயத்துத் தலைவரிடம் காவல் நிலையத்திற்குச் செல்ல வேண்டாம் எனக் கேட்டுக் கொண்டார். பின்னர் பஞ்சாயத்துத் தலைவர் முத்தையாவை இனிமேல் இவ்வாறு நடந்து கொள்ளக்கூடாது என எச்சரித்து முத்தையாவுக்கு ரூபாய் 3000 அபராதம் விதித்துத் தீர்ப்புக்கூறினர்.[46] பஞ்சாயத்தார் அந்தப் பணத்தைப் பாதிக்கப்பட்ட காந்தியிடம் கொடுத்தனர்.

மானாமதுரை ஒன்றியம் சூரக்குளத்தைச் சேர்ந்த முத்துக்கருப்பன் என்பவருக்கும் அதே ஊரைச் சேர்ந்த வெள்ளை என்பவருக்கும் முன் விரோதம் இருந்து வந்தது. இந்நிலையில் முத்துக் கருப்பன் நான்கு ஆடுகளும் வெள்ளை என்பவரின் நெல் வயலில் மேய்ந்ததால், வெள்ளை மூப்பன் முத்துக்கருப்பனின் கால்களை வெட்டிவிட்டார். இதற்கு நியாயம் கேட்டுத் தருமாறு முத்துக்கருப்பன் சூரக்குளம் பஞ்சாயத்துத் தலைவரிடம் 03.11.2000-த்தில் முறையிட்டார். பஞ்சாயத்தார் வெள்ளை மூப்பனுக்கு ரூபாய் 500 அபராதம் விதித்தனர்.[47] ஆனால் முத்துக்கருப்பன் தனக்குப் பணம் வேண்டாம் என்றும், வெள்ளை மூப்பன்

திருந்தினால் போதுமென்றும் கூறியதால், அந்தப்பணத்தைக் கோயில் உண்டியலில் சேர்க்கும்படி பஞ்சாயத்தார் தீர்ப்புக் கூறினர்.

சிங்கம்புணரி ஒன்றியம் எஸ்.வி.மங்களத்தில் அனைத்து இனமக்களாலும் வணங்கப்படும் கருப்பு அய்யனார் கோயில்மாட்டை அடையாளம் தெரியாத யாரோ ஒருவர் வெட்டியதால் எஸ்.வி.மங்களம் பஞ்சாயத்துத் தலைவரிடம் பொது மக்கள் 1995 ஆம் ஆண்டு ஆவணி மாதம் 12ஆம் தேதி வழக்குத் தொடுத்தனர். கண்மாயில் கருவேல் நெற்று எடுத்துக் கொண்டிருந்த திருமணமாகாத இரண்டு பெண்கள் குற்றம் சாட்டப்பட்டனர். அவர்கள் கோயில் மாட்டைத் தாங்கள் வெட்டவில்லை என்று அழுதனர். பின்னர் கோயில் பூசாரியின் சாட்சியத்தின்படி ஆடுமேய்த்துக் கொண்டிருந்த சிங்காரம் என்பவன் கோயில்மாட்டை வெட்டிய உண்மை புலனாகியது.[48] பஞ்சாயத்தார் சிங்காரத்திற்கு அபராதம் போட்டனர். அவன் அடுத்த ஆண்டில் இறந்து விட்டான்.

காளையார்கோவில் ஒன்றியம் சாத்தரசன் கோட்டையைச் சேர்ந்த கருணாகரன் என்பவர் வெட்டிவிட்டதாக 1997 ஆம் ஆண்டு வைகாசி மாதம் மூன்றாம் நாள் சாத்தரசன் கோட்டைப் பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தார். பஞ்சாயத்தார்களிடம் கருப்பையா, கருணாகரனின் மாடு தன்னுடைய வைக்கோல் போரில் மேய்ந்த போது அடித்து விரட்டியதாகவும், தான் வெட்டவில்லையென்றும் கூறினார். பஞ்சாயத்தார் கருப்பையாவிடம் ஆடு, மாடு, கோழி, ஆகிய விலங்குகளுக்கு வேண்டியவன், சண்டைக்காரன் என்ற பாகுபாடு தெரியாது என்றும் அவற்றை அடிப்பதும் வெட்டுவதும் தவறு என்றும் அறிவுரை கூறினர்.[49] பின்னர் கருப்பையாவை இனிமேல் இவ்வாறு செய்தால் அபராதம் போடுவோம் என எச்சரித்து, இருவரையும் சமாதானம் செய்து அனுப்பிவைத்தனர்.

இதுபோன்ற வெட்டுக்குத்துத் தொடர்பான வழக்குகளையும் கிராம வழக்கு மன்றங்கள் அமைதியான முறையில் தீர்த்து வைத்துள்ளமையைக் காணலாம்.

அடிதடி சண்டை

*கிராமக் குற்றவியல் வழக்குகளில் இரண்டு ஊர்களுக்கிடையே நடைபெற்ற அடிதடி சண்டை பற்றி ஒரு வழக்குக் கிடைத்துள்ளது. மானாமதுரை ஒன்றியம் முக்குளம் கிராமத்தார்கள் தாங்கள் ஊர்க்காரர்களைப் பச்சேரிக் கிராமத்தைச் சேர்ந்தவர்கள் அவர்கள் ஊரில் நடைபெற்ற நாடகத்தன்று அடித்து விட்டார்கள் என்றும், தங்கள் ஊர்க்காரர்களின் கடிகாரம், துண்டு, சால்வைகளைப் பிடுங்கிக் கொண்டார்கள் என்றும் பச்சேரிக் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 08.06.1995 இல் வழக்குத் தொடர்ந்தனர். பச்சேரிக் கிராமத்திற்குச் சார்பாகப் பல ஊர்களைச் சேர்ந்த நாட்டுத் தலைவர்கள் கலந்து கொண்டனர். பஞ்சாயத்துத் தலைவர் இரண்டு கிராமத்தார் செய்த தவறுகளையும் விளக்கிப் பேசினார். பல நாட்களாக மாணவர்கள் படிக்கச் செல்லும் போது செய்த தகராறு தான் இரண்டு ஊர்ப் பிரச்சனையாக மாறியது தெரிய வந்தது.[50] பஞ்சாயத்தார் இரண்டு கிராமத்தார்களும் செய்தது தவறு என்றும், இரண்டு ஊர்க்காரர்களும் சமாதானமாகச் செல்ல வேண்டுமென்றும், மந்தையம்மன் கோயிலுக்கு விளக்கேற்ற இரண்டு கிராமத்தார்களும் தலா இருபத்தைந்து ரூபாய் செலுத்த வேண்டுமென்றும் பஞ்சாயத்துத் தலைவர் தீர்ப்புக்கூறினர். இரண்டு கிராமத்தார்களும் பஞ்சாயத்துத் தலைவர் தீர்ப்பினை ஏற்று அமைதியாகவும் சமாதானமாகவும் சென்றனர்.*

வாய்க்கால் ஊற்றுக்கால் தகராறு

*வாய்க்கால், ஊற்றுக்கால் தகராறுகள் பற்றியவைகளாக இரண்டு வழக்குகள் கிடைத்துள்ளன. மானாமதுரை ஒன்றியம் வேம்பத்தூரைச் சேர்ந்த முத்துச்சாமி என்பவர், அதே ஊரைச் சேர்ந்த அய்யாவு என்பவர் தனக்கு வாய்க்கால் விட மறுக்கின்றார் என வேம்பத்தூர் பஞ்சாயத்துத் தலைவரிடம் 19.01.1994 இல் வழக்குத் தொடர்ந்தார். முத்துச்சாமி பஞ்சாயத்துத் தலைவரிடம் தன் வயலுக்குத் தண்ணீர் செல்ல வாய்க்கால் இல்லையென்றும் அய்யாவு வயலில் சென்றால் தான் தண்ணீர்*

பாயும் என்றும் கூறினார். பஞ்சாயத்தாரிடம் அய்யாவு தன் வயலின் வழியாகத் தண்ணீர் விட முடியாது என்றார்.[51] பஞ்சாயத்தார் அய்யாவு நிலத்தில் ½ அடி அகலத்தில் சுற்றுப்பாதையில் வாய்க்கால் தோண்டி முத்துச்சாமி நிலத்திற்குத் தண்ணீர் பாய்ச்ச வேண்டுமென்றும் இதை இருவரும் மீறக்கூடாது எனவும் இருவரிடமும் எழுதி வாங்கிக் கொண்டு தீர்ப்புக் கூறினர். திருப்புவனம் ஒன்றியம் கானூர் வைகை ஆற்றில் ஊற்றுக்கால் வெட்டி நீர் பாய்ச்சியதைப் புதுக்குளம் கிராமத்தார் தடுத்தனர். இப்பிரச்சனையைத் தீர்த்து வைக்குமாறு கானூர் கிராமத்தார் லாடனேந்தல் நாட்டார் பஞ்சாயத்துத் தலைவரிடம் 15.01.2001 இல் முறையிட்டனர். அக்கூட்டத்தில் இரண்டு கிராமத்தார்களும் விசாரிக்கப்பட்டனர். லாடனேந்தல் நாட்டுப் பஞ்சாயத்துத் தலைவர் கானூர்க் கிராமம் ஊற்றுக்கால் வெட்டி நீர்ப்பாய்ச்சுவதைப் புதுக்குளம் கிராமம் தடுக்கக் கூடாது எனத் தீர்ப்புக் கூறினர்.[52] தீர்ப்பினை ஏற்றுக்கொண்ட புதுக்குளம் கிராமத்தார் அமைதியாகக் கலைந்து சென்றனர். விவசாயம் சார்ந்த வாழ்வியல் சூழலில் வாய்க்கால், ஊற்றுக்கால், தொடர்பான வழக்குகளையும் கிராம வழக்கு மன்றங்கள் நடத்தி பகைமையை வளரவிடாமல் அமைதியான முறையில் தீர்த்து வைத்துள்ளமையைக் காணலாம்.

### தோட்ட வேலைத் தகராறு

தோட்ட வேலைத் தகராறு பற்றியதாக ஒரு வழக்குக் கிடைத்துள்ளது. மானாமதுரை ஒன்றியம் முடிகண்டம் கிராமத்தைச் சேர்ந்த கள்ளர் இனமக்களும், மாத்தூர் கிராமத்தைச் சேர்ந்த அகமுடையார் இனமக்களும் தோட்டவேலைக்குச் சென்ற இடத்தில் மோதிக் கொண்டனர். இந்த மோதல் பெரும் சாதிக்கலவரமாக மாறியது. முடிகண்டம் கிராமத்தார் 10.04.1988 இல் நான்கு ஊர் நாட்டுத் தலைவரிடம் வழக்குத் தொடுத்தனர். நான்கு ஊர் நாட்டுப்பஞ்சாயத்தார் இருதரப்பினரையும் அழைத்து விசாரித்து[53] பின்னர் இருதரப்பினரும் அடைந்த

இழப்பிற்கு அவரவர்களே பொறுப்பு என்றும், இனிமேல் அவர்களுக்குள் பகைமையும் விரோதமும் வேண்டாம் என்றும் சமாதானம் செய்து அவர்களை அமைதிப்படுத்தினர். சமாதானத்ததை இரு கிராமத்தாரும் ஏற்றுக்கொண்டனர்.

முன்விரோதம்

முன் விரோதம் காரணமாகத் தகராறு நடந்தது பற்றி ஒரு வழக்குக் கிடைத்துள்ளது. காளையார்கோயில் ஒன்றியம் கள்ளிக்குடியைச் சேர்ந்த சுந்தராசன் என்பவர் தன்னைக் கோபாலும் அவருடைய சம்பந்தியும் சேர்ந்து அடித்து வீட்டையும் நொறுக்கி விட்டதாகக் கள்ளிக்குடிப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1995 ஆம் ஆண்டு கார்த்திகை மாதம் 4ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தார். சுந்தராசன் பஞ்சாயத்தாரிடம் கோபால் தன்னுடைய தங்கையின் கணவன் என்றும், அவர்தன் அக்கா மகளைப் பெண் கேட்டபோது தாய்மாமன் என்ற முறையில் அதனை மறுத்ததாகவும், ஆதலால் கோபால் தன் மீது முன்விரோதம் கொண்டார் எனவும் விளக்கினார். பின்னர் பஞ்சாயத்தார் கோபாலையும் ஊரில் நேரில் கண்ட சாட்சிகளையும் விசாரித்தனர்.[54] தவறு கோபால் மீது இருப்பதை உறுதி செய்து ரூ. 800 அபராதம் விதித்தனர். அதில் ரூபாய் 500 சுந்தராசனுக்கு இழப்புத் தொகையாகத் தரப்பட்டது. முந்நூறு ரூபாயைக் கிராமம் எடுத்துக்கொண்டது.

மான இழப்பு

மான இழப்புத் (செருப்பால் அடித்தல்) தொடர்பான வழக்கு ஒன்றும் கிடைத்துள்ளது. திருப்பத்தூர் ஒன்றியம் ஆத்திரம்பட்டியைச் சேர்ந்த வெள்ளைச்சாமி என்பவர், தன்னைச் செருப்பால் அடித்துவிட்டதாக வடகளத்தூர்க் கிராமத்தைச் சேர்ந்த விசயன் என்பவர் மீது வடகளத்தூர்ப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1998 ஆம் ஆண்டு வைகாசி மாதம் 10ஆம் தேதி முறையிட்டுள்ளார். விசயன் பஞ்சாயத்தாரிடம் வெள்ளைச்சாமி தன்னுடைய மைத்துனன் மனைவியைக்

கூட்டிக்கொண்டு சென்றதால், தான் அவரைச் செருப்பால் அடித்ததாகக் கூறினார். வெள்ளைச்சாமி பஞ்சாயத்தாரிடம், கணவனிடம் கோபித்துக் கொண்டு அவளது தாயார் வீட்டிற்குச் சென்ற அந்தப் பெண்ணைப் பாதுகாப்பாக அழைத்துச் சென்றதாகக் கூறினர்.[55] பின்னர் விசயன் உண்மை தெரியாமல் வெள்ளைச்சாமியைச் செருப்பால் அடித்துவிட்டதாகப் பஞ்சாயத்தார் முன்னிலையில் கும்பிட்டு விழுந்து மன்னிப்புக் கேட்டார். பஞ்சாயத்தார் விசயனுக்கு ரூபாய் 501 அபராதம்விதித்து இனிமேல் ஆழ்ந்து யோசிக்காமல் எந்தக் காரியத்தையும் செய்யாதே என அறிவுரை கூறி அனுப்பினர்.

**தீ வைப்பு**

வைக்கோல் போரில் தீ வைத்த வழக்கு ஒன்றும் கிடைத்துள்ளது. இளையான்குடி ஒன்றியம் பெரும்பாளைக் கிராமத்தைச் சேர்ந்த முத்துச்சாமி என்பவர் தனது வைக்கோல் போரில் அதே ஊரைச் சேர்ந்த சகாதேவனின் தாயார் தீ வைத்துவிட்டார் எனவும், அதனைக் கேட்டுத்தர வேண்டுமென்றும் பெரும்பாளைக் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1995 ஆம் ஆண்டு ஆடி மாதம் 10ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தார். பஞ்சாயத்தாரிடம் சகாதேவனின் தாயார் தனது குற்றத்தை மறுத்தார். ஆனால், சாட்சிகள் அவர் தீ வைத்ததை உறுதிப்படுத்தினர்.[56] பின்னர் பஞ்சாயத்தார் சகாதேவன் தாயாருக்கு ரூபாய் 200 அபராதம் விதித்துத் தீர்ப்புக் கூறினர்.

**சாராய விற்பனை**

'சாராய விற்பனை' பற்றிய வழக்கு ஒன்றும் கிடைத்துள்ளது. திருப்புவனம் ஒன்றியம் வாவியாரேந்தல் கிராமத்தைச் சேர்ந்த முத்து என்பவர் அதே ஊரைச் சேர்ந்த இராமையா என்பவர் பல நாட்களாகச் சாராயம் காய்ச்சி விற்று வருவதாகவும், அதைத் தடை செய்ய வேண்டுமென்றும் வாவியாரேந்தல்

பஞ்சாயத்துத் தலைவரிடம் 2000 ஆம் ஆண்டு புரட்டாசி மாதம் 10ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தார். சாராயம் விற்கக் கூடாது என்றும், கிராமக் கட்டுப்பாட்டை மீறிச் சாராயம் விற்றால் ஊரைவிட்டு வெளியேற்றுவோம் என்றும் தீர்ப்புக்கூறினர்.[57] இராமையா இன்று திருந்தி வாழ்ந்து வருகின்றார்.

**கொலை**

'கொலை' பற்றிய வழக்கு ஒன்றும் கிடைத்துள்ளது. சிவகங்கை ஒன்றியம் குமாரப்பட்டியைச் சேர்ந்த மாயழகு என்பவர் தன்னுடைய சகோதர்களை அடித்துக் கொன்ற நல்லுச்சாமி மீது கொலைக் குற்றம் சுமத்திக் குமாரபட்டிப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1967 ஆம் ஆண்டு ஆனிமாதம் 5 ஆம் தேதி வழக்குத் தொடர்ந்துள்ளார். மாயழகு பஞ்சாயத்தார்களிடம் ஆட்டுக் கிடையில் படுத்திருந்த தன்னுடைய சகோதர்களை நல்லுச்சாமி கட்டையால் அடித்துக் கொலை செய்து விட்டுத் தன்னையும் கொல்ல வரும்போது தான் தப்பித்து ஓடி வந்ததாகக் கூறினர். மேலும் விசாரணையில் நல்லுச்சாமி அவருடைய தந்தையையும் வீட்டு வேலைக்காரனையும் கொலை செய்து விட்டார் என்பதும் தெரியவந்தது. கொலையாளி மனநிலை சரியில்லாதவர் (பைத்தியம்) என்பதால் நல்லுச்சாமி குடும்பத்தார் குற்றத்தை ஏற்றுக் கொண்டனர்.[58] பின்னர் பஞ்சாயத்தார் 'பலித்தீர்ப்பு' என்ற முறையில் மாயழகுவிற்கு நல்லுச்சாமியின் ஒரு ஏக்கர் நிலத்தை எழுதி வாங்கிக் கொடுத்தனர். நல்லுச்சாமி நீதிமன்றத்தில் ஒப்படைக்கப்பட்டார். நீதிமன்றமும் மனநோயாளி என அவரை விடுதலை செய்தது. இங்கு வழக்கை விசாரிப்பவர்கள் நீதிமன்றத்திற்கு வழக்கை மேல்முறையீடு செய்தமை நோக்கத்தக்கது.

**விபத்து**

மாட்டுவண்டிமீது டிராக்டர் மோதியதால் ஏற்பட்ட விபத்து, சைக்கிள் மீது டிராக்டர் மோதியதால் ஏற்பட்ட விபத்து, வான்கோழியை டிராக்டர் அடித்துக் கொண்டது ஆகிய விபத்துக்கள் பற்றிய மூன்று வழக்குகள் கிடைத்துள்ளன.

மானாமதுரை ஒன்றியம் ஆவாரம்பட்டியைச் சேர்ந்தவர் டிராக்டர் தங்கராசு. அவர், பச்சேரிக் கிராமத்தைச் சேர்ந்த மாட்டு வண்டி மீது டிராக்டரை மோதச் செய்துவிட்டார். இதனால் மாட்டின்கால் முறிந்துவிட்டது. மாட்டுவண்டிக்காரர் தனக்கு நியாயம் கேட்டுத்தர வேண்டுமென 10.02.2002 இல் பச்சேரிக் கிராமப்பஞ்சாயத்துத் தலைவரிடம் முறையீடு செய்தார். வழக்கினை விசாரித்த பஞ்சாயத்துத் தலைவர் மாடு ரூபாய் 9500 க்கு வாங்கியது என்பதையும் மாட்டின்கால் ஒடிந்துவிட்டதால் மாட்டுக்காரரின் பிழைப்பிற்கு வழியில்லை என்பதையும் விளக்கினார்.[59] டிராக்டர் தங்கராசு மாட்டுவண்டிக்காரக்கு ரூபாய் 2500 இழப்பீடு தரவேண்டுமென்று தீர்ப்புக் கூறினர். திருப்புவனம் ஒன்றியம் திருப்பாச்சேத்தியைச் சேர்ந்த கோபி என்பவர் தான் சாலையில் சைக்கிளில் சென்று கொண்டிருந்தபோது சிறுகுடி விலத்திப்பிள்ளையின் டிராக்டர் ஓட்டுநர் டிராக்டரைத் தனது சைக்கிளில் மோத விட்டதால். தனது சைக்கிள் நொறுங்கி விட்டது என்று 1999 ஆம் ஆண்டு புரட்டாசிமாதம் 4ஆம் தேதி திருப்பாச்சேத்திப் பஞ்சாயத்துத் நலைவரிடம் வழக்குத் தொடர்ந்தார்.[60] வழக்கினை விசாரித்த பஞ்சாயத்தார் கோபியின் சைக்கிளுக்காகச் சிறுகுடி விலத்திப்பிள்ளை ரூபாய் 2000 இழப்புத் தொகை கொடுக்க வேண்டுமென்று தீர்ப்புக் கூறினர்.

சிங்கம்புணரி ஒன்றியம் முறையூரைச் சேர்ந்த பன்னையா என்பவர் தன்னுடைய வான்கோழியை மாதவன் என்பவர் டிராக்டரில் அடித்துக் கொன்று விட்டதாக முறையூர் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1995 ஆம் ஆண்டு ஐப்பசி மாதம் 10ஆம் தேதி முறையீடு செய்தார். வழக்கினை விசாரித்த பஞ்சாயத்துத் தலைவர் வாதி, பிரதிவாதி ஆகிய இருவரையும் சமாதானம் செய்ய முயன்றார்.[61] பன்னையா சமாதானத்தை ஏற்றுக்கொள்ளாததால், பஞ்சாயத்தார் வான்கோழியின் விலைமதிப்பு ரூபாய் 250 என்றும் அத்தொகையை மாதவன் பன்னையாவிற்குக் கொடுத்துவிட வேண்டுமென்றும் தீர்ப்புக் கூறினர்.

பாலியல் வன்முறை

பெண்ணைக் கடத்தல், பாலியல் வன்முறை பற்றிய வழக்குகள் கிடைத்துள்ளன.[62] கல்லல் ஒன்றியம் பாகனேரியைச் சேர்ந்த மணிவாசகம் பம்பாய்க்குப் பிழைக்கச் சென்ற பொழுது பம்பாயைச் சேர்ந்த ஹேமலதா என்ற வயசுக்கு வராத பெண்ணைக் கடத்திப் கொண்டு வந்துவிட்டார். அப்பெண்ணின் பெற்றோர்கள் பாகனேரி சாதிப்பஞ்சாயத்துத் தலைவரிடம் 1990 ஆம் ஆண்டு வைகாசி மாதம் 6 ஆம் தேதி வழக்குத் தொடுத்தனர். மதகுப்பட்டியில் சாதிப் பஞ்சாயத்து நடைபெற்றது. பஞ்சாயத்தார்களிடம் மணிவாசகம் வயசுக்கு வராத ஹேமலாதவை அவள் சம்மதத்துடன் தான், அழைத்து வந்ததாகக் கூறினார். ஹேமலதா பஞ்சாயத்தார்களிடம் 'தான் இங்கு வந்த ஒரு வாரத்தில் பெரிய பெண்ணாக ஆகிவிட்டதாகவும் மணிவாகத்துடன் தான் வாழ்வேன்' என்றும், தன் பெற்றோர்களுடன் செல்ல விரும்பவில்லை என்றும் கூறினாள்.[63] பஞ்சாயத்தார் அவர்கள் இருவருக்கும் திருமணம் செய்து வைத்தனர். சாதிப் பஞ்சாயத்தின் வலிமையை உணர்ந்த ஹேமலதாவின் பெற்றோர் காவல் நிலையத்திற்குச் செல்ல விரும்பவில்லை.

கல்லல் ஒன்றியம் கட்டக்கான்பட்டியில் முத்தரையர் இனத்தைச் சேர்ந்த முத்தாயி என்ற பெண்ணை அதே ஊரைச் சேர்ந்த முத்தையாக் கோனார் கெடுக்க முயன்றார் என அப்பெண் கட்டக்கான்பட்டி பஞ்சாயத்துத் தலைவரிடம் 2000 ஆம் ஆண்டு ஆடி மாதம் 25 ஆம் தேதி குற்றம் சாட்டினாள். வழக்கினை விசாரித்த பஞ்சாயத்தார் முத்தையாக் கோனார், பாலியல் வன்முறையில் ஈடுபட்டுக் கெடுக்க முயன்றார் என்ற உண்மை தெளிவாகத் தெரிகின்றது என்றும், ஆதலால் அவருக்கு ரூபாய் 5000 அபராதம் விதிக்கப்படுகின்றது என்றும் தீர்ப்புக் கூறினார்.[64] பஞ்சாயத்தார் சிங்கப்பூரிலிருந்த முத்தாயியின் கணவனுக்கும் இந்தத் தகவலைத்

தெரிவித்து வரவழைத்து அவனைச் சமாதானம் செய்து முத்தாயியுடன் வாழ வைத்தனர்.

திருப்புவனம் ஒன்றியம் கொத்தங்குளத்தைச் சேர்ந்த மோகன் என்பவர் தன் மனைவி வள்ளி மாடு மேய்க்கும்பொழுது, அதே ஊரில் வாழும் பறையர் இனத்தைச் சேர்ந்த அர்ச்சுனன் என்பவர் அவள் கையைப் பிடித்து இழுத்துத் தகாதமுறையில் நடந்து கொண்டார் என்று கொத்தங்குளம் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1998 ஆம் ஆண்டு கார்த்திகை மாதம் 25ஆம் தேதி வழக்குத் தொடுத்துள்ளார். வழக்கினை விசாரித்த பஞ்சாயத்தார் அருச்சுனனுக்கு ரூபாய் 5000 தண்டத்தொகை விதித்தனர்.[65] அவன் கிராமப் பஞ்சாயத்துச் சபையில் கும்பிட்டு விழுந்து தாங்காது என்றும், கிராமம் தன்னை மன்னிக்க வேண்டும் என்றும் மன்றாடினான். பஞ்சாயத்துத் தலைவர் இறுதியாக ரூபாய் 1500 கட்டிவிட வேண்டுமென்று தீர்ப்புக் கூறினர். பெண்ணைக் கடத்தல், பாலியல் வன்முறை தொடர்பான வழக்குகளில் கூடுதலான அபராதத் தொகையை விதித்துக் கடுமையாகக் குற்றவாளிகளைத் தண்டித்திருப்பதைக் காண முடிகின்றது.

குடி

குடித்து விட்டுத் தகராறு செய்தது பற்றி ஒரு வழக்குக் கிடைத்துள்ளது. இளையான்குடி ஒன்றியம் மறக்குளத்தைச் சேர்ந்த வெள்ளைச்சாமி என்பவர், கொண்ணக்குளத்தைச் சேர்ந்த கணேசன் என்பவர் இரவில் தான் சைக்கிளில் வந்து கொண்டிருந்தபொழுது குடிபோதையில் தன்னை அடித்து உதைத்துத் தன்னுடைய சைக்கிளையும் பிடுங்கிச் சென்றுவிட்டதாக மறக்குளம் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1995 ஆம் ஆண்டு சித்திரை மாதம் 3-ஆம் தேதி குற்றம் சாட்டியுள்ளார். பறையர் இனத்தைச் சேர்ந்த கணேசன் குடித்துவிட்டு யாருக்கும் கட்டுப்படாமல் பேசினார். பஞ்சாயத்தார் அவரைப் பஞ்சாயத்திற்குக் கட்டுப்படாமல் இருந்தால் காவல்துறையில் ஒப்படைத்து விடுவோம் என எச்சரித்தனர். அவர்

பஞ்சாயத்தாரிடம் நடந்த உண்மையை ஒத்துக் கொண்டு, குடிபோதையில் தெரியாமல் செய்து விட்டேன் எனக் கும்பிட்டு விழுந்து மன்னிப்புக் கேட்டார்.[66] பஞ்சாயத்தார் அவருக்கு ரூபாய் 3000 அபராதம் போட்டனர். அவர் 'தாங்காது' எனப் பலமுறை கும்பிட்டு விழுந்தார். இறுதியில் ரூபாய் 300 அபராதம் கட்ட வேண்டுமெனத் தீர்ப்புக் கூறினர்.

இவ்வாறு காலங்காலமாகக் கிராமப் பஞ்சாயத்துக்கள் மதிக்கப்பட்டு வருவதும், பஞ்சாயத்தார் அபராதமாக அதிகத் தொகையினை முதலில் விதிப்பதும், பின்பு அபராதம் செலுத்த வேண்டியவர் 'தாங்காது' என்று பஞ்சாயத்தார் காலில் விழுவதும் பின்பு பஞ்சாயத்தார் அபராதத்தைக் குறைப்பதும் சுட்டத்தக்கது.

குடும்ப வழக்குகள்

சமூக அமைப்பின் அடிப்படை நிறுவனம் குடும்பம். கிராமத்தில் விவசாயம் போன்ற கூட்டுச் சார்ந்த தொழில்களைச் செய்யும் சூழலில் கூட்டுக் குடும்ப முறை பெரிதும் உள்ளது. இக்குடும்ப உறுப்பினர்களிடையே சில சமயங்களில் போட்டி மனப்பான்மை, பொறாமை போன்றவற்றால் பிரச்சனைகள் எழுவதுண்டு. இது முற்றி, சண்டை, சச்சரவுகளாக மாறி குடும்பத் தகராறுகளாக மாறுவதுண்டு. இவ்விதத் தகராறுகள் வழக்கு மன்றங்களுக்கும் வருவதுண்டு.

கிராம வழக்கு மன்றங்களில் இத்தகைய குடும்பத் தகராறுகள் பற்றிய வழக்குகளும் தீர்த்துவைக்கப்படுகின்றன. சிவகங்கை மாவட்டத்தில் ஆய்வாளர் சேகரித்த குடும்ப வழக்குகளை அவ்வவற்றின் உள்ளடக்கச் செய்திகளை அடிப்படையாகக் கொண்டு,

1. திருமணச் சிக்கல்கள்
2. வரதட்சிணைப் பிரச்சனை
3. நடத்தையில் சந்தேகம்
4. மாமியார் மருமகள் மோதல்,

5. வாழ விருப்பமின்மை
6. ஆண், பெண்களின் ஒழுங்கீனம்
7. சோம்பேறித்தனம்
8. ஊதாரித்தனம்
9. குழந்தை இன்மை
10. பாலியல்
11. மண முறிவுகள் என வகைமைப்படுத்தி ஆராயலாம்.

1. **திருமணச் சிக்கல்கள்**

கிராம வழக்கு மன்றங்களில் வரும் குடும்ப வழக்குகளில் காதல், காதல் திருமணம், திருமணச் சிக்கல்கள் தொடர்பான வழக்குகள் கிடைத்துள்ளன.[67] திருப்புவனம் ஒன்றியம் திருப்பாச்சேத்தியைச் சேர்ந்த ஜெயபாரதி என்ற பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளுவதாக வாக்குக் கொடுத்துக் காதலித்து ஏமாற்றித் திருமணம் செய்து கொள்ள மறுத்துவிட்டார் கல்யாண குமார் என்ற இளைஞர். பாதிக்கப்பட்ட ஜெயபாரதி தனக்கு நியாயம் வழங்குமாறு திருப்பாச்சேத்திப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 2000 ஆம் ஆண்டு பங்குனி மாதம் 2ஆம் தேதி முறையிட்டார். கல்யாணகுமார் குடும்பத்தார் ஜெயபாரதி-கல்யாணகுமார் காதலை ஏற்றுக் கொள்ள மறுத்தனர். பஞ்சாயத்தார் இருகுடும்பத்தார்களையும் சமாதானப்படுத்தியும் அவர்கள் திருமணத்திற்கு ஒத்துக்கொள்ளவில்லை.[68] பின்னர்பஞ்சாயத்தார் கல்யாணகுமாரிடம் அந்தப் பெண்ணுடன் எந்தத் தொடர்பும் வைத்துக் கொள்ளக்கூடாது என எச்சரித்து அந்தப் பெண்ணை அவமானப் படுத்தப்பட்டுவிட்டதால் கல்யாணகுமார் அந்தப் பெண்ணிற்கு ரூபாய் 10,000 கொடுக்க வேண்டுமென்று தீர்ப்புக் கூறினர். இரு குடும்பத்தாரும் பஞ்சாயத்தார் முன்னிலையில் எழுதிக் கொடுத்தனர்.

மானாமதுரை ஒன்றியம் வேலூரைச் சேர்ந்த கருப்பையா என்பவரின் மகள் சின்னப் பொண்ணு காதலித்துத் திருமணம் செய்து கொண்டார். சின்னப்

பொண்ணுவின் தந்தை கருப்பையா அக்காதல் திருமணத்தை ஏற்றுக் கொள்ள முடியாது என்று 03.03.1999 இல் வேலூர் பஞ்சாயத்துத் தலைவரிடம் தெரிவித்தார். காதல் திருமணத்தை இருவர் குடும்பத்தார்களும் எதிர்த்தனர். இந்நிலையில் காதலர்கள் இருவரும் பஞ்சாயத்தார் முன்னிலையில் கும்பிட்டு விழுந்து நீங்கள் தான் எங்கள் காதலை ஏற்றுக் கொண்டு திருமணத்தை நடத்தி வைக்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டனர்.[69] பஞ்சாயத்தார் அவர்கள் இருவருக்கும் கோவிலில் திருமணம் செய்து வைத்தனர். ஆறுமாதங்களுக்குப் பின்னர் இரு குடும்பத்தார்களும் ஒன்று சேர்ந்து கொண்டனர்.

கல்லல் ஒன்றியம் மேல்குடியைச் சேர்ந்த வண்ணார் இனப்பெண் அமிர்தம் தங்கள் காதல் திருமணத்தைக் கண்டரமாணிக்கம் கள்ளர் இன இளைஞனின் பெற்றோர்கள் (காதலனின் பெற்றோர்கள்) எதிர்ப்பதாக நடுவிக்கோட்டை கீழயூர் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1999 ஆம் ஆண்டு புரட்டாசி மாதம் 23 ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தார். பஞ்சாயத்துத் தலைவர் இருசாதித் தலைவர்களையும் அழைத்துப் பேசினார். மாப்பிள்ளை வீட்டார் பெண்ணைத் தீர்த்து வைத்துவிடுமாறு வேண்டினர். பெண் வீட்டார் அப்பெண்ணிற்கு வாழ்வு வேண்டுமெனக் கூறி அழுதனர்.[70] பின்னர் பஞ்சாயத்தார் கலந்து பேசி காதல் திருமணம் செய்து கொண்ட இருவரையும் ஊரைவிட்டுச் சென்று பிழைத்துக் கொள்ளுமாறு தீர்ப்புக் கூறினர். இங்கு காதல் திருமணத்திற்குச் சாதி தடையாக இருப்பதைக் காணமுடிகின்றது.

தாழ்ந்த சாதி, ஏழைப்பெண் போன்றவர்களை உயர்சாதி இளைஞர்கள் ஆசை காட்டிக் கெடுப்பதும், பின் அவர்களை ஏற்றுக் கொள்ள மறுக்கும் நிலையில் பாதிக்கப்பட்டோர் வழக்கு மன்றங்களை நாடுவதுமுண்டு. பஞ்சாயத்தார் இவ்வகையான சாதியச் சிக்கல்கள் நிறைந்த வழக்குகளில் சில வேளைகளில் அளிக்கும் தீர்ப்பு ஆதிக்க மனப்பான்மையை வெளிப்படுத்துகின்றது. ஒரு சில

பஞ்சாயத்துக்களில் சாதியம் பஞ்சாயத்தின் சிறப்பைக் குறைத்து விடுவதையும் காண முடிகின்றது.

சிவகங்கை ஒன்றியம் பொன்னாகுளத்தைச் சேர்ந்த பாப்பாள் என்ற பறையர் இனப்பெண்ணை அதே ஊரைச் சேர்ந்த வளையர் இன இளைஞன் ஊரைவிட்டுக் கடத்திச் சென்று திருமணம் செய்து கொண்டான். இதனைக் கேட்டுத்தர வேண்டுமென்று பொன்னாகுளம் ஊர்ப்பொதுமக்கள் அனைவரும் சாதிப்பஞ்சாயத்துத் தலைவரிடம் 1990 ஆம் ஆண்டு வைகாசி மாதம் 6 ஆம் தேதி முறையிட்டு; ஊர்க் கௌவரத்தைக் காப்பற்ற அவர்கள் மீது தக்க நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று வேண்டினர். பஞ்சாயத்துத் தலைவர் சாதிய வழக்குப்படி ஊர்ப்பொது மக்கள் கருத்தைக் கேட்டுக் கொண்டு முத்து, பாப்பாள் ஆகிய இருவரையும் பிரியும் படிக் கூறினர்.[71] அவர்கள் இருவரும் மறுத்தனர். பஞ்சாயத்துத் தலைவர் சட்டப்படி அவர்கள் பதிவுத்திருமணம் செய்து கொள்ள வேண்டுமெனத் தீர்ப்புக் கூறினார். இருவரும் அதனையேற்றுப் பதிவுத் திருமணம் செய்து கொண்டனர்.

தற்பொழுது சில வழக்குகள் காவல்நிலையம், பதிவு அலுவலகம், வட்டாட்சியர் அலுவலகம், மாவட்ட ஆட்சியர், நீதிமன்றம் போன்றவற்றிற்கும் பஞ்சாயத்தாரால் பரிந்துரைக்கப்படுவதையும் காணமுடிகின்றது.

காளையார் கோவில் ஒன்றியம் கீரனூரைச் சேர்ந்த தனம் என்ற இடையர் இனப்பெண் அதே ஊரைச் சேர்ந்த பறையர் இளைஞனை ஊரைவிட்டுக் கூட்டிச் சென்றுப் பதிவுத் திருமணம் செய்து கொண்டார். அப்பெண்ணின் பெற்றோர்கள் தன் சாதிக்காரர்கள் துணையுடன் 1990 ஆம் ஆண்டு ஐப்பசி மாதம் 10 ஆம் தேதி கட்டாணிக் கிராமம் பஞ்சாயத்துத் தலைவரிடம் அவர்களைக் கூட்டி வந்தனர். தனம், நாட்டுப்பஞ்சாயத்துத் தலைவரிடம் 'தான் கர்ப்பமாக இருப்பதாகவும், தனக்குத் தன்

கணவன் தான் வேண்டுமென்றும், தாய் தந்தையார் தேவையில்லை என்றும் கூறினாள்'. தனத்தின் பெற்றோர்களும், சாதிக்காரர்களும் நாங்கள் கர்ப்பத்தைக் களைத்துக் கொள்கிறோம், தாழ்ந்த சாதிக்காரனிடம் எங்கள் பெண் வாழக்கூடாது என்றனர்.[72] பின்னர் பஞ்சாயத்தார் கலந்து பேசி பெண் அவள் பெற்றோர்களுடன் செல்ல மறுப்பதால் அவர்களை யாரும் தொந்தரவு செய்யக்கூடாது அவர்கள் சேர்ந்து வாழட்டுமெனத் தீர்ப்புக் கூறினர். இதுபோன்ற தீர்ப்புகளும் வழங்கப்பட்டு வருகின்றன. மதகுபட்டியைச் சேர்ந்த மணிவாசகம் என்ற பறையர் இளைஞன் கோமதி என்ற ஆசாரி இனப்பெண்ணைக் காதலித்துப் பதிவுத்திருமணம் செய்துகொண்ட வழக்கிலும் கிராம வழக்கு மன்றம் இதுபோன்ற தீர்ப்பினை வழங்கியுள்ளது.[73]

பஞ்சாயத்துக்களில் காதல் திருமணத்திற்கும், கலப்புத் திருமணத்திற்கும் சாதி பெரிதும் தடையாக இருப்பதை அறிய முடிகின்றது. குடும்ப வழக்குகளில் பெண்ணைக் கூட்டிக்கொண்டு ஓடித் திருமணம் செய்து கொண்டது பற்றியதாக எட்டு வழக்குகள் கிடைத்துள்ளன.[74]

சிவகங்கை ஒன்றியம் கொட்டக்குடியைச் சேர்ந்த கருப்பையா என்பவர் மகள் லெட்சுமியைப் பாண்டி என்பவர் கூட்டிக் கொண்டு ஓடிவிட்டார். இதனைக் கேட்டுத்தருமாறு கருப்பையா, கொட்டக்குடி பஞ்சாயத்துத் தலைவரிடம் 1989 ஆம் ஆண்டு பங்குனி மாதம் 20 ஆம் தேதி முறையிட்டார். கருப்பையா தன் மகளைத் தன்னிடம் ஒப்படைக்க வேண்டுமென்று பஞ்சாயத்தார்களிடம் வேண்டினர். லெட்சுமி பஞ்சாயத்தார்களிடம் தான்தன் தந்தையுடன் செல்ல விருப்பமில்லை என்றும், பாண்டியுடன் வாழவே விருப்பம் என்றும் கூறினாள். பாண்டியன் பெற்றோர்கள் அவ்விருவரையும் ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டனர். லெட்சுமியின் பெற்றோர் பாண்டியைக் கொலை செய்யத் திட்டமிட்டனர்.[75] இதனால்

பஞ்சாயத்தார் பாண்டி ,லெட்சுமி ஆகிய இருவரையும எங்காவது ஓடிச்சென்றுப் பிழைத்துக் கொள்ளுங்கள் என அனுப்பி வைத்தனர்.

மதுரை மாவட்டம் கோவளம்பட்டியில் இருந்த தன்மகள் வெள்ளையம்மாளைச் சிவகங்கை மாவட்டம் சிங்கம்புணரி ஒன்றியம் காலாப்பூரைச் சேர்ந்த அழகு என்பவன் கூட்டிக்கொண்டு ஓடிவிட்டதாகக் காலாப்பூர் பஞ்சாயத்துத் தலைவரிடம் வெள்ளையம்மாளின் தந்தை 18.6.2000-த்தில் வழக்குத் தொடர்ந்தார். பஞ்சாயத்துத் தலைவர் முதலில் பெண்ணின் வயதைக் கேட்டறிந்தார். வெள்ளையம்மாள் பஞ்சாயத்தாரிடம் தன் காதலன் அழகுடன் வாழவே தனக்கு விருப்பம் என்றாள்.[76] பஞ்சாயத்தார் கலந்து பேசி பெண்ணைத் தந்தையுடன் அனுப்ப முடியாது என்று கூறி பஞ்சாயத்தார்களே அவர்களுக்குத் திருமணம் செய்து வைத்தனர்.

கல்லல் ஒன்றியம் க. கோவில்பட்டியைச் சேர்ந்த ரஜினி என்பவர் தன்மகள் செல்வியைக் கூட்டிக்கொண்டு ஓடிவிட்டார் என்று செல்வியின் தந்தை கோவில்பட்டிப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 20.5.2000 அன்று வழக்குத் தொடர்ந்தார். செல்வி பஞ்சாயத்தாரிடம் 'தனக்குத் தன் கணவன்தான் வேண்டும்' என்றும் தன் தந்தையுடன் செல்ல முடியாது என்றும் கூறினாள்.[77] பின்னர் பஞ்சாயத்தார் கலந்து பேசி செல்விக்கும் அவள் கணவன் ரஜினிக்கும் பஞ்சாயத்தார் பாதுகாப்புத் தருவார்கள். இருவரும் கிராமத்தார் முன்னிலையில் திருமணம் செய்து கொள்ள வேண்டும் எனத் தீர்ப்பளித்தனர். இதே போன்று சிங்கம்புணரி ஒன்றியம் சூரக்குடியைச் சேர்ந்த வெள்ளைக்காளை என்பவர் தன் மகள் அரசியை முத்து என்பவன் கூட்டிக்கொண்டு ஓடி விட்டதாகக் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1999 ஆம் ஆண்டு ஆவணி மாதம் 5ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தார்.[78] விசாரணையில் முத்துவை விரும்பித்தான் வெள்ளைக்காளையின் மகள் அரசி

சென்றுள்ளாள் என்பதைத் தெரிந்துகொண்ட பஞ்சாயத்தார் அவர்கள் இருவருக்கும் கிராமத்தார் முன்னிலையில் திருமணம் செய்து வைத்தனர்.

சிங்கம்புணரி ஒன்றியம் செண்பகம்பேட்டைக் கிராமத்தைச் சேர்ந்த கள்ளர் இன இளைஞன், இரணியூர் கிராமத்தைச் சேர்ந்த மறவர் இனப்பெண்ணைக் கூட்டிக்கொண்டு ஓடிவிட்டான். இதன் காரணமாக, 1995 ஆம் ஆண்டு ஆவணி மாதம் 20 ஆம் தேதி கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார் முன்னிலையில் செண்பகம்பேட்டைக் கிராமத்தார் வேறு சாதியப் பெண்ணைத் தங்கள் கிராமத்து இளைஞன் கூட்டிக்கொண்டு ஓடியது தவறு என ஒப்புக் கொண்டனர்.[79] பின்னர் பஞ்சாயத்தார் அப்பெண்ணும் இளைஞனும் ஊருக்குள் இருக்கக்கூடாது எனத் தீர்ப்பளித்தனர். மாப்பிள்ளையின் பெற்றோர் ரூபாய் 100 அபராதம் செலுத்த வேண்டுமெனவும் தீர்ப்பளித்தனர்.

கல்லல் ஒன்றியம் எழுமாப்பட்டியைச் சேர்ந்த சோதி என்பவள் தன்னைத் தன் காதலன் வீரனுடன் சேர்த்து வாழவைக்க வேண்டுமென்று எழுமாப்பட்டிப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1999 ஆம் ஆண்டு மார்கழி மாதம் 25ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தாள். சோதி, வீரன் ஆகிய இருவரின் பெற்றோர்களும் அவர்களது காதல் திருமணத்திற்கு எதிர்ப்புத் தெரிவித்தனர். பஞ்சாயத்தார் ஊர்ப்பஞ்சாயத்துக் கூட்டத்தில் அவர்கள் இருவருக்கும் திருமணம் செய்து வைத்தனர்.[80] அவர்களை யாரும் எந்தத் தொந்தரவும் செய்யக்கூடாது எனவும் பஞ்சாயத்தார் கேட்டுக்கொண்டனர்.

கல்லல் ஒன்றியம் செவரக்கோட்டையைச் சேர்ந்த சித்ரா என்பவள் அதே ஊரைச் சேர்ந்த கருப்பையா என்ற இளைஞனுடன் ஊரைவிட்டு ஓடிவிட்டாள். அவர்கள் தங்கள் ஊருக்குள் நுழைய முடியாத சூழ்நிலையில் 2000 ஆம் ஆண்டு தை மாதம் 24ஆம் தேதி கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் முறையிட்டார்.[81]

பஞ்சாயத்தில் சித்ரா, கருப்பையா, ஆகிய இருவருக்கும் பஞ்சாயத்தார் முறைப்படி திருமணம் செய்து வைத்தனர்.

மானாமதுரை ஒன்றியம் பச்சேரிக் கிராமம் பள்ளர் இனத்தைச் சேர்ந்த காந்தி என்பவர் தன்னுடைய மகளை அதே ஊரைச் சேர்ந்த அகமுடையார் இனத்தைச் சேர்ந்த செகநாதன் என்பவர் கூட்டிக் கொண்டு ஓடிவிட்டார் எனவும் அவர்களைச் சேர்த்து வாழவைக்க வேண்டுமெனவும் பச்சேரிக் கிராமம் பஞ்சாயத்துத் தலைவரிடம் 15.05.1995 இல் வழக்குத் தொடுத்தார். காந்தி பள்ளர் இனத்தைச் சேர்ந்தவர். செகநாதன் ஏற்கனவே திருமணமானவர். அகமுடையர் இனத்தைச் சேர்ந்தவர். செகநாதன் மனைவியும் அவர்கள் குடும்பத்தாரும் இத்திருமணத்தை ஒத்துக் கொள்ள மறுத்தனர். பஞ்சாயத்தார் செகநாதன் ஏற்கனவே திருமணமானவர் எனத் தெரிந்தும் இந்தப் பெண் அவனுடன் சென்றது தவறு என்றும், எனவே, செகநாதன் இந்தப் பெண்ணிற்கு ரூபாய் 50,000 தந்துவிட வேண்டுமென்றும், இந்தப் பணத்தைக் கொண்டு அந்தப் பெண்ணை வேறிடத்தில் மணம் முடித்துக் கொடுக்க வேண்டும் என்றும் கூறினர்.[82] இந்தத் தீர்ப்பினைப் பெண் வீட்டார் ஏற்றுக் கொள்ளவில்லை. இன்று வரை பணத்தையும் பெற்றுக் கொள்ளவில்லை. தற்பொழுது அந்தப் பெண் காவல்துறையில் பணியாற்றி வருகின்றாள்.

இந்த வழக்கின் தீர்ப்பு ஏற்புடையதே ஆகும். திருமணமான ஆடவனுடன் பெண் ஓடியது தவறாகும். செகநாதன் ஏற்கனவே திருமணமானவர் எனத் தெரிந்தும் இந்தப் பெண் அவனுடன் சென்றுள்ளாள். பஞ்சாயத்தார் மனிதாபிமான அடிப்படையில் அந்தப் பெண்ணிற்கு ரூபாய் 50,000 இழப்பீடு வழங்க உத்தரவிட்டுள்ளனர். வேறிடத்தில் அந்தப் பெண்ணை மணம் முடித்துக் கொடுக்கவும் வழிவகை செய்து கொடுத்துள்ளனர். இந்த வழக்கின் தீர்ப்பைப் பெண் வீட்டார் ஏற்றுக் கொள்ளவில்லை, இழப்பீட்டுத் தொகையும் பெற்றுக்கொள்ளவில்லை. அந்தப் பெண் இன்றுவரை திருமணம் செய்து

கொள்ளாமல் காவல் துறையில் பணியாற்றி வருகின்றாள். இதற்கு அந்தப் பெண் மற்றும் பெண் வீட்டாரின் தன் முனைப்பே காரணமாகும். இவ்வாறு பஞ்சாயத்தார் தீர்ப்பை ஏற்றுக் கொள்ளாமல் காலம் தாழ்த்துபவர்களையும் காண முடிகின்றது.

**திருமணத்தடை**

தாய்மாமன் உறவுமுறை கொண்டாடிப் பெண்ணின் திருமணத்தைத் தடை செய்த வழக்கு ஒன்றும் கிடைத்துள்ளது. சிற்றூர்களில் பெண்களின் திருமணத்திற்குத் தாய்மாமன் ஒப்புதல் மிகவும் இன்றியமையாததாகும்.

சிவகங்கை ஒன்றியம் கொட்டக்குடிக் கிராமத்தைச் சேர்ந்த ஆனந்தம் என்பவர் தன்னுடைய மகள் முத்துலெட்சுமியின் திருமணத்தை முத்துலெட்சுமியின் மாமன்மகன் தடுப்பதாக 1985 ஆம் ஆண்டு மாசி மாதம் 17 ஆம் தேதி பஞ்சாயத்துத் தலைவரிடம் தெரிவித்தார். முத்துலெட்சுமி ஏற்கனவே திருமணமாகி விவாகரத்துப் பெற்றவள். அவளுக்குக் குழந்தையில்லை, முத்துலெட்சுமியின் மாமன்மகன் ஏற்கனவே திருமணம் ஆகிக் குடும்பமாக இருப்பவன் எனத் தெரிந்தும் முத்துலெட்சுமி அவனுடன் தொடர்பு வைத்திருந்ததாகவும், அவர்கள் இருவரும் யாருக்கும் தெரியாமல் மதுரை மீனாட்சியம்மன் கோவிலில் திருமணம் செய்து கொண்டதாகவும் தற்பொழுது முறைப்படி நடைபெறவுள்ள திருமணத்தைத் தடுத்து நிறுத்த வேண்டுமெனவும் முத்துலெட்சுமியின் மாமன் மகன் பஞ்சாயத்தாரிடம் கூறினான். பஞ்சாயத்தார் அவனிடம் திருமணம் செய்து கொண்டதற்கான ஆதாரத்தைக் கேட்டனர். அதற்கு அவன் பதில் அளிக்கவில்லை. பஞ்சாயத்தார் தீர்ப்பில் முத்துலெட்சுமியின் மாமன்மகனிடம் திருமணமான நீ இந்தத் திருமணத்தில் தலையிடக்கூடாது என்றும், அப்படி மீறி நீ தலையிட்டால் பஞ்சாயத்தார்கள் கடுமையாகத் தண்டிப்பார்கள் என்றும் எச்சரித்து முத்துலெட்சுமியின் திருமணத்திற்கு உதவினர். உறவுமுறை தொடர்பான வழக்குகளிலும் பஞ்சாயத்தார் தக்க தீர்ப்புகளை வழங்கி வந்துள்ளதை அறிய முடிகின்றது.

காதலியைத் திருமணம் செய்து கொள்ள மறுத்து ஏமாற்றுதல்

*கிராம வழக்கு மன்றங்களில் வரும் குடும்ப வழக்குகளில் காதலியைத் திருமணம் செய்து கொள்ள மறுத்தல்/ஏமாற்றுதல் பற்றியவைகளாக ஐந்து வழக்குகள் அமைந்துள்ளன.*[84]

*சிவகங்கை ஒன்றியம் வீழனேரியைச் சேர்ந்த ராக்கு என்பவள் அதே ஊரைச் சேர்ந்த ஆனந்து என்பவர் தன்னைக் காதலித்து ஏமாற்றிவிட்டுத் திருமணம் செய்து கொள்ள மறுக்கின்றார் எனச் சாதிப்பஞ்சாயத்துத் தலைவரிடம் 1995 ஆம் ஆண்டு மார்கழி மாதம் 16 ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தாள். பஞ்சாயத்தார்களிடம் ராக்கு தான் கர்ப்பமாக இருப்பதாகவும், தன்னை ஆனந்து திருமணம் செய்து கொள்ள மறுக்கின்றார் எனவும் தன்னை ஆனந்துக்கு மணம் முடித்து வைக்க வேண்டுமெனவும் அழுதாள். ஆனந்து அவளுடைய கர்ப்பத்துக்குத் தான் காரணமில்லை என்றான். பஞ்சாயத்தார் ஊர்க்காரர்களை விசாரித்ததில் ராக்கும் ஆனந்தும் காதலித்தது உண்மை என்று புலனாகியது.*[85] *பின்னர் பஞ்சாயத்தார் கலந்து பேசி ஆனந்து ராக்குவைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும் எனவும் வேறு யாரும் அவனுக்குப் பெண் கொடுக்கக்கூடாது எனவும் தீர்ப்புக் கூறி ராக்குவை ஆனந்துக்குத் திருமணம் முடித்து வைத்தனர்.*

*சிவகங்கை ஒன்றியம் கண்டாங்கிப்பட்டியைச் சேர்ந்த இராமன் மகள் சாந்தி என்பவள், பழனி என்பவர் தன்னைத் திருமணம் செய்து கொள்வதாகக் கூறி காதலித்து ஏமாற்றிவிட்டார் என்று பஞ்சாயத்துத் தலைவரிடம் 1992 ஆம் ஆண்டு வைகாசி மாதம் 27 ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தார். சாந்தி பஞ்சாயத்தார்களிடம் பழனி என்னைத் திருமணம் செய்துகொள்வதாகச் சத்தியம் செய்தார். அன்று முதல் என்னுடன் உறவும் வைத்துக் கொண்டார். என்னைக் கர்ப்பிணி ஆக்கி விட்டுத் திருமணம் செய்து கொள்ள மறுக்கின்றார் என்று அழுதாள், குற்றம் சாட்டப்பட்ட பெரியகருப்பன் மகன் பழனி கர்ப்பிணிப் பெண் சாந்தியை மணந்து கொள்ள*

முடியாது என்றான்.[86] பின்னர் பஞ்சாயத்தார் கலந்து பேசி பக்கத்திலுள்ள கோவிலில் இருவருக்கும் திருமணம் செய்து வைத்தனர்.

சிற்றூர்களில் திருமணம் செய்து கொள்வதாகச் சத்தியம் செய்து, இளம் பெண்களை இளைஞர்கள் கர்ப்பிணி ஆக்கிவிட்டுப் பின் திருமணம் செய்து கொள்ள மறுப்பதும் உண்டு. அவ்வாறு பாதிக்கப்பட்ட இளம்பெண்கள் வழக்கு மன்றத்தை நாடும் போது பஞ்சாயத்தார் சிற்றூர் கோவில்களில் அவர்களுக்குத் திருமணம் செய்து வைக்கின்றனர். அப்பெண்களின் வாழ்க்கைக்குப் பாதுகாப்புக் கொடுக்கின்றனர்.

காளையார் கோவில் ஒன்றியம் நெடுங்குளத்தைச் சேர்ந்த அந்தோணி அம்மாள் என்பவள்; பாஸ்கரன் என்பவர் தன்னைக் காதலித்து ஏமாற்றிவிட்டதாக நெடுங்குளம் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1998 ஆம் ஆண்டு மார்கழி மாதம் 8ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தாள். பஞ்சாயத்தார்களிடம் பாஸ்கரன் அந்தப் பெண்ணுக்கும் தனக்கும் எந்தத் தொடர்பும் இல்லை என்று கூறினான். சாட்சியாக வந்த சிறு பையன் அவர்கள் உறவை வெளிப்படுத்தினான்.[87] பஞ்சாயத்தார் அவர்களுக்குத் திருமணம் செய்து வைத்தனர். பின்னர் ஒருவாரம் கழித்து வேறு பஞ்சாயத்தாரை வைத்துப் பாஸ்கரன் அந்தோணி அம்மாளைத் தீர்த்து விட்டுச் சிங்கப்பூர் சென்று விட்டான். கர்ப்பமான அந்தப் பெண் வேறு ஆடவனைத் திருமணம் செய்து கொள்ளவில்லை.

மானாமதுரை ஒன்றியம் மேலப்பிடாவூரைச் சேர்ந்த பஞ்சு என்பவள் வேலைக்குச் சென்ற இடத்தில் சேகர் என்பவர் அவளைக் காதலித்து ஏமாற்றிவிட்டார். பாதிக்கப்பட்ட பஞ்சு 05.10.2000 அன்று மேலப்பிடாவூர் பஞ்சாயத்துத் தலைவரிடம் தனக்கு நியாயம் கிடைக்க வேண்டுமென்று முறையிட்டாள். சேகர் பஞ்சாயத்தார் முன்னிலையில் பஞ்சுவைக் காதலித்தது உண்மையென ஒத்துக் கொண்டார்.[88] பஞ்சாயத்தார் அவர்கள் இருவரையும்

மானாமதுரை 'ஆனந்தவள்ளி அம்மன்' கோவிலுக்கு அழைத்துச் சென்று திருமணம் செய்து வைத்தனர்.

வரதட்சிணை

கிராம வழக்கு மன்றங்களில் கணவன் மனைவியிடம் வரதட்சிணை கேட்டது பற்றி மூன்று வழக்குகள் கிடைத்துள்ளன. காளையார் கோவில் ஒன்றியம் சித்தாலங்குடியைச் சேர்ந்த பஞ்சவர்ணம் என்பவள் தன்னுடைய கணவன் செல்லப்பாண்டி தன்னிடம் வரதட்சிணை கேட்டுக் கொடுமைப்படுத்துவதாகப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1997 ஆம் ஆண்டு ஆனிமாதம் 10ஆம் தேதி முறையீடு செய்தாள். செல்லப்பாண்டி பஞ்சாயத்தார்களிடம் தன் மனைவி அடிக்கடி உறவினர் வீடுகளுக்குச் சென்று விடுவதாகவும், தன்னுடன் வாழ அவளுக்கு விருப்பமில்லை என்றும் தெரிவித்தார். பஞ்சவர்ணம் கணவன்-மனைவியர் தகராறைப் பயன்படுத்திக் கொண்டு அடிக்கடி உறவினர் வீடுகளுக்குச் சென்ற உண்மையைப் பஞ்சாயத்தார் அறிந்தனர்.[89] பஞ்சாயத்தார் தமது தீர்ப்பில் அன்றிலிருந்து பஞ்சவர்ணம் ஆறுமாதங்களுக்கு யார் வீட்டுக்கும் செல்லக்கூடாது என்று உத்தரவு போட்டனர். அத்துடன் அவள் கணவன் சொல்லைக் கேட்டு நடந்துகொள்ள வேண்டுமென அறிவுரையும் கூறினர். கணவனுக்கும் இனிமேல் மனைவியை அடித்து விரட்டக்கூடாது எனவும், சீர் கொண்டு வரவில்லை எனப் பேசக்கூடாது எனவும் கட்டளையிட்டுக் கண்டித்தனர்.

இளையாண்குடி ஒன்றியம் சீத்தூரணியைச் சேர்ந்த பஞ்சவர்ணம் என்பவள் தன்னுடைய கணவன் மகேஸ்வரன் திருமணமாகிப் பத்து வருடத்திற்குப் பின்னரும் தன்னிடம் சொத்தும் பணமும் கேட்டுத் துன்புறுத்துகின்றார் எனப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1997 ஆம் ஆண்டு ஆனிமாதம் 6ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தாள்.[90] குற்றச்சாட்டு உண்மையெனத் தெரிந்து கொண்ட பஞ்சாயத்தார் கணவன் மகேஸ்வரனிடம் இனிமேல் வரதட்சிணை கேட்டு மனைவியை அடிக்கக்கூடாது

எனவும், அவ்வாறு செய்தால் அவனைக் காவல் நிலையத்தில் கிராமத்தார் ஒப்படைப்பார்கள் எனவும் எச்சரித்துத் தீர்ப்புக் கூறினர்.

சிற்றூர்களில் குற்றவாளிகள் காவல்துறையினரைக் கண்டுப்பெரிதும் அச்சமடைகின்றனர். உண்மையில் கிராம வழக்குமன்றத்தினர் சில வழக்குகளில் இவ்வாறு காவல் துறையைச் சுட்டிக்காட்டிக் குற்றவாளியை மிரட்டும் போக்கும் உண்டு. ஆதலால் காவல் நிலையம் பஞ்சாயத்தை விட உயர்ந்த மன்றம் எனப் பொருள்படுகின்றது.

சிவகங்கை ஒன்றியம் வைரம்பட்டியைச் சேர்ந்த லெட்சுமி என்ற பெண் கோவானூரைச் சேர்ந்த பாண்டி என்பவரை மணந்தாள். பாண்டி, லெட்சுமியிடம் வரதட்சணை கேட்டுத் துன்புறுத்தியதால் லெட்சுமி கோவானூர் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1999 ஆம் ஆண்டு மாசி மாதம் 5ஆம் தேதி முறையீடு செய்தாள்.[91] பஞ்சாயத்துத் தலைவர், லெட்சுமியின் குடும்பம் ஏழ்மையான 'தென்றும், அவர்களால் ஒன்றும் செய்ய முடியாது என்றும் பாண்டியிடம் கூறினர். பாண்டி லெட்சுமியுடன் வாழ விருப்பமில்லை என்றார். பஞ்சாயத்தார் இருவரும் பிரிந்து சென்று வேறுதிருமணம் செய்து கொள்ளலாம் எனத் தீர்ப்புக் கூறினர். அவர்கள் இருவரும் பிரிந்துவிட்டனர்.

### நடத்தையில் சந்தேகம்

மனைவி நடத்தையில் கணவனும், கணவன் நடத்தையில் மனைவியும் சந்தேகம் கொள்வதனால் குடும்ப அமைப்புச் சிதைவடைவதைக் காணமுடிகின்றது.

திருப்புவனம் ஒன்றியம் வாவியாரேந்தல் பூமாரி என்பவள் மூன்று குழந்தைகளுக்குத் தாயானபின்னர் தன் கணவன் மனோகரனுடன் சேர்ந்து வாழ முடியாது என்று 2000 ஆம் ஆண்டு வைகாசி மாதம் 27 ஆம் தேதி வாவியாரேந்தல் பஞ்சாயத்துத் தலைவரிடம் முறையிட்டாள்.[92] பஞ்சாயத்தார் விசாரணையில் பூமாரி நடத்தை கெட்டவள் என்பது தெரிந்தது. பஞ்சாயத்தார் அப்பெண்ணைக்

கண்டித்துப் பிள்ளை பெற்ற பின்னும் இவ்வாறு நடந்து கொள்ளக்கூடாது என எச்சரித்து அவர்களைச் சமாதானம் செய்து வாழவைத்தனர்.

கல்லல் ஒன்றியம் செம்பனூரைச் சேர்ந்த நாடிமுத்து என்பவள் தன் கணவன் வேலாயுதம் தன் நடத்தையில் சந்தேகப்பட்டுக் கொடுமைப்படுத்துகின்றான் என பஞ்சாயத்துத் தலைவரிடம் 2001 ஆம் ஆண்டு சித்திரை மாதம் 20ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தாள்.[93] பஞ்சாயத்தார். அவர்களுக்குப் பிள்ளைகள் இருப்பதால் வேலாயுதம் மனைவியைச் சந்தேகப்பட்டுக் கொடுமைப்படுத்துவது தவறு என்று அறிவுரை சொல்லி அவர்களைச் சமாதானப்படுத்தி வாழவைத்தனர்.

சிங்கம்புணரி ஒன்றியம் முறையூரைச் சேர்ந்த பீர்முகமது என்பவர் தன் மனைவியின் நடத்தையின் மீது ஐயப்பட்டு அடிக்கடி சண்டை போட்டார். இதனால் அவர் மனைவித் தாய் வீட்டிற்குச் சென்றுவிட்டாள். பீர்முகமது தன் மனைவி தன்னுடன் வந்து வாழ வேண்டுமென முறையூர் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1998 ஆம் ஆண்டு புரட்டாசி மாதம் 5 ஆம் தேதி முறையிட்டார். வழக்கினை விசாரித்த பஞ்சாயத்துத் தலைவர் சத்தியமூர்த்தி, பீர்முகமது ஒரு சந்தேகப் பேர் வழி என்பதைத் தெரிந்து கொண்டார்.[94] பஞ்சாயத்துத் தலைவர், பீர்முகமது இனிமேல் ஒழுங்காகக் குடும்பம் நடத்த வேண்டுமென்றும், மீறினால் தீர்த்து வைத்துவிடுவோம் என்றும் அவருக்கு அறிவுரை சொல்லி அவர்களைச் சேர்ந்து வாழ வைத்தனர்.

சிங்கம்புணரி ஒன்றியம் சூரக்குடியைச் சேர்ந்த இருளி என்பவளின் கணவன் வெள்ளையன் அவளுடைய நடத்தையில் ஐயப்பட்டு அவளை அடித்துத் துன்புறுத்தினான். வெள்ளையன் மனைவி சுருளி பஞ்சாயத்துத் தலைவரிடம் 1991 ஆம் ஆண்டு ஆடிமாதம் 10 ஆம் தேதி தனக்கு நியாயம் வேண்டுமென முறையிட்டாள். வெள்ளையன் தனது குற்றத்தைப் பஞ்சாயத்தாரிடம் ஒப்புக் கொண்டான்.[95] குற்றவாளி தனது குற்றத்தை ஒப்புக் கொண்டதால் பஞ்சாயத்தார்

அவரை மன்னித்து, இனிமேல் இருவரும் சேர்ந்து வாழ வேண்டுமென்று அவர்களுக்கு அறிவுரை கூறி அவர்களைச் சேர்ந்து வாழ வைத்தனர்.

சிவகங்கை ஒன்றியம் பாப்பாகுடியைச் சேர்ந்த அழகி என்பவள் தான் தன் கணவனுடன் வாழ விரும்பவில்லை என்றும், விவாகரத்துச் செய்து வைக்கும்படியும் 1995 ஆம் ஆண்டு வைகாசி மாதம் 5ஆம் தேதி முறையிட்டாள்.[96] அழகியின் கணவன் இராமன், பஞ்சாயத்தார்களிடம் தன் மனைவி தன்னுடன் ஒழுங்காக வாழவில்லை. அடிக்கடி அவள் அப்பன் வீட்டிற்குச் சென்று விடுகின்றாள் என்று கூறினான். அழகி பஞ்சாயத்தார்களிடம் அவர் என்னைச் சந்தேகப்படுகின்றார். அடித்துக் கொடுமைப்படுத்துகின்றார். நான் அவருடன் வாழ விரும்பவில்லை என்றாள். வழக்கினை விசாரித்த பஞ்சாயத்தார் ரூ.12,000 பெண்ணிற்குத் தீர்வை வாங்கிக் கொடுத்து அப்பெண்ணை விவகாரத்துச் செய்து வைத்தனர்.

கல்லல் ஒன்றியம் நரியங்குடி செல்வராசு என்பவர் தன்னுடைய மனைவி பாண்டியம்மாளின் நடத்தை சரியில்லையென 1999 ஆம் ஆண்டு வைகாசி மாதம் 6 ஆம் தேதி வழக்கு மன்றத்தில் முறையீடு செய்தார். விசாரணையில் பாண்டியம்மாள் அவள் கொழுந்தனுடன் தொடர்பு வைத்திருந்தது தெரிய வந்தது.[97] பஞ்சாயத்தார் அவள் கொழுந்தனை வெளிநாட்டிற்கு வேலைக்கு அனுப்பி வைத்தனர். தற்பொழுது பாண்டியம்மாளும் அவள் கணவன் செல்வராசும் மகிழ்ச்சியாகக் குடும்பம் நடத்தி வருகின்றனர்.

கணவன், மனைவியின் நடத்தையில் ஐயப்படுவதும், மனைவி கணவனின் நடத்தையில் ஐயப்படுவதும், கணவர்-மனைவி குடும்பச் சண்டைக்குக் காரணமாக அமைந்துள்ளன. கிராம வழக்கு மன்றத்தார் அவர்களைச் சமாதானப்படுத்திக் கண்டித்தும் தக்க அறிவுரை வழங்கியும் சேர்த்து வாழ வைக்கின்றனர். தவிர்க்க இயலாத சில காரணங்களினால் மட்டுமே விவகாரத்துச் செய்து வைக்கின்றனர்.

மாமியார், மருமகள் மோதல்

கணவன்-மனைவியைச் சேர்ந்து வாழவிடாமல் மாமியார்-மருமகளைக் கொடுமைப்படுத்துவதும் கணவன்-மனைவி சண்டைக்குக் காரணமாக வெளிப்படுகின்றது.

கல்லல் ஒன்றியம் வஞ்சிணிப்பட்டியைச் சேர்ந்த அஞ்சலை என்பவள் தன்னுடைய கணவனுடன் தன்னை நிம்மதியாக வாழவிடாமல் தன் மாமியார் கொடுமைப் படுத்துவதாக பஞ்சாயத்துத் தலைவரிடம் 1999 ஆம் ஆண்டு பங்குனி மாதம் 23ஆம் தேதி முறையிட்டார். பஞ்சாயத்துத் தலைவர் அஞ்சலையின் கணவன் மற்றும் மாமியாரை அழைத்து விசாரித்ததில் அஞ்சலையின் குற்றச்சாட்டு உண்மையானது என்று தெரிந்து கொண்டார்.[98] அஞ்சலையின் மாமியாரைக் கண்டித்து அஞ்சலையையும் அவள் கணவனையும் இரண்டு மாதங்களுக்குத் தனியாக வெளியூருக்கு அனுப்பி வைத்தனர். பின் அவர்கள் நன்றாக வாழ்ந்தனர்.

லாடனேந்தலைச் சேர்ந்த ஆறுமுகம் மகள் கொத்தங்குளம் முருகன் என்பவருக்கு வாழ்க்கைப்பட்டாள். அவள் தன்னைத் தன்னுடைய மாமனாரும் மாமியாரும் வாழவிடாமல் கொடுமைப்படுத்துவதாக லாடனேந்தல் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1998 ஆம் ஆண்டு ஆடி மாதம் 20ஆம் தேதி முறையிட்டார்.[99] வழக்கினை விசாரித்த பஞ்சாயத்தார் ஆறுமுகம் மகள் மாமனார்-மாமியாரைக் கண்டித்து அறிவுரை கூறினர். கணவன் மனைவியைச் சேர்த்து வாழ வைத்தனர்.

கல்லல் ஒன்றியம் கண்டரமாணிக்கம் தெய்வேந்திரன் என்பவர் தன்னுடைய மனைவி தன் தாயாரை மதிப்பதில்லை என்றும், மண விலக்குச் செய்து வைக்க வேண்டுமென்றும் 1990 ஆம் ஆண்டு ஐப்பசி 20ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தார்.[100] பஞ்சாயத்தார் விசாரணையில் தெய்வேந்திரன் மனைவியுடன் சேர்ந்திருப்பது தெய்வேந்திரன் தாயாருக்குக் பிடிக்கவில்லை எனவும், தெய்வேந்திரன் தன் தாயார்

சொல்கின்றபடி நடப்பவர் என்பதும் தெரிய வந்தன. வழக்கினை விசாரித்த பஞ்சாயத்தார் முதலில் தெய்வேந்திரன் மனைவியை அவள் மாமியார் காலில் விழுந்து வணங்கும்படிச் செய்தனர். அதே போல் தெய்வேந்திரன் தாயும், நான் இனிமேல் என் மருமகளை மகளாக மதிப்பேன், இது சத்தியம் என்றாள். பிரச்சனை அத்துடன் முடிந்தது. இக்குடும்பம் நிம்மதியாக வாழ்ந்து வருகின்றது.

வாழ விருப்பமின்மை

கணவன்-மனைவி குடும்பச்சண்டைக்கு வாழ விருப்பமின்மையும் காரணமாக அமைகின்றது. மானாமதுரை ஒன்றியம் முருகப்பஞ்சான் கிராமத்தைச் சேர்ந்த வசந்தி என்பவள் தன்னுடைய கணவன் தினகரன் தன்னுடன் வாழ விருப்பமில்லாமல் கொடுமைப்படுத்துகின்றான் எனப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 2000 ஆம் ஆண்டு ஆனி மாதம் 15 ஆம் தேதி முறையீடு செய்தாள். தினகரன் பஞ்சாயத்தார்களிடம் தான் தன் மனைவி வசந்தியுடன் வாழவிரும்புவதாகவும், ஆனால் அவள் ஒழுங்காக நடந்துகொள்வதில்லை; அடிக்கடி அவள் தாயார் வீட்டிற்குச் செல்கிறாள் என்றும் கூறினான்.[101] பஞ்சாயத்தார் வசந்தி அவள் தாயார் வீட்டிற்கு அடிக்கடி செல்லக்கூடாது எனவும் அப்படிச் செல்வதானால் அவள் கணவனுடன்தான் செல்ல வேண்டுமெனவும் தீர்ப்புக் கூறினர். பஞ்சாயத்தார் அவர்களிடம் எழுதியும் வாங்கிக் கொண்டனர்.

கிராம வழக்கு மன்றங்களில் குடும்பச் சண்டை காரணமாகக் கணவன் மனைவியைப் பிரிந்து வாழ்வதையும், பஞ்சாயத்தார் அவர்களைச் சேர்த்து வாழ வைத்ததையும் பற்றிய வழக்குகளும் கிடைத்துள்ளன.

மானாமதுரை ஒன்றியம் வேம்பத்தூரைச் சேர்ந்த விசயா என்பவள் தன்னுடைய கணவனுடன் சேர்ந்து வாழாமல் இரண்டு வருடம் தாயார் வீட்டில் தனியாக இருந்தாள். விசயாவின் கணவன் தன்னுடைய மனைவியைச் சேர்த்து

வாழவைக்க வேண்டுமெனப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 26.09.1997இல் முறையிட்டான். வழக்கினை விசாரித்த பஞ்சாயத்தார் விசயாவும் அவள் கணவன் கண்ணனும் சாதாரணமான சிறிய கருத்து வேறுபாடு காரணமாத்தான் இரண்டு வருடம் பிரிந்து வாழ்ந்தனர் என்பதைத் தெரிந்து கொண்டனர்.[102] பஞ்சாயத்துத் தலைவர் கருத்து வேறுபாடுகளை மறந்து இருவரும் சேர்ந்து வாழ வேண்டுமெனத் தீர்ப்புக் கூறினர். அதே வேம்பத்தூரைச் சேர்ந்த தர்மலிங்கம் என்பவர் தன் மனைவி லெட்சுமி தன்னுடன் சேர்ந்து வாழாமல் அவள் தாயார் வீட்டில் இருப்பதாகவும், அவளைத் தன்னுடன் சேர்த்து வாழ வைக்க வேண்டுமெனவும் வேம்பத்தூர் பஞ்சாயத்துத் தலைவரிடம் 25.08.1995 இல் குற்றம் சாட்டினார்.[103] ஊர்ப் பொதுமக்கள் அனைவரும் லெட்சுமியை அவள் கணவனுடன் சேர்த்து வாழ வைக்க வேண்டுமெனக் கருத்துத் தெரிவித்தனர். பஞ்சாயத்துத் தலைவர் ஒரு வருடம் லெட்சுமி அவள் தாயார் வீட்டில் தங்கியிருந்தது தவறு என்றும், இனிமேல், அவள் தன் கணவனுடன் ஒழுங்காக வாழ வேண்டுமெனவும் தீர்ப்புக் கூறினார்.

கணவன்-மனைவியை ஒழுங்காக வாழ வைக்காமையும் குடும்பத்தில் கணவன்-மனைவியர் சண்டைக்குக் காரணமாக அமைகின்றது.

திருப்புவனம் ஒன்றியம் கருப்பட்டியைச் சேர்ந்த வள்ளி என்பவள் தன்னுடைய கணவன் முத்து இரண்டு வருடங்களாகத் தன்னுடன் சரியாக வாழாமல் தான் தன் தாய்வீட்டில் தங்கியிருப்பதாகவும், தன்னைத்தன் கணவனுடன் சேர்ந்து வாழ வைக்க வேண்டுமெனவும் 1999 ஆம் ஆண்டு ஆனி மாதம் 20 ஆம் தேதி கருப்பட்டிப் பஞ்சாயத்துத் தலைவரிடம் குற்றம் சாட்டினாள்.[104] பஞ்சாயத்தார் கணவன்-மனைவி இருவரும் அன்பாகவும், ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்தும், சகிப்புத்தன்மையுடனும் ஒத்து வாழவேண்டும் என அறிவுரை கூறி அவர்களைச் சேர்த்து வாழ வைத்தனர்.

மானாமதுரை ஒன்றியம் சீரம்பட்டியைச் சேர்ந்த சாந்தி என்பவள் தன்னுடைய கணவன் ரமேஷ் தன்னை அடித்துத் துன்புறுத்தித் தாய் வீட்டிற்கு அனுப்பி விட்டதாகவும், 1½ வருடமாகத் தன்னைத் தேட வில்லை என்றும் வேலூர் பஞ்சாயத்துத் தலைவரிடம் 10.05.1997 இல் குற்றம் சுமத்தினாள்.[105] பஞ்சாயத்தார் விசாரனையில் ரமேஷ் தன் மனைவியை அடிக்க வில்லை என்றான். சாந்தி அதனை மறுத்தாள். பஞ்சாயத்தார் அவர்களை இனிமேல் சண்டையில்லாமல் இருவரும் சேர்ந்து வாழவேண்டுமென அறிவுரை கூறிச் சேர்த்து வைத்தனர்.

நாட்டரசன் கோட்டையைச் சேர்ந்த பிரேமசுந்தரி திருமணமாகி ஒரு குழந்தைக்குத் தாயான பின் மணவிலக்குப் பெற்றவள். அவள் சத்துணவு அமைப்பாளராகப் பணியாற்றி வந்தாள். அப்பொழுது ஆசிரியர் இராம கிருஷ்ண ஐயரைக் காதலித்துத் திருமணம் செய்து கொண்டாள். பன்னிரெண்டு வருடங்கள் இராமகிருஷ்ண ஐயருடன் சேர்ந்து வாழ்ந்த பின்னர் 1999 ஆம் ஆண்டு ஆனி மாதம் 9ஆம் தேதி பாகனேரி நாட்டுப் பஞ்சாயத்துத் தலைவரிடம் தனக்கு மணவிலக்கு வேண்டுமென முறையிட்டாள்.[106] வழக்கு விசாரணையில் இராமகிருஷ்ண ஐயர் பிரேம சுந்தரியுடன் சேர்ந்து வாழ விருப்பமில்லை என்பது தெரிய வந்தது. பஞ்சாயத்தார் இராமக்கிருஷ்ண ஐயருக்கும் பிரேமசுந்தரிக்கும் குழந்தை இல்லாததால், பிரேமசுந்தரியின் வாழ்க்கைக்கு ஆதாரமாகத் மதுரைத் திருநகரில் இருந்த இராமகிருஷ்ண ஐயரின் வீட்டை பிரேமசுந்தரியின் பெயரில் எழுதி வாங்கிக் கொடுத்துப் பின்னர் அவர்களுக்கு மணவிலக்குச் செய்து வைத்தனர். படித்த கல்வி கேள்விகளில் சிறந்த பிராமண இனத்தவர்களும் கிராமத்தில் வாழும் நிலையில் அப்பஞ்சாயத்துடன் ஒத்துப் போகும் நிலைக்குக் கட்டுப்பட்டுள்ளனர்.

சிங்கம்புணரி ஒன்றியம் மனக்குடியில் பிறந்த சுகந்தி சிவபுரிப்பட்டியில் மணிவண்ணுக்கு வாழ்க்கைப்பட்டாள். அவள் 1992 ஆம் ஆண்டு வைகாசி மாதம் 20ஆம் தேதி பஞ்சாயத்துத் தலைவரிடம் தன் கணவன் மணிவண்ணன் தன்னைக்

கொடுமைப்படுத்துவதாகக் குற்றம் சாட்டினாள்.[107] மணிவண்ணன் பஞ்சாயத்தார்களிடம் தனக்குச் சுகந்தியுடன் வாழ விருப்பமில்லை என்றான். அதற்கான காரணத்தை மணிவண்ணன் சொல்ல மறுத்தான், பஞ்சாயத்தார் சமாதானத்தையும் அவன் ஏற்றுக்கொள்ளவில்லை. ஆதலால் பஞ்சாயத்தார் மணிவண்ணன் சுகந்திக்கு ரூபாய் 30,000 தீர்வைத் தொகைக் கட்டவேண்டுமென்று தீர்ப்புக் கூறினர். அத்தீர்ப்பின்படி மணிவண்ணன் ரூபாய் 30,000 த்தைச் சுகந்திக்குக் கட்டிவிட்டுப் பிரிந்துச் சென்றான்.

கணவன் மனைவி பிரச்சனைக்கு உளவியல் அடிப்படையிலான பிடிவாதம், விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையின்மை, குடும்ப நிலை பேசுதல், குடிப்பழக்கம் போன்ற பல காரணங்கள் சேர்ந்து வாழாமைக்குச் காரணங்களாக வெளிப்படுகின்றன.

**ஆண், பெண்களின் ஒழுங்கீனம்**

கணவன் இரண்டாம் திருமணம் செய்து கொள்ளல், கணவன் மோசமான குணமும் நடத்தையும் உள்ளவனாக இருத்தல், மனைவி மற்றொரு ஆடவனுடன் ஓடி விடுதல், மனைவியின் தவறான பாலுறவு, கணவனும் மனைவியும் தகாத பாலுறவு கொண்டிருத்தல் போன்ற ஒழுங்கீனங்களால் குடும்பத்தில் கணவன்-மனைவியருக்கிடையே பிரச்சனைகள் ஏற்படுகின்றன. குடும்ப அமைப்புச் சிதைவடைகின்றன.

கல்லல் ஒன்றியம் செம்பனூர்க் கிராமத்தில் கணவன் தனக்கு முதல் மனைவியும் பிள்ளைகளும் இருக்கும் போது மற்றொரு பெண்ணைச் சேர்த்துக் கொண்டான். இரண்டு மனைவிகளும் கணவன் தங்களுக்குத்தான் சொந்தம் என்று ஆஞ்சூர் நாட்டுப் பஞ்சாயத்துத் தலைவர் நாட்டாமை கரு. நாகராசனிடம் 1980 ஆம் ஆண்டு வைகாசி மாதம் 16ஆம் தேதி வழக்கினை முறையிட்டனர். வழக்கினை

விசாரித்த நாட்டாமை தனது தீர்ப்பில், முதல் மனைவியிடம் உள்ளது தான் இரண்டாவது மனைவியிடமும் உள்ளது. முதல் மனைவியை விட்டுவிட்டு இரண்டாவது மனைவியைக் கட்டக்காரணம் கணவனது காமப் பசி ஆதலால் கணவன் தன் இரண்டாவது மனைவியுடன் தான் வாழ வேண்டும் என்றார். ஆனால் அவர் இதுவரை சம்பாதித்த சொத்துக்கள் அனைத்தையும் முதல் மனைவிக்கும் அவளது பிள்ளைகளுக்கும் எழுதிக் கொடுத்து விட வேண்டும். அவர் இரண்டாவது மனைவியுடன் எவ்வித உடைமைகளும் இல்லாமல் தனியாக வெளியேற வேண்டும் என்றார். அதன்படி வீட்டை விட்டுத் தனியாக வெளியேறிய அவர் பிள்ளைப் பெற்றுச் சொத்துக்களையும் சேர்த்து வாழ்ந்து வருகின்றார்.[108] இந்த வழக்கின் தீர்ப்பு உச்சநீதிமன்றத் தலைமை நீதிபதி ரங்கநாத் மிஸ்ராவால் ஏற்றுக் கொள்ளப்பட்டு பாராட்டபட்டதாகும். தீர்ப்பினை வழங்கிய நாட்டாமை கரு. நாகராசனை 18.08.1988 இல் உச்சநீதிமன்றத் தலைமை நீதிபதி ரங்கநாத் மிஸ்ரா பாராட்டியுள்ளார். (புகைப்பட நகல் இணைக்கப்பட்டுள்ளது)

கல்லலைச் சேர்ந்த தெய்வானை என்பவள் தன் கணவன் சொக்கலிங்கம் தன்னையும் தன் இரு குழந்தைகளையும் விட்டுவிட்டு நாட்டரசன் கோட்டையில் வேறொரு பெண்ணைத் திருமணம் செய்து கொண்டதாகவும், தன் கணவன் தனக்கே சொந்தம் எனவும் கல்லல் நாட்டார் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1999 ஆம் ஆண்டு சித்திரை மாதம்20 ஆம் தேதி முறையிட்டாள். பஞ்சாயத்தார்களிடம் சொக்கலிங்கம் தன்முதல் மனைவி தெய்வானை இரவில் தன்னை ஒதுக்குவதாகக் கூறினார். பஞ்சாயத்தார் பின்னர் நாட்டரசன் கோட்டைக் கிராமத்தார்களை அழைத்து விசாரித்தனர். சொக்கலிங்கத்திற்கு இரண்டாவதாகப் பெண் கொடுத்த பெண்ணின் பெற்றோர்கள் தெரியாமல் தங்கள் பெண்ணைக் கொடுத்து விட்டதாகவும், தங்கள் பெண்ணை வாழவைக்க வேண்டுமெனவும் பஞ்சாயத்தாரிடம் வேண்டினர். அதனைப் பஞ்சாயத்தார் ஏற்கவில்லை. நாட்டராசன் கோட்டைப்

பெண்ணைத் திருமணம் செய்து கொண்டதற்காகச் சொக்கலிங்கத்திற்கு ரூபாய் 90,000 அபராதம் போட்டு அந்தப் பணத்தை நாட்டரசன் கோட்டைப் பெண்ணிற்குக் கொடுத்து அந்தப் பெண்ணைத் தீர்த்து வைத்தனர். பின்னர் தெய்வாணைக்கு அறிவுரை கூறி அவர்களைச் சேர்த்து வைத்தனர்.

கல்லல் ஒன்றியம் கண்டரமாணிக்கத்தைச் சேர்ந்த ஜானகி என்பவள் தன் கணவன் சுப்பிரமணியன் தன்னை ஏமாற்றிவிட்டு வேறொரு பெண்ணைத் திருமணம் செய்து கொண்டதாகவும், தனக்கு ஒரு வழி சொல்ல வேண்டுமெனவும் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1985 ஆம் ஆண்டு ஆண்டு வைகாசி மாதம் 6 ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தாள். சாணார் இனப்பெண்ணாகிய ஜானகி, வளையர் இனத்தைச் சேர்ந்த சுப்பிரமணியனைக் காதலித்துத் திருமணம் செய்து கொண்டாள்.[110] வழக்கினை விசாரித்த பஞ்சாயத்தார் ஜானகிக்கு வாழ்க்கைப் பாதுகாப்புத் தொகையாக ரூபாய் 10,000த்தைச் சுப்பிரமணியன் கொடுக்க வேண்டுமெனத் தீர்ப்புக் கூறினர்.

செம்பனூர் ராஜேஸ்வரி பி.ஏ பட்டதாரி, மூன்றாண்டுகளுக்கு முன்னர் காரைக்குடி கோவிந்தன் செட்டியார் மகனைத் திருமணம் செய்து கொண்டாள். இரண்டு நாள் அவனுடன் வாழ்ந்த அவள் அவன் ஒழுகலாறுகளைக் கவனித்து அவனுடன் தான் வாழ முடியாது எனக் கல்லல் நகரத்தார் தலைவரிடம் 1988 ஆம் ஆண்டு வைகாசி மாதம் 8 ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தாள்.[111] வழக்கினை விசாரித்த பஞ்சாயத்தார்; கோவிந்தன் செட்டியார் மகன் ஆண்மையில்லாதவன் என்றும், கோவிந்தன் செட்டியார் மனைவி தன் மகனுக்குப் பல பெண்களை ஏமாற்றிக் கட்டி வைத்த உண்மையும் தெரிய வந்தது. பஞ்சாயத்தார் தீர்ப்பில் திருமணத்தில் வரதட்சிணையாகக் கொடுத்த ரூபாய் 10,000 த்தையும், மாமியார் சீதனத்திற்காக ரூபாய் 90,000 மும் கோவிந்தன் செட்டியார் மகன் கொடுக்க வேண்டுமெனக் கூறினர். கோவிந்தன் செட்டியார் மனைவியிடமிருந்து சீதனப்

பொருட்களையும், சீதனப் பணத்தையும் அப்பெண்ணிற்கு வாங்கிக் கொடுத்து அப்பெண்ணைத் தீர்த்து வைத்தனர்.

கல்லல் ஒன்றியம் தவகியேந்தல் பட்டியைச் சேர்ந்த மெய்யப்பன் ஆசிரியர் தன் மனைவி சோதி தன்னையும் தன்னுடைய இரண்டு குழந்தைகளையும் விட்டுவிட்டு வேறொருவனைக் கூட்டிக் கொண்டு ஓடிவிட்டாள் என்று பஞ்சாயத்துத் தலைவரிடம் 1998 ஆம் ஆண்டு மார்கழி மாதம் 22 ஆம் தேதி குற்றம் சாட்டினார்.[112] சோதி பஞ்சாயத்தார்களிடம் தான் மெய்யப்பனுடன் வாழ முடியாது என்றாள். பஞ்சாயத்தார் கலந்து பேசி சோதிக்கு ரூபாய் 30,000 அபராதம் போட்டு அந்தப்பணத்தை மெய்ப்பனிடம் கொடுத்தனர். மெய்ப்பனிடமிருந்து சோதியை விலக்கி வைத்தனர். குழந்தை இரண்டும் சோதியைச் சேர்ந்தது என்றும் அவள் விருப்பப்பட்ட காதலனை சோதி மணந்து கொண்டு வாழலாம் என்றும் பஞ்சாயத்தார் தீர்ப்புக் கூறினர்.

காளையார்கோயில் ஒன்றியம் பாவாகுடி இராமலிங்கம் என்பவர் தன் மனைவி விசயலெட்சுமி கருப்பையா என்பவரிடம் பாலுறவு வைத்திருந்ததைத் தானும் தன் குடும்பத்தாரும் நேரடியாகப் பார்த்ததால் தன் மனைவியை விவாகரத்துச் செய்து தர வேண்டுமென்று 1998 ஆம் ஆண்டு மார்கழி மாதம் 23ஆம் தேதி பஞ்சாயத்துத் தலைவரிடம் முறையிட்டார். பஞ்சாயத்தார் முன்னிலையில் கருப்பையா தன் குற்றத்தை ஒப்புக் கொண்டார்.[113] பஞ்சாயத்தார் கருப்பையாவைக் கண்டித்து விசயலெட்சுமியைத் திருந்தி வாழவேண்டுமென்று அறிவுறுத்தி மீண்டும் கணவன்-மனைவியைச் சேர்த்து வாழவைத்தனர். அதன் பின்னர் இராமலிங்கமும் விசயலெட்சுமியும் மகிழ்ச்சியாக இன்றுவரை சேர்ந்து வாழ்ந்து வருகின்றனர்.

சிவகங்கை ஒன்றியம் கண்டாங்கிப்பட்டி உமாராணி என்பவள் தன் கணவன் அதே ஊரைச் சேர்ந்த சாணார் இனப்பெண்ணுடன் பாலுறவு வைத்திருப்பதாக 1990

ஆம் ஆண்டு மாசிமாதம் 10 ஆம் தேதி பஞ்சாயத்துத் தலைவரிடம் குற்றம் சாட்டினாள். உமாராணியின் கணவன் பாண்டி பஞ்சாயத்துத் தலைவரிடம்; உமாராணி சிவகங்கையில் தையல்காரன் ஒருவனுடன் தொடர்பு வைத்திருப்பதால் அவளுடன் வாழ முடியாது என்றான். உமாராணியும் பாண்டியும் தங்கள் குற்றங்களைப் பஞ்சாயத்தார் முன்னிலையில் ஒத்துக் கொண்டனர்.[114] வழக்கினை விசாரித்த பஞ்சாயத்தார் கணவன்-மனைவி இருவரும் தவறாகவும் ஒழுக்கக் கேடாகவும் நடந்திருக்கின்றார்கள். இனிமேலும் அவர்கள் இவ்வாறு நடந்து கொண்டால் இருவருக்கும் தண்டனை கிடைக்கும். இனிமேல் இருவரும் திருந்தி வாழ வேண்டுமென்று அவர்களைச் சேர்த்து வைத்து அறிவுரை கூறிச் சமாதானம் செய்து வைத்தனர்.

ஆண், பெண்களின் ஒழுங்கீனம், தவறான நடத்தைகள், கணவன் இரண்டாம் திருமணம் செய்து கொள்ளல், மனைவி மற்றொரு ஆடவனுடன் ஓடிவிடுதல் போன்ற காரணங்களினால் குடும்பத்தில் பிரச்சனைகள் தோன்றுகின்றன என்பதை பஞ்சாயத்திற்கு வரும் வழக்குகள் வழி அறிய முடிகிறது.

சோம்பேறித்தனம்

கணவன் வேலைக்குச் செல்லாமல், மனைவி அன்றாடம் உழைத்துச் சம்பாதிக்கும் பணத்தையும் எடுத்துக் குடித்து விடுவதால் குடும்பத்தில் பிரச்சனை ஏற்படுகின்றது. இதற்குக் கணவனின் சோம்பேறித்தனமே காரணமாகும்.

இளையான்குடி ஒன்றியம் திருவள்ளூரைச் சேர்ந்த காளியம்மை என்பவள், தன்னுடைய கணவன் ஒழுங்காக வேலைக்குச் செல்லாமல் தினமும் குடித்துவிட்டு வந்து தன்னைக் கொடுமைப்படுத்துவதாகத் திருவள்ளூர்ப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1991 ஆம் ஆண்டு மார்கழி மாதம் 2 ஆம் தேதி குற்றம் சாட்டினாள். பஞ்சாயத்தார்களிடம் காளியம்மை தன்னுடைய கணவன் பஞ்சவர்ணம் தினமும்

குடித்துவிட்டு வந்து தன்னை அடித்துக் கொடுமைப்படுத்தித் தகாத முறையில் நடந்து கொள்வதாகவும், தான் அன்றாடம் உழைத்துச் சம்பாதிக்கும் பணத்தையும் எடுத்துக் குடித்து விடுவதாகவும் ஒழுங்காக வேலைக்குச் செல்வதில்லை என்றும் முறையிட்டார்.[115] பஞ்சவர்ணம் தன்னுடைய சோம்பேறித்தனத்தையும் குற்றத்தையும் ஒப்புக் கொண்டு பஞ்சாயத்தார் முடிவுக்குக் கட்டுப்படுவதாகக் கூறிக் கும்பிட்டு விழுந்தான். பஞ்சாயத்தார் தீர்ப்பில் பஞ்சவர்ணம் நாள் ஒன்றுக்கு ரூபாய் 20 தன் மனைவியிடம் கொடுக்க வேண்டும் எனவும், வேலையில்லாத நாட்களில் பணம் கொடுக்கத் தேவையில்லை எனவும், பஞ்சவர்ணம் இனிமேல் தன் மனைவியை அடிக்கவும் கூடாது, குடிக்கவும் கூடாது எனவும் அறிவுரை கூறிக் கண்டித்து அனுப்பினர். அன்றிலிருந்து பஞ்சவர்ணம் ஒழுங்காக வேலைக்குச் சென்றான்.

**ஊதாரித்தனம்**

கணவனின் மதுப்பழக்கமும், ஊதாரித்தனமும், மனைவியை அடித்துத் துன்புறுத்துதற்கும் கணவன்-மனைவியர் குடும்பச் சண்டைகளுக்கும் காரணங்களாக அமைகின்றன. நாட்டரசன் கோட்டையைச் சேர்ந்த பிச்சையன் மனைவி ரெத்தினம் என்பவள், தன்னுடைய கணவன் குடித்துவிட்டு வந்து கொடுமைப்படுத்துவதால் தனக்கு மணவிலக்கு வேண்டுமென்று நாட்டரசன் கோட்டைப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1996 ஆம் ஆண்டு வைகாசி மாதம் 7 ஆம் தேதி வேண்டினாள். ரெத்தினம் பிச்சைக்கு இரண்டாவது மனைவியாவாள். பஞ்சாயத்தார் பிச்சையின் குடிப்பழக்கத்தைக் கண்டித்து கணவன்-மனைவி இருவரும் ஒற்றுமையாக வாழவேண்டுமெனச் சமாதானம் செய்து வைத்தனர்.

திருப்பத்தூர் ஒன்றியம் கீழச்செவல்பட்டியைச் சேர்ந்த விசயா என்பவள் ஒரு பெண் குழந்தைக்குத் தாயான பின்னர் தன்னுடைய கணவன் பெரிய குடிகாரன் என்றும் அவனுடன் தான் வாழமுடியாது என்றும் கூறிக் கணவனை விட்டுப் பிரிந்து பதினைந்து வருடங்களாகத் துவரங்குறிச்சியில் தன்னுடைய தந்தை

வீட்டில் வாழ்ந்து வந்தாள். விசயா-கண்ணன் ஆகியோரின் மகள் பெரிய பெண் ஆன பின்னர் கணவனும் மனைவியும் சேர வேண்டுமென அவர்களின் உறவினர்கள் கேட்டுக்கொண்டதற்கு இணங்க 1999 ஆம் ஆண்டு மார்கழி மாதம் 20 ஆம் தேதி கீழச்செவல்பட்டியில் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது.[117] கண்ணன் திருந்தி விட்டான் என்றும் இனிமேல் குடிக்க மாட்டான் என்றும் பஞ்சாயத்தார் விசயாவிற்கு உறுதி வழங்கி அவர்களைச் சேர்த்து வைத்தனர். கணவனின் குடிப்பழக்கம் மற்றும் ஊதாரித்தனத்தினால் மனைவி பல வருடங்கள் பிரிந்து வாழ்வதையும் அறியமுடிகின்றது.

திருப்புவனம் ஒன்றியம் லாடனேந்தலைச் சேர்ந்த அன்னபூர்ணம் என்பவள் தன்னுடைய கணவன் தினந்தோறும் குடித்துவிட்டு வந்து தன்னைக் கொடுமைப்படுத்துவதாக 2000 ஆம் ஆண்டு கார்த்திகை மாதம் 19 ஆம் தேதி லாடனேந்தல் பஞ்சாயத்துத் தலைவரிடம் குற்றம் சாட்டினாள். பஞ்சாயத்தார்களிடம் அன்னபூர்ணம் தன் கணவன் முருகேசன் குடித்துவிட்டு வந்து தன்மைப் பெல்ட்டால் அடித்துத் துன்புறுத்துவதாகக் கூறினாள்.[118] பஞ்சாயத்தார் முருகேசனைக் கடுமையாகக் கண்டித்தனர். இனிமேல் இவ்வாறு நடந்துகொள்ளக் கூடாது என்று அவனை எச்சரித்து அனுப்பினர்.

சிங்கம்புணரி ஒன்றியம் எஸ்.வி.மங்களத்தைச் சேர்ந்த சரசு தன் கணவன் சுப்பையா தினந்தோறும் குடித்துவிட்டு வந்து தன்னைக் கொடுமைப்படுத்துவதாகப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1995 ஆம் ஆண்டு மார்கழி மாதம் 10 ஆம் தேதி குற்றம் சாட்டினாள். அவர்களுக்கு +2 படிக்கும் ஒரு மகனும் இரண்டு பெண் குழந்தைகளும் இருந்தனர். +2 படிக்கும் அவர்களது மகன் தங்களுக்குத் தந்தை வேண்டாம் என்றும், அவர் தங்களுடன் தங்கியிருக்கக் கூடாது என்றும் பஞ்சாயத்தார்களிடம் கூறினான். சரசுவும் தன் கணவனைத் தீர்த்து வைத்துவிடுமாறு அழுதாள்.[119] வழக்கினை விசாரித்த பஞ்சாயத்தார் அன்றிலிருந்து சுப்பையா துணிகள் தேய்க்கும்

வருமானத்தை அப்படியே தன் மனைவி சரசுவிடம் தந்துவிட வேண்டும். நாளொன்றுக்கும் பத்துருபாய் மட்டும் பெற்றுக் கொள்ள வேண்டும். இனிமேல் குடிக்குக்கூடாது என்று தீர்ப்புக் கூறினர். அன்று முதல் சரசுவின் கணவன் திருந்தி பொறுப்பாகக் குடும்பத்தைக் கவனித்து வருகின்றான்.

இளையான்குடி ஒன்றியம் சிறுவாளையைச் சேர்ந்த ராக்கு என்பவள் தன்னுடைய கணவன் நடத்துநர் செல்வம் குடும்பப் பொறுப்பில்லாமல் தன்னை அடித்துத் துன்புறுத்துவதாக மேலச் சூரவந்திப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1997 ஆம் ஆண்டு ஐப்பசி மாதம் 10ஆம் தேதி குற்றம் சாட்டினாள். பஞ்சாயத்தார் விசாரணையில் நடத்துநர் செல்வம் ஒரு பேராசைக்காரன் ஊதாரித்தனமாகச் செலவு செய்பவன், அவன் தன் மனைவியைக் கொடுமைப்படுத்தியது உண்மைதான் எனத் தெரிந்து கொண்டனர். பஞ்சாயத்தார் தீர்ப்பால் நடத்துநர் செல்வத்திடம் இனிமேல் அவன் தன் மனைவியிடம் அன்பாக நடந்து கொள்ள வேண்டும். மாட்டை அடிப்பது போல் அப்பெண்ணை அடிக்கக் கூடாது, மீறி அப்பெண்ணைக் கொடுமைப்படுத்தினால் பஞ்சாயத்தார் கடுமையான நடவடிக்கை எடுப்பார்கள் என்று கூறினர்.[120] மூன்று வருடங்கள் கணவனுடன் வாழாமல் இருந்த ராக்குவைக் கணவனுடன் சேர்த்துப் பஞ்சாயத்தார் வாழ வைத்தனர். அதே இளையான்குடி ஒன்றியம் பெரும்பாளையைச் சேர்ந்த மாரியம்மாள் தன்னுடைய கணவன் ரமேஷ் தன்னை அடித்துத் துன்புறுத்துவதாகவும், தன்னைத் தன்னுடைய உறவினர்கள் வீடுகளுக்குச் செல்ல அனுமதிப்பதில்லை எனவும் 1998 ஆம் ஆண்டு புரட்டாசி மாதம் 7 ஆம் தேதி பஞ்சாயத்துத் தலைவரிடம் முறையிட்டாள்.[121] வழக்கினை விசாரித்த பஞ்சாயத்தார் ரமேஷிடம் ஒழுங்காகவும் அமைதியாகவும் குடும்பம் நடத்த வேண்டுமென்று அறிவுரை கூறினர்.

குழந்தை இன்மை

குழந்தை இன்மையும் கணவன்-மனைவி குடும்பச் சண்டைக்கு முதன்மைக் காரணமாக அமைகின்றது. குழந்தை இல்லாத காரணத்தால் கணவன் மனைவியை மணவிலக்குச் செய்யும் நிலைக்கு வந்துவிடுவதை அறியமுடிகின்றது.

சிவகங்கை ஒன்றியம் பச்சேரிக் கிராமத்தைச் சேர்ந்த கணேசன், தன் மனைவி முத்து தன்னுடன் சேர்ந்து வாழ மறுப்பதாகவும், தங்களுக்குக் குழந்தை இல்லாததால் அவளை மணவிலக்குச் செய்து வைக்க வேண்டுமென்றும் பஞ்சாயத்துத் தலைவரிடம் 07.05.1985 இல் முறையிட்டார். தீர்ப்புச் சொல்லாமல் அரசனூர் நாட்டுப் பஞ்சாயத்துக் கூட்டம் முடிந்தது. பின்னர் பக்கத்து நாட்டுத் தலைவர்கள் தலைமையில் பஞ்சாயத்து நடைபெற்றது.[122] பஞ்சாயத்தார்களிடம் கணேசன், தன்னுடைய மனைவி முத்து இரண்டு வருடம் அவள் தாய் வீட்டில் தங்கியிருந்துவிட்டுத் தற்பொழுது வந்துள்ளாள். எங்களுக்குக் குழந்தையில்லை; நான் வேறு திருமணம் செய்ய வேண்டும்; அவளைத் தீர்த்து வையுங்கள் என்று முறையிட்டார். பின்னர் பஞ்சாயத்தார்கள் நாட்டுத் தலைவர்கள் முன்னிலையில் அவர்கள் இருவரிடமும் எழுதி வாங்கிக் கொண்டு, அவர்களை விவாகரத்துச் செய்து வைத்தனர். அவர்கள் இருவரும் வேறு திருமணம் செய்து கொள்ளலாம் எனத் தீர்ப்பளித்தனர்.

பாலியல்

குடும்ப வாழ்க்கைக்கு மிகவும் அவசியமானது பாலியல் உறவாகும். கணவன்-மனைவியரின் தகாத பாலுறவுகள், கள்ளத் தொடர்புகள் ஆகியன ஒற்றுமையையும் சமுதாய ஒழுக்கத்தையும் பெரிதும் பாதிக்கின்றன.

இளையான்குடி ஒன்றியம் திருவள்ளூர் (தெற்கு) இராமாயி தன் கணவன் முருகன் இன்னொரு பெண்ணுடன் தொடர்பு வைத்துத் தம்மையும் தன்னுடைய இரண்டு பிள்ளைகளையும் ஒதுக்குவதாகவும் தன் கணவனைத் தன்னுடன் சேர்த்து

வாழ வைக்க வேண்டுமென்றும் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1992 ஆம் ஆண்டு தை மாதம் 10 ஆம் தேதி முறையிட்டாள்.[123] பஞ்சாயத்தார் விசாரணையில் முருகன் வைத்திருந்த பெண் வீட்டார், எங்கள் பெண் இரண்டாம் தாரமாக வாழ வேண்டும், அல்லது இழப்பீடு வேண்டும், எனக் கேட்டனர். வழக்கினை விசாரித்த பஞ்சாயத்தார். ஏற்கனவே திருமணமாகி இரண்டு பிள்ளைகளுக்குத் தந்தை எனத் தெரிந்தும் அவருடன் தகாத முறையில் பழகித் தொடர்பு வைத்து ஒரு பெண்ணின் குடும்ப வாழ்க்கையைக் கெடுத்ததற்காக இந்தப் பெண்ணிற்கு ரூபாய் 500 அபராதம் விதிக்கிறோம். என்று தீர்ப்புக் கூறி அந்தப் பெண்ணை ஒதுக்கிவிட்டு முருகன் இராமாயி இருவரையும் சேர்ந்து வாழ வைத்தனர். பஞ்சாயத்தாரின் இந்தத் தீர்ப்பு குடும்பம் மற்றும் சமுதாய ஒழுக்கத்தைப் பேணும் வகையில் அமைந்திருக்கின்றது.

காளையார்கோவில் ஒன்றியம் நாயனேந்தல் கிராமத்தைச் சேர்ந்த அமிர்தம் தன்னுடைய கணவன் செல்வராசு பல பெண்களுடன் பாலுறவு வைத்துள்ளதால் மணவிலக்கும் செய்து வைக்க வேண்டுமெனப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1995 ஆம் ஆண்டு சித்திரைமாதம் 3 ஆம் தேதி முறையிட்டாள்.[124] பஞ்சாயத்தார் விசாரணையில் செல்வராசு மோசமான நடத்தையும் குணமும் உள்ளவர் என்பதையும் பல பெண்களுடன் அவருக்குத் தொடர்பு உண்டு என்பதையும் தெரிந்து கொண்டனர். தன் குற்றத்தைச் செல்வராசு ஒப்புக் கொண்டதால், பஞ்சாயத்தார் இரண்டு குழந்தைகளுக்குத் தந்தையான அவன் ஒழுக்கமாக நடந்து தன் மனைவியை வாழ வைக்க வேண்டும் இல்லையேல் ஊரைவிட்டுத் தள்ளி வைத்து விடுவோம் என எச்சரித்துத் தீர்ப்புக் கூறினர். அதன் பின்னர் அவன் மனம்திருந்தி ஒழுங்காக வாழ்ந்து வருகின்றான்.

கல்லல் ஒன்றியம் கண்டரமாணிக்கம் ஈஸ்வரியின் கணவன் தன் மனைவி நாச்சியப்பன் என்பவரிடம் கள்ளத் தொடர்பு வைத்துள்ளாள் என்று 1985 ஆம் ஆண்டு கார்த்திகை மாதம் 25 ஆம் தேதி கண்டரமாணிக்கம் பஞ்சாயத்துத்

தலைவரிடம் குற்றம் சாட்டினார். விசாரணையில் நாச்சியப்பன், ஈஸ்வரி கள்ளத் தொடர்பு உண்மை என்பதையும், ஈஸ்வரிக்கு நாச்சியப்பன் கடிதம் எழுதியதையும் ஒத்துக் கொண்டனர்.[125] பஞ்சாயத்தார் ஈஸ்வரியையும் அவள் கணவனையும் சேர்த்து வைப்பதற்காக நாச்சியப்பனைப் பொய் சொல்லுமாறு வேண்டினர். அதன்படி நாச்சியப்பன், நான் ஈஸ்வரியை விரும்பினேன், ஆனால் அவள் என் விருப்பத்தை மறுத்தாள், அதனால் தான் நான் அவளுக்குக் கடிதம் எழுதினேன், ஈஸ்வரிமேல் தவறு இல்லை, என்னை மன்னித்து விடுங்கள், என்று பஞ்சாயத்தார் முன்னிலையில் கும்பிட்டு விழுந்தான். இதனைக் கண்ட கணவன் ஈஸ்வரியை உத்தமி என்று நம்பினான். பின்னர் பஞ்சாயத்தார் கணவன் மனைவியைச் சேர்த்து வைத்தனர். பஞ்சாயத்தார் குடும்ப நலன் கருதி சில வேளைகளில் வழக்குத் தொடுத்தவர் குற்றம் சாட்டப்பட்டவரைத் தனியாக அழைத்து இது போன்ற நடவடிக்கைகளை மேற்கொள்வதும் உண்டு.

கல்லல் ஒன்றியம் தவசியேந்தல்பட்டியைச் சேர்ந்த முத்து தன் மனைவி வேன் ஓட்டுநர் ஒருவனுடன் கள்ளத் தொடர்பு வைத்துள்ளாள் என்று பஞ்சாயத்துத் தலைவரிடம் 2000 ஆம் ஆண்டு வைகாசி மாதம் 9ஆம் தேதி குற்றம் சாட்டினார். முத்து பம்பாயில் தங்கியிருக்கும் போது செங்கல் காளவாயிலுக்கு வேலைக்குச் சென்றார் முத்துவின் மனைவி வீரம்மாள். அங்கு அவளுக்கும் வேன் ஓட்டுநர்க்கும் கள்ளத் தொடர்பு ஏற்பட்டது.[126] வீரம்மாள் நான்கு குழந்தைகளுக்குத் தாயாவாள். வழக்கினை விசாரித்த பஞ்சாயத்துத் தலைவர் வீரம்மாளைக் கடுமையாகக் கண்டித்தார். வேன் ஓட்டுநரையும் கண்டித்தார். வீரம்மாளுக்கு நான்கு பிள்ளைகள் இருப்பதால் முத்து அவளை ஏற்றுக் கொண்டு தொடர்ந்து அவளைக் காப்பற்ற வேண்டுமென்று முத்துவிடம் பஞ்சாயத்தார் கேட்டுக் கொண்டனர். குடும்ப நலன்கருதி பஞ்சாயத்தார் கணவன்மார்களிடம் இவ்வாறு வேண்டிக் கொள்ளுதலுமுண்டு. அதே ஒன்றியம் நடுவிக்கோட்டை மேலயூர் பாக்கியராசு தன்

மனைவி லெட்சுமி செங்கல் காளவாயிலில் மதுரை லாரி ஓட்டுநருடன் கள்ளத் தொடர்பு வைத்துள்ளாள் என்று 1998 ஆம் ஆண்டு ஆடி மாதம் 25ஆம் தேதி பஞ்சாயத்துத் தலைவரிடம் குற்றம் சாட்டினார்.[127] பஞ்சாயத்தார் லெட்சுமியை இரண்டு குழந்தைகளுக்குத் தாயான பின்னர் இவ்வாறு ஒழுக்கமில்லாமல் நடந்து கொள்ளக் கூடாது எனக் கண்டித்தனர். லாரி ஓட்டுநரையும் அடித்துக் கண்டித்தனர். கணவனும் மனைவியும் சேர்ந்து வாழ வேண்டுமெனவும் லெட்சுமி இனிமேல் ஒழுக்கமாக இருக்க வேண்டுமெனவும் பஞ்சாயத்தார் தீர்ப்புக் கூறினர்.

கல்லல் கிராமத்தைச் சேர்ந்த சொக்கலிங்கம் என்பவர் தன் மனைவியின் நடத்தை சரியில்லையென்றும், அவளுடன் வாழ விரும்பவில்லை என்றும் கல்லல் நாட்டார் கண்ணப்பா வள்ளிப்பாவிடம் 1979 ஆம் ஆண்டு வைகாசி மாதம் 5 ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தார். இந்தப் பஞ்சாயத்து சொக்கலிங்கம் செட்டியார் வீட்டில் நடைபெற்றது.[128] விசாரணையில் சொக்கலிங்கம் மனைவி நடத்தை தவறுவதற்குச் சொக்கலிங்கமே காரணம் என்று தெரியவந்தது. வழக்கினை விசாரித்த கல்லல் நாட்டார் இரண்டு பெண்குழந்தைகளும் சொக்கலிங்கத்திடம் வளரட்டும் என்றும், அவரது மனைவி அவளது பெற்றோர்களிடம் வாழட்டும் என்றும் அவர்களைப் பிரித்து வைத்துத் தீர்ப்புக் கூறினர்.

கல்லல் ஒன்றியம் ஆராவயல் வள்ளி என்பவள் வீட்டு வேலை (சித்தாள்) செய்வதற்காகக் கல்லலில் இராமய்யா வீட்டிற்குப் பக்கத்தில் தங்கி இருந்தாள். இராமய்யாவிற்கும் வள்ளிக்கும் தொடர்பு ஏற்பட்டது. இராமய்யாவிற்குப் பாகனேரியில் பெண் பார்ப்பது தெரிந்ததும், ஆராவயல் வள்ளி தான் கர்ப்பமாக இருப்பதாகவும், தனக்கு ஒரு வழி சொல்ல வேண்டுமெனவும் 1995 ஆம் ஆண்டு பங்குனி மாதம் 4ஆம் தேதி கல்லல் பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தாள்.[129] ஆராவயல் நாட்டார், கல்லல் நாட்டாரிடம் அப் பெண்ணை அழைத்துக் கொண்டு வந்தனர். பஞ்சாயத்தார் விசாரணையில் வள்ளி ஏற்கனவே

திருமணம் ஆனவள் என்பதும் அவள் கணவன் ஆராவயலில் இருக்கிறான் என்பதும் தெரிய வந்தது. ஆராவயல் நாட்டார் தங்களுடைய தவறை உணர்ந்து இராமய்யா பாகனேரியில் திருமணம் செய்து கொள்ளத் தடையில்லை எனத் தீர்ப்புக் கூறினர்.

மணமுறிவுகள்

கணவன் ஆண்மையில்லாதவனாக இருத்தல், குடும்ப உறவிற்குத் தகுதி இல்லாதவனாக இருத்தல் ஆகியன மணமுறிவுக்கு முக்கியக் காரணங்களாக அமைகின்றன. கணவன் ஆண்மை இல்லாதவனாக இருப்பதால் மனைவி அவனுடன் சேர்ந்து வாழ மறுத்து மணமுறிவு கேட்கின்றாள்.

கோவினிப்பட்டியைச் சேர்ந்த கன்னையா தன் மனைவி தன்னுடன் சேர்ந்து வாழ மறுக்கின்றாள், அவளைத் தன்னுடன் சேர்ந்து வாழ வையுங்கள் எனச் சாதிப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1991 ஆம் ஆண்டு மாசி மாதம் 5 ஆம் தேதி முறையிட்டார்.[130] கன்னையாவின் மனைவி அன்புக்கரசி பஞ்சாயத்தார்களிடம் கன்னையா ஆண்மை இல்லாதவர் என்றும், பஞ்சாயத்தார் பிரித்து வைக்காவிட்டால் தான் செத்து விடுவதாகவும் கூறினாள். பஞ்சாயத்தார் அன்புக்கரசியிடம் கன்னையாவிற்கு இழப்புத் தொகை ரூபாய் 20000 வாங்கிக் கொடுத்துப் பிரித்து வைத்தனர்.

இளையான்குடி ஒன்றியம் கோதுக்குடியைச் சேர்ந்த கோமதி என்பவள் தனக்கு விவாகரத்து வேண்டி பஞ்சாயத்துத் தலைவரிடம் 1993 ஆம் ஆண்டு மாசி மாதம் 25 ஆம் தேதி முறையிட்டாள்.[131] அப்பொழுது கோமதி ஆறுமாதக் கர்ப்பமாக இருந்தாள். பஞ்சாயத்தார்களிடம் தன் கணவன் ஆண்மை இல்லாதவன் என்றும், தன்னுடைய கர்ப்பத்திற்கு அவன் காரணமில்லை என்றும் கூறினாள். பஞ்சாயத்து ஐந்து முறை நடந்தது. ஆறாவது முறை கூடிய பஞ்சாயத்தில் கோமதியின் கணவன் காளிமுத்து ரூபாய் 500 தீர்வைத் தொகை கட்ட வேண்டும். அவன்தான் ஆண்மை

இல்லாதவன் எனத் தெரிந்திருந்தும் ஒரு பெண்ணைத் திருமணம் செய்தது குற்றமாகும் எனப் பஞ்சாயத்தார் தீர்ப்புக் கூறினர். கணவன் ஆண்மை இல்லாதவன் என்பதைத் தெரிந்து கொண்ட கோமதி மற்றொரு ஆடவனுடன் பாலுறவு கொண்டாள், கர்ப்பம் அடைந்தாள். அதை கமுக்கமாக அவள் பஞ்சாயத்தார்களிடம் ஒப்புக் கொண்டதால் அவள் கர்ப்பமாக இருப்பதற்கு யார் காரணம்? என விசாரிக்கவில்லை. பஞ்சாயத்தார் அப்பெண்ணிற்கு விவாகரத்துக் கொடுத்தனர்.

காளையார் கோயிலில் சத்துணவுப் பொறுப்பாளராகப் பணியாற்றிய ராக்கு தன் கணவன் நந்தன் குடும்ப உறவிற்குத் தகுதி இல்லாதவர்; அவரை விவாகரத்துச் செய்து வையுங்கள் எனப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1995 ஆம் ஆண்டு மாசி மாதம் 20 ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தாள்.[132] நந்தனும் ராக்கும் காதலித்துத் திருமணம் செய்து கொண்டவர்கள். திருமணத்திற்குப் பின்னர்தான் அவன் ஆண்மையற்றவன் என்ற விவரம் ராக்குவிற்குத் தெரிய வந்தது. ராக்குப் பிடிவாதமாக மணவிலக்குக் கோரியதால் அவள் நந்தனுக்கு ரூபாய் 5000 கொடுத்து விட்டுப் பிரிந்து செல்லலாம் எனப் பஞ்சாயத்தார் தீர்ப்புக் கூறினர்.

கல்லலைச் சேர்ந்த ராதா என்பவள் தன் கணவர் ஆண்மை இல்லாதவர். இதை வெளியே சொன்னால் என்னைக் கொன்று விடுவதாக மிரட்டுகிறார் எனப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1999 ஆம் ஆண்டு ஆனிமாதம் 15 ஆம் தேதி முறையிட்டாள்.[133] கல்லல் நாட்டார் பஞ்சாயத்துத் தலைவரிடம் ராதா தன் கணவன் நாச்சியப்பன் ஆண்மை இல்லாதவன் என்றும், அவன் அந்த உண்மையை வெளியே சொன்னால் தன்னைக் கொன்று விடுவதாக மிரட்டுவதாகவும், சென்னையிலிருந்து அவனிடம் தப்பித்து வந்ததாகவும் கூறினாள். பின்னர் பஞ்சாயத்துத் தலைவர் நாச்சியப்பனிடம் ரூபாய் 80,000 அபராதமும், மாமியார் சீதனத்திற்காக ரூபாய் 30,000மும் பெற்று அந்தப் பெண்ணிடம் கொடுத்தனர். சீதனப் பொருட்களையும்

அப்பெண்ணிற்கு வாங்கிக் கொடுத்து அந்தப் பெண்ணை மணவிலக்குச் செய்து வைத்தனர்.

**பொதுப்பிரச்சனைகள் தொடர்பான வழக்குகள்**

இரண்டு கிராமத்தார்களுக்கிடையே நிலவிவந்த கோயில் பிரச்சனைகள், கோயிலில் முதல் மரியாதை, மூப்பு அடிப்படையில் 'அம்பலக்காரர்' என்ற முதல் மரியாதை வேண்டல், கோயில் பிரச்சனையில் மோதிக் கொள்ளல், கோயில் திருவிழாவைத் தடை செய்தல், கோயிலில் உரிமைப் பிரச்சனை, கோயில் மாட்டுப் பிரச்சனை, மஞ்சு விரட்டுத் தகராறு, இரண்டு கிராமங்களுக்கிடையே மோதல், கண்மாயில் மீன் பிடித்தலில் பிரச்சனை, ஊரை விட்டு ஒதுக்கி வைத்தல் போன்ற பொதுப்பிரச்சனைகள் தொடர்பான வழக்குகளையும் சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களில் காண முடிகிறது. இத்தகைய வழக்குகளையும் சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்கள் தீர்த்து வைத்துள்ளன.

**இரண்டு கிராமத்தார்களுக்கிடையே நிலவிவந்த கோயில் பிரச்சனைகள்**

திருப்பத்தூர் ஒன்றியம் அம்மாபட்டி, செண்பகம் பேட்டை ஆகிய இரண்டு கிராமங்களுக்கும் அய்யனார் கோயில் சொந்தமானதாகும். அக் கோயில் பூசாரியாகச் செண்பகம் பேட்டை வேளாளர் இருந்து வருகின்றார். அம்மாப்பட்டிக் கிராமத்தார் அக்கோயிலுக்குக் குதிரையெடுப்புத் திருவிழா நடத்தக் கூடாது என்று செண்பகம் பேட்டைக் கிராமத்தார் 1999 ஆம் ஆண்டு வைகாசி மாதம் 25 ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தனர்.[134] வழக்கு விசாரணையில் செண்பகம் பேட்டைக் கிராமத்தார்கள் தாங்கள் தான் முதல் மரியாதைக் குரியவர்கள் என்று கூறினர். அம்மாப்பட்டிக் கிராமத்தார்களும் தாங்கள் தான் மரியாதைக் குரியவர்கள் என்றனர். வழக்கினை விசாரித்த பஞ்சாயத்தார் இரண்டு கிராமத்தார்களும்

தனித்தனியாக வேறு வேறு தேதிகளில் குதிரையெடுப்பு நடத்திக் கொள்ளலாம் எனத் தீர்ப்புக் கூறினர்.

கல்லல் ஒன்றியம் வெளியாத்தூர்க் கிராமத்திற்கும் நயினார்பட்டிக் கிராமத்திற்கும் அம்பலகாரர் ஒருவரே, அதன் தலைமையிடம் வெளியாத்தூர் ஆகும். வெளியாத்தூர்க் கிராமத்திற்கும் நயினார்பட்டி அரசப்பனுக்கும் பஞ்சாயத்துத் தேர்தலில் இருந்து முன் விரோதம் இருந்து வந்தது. இதன் காரணமாக வெளியாத்தூர் நயினார் கோயில் திருவிழா தடைப்பட்டு வந்தது. இக்கோயில் திருவிழாவை உடனே நடத்த வேண்டுமென வெளியாத்தூர் கிராம மக்கள் அனைவரும் பட்டமங்கலம், கண்டரமாணிக்கம், நாட்டார்கள் தலைமையிடம் 2000 ஆம் ஆண்டு கார்த்திகை மாதம் 17 ஆம் தேதி வழக்குத் தொடுத்தனர்.[135] பஞ்சாயத்தார்கள் விசாரணையில் நயினார்பட்டி அரசப்பன் நாடகத்தில் முதல் மரியாதை கேட்டும், கண்மாய் ஏலத்தில் ஆள் வைத்து அடிதடி நடத்தியும், நயினார் கோயில் திருவிழாவைத் தடுத்தும் வந்தது தெரிந்தது. பஞ்சாயத்தார்களிடம் அரசப்பன் தனக்கும் வெளியாத்தூர் குடியுரிமை வேண்டும் என்றார். இதனை வெளியாத்தூர்க் கிராமத்தார் ஏற்றுக் கொள்ளவில்லை. பின்னர் பஞ்சாயத்தார் இருதரப்பினரையும் சமாதானம் செய்து நயினார் கோயில் திருவிழாவினை நடத்த ஏற்பாடு செய்தனர்.

**கோயிலில் முதல் மரியாதை வேண்டல்**

கல்லல் ஒன்றியம் நரியங்குடிக் கிராமத்தார் தங்களுக்குச் சொந்தமான கருப்பர்கோயில் திருவிழாவில் பக்கத்துக் கிராமமான கட்டக்கான்பட்டிக்கு மரியாதை கொடுத்து வந்தனர். இதைக் காரணம் காட்டிக் கட்டக்கான்பட்டிக் கிராமத்தார் கருப்பர்கோயில் திருவிழாவில் தங்களுக்கு முதல் மரியாதை வேண்டுமெனக் கேட்டனர். இதனை நரியங்குடிக் கிராமத்தார் மறுத்ததால் 1999 ஆம் ஆண்டு பங்குனி மாதம் 23 ஆம் தேதி கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது.[136] நரியங்குடிக்

கிராமத்தார் தங்களுக்குச் சொந்தமான கருப்பர்கோயிலில் 'நாட்டார்' என்ற அடிப்படையில் கட்டக்கான்பட்டிக்கு மரியாதை கொடுத்ததாகக் கூறினர். இதனைக் கட்டக்கான்பட்டிக் கிராமத்தார் ஏற்றுக் கொண்டனர்.

சிங்கம்புணரி ஒன்றியம் எஸ்.வி. மங்களம் ஆலடி கருப்புக்கோயில் ஆறுகரையைச் சேர்ந்த குடும்பர்களால் வணங்கப்பட்டு வருவதாகும். அக்கோயிலில் முதல் கரையினர் பூசாரியாக இருந்து பூசைகளைச் செய்து வந்தனர். சாமி வீட்டிற்குள் முதல் கரையினர் மட்டும்தான் செல்ல வேண்டும். வழக்கத்திற்கு மாறாக இரண்டாம் கரையினர் தங்களுக்கும் உரிமையுண்டு எனக் கோயில் வீட்டிற்குள் நுழைந்ததால் முதல் கரையினர் 10.05.2000 இல் பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடுத்தனர்.[137] பஞ்சாயத்துத் தலைவர் அக்கோயில் தெய்வத்தையே நம்பித் தீர்ப்புக் கூறினர். மூன்று நாட்கள் அக்கோயிலிலேயே உறங்கினார். அவர் கண்ட கனவின்படி முதல் கரையினர் பூசாரியாகவும், மற்ற கரையினர் அவர்களுக்கு உதவியாகவும் இருக்க வேண்டுமென முடிவு செய்யப்பட்டது.

இளையான்குடி ஒன்றியம் நெம்மேனியைச் சேர்ந்த மறவர் இனப் பொது மக்கள் அதே ஊரைச் சேர்ந்த இடையர் இனப்பொதுமக்களிடம் அவ்வூர்க் கோயில் விழாவில் முதல் மரியாதை தங்களுக்குத்தான் தரப்படவேண்டுமென்று நெம்மேனியைச் சேர்ந்த பத்துஊர் நாட்டுப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1999 ஆம் ஆண்டு வைகாசி மாதம் 10ஆம் தேதி வழக்குத் தொடுந்தனர்.[138] வழக்கினை விசாரித்த பஞ்சாயத்தார் இருசமுதாயத்திலும் இருவரைத் தேர்ந்தெடுத்துச் சமமாக முதல் மரியாதை வழங்கப்பட வேண்டுமென்று தீர்ப்புக் கூறினர். அத்தீர்ப்பின் படி நெம்மேனியில் இருபது வருடங்களுக்குப்பின்னர் அய்யனார் கோயில் திருவிழா நடைபெற்றது.

**மூப்பு அடிப்படையில் அம்பலகாரர் முதல்மரியாதை வேண்டல்**

சிவகங்கை ஒன்றியம் மீனாட்சிபுரத்தைச் சேர்ந்த ஊர் அம்பலக்காரர் மகன் சேதுசேர்வை தன் தந்தைக்குப் பின்னர் தான் தான் 'அம்பலகாரர்' என்று 1976 ஆம் ஆண்டு ஆடிமாதம் 23 ஆம் தேதி நாலூர் பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடுத்தார்.[139] வழக்கினை விசாரித்த பஞ்சாயத்தார் சேதுசேர்வை, துரை ஆகிய இருவரையும் அழைத்துப் பேசினர். சேதுசேர்வை பரம்பரையாக மூத்தவன் தான் அம்பலகாரர் என்றார். பஞ்சாயத்தார்கள் அண்ணன், தம்பி ஆகிய இருவரும் வருடத்திற்கு ஒருவர் அம்பலகாரராக இருந்து கொள்ளுமாறு தீர்ப்புக் கூறினர்.

**கோயில் பிரச்சனையில் மோதிக் கொள்ளல்**

திருப்புவனம் ஒன்றியம் லாடனேந்தலைச் சேர்ந்த பாண்டி தலைமையில் 25 ஆட்களும் நாகராசு தலைமையில் 24 ஆட்களும் லாடனேந்தல் அம்மன் கோயில் பிரச்சனையில் மோதிக் கொண்டு காவல் நிலையத்தில் அகப்பட்டுக் கொண்டனர். ஊர்க்காரர்கள் காவல் நிலையத்திலிருந்து அவர்களை அழைத்து வந்து 1999 ஆம் ஆண்டு பங்குனி மாதம் 5ஆம் தேதி நாட்டுப் பஞ்சாயத்துத் தலைவர் முன்னிலையில் கிராமப் பஞ்சாயத்தைக் கூட்டினர்.[140] பாண்டி, நாகராசு ஆகிய இரு குழுவினரும் ஒரே சாதியைச் சேர்ந்தவர்கள், உறவினர்கள், கோயில் விழாவில் மரியாதை பெறுவதில் யார் பெரியவன் என்பதைக் காட்டுவதற்காக இரு குழுவினரும் மோதிக் கொண்டனர். பஞ்சாயத்தார் பாண்டி, நாகராசு ஆகிய இருவரும் பகைமை பாராட்டக் கூடாது எனவும், இரு குழுவினரும் ஒற்றுமையாக இருந்து வருடா வருடம் சாமிகும்பிட உதவவேண்டுமெனவும் சமாதானம் செய்து வைத்துத் தீர்ப்புக் கூறினர்.

**கோயிலில் உரிமைப் பிரச்சனை**

சிங்கம்புணரி ஒன்றியம் குமாரபேட்டை அழகிய நாச்சியம்மன் கோயிலை உடைத்து அக்கோயிலின் பொருட்களை வெங்கலப்ப நாயக்கர் வாரிசு விற்பதற்கு

ஏற்பாடு செய்ததால் குமாரப்பேட்டைக் கிராமத்தார் அவர் மீது 1980 ஆம் ஆண்டு கார்த்திகை மாதம் 10 ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தனர்.[141] அம்மாப்பேட்டைக் கிராமத்தார், நாயக்கர் கோயிலை உடைத்தது தவறு என்றனர். நாயக்கர் தனக்குச் சொந்தமான கோயில் என்றார். வழக்கினை விசாரித்த பஞ்சாயத்தார் அக்கோயில் வெங்கலப்ப நாயக்கரால் கட்டப்பட்டதாதலால் அவரது வாரிசாக நாயக்கர் இருந்து முதல் மரியாதையை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று கூறினர். கோயிலை அனைவரும் சேர்ந்து பணம் வசூலித்துப் புதுப்பித்துப் பல்வேறு தடைகளையும் எதிர்ப்புகளையும் தாண்டி 1997 இல் கும்பாபிசேகம் செய்தனர்.

சிங்கம்புணரி ஒன்றியம் கள்ளாப்பேட்டைக் கிராமத்தார் ஆவணிப் பட்டியிலுள்ள ஆகாசக் கருப்பர் கோயில் தங்களுக்குத்தான் சொந்தமானது என்று கள்ளாப் பேட்டைக் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 2000 ஆம் ஆண்டு ஆனி மாதம் 22 ஆம் தேதி வழக்குகள் தொடுத்தனர். பஞ்சாயத்துத் தலைவர் முத்தையா கூட்டத்திற்குத் தலைமை தாங்கினார்.[142] வழக்கினை விசாரித்த பஞ்சாயத்துத் தலைவர் 1962 இல் தயாரிக்கப்பட்ட பத்திரத்தைக்காட்டி, இரண்டு கிராமத்தார்களுக்கும் அதனை விளக்கி இரண்டு கிராமத்தார்களும் தனித்தனியாகப் பூசை போடலாம் என்றும், திருவிழா நடத்தலாம் என்றும் தீர்ப்புக் கூறினார்.

**கோயில் மாட்டுப் பிரச்சனை**

சிங்கம்புணரி ஒன்றியம் சிவபுரிப்பட்டிக் கிராமத்தார் மாட்டிக்கரைப் பட்டியிலுள்ள கருப்பர் கோயிலுக்குக் கோயில் மாடு கட்டி வந்தனர். இதனை மட்டிக்கரைப்பட்டிக் கிராமத்தார் ஏற்றுக்கொள்ளாமல் தங்கள் ஊர்க்கோயிலுக்குத் தாங்கள் தான் மாடுகட்டுவோம் எனப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1993 ஆம் ஆண்டு ஆனிமாதம் 25 ஆம் தேதி வழக்குத் தொடுத்தனர்.[143] சிவபுரிப்பட்டிக் கிராமத்தார் பல ஆண்டுகளாக அக்கோயிலுக்கு முதல் காளையைக் கட்டி வந்துள்ளனர். வழக்கினை விசாரித்த பஞ்சாயத்தார் இரண்டு கிராமத்தார்களையும் சமாதானப்படுத்தி இரண்டு

கிராமத்தார்களும் முதல் காளையைக் கட்டி அவிழ்த்தி விடலாம் எனத் தீர்ப்புக் கூறினர்.

**மஞ்சு விரட்டுத் தகராறு**

திருப்புவனம் ஒன்றியம் பூவந்தியில் நடைபெற்ற மஞ்சு விரட்டில் அரசனூர் கிராமத்தைச் சேர்ந்த இளைஞர்களுக்கும் சுண்ணாம்பூர் கிராமத்தைச் சேர்ந்த இளைஞர்களுக்கும் மாடுபிடிப்பதில் மோதல் ஏற்பட்டது. இரண்டு கிராமத்தார்களும் ஒரே சாதியைச் சேர்ந்தவர்கள். இதனைக் கேட்டுக் கொடுக்க வேண்டுமென்று அரசனூர்க் கிராமத்தார் ஐந்து ஊர் நாட்டு நாட்டமையிடம் 1985 ஆம் ஆண்டு பங்குனி மாதம் 5ஆம் தேதி வழக்குத் தொடுத்தனர்.[144] பஞ்சாயத்து திருமாஞ்சோலையில் நடைபெற்றது. அஞ்சூர் நாட்டுத் தலைவர்களும் பஞ்சாயத்தில் கலந்து கொண்டனர். அந்தக் கூட்டம் எந்த முடிவினையும் எடுக்காமல் முடிவடைந்தது. இன்றும் இவ்விரு நாட்டுத் தலைவர்களின் பிரச்சனையால் இவ்விரு நாட்டைச் சேர்ந்த கிராம மக்களும் தங்களுடைய சொந்தங்களை இழந்து வாழ்ந்து வருகின்றனர்.

**இரண்டு கிராமங்களுக்கிடையே மோதல்**

திருபத்தூர் ஒன்றியம் சாத்தன்குடியைச் சேர்ந்த நாயை நேமத்தம்பட்டியைச் சேர்ந்த ஒருவன் எரிந்துவிட்டதால் ஏற்பட்ட வாய்த் தகராறு அவ்விரண்டு கிராமங்களின் மோதலாக மாறியது. இதன் காரணமாகப் பக்கத்து ஊர் நாட்டார்கள் 2 பேரைக் கொண்ட நாட்டுப்பஞ்சாயத்து 1999 ஆம் ஆண்டு ஆவணி மாதம் 20 ஆம் தேதி பிள்ளையார்பட்டியில் நடைபெற்றது. பஞ்சாயத்தார் இரண்டு கிராமங்களையும் சேர்ந்த முக்கியத் தலைவர்களிடம் விசாரித்தனர்.[145] பின்னர் பஞ்சாயத்தார் ஒரு நாய்ப் பிரச்சனைக்காக இரண்டு கிராமத்தார்கள் மோதுவது தவறு என்றும், இனிமேல் பகைமையை மறந்து இரண்டு

கிராமத்தார்களும் ஒன்றுபட வேண்டுமென்று தீர்ப்புக் கூறினர். இரண்டு கிராமத்தார்களையும் அவர்கள் சமாதானப்படுத்தி அனுப்பி வைத்தனர்.

**கண்மாயில் மீன்பிடித்தலில் பிரச்சனை**

சிவகங்கை ஒன்றியம் கண்டாங்கிப்பட்டிக் கிராமத்தார் பக்கத்திலுள்ள புளிக்கண்மாயில் பல வருடங்களாக மீன் பிடித்து வந்தனர். புளிக்கண்மாய்க் கிராமத்தார் திடீரெனத் தங்களுக்குத்தான் மீன்பிடிக்கும் உரிமையுண்டு என்று தமராக்கி நாட்டுப் பஞ்சாயத்தார்களிடம் 1995 ஆம் ஆண்டு ஐப்பசி மாதம் 26 ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தனர்.[146] பஞ்சாயத்தார் புளிக்கண்மாய்த் தலைவர் பெருமாள் மகனை அழைத்து விசாரித்தனர். பின்னர் பஞ்சாயத்தார் கண்மாய்ப் பராமரிப்பு, பாசனம் முதலிய அனைத்தும் பல வருடங்களாகக் கண்டாங்கிப்பட்டிக் கிராமம் செய்து வந்திருப்பதால் மீன் பிடிக்கும் முழு உரிமையும் அக் கிராமத்திற்கே தரப்படுகின்றது என்று தீர்ப்புக் கூறினர். புளிக்கண்மாய்த் தலைவருக்கும் கிராமத் தலைவருக்கும் கண்டாங்கிப்பட்டி கிராமத்தார் மீன் கொடுக்க விரும்பினால் கொடுக்கலாம். ஆனால் யாரும் யாரையும் கட்டாயப்படுத்தும் உரிமையில்லை எனப் பஞ்சாயத்தார் தெளிவாகத் தீர்ப்பில் கூறினர்.

**ஊரைவிட்டு ஒதுக்கி வைத்தல்**

இளையாண்குடி ஒன்றியம் புதுவளவுக் கிராமத்தார் அக்கிராமத்தைச் சேர்ந்த அம்மாச்சி மகள் திருமணத்திற்கு யாரும் செல்லக்கூடாது என்று 1991 ஆம் ஆண்டு புரட்டாசி மாதம் 10 ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தனர். அம்மாச்சி என்பவள் ஊரில் யாருக்கும் மதிப்புக் கொடுக்காமல் அடங்காபிடாரியாகத் திரிகின்றாள்; அவளை ஊரைவிட்டு ஒதுக்கி வைத்துள்ளோம்; அவள் மகள் திருமணத்திற்கு யாரும் செல்லக்கூடாது எனப் புதுவளவுக் கிராமப் பொதுமக்கள் பஞ்சாயத்துத் தலைவரிடம் கேட்டுக் கொண்டனர்.[147] பஞ்சாயத்தார் விசாரணையில் அம்மாச்சி என்பவள்

*தன்னுடைய தவற்றை உணர்ந்து குற்றத்தை ஒப்புக் கொண்டு மன்னிப்புக் கேட்டாள். பஞ்சாயத்துத் தலைவர் அவளை மன்னித்தும் கண்டித்தும் இனிமேல் வாய்த்துடுக்காகப் பேசக்கூடாது என எச்சரித்து அவள் மகள் திருமணத்தில் ஊர்க்காரர்கள் கலந்து கொள்ளலாம் எனத் தீர்ப்புக் கூறினார்.*

**தொகுப்புரை**

*சிவகங்கை மாவட்ட 'கிராம வழக்குகளின் வகைகள்' என்னும் இவ்வியலில் கிராமங்களில் களஆய்வில் சேகரித்த வழக்குகள் வகைதொகைப்படுத்தி விளக்கப்பட்டுள்ளன.*

*இம்மாவட்ட கிராம வழக்குகளை உரிமையியல். வழக்குகள், குற்றவியல் வழக்குகள், குடும்ப வழக்குகள், பொதுப் பிரச்சனைகள் தொடர்பான வழக்குகள், என நான்கு பெரும்பிரிவுகளாக வகைமைப்படுத்தலாம்.*

*கிராம வழக்கு மன்றங்களில் தீர்த்து வைக்கப்பட்டுள்ள உரிமையியல் வழக்குகளைச் சொத்து வழக்குகள், கொடுக்கல்-வாங்கல் வழக்குகள் என இரு பெரும் பிரிவுகளாக வகைமைப்படுத்தலாம். சொத்து வழக்குகளை நடைபாதைத் தகராறு, இடப்பிரச்சனை, நிலப் பிரச்சனை, பாகப்பிரிவினை, வீட்டுமனைப் பிரச்சனை என அவ்வழக்குகளின் உள்ளடக்கச் செய்திகளையும் அடிக் கருத்துகளையும் அடிப்படையாகக் கொண்டு வகைமைப்படுத்தி விளக்கப்பட்டள்ளது. கொடுக்கல்-வாங்கல் வழக்குகளின் பணம் கொடுக்கல்-வாங்கல் பிரச்சனைகளை அடிப்படையாக கொண்டு பிரிக்கப்பட்டுள்ளது.*

*குற்றவியல் வழக்குகளைத் திருட்டு, வெட்டுக்குத்து, அடிதடி சண்டை, வாய்க்கால், ஊற்றுக்கால் தகராறு, தோட்ட வேலைத் தகராறு, முன்விரோதம், மான இழப்பு, தீ வைப்பு, சாராய விற்பனை, கொலை, விபத்து, பெண்ணைக் கடத்தல்-*

பாலியல் வன்முறை, குடித்து விட்டுத் தகராறு செய்தல் வழக்குகள் என வகைமைப்படுத்தி விளக்கப்பட்டுள்ளன.

குடும்ப வழக்குகளை அவ்வற்றின் உள்ளடக்கச் செய்திகளை அடிப்படையாகக் கொண்டு திருமணச் சிக்கல், வரதட்சிணைப் பிரச்சனை, நடத்தையில் சந்தேகம், மாமியார்-மருமகள் மோதல், வாழ விருப்பமின்மை, ஆண்,பெண் ஒழுங்கீனம், சோம்பேறித்தனம், ஊதாரித்தனம், குழந்தை இன்மை, பாலியல், மணமுறிவுகள் என பிரித்துக்காணப்பட்டுள்ளன.

சமூக அமைப்பின் அடிப்படை நிறுவனம் குடும்பம். கிராமத்தில் விவசாயம் போன்ற கூட்டுச் சார்ந்த தொழில்களைச் செய்யும் சூழலில் கூட்டுக் குடும்பமுறை பெரிதும் உள்ளது. இக்குடும்ப உறுப்பினர்களிடையே சில சமயங்களில் போட்டி மனப்பான்மை, பொறாமை போன்றவற்றால் பிரச்சனைகள் எழுவதுண்டு. இது முற்றி சண்டை சச்சரவுகளாக மாறி குடும்பத் தகராறுகளாக மாறுவதும் உண்டு. இவ்விதத் தகராறு வழக்கு மன்றங்களுக்கும் வருகின்றன.

கணவன் மனைவி பிரச்சனைக்கு உளவியல் அடிப்படையிலான பிடிவாதம், விட்டுக்கொடுக்கும் மனமின்மை, சகிப்புத்தன்மையின்மை, குடும்ப நிலை பேசுதல், குடி போன்ற பலகாரணங்கள் சேர்ந்து வாழாமைக்குக் காரணங்களாக வெளிப்படுகின்றன. இம்மாவட்டத்தில் கிடைத்துள்ள குடும்ப வழக்குகளில் 'பாலியல்' பற்றிய வழக்குகள் குறிப்பிடத்தக்கதாகும். ஆண், பெண் ஆகிய இருபாலரும் கள்ளத்தொடர்பு வைத்திருப்பதால் குடும்பத்தில் அமைதி கெடுகின்றது. பிரச்சனைகள் தோன்றுகின்றன.

'மண முறிவுகள்' பற்றிய வழக்குகளில் கணவன் ஆண்மை இல்லாதவனாக இருத்தல் பிரதானக் காரணமாக அமைகின்றது. ஆண்-பெண் ஆகிய இருபாலரின் ஒழுங்கீனம், வாழ விருப்பமின்மையும் மண முறிவுக்குக் காரணங்களாக

அமைகின்றன. முடிந்த வரையில் நடத்தை தவறிய ஆண், பெண் இருவரையும் கிராம வழக்கு மன்றத்தினர் சேர்த்து வைக்கின்றனர். தவிர்க்க இயலாத காரணங்களினால் மட்டும் அவர்களுக்கு மணவிலக்கு அளிக்கின்றனர்.

கிராம வழக்கு மன்றங்களில் பொதுப் பிரச்சனைகள் தொடர்பான வழக்குகளும் கிடைத்துள்ளன. கிராமத்தார்களுக்கிடையே கோயில் பிரச்சனைகள், கோயிலில் முதல் மரியாதை வேண்டல், மூப்பு அடிப்படையில் அம்பலகாரர் என்ற முதல் மரியாதை வேண்டல், கோயில் பிரச்சனைகளில் மோதிக் கொள்ளல், கோயில் திருவிழாவினைத் தடை செய்தல், கோயிலில் உரிமைப் பிரச்சனை, கோயில் மாட்டுப் பிரச்சனை, மஞ்சு விரட்டுத் தகராறு, இரண்டு கிராமங்களுக்கிடையே மோதல், கண்மாயில் மீன் பிடித்தலில் பிரச்சனை, ஊரைவிட்டு ஒதுக்கி வைத்தல் போன்ற பொதுப் பிரச்சனைகள் தொடர்பான வழக்குகளையும் கிராம வழக்கு மன்றங்களில் காணலாம். முடிந்த வரையில் பொது அமைதியைக் காப்பதற்கும், கிராமங்களுக்கிடையே ஒற்றுமையை வளர்ப்பதற்கும் கிராம வழக்கு மன்றத்தினர் பாடுபட்டு வருகின்றனர்.

## குறிப்புக்கள்

1. சிவகங்கை மாவட்ட கிராம வழக்குகள் பின்னிணைப்பில் வகை தொகைப்படுத்தித் தரப்பட்டுள்ளன. அவ்வழக்குகள் இந்த ஆய்விற்கு முதன்மை ஆதாரங்கள் (Primary Sources) ஆகும்.

2. உரிமையியல் வழக்குகள், பேட்டி எண்:1, நாள்:31.7.1999

3. உரிமையியல் வழக்குகள், பேட்டி எண் :2 3, 4, 5, 6, 7, 8, 9, நாள்:31.7.1999, 7.8.1999, 26.5.1999, 18.7.1999, 2.5.1999, 5.4.2000.

4. உரிமையியல் வழக்குகள், பேட்டி எண்:2, நாள்:31.7.1999.

5. உரிமையியல் வழக்குகள், பேட்டி எண்:3, நாள்:7.8.1999.

6. மேலது, பேட்டி எண்:5, நாள்:26.5.1999.

7. மேலது, பேட்டி எண்:6, நாள்:18.7.1999.

8. உரிமையியல் வழக்குகள், பேட்டி எண்:7, நாள்:2.5.1999.

9. மேலது, பேட்டி எண்:8, நாள்:5.4.2000.

10. மேலது, பேட்டி எண்:9, நாள்:18.3.2000.

11. மேலது, பேட்டி எண்கள்:10, 11, 12, 13, 14, நாள்:31.7.1999, 8.4.2001, 15.5.2001, 13.3.2000.

12. உரிமையியல் வழக்குகள், பேட்டி எண்:10, நாள்:31.7.1999.

13. மேலது, பேட்டி எண்:11, நாள்:8.4.2001.

14. மேலது, பேட்டி எண்:13, நாள்:15.5.2001.

15. மேலது, பேட்டி எண்:14, நாள்:19.3.2000.

16. உரிமையியல் வழக்குகள், பேட்டி எண்:15, நாள்:2.4.1999.

17. மேலது, பேட்டி எண்:16, நாள்:2.4.1999.

18. மேலது, பேட்டி எண்:17, நாள்:8.4.2001.

19. உரிமையியல் வழக்குகள், பேட்டி எண்:18, நாள்:19.3.2000.

20. மேலது, பேட்டி எண்கள்:19, 20, 21, 22, 23, 24, 25, நாள்:2.4.1999, 15.5.2001, 6.5.2001, 19.5.2001, 9.4.2000, 5.2.2000.

21. மேலது, பேட்டி எண்:19, நாள்:2.4.1999.

22. .மேலது, பேட்டி எண்:20, நாள்:15.5.2001.

23. உரிமையியல் வழக்குகள், பேட்டி எண்:21, நாள்:6.5.2001.

24. மேலது, பேட்டி எண்:22, நாள்:19.5.2001.

25. மேலது, பேட்டி எண்:23, நாள்:9.4.1999.

26. மேலது, பேட்டி எண்:25, நாள்:5.2.2000.

27. உரிமையியல் வழக்குகள், பேட்டி எண்:26, 27, 28, நாள்:15.5.2001, 9.4.2000.

28. மேலது, பேட்டி எண்:26, நாள்:15.5.2001.

29. மேலது, பேட்டி எண்:27, நாள்:15.5.2001.

30. மேலது, பேட்டி எண்:28, நாள்:9.4.2000,

31. உரிமையியல் வழக்குகள், பேட்டி எண்:29, 30, 31, 32, நாள்:27.3.1999, 27.5.1999, 5.2.2000, 8.4.2001.

32. மேலது, பேட்டி எண்:29, நாள்: 27.3.1999.

33. மேலது, பேட்டி எண்:30, நாள்:27.3.1999.

34. உரிமையியல் வழக்குகள், பேட்டி எண்:32, நாள்:5.2.2000.

35. குற்றவியல் வழக்குகள், பேட்டி எண்கள்:33, 34, 35, 36, 37, 38, 39, 40,41, 42,43,44, நாள்:2.4.1999, 26.5.1999, 5.2.2000.

36. மேலது, பேட்டி எண்:33, நாள்:2.4.1999.

37. மேலது, பேட்டி எண்:34, நாள்:21.7.1999.

38. மேலது, பேட்டி எண்:36, நாள்:5.2.2000.

39. மேலது, பேட்டி எண்:37, நாள்:28.3.1999.

40. குற்றவியல் வழக்குகள், பேட்டி எண்:38, நாள்:14.4.2001.

41. மேலது, பேட்டி எண்:40, நாள்:20.4.2000.

42. மேலது, பேட்டி எண்:42, நாள்:20.4.2000.

43. மேலது, பேட்டி எண்:43, நாள்:25.3.2000.

44. மேலது, பேட்டி எண்:44, நாள்:26.5.1999.

45. குற்றவியல் வழக்குகள், பேட்டி எண்கள்:45, 46, 47, 48, நாள்:8.4.2001, 25.3.2000, 5.9.1999..

46. மேலது, பேட்டி எண்:45, நாள்:8.4.2001.

47. மேலது, பேட்டி எண்:46, நாள்:8.4.2001.

48. மேலது, பேட்டி எண்:47, நாள்:25.3.2009.

49. குற்றவியல் வழக்குகள், பேட்டி எண்:48, நாள்:5.9.1999.

50. மேலது, பேட்டி எண்:49, நாள்:19.5.2001.

51. மேலது, பேட்டி எண்:50, நாள்:14.4.2001.

52. குற்றவியல் வழக்குகள், பேட்டி எண்:51, நாள்:14.5.2001.

53. மேலது, பேட்டி எண்:52, நாள்:19.5.2001.

54. மேலது, பேட்டி எண்:53, நாள்:8.8.1999.

55. குற்றவியல் வழக்குகள், பேட்டி எண்:54, நாள்:5.4.2000.

56. மேலது, பேட்டி எண்:55, நாள்:5.4.2000.

57. மேலது, பேட்டி எண்:56, நாள்:20.4.2001.

58. குற்றவியல் வழக்குகள், பேட்டி எண்:57, நாள்:3.4.1999.

59. மேலது, பேட்டி எண்:58, நாள்:19.5.2000.

60. மேலது, பேட்டி எண்:59, நாள்:22.4.2001.

61. குற்றவியல் வழக்குகள், பேட்டி எண்:60, நாள்:18.3.2000.

62. மேலது, பேட்டி எண்கள்:61, 62, 63, நாள்:27.5.1999, 27.5.2000, 20.4.2001.

63. மேலது, பேட்டி எண்:61, நாள்:27.5.1999.

64. மேலது, பேட்டி எண்:62, நாள்:27.5.2000.

65. மேலது, பேட்டி எண்:63, நாள்:20.4.2001.

66. குற்றவியல் வழக்குகள், பேட்டி எண்:64, நாள்:18.7.1999.

67. குடும்ப வழக்குகள், பேட்டி எண்கள்:65, 66, 67, 68, 69, 70, நாள்:22.4.2001, 15.5.2001, 28.5.1999, 8.8.1999, 25.9.1999..

68. மேலது, பேட்டி எண்:65, நாள்:22.4.2000.

69. குடும்ப வழக்குகள், பேட்டி எண்:66, நாள்:15.5.2001.

70. மேலது, பேட்டி எண்:67, நாள்:28.5.1999.

71. குடும்ப வழக்குகள், பேட்டி எண்:68, நாள்:28.3.1999.

72. மேலது, பேட்டி எண்:69, நாள்:8.9.1999.

73. குடும்ப வழக்குகள், பேட்டி எண்:70, நாள்:25.9.1999.

74. மேலது, பேட்டி எண்கள்:71 72, 73, 74, 75, 76, 77, 78, நாள்:2.4.1999, 5.4.2000, 2.5.1999, 25.3.2000, 25.3.2000, 6.2.2000, 28.5.1999, 19.5.2000.

75. குடும்ப வழக்குகள், பேட்டி எண்:71, நாள்: 2.4.1999.

76. மேலது, பேட்டி எண்:72, நாள்:5.4.2000

77. மேலது, பேட்டி எண்:73, நாள்:2.5.1999

78. மேலது, பேட்டி எண்:74, நாள்:25.3.2000.

79. மேலது, பேட்டி எண்:75, நாள்: 25.3.2000.

80. மேலது, பேட்டி எண்:76, நாள்:6.2.2000.

81. குடும்ப வழக்குகள், பேட்டி எண்:77, நாள்:28.5.1999.

82. மேலது, பேட்டி எண்:78, நாள்:195.2000.

83. மேலது, பேட்டி எண்:79, நாள்:2.4.1999.

84. குடும்ப வழக்குகள், பேட்டி எண்கள்:80, 81, 82, 83, 84, நாள்:28.3.1999, 31.7.1999, 7.8.1999, 14.4.2001.

85. மேலது, பேட்டி எண்:80, நாள்:28.3.1999.

86. மேலது, பேட்டி எண்:81, நாள்:31.7.1999.

87. மேலது, பேட்டி எண்:82, நாள்:7.8.1999..

88. குடும்ப வழக்குகள், பேட்டி எண்: நாள்:84, 14.4.2001.

89. மேலது, பேட்டி எண்:104, நாள்:5.9.1999.

90. மேலது, பேட்டி எண்:105, நாள்:17.7.1999.

91. குடும்ப வழக்குகள், பேட்டி எண்:106, நாள்:3.1.7.1999.

92. மேலது, பேட்டி எண்:109, நாள்:20.4.2001.

93. மேலது, பேட்டி எண்:110, நாள்:27.5.1999.

94. குடும்ப வழக்குகள், பேட்டி எண்:97, நாள்:18.3.2000..

95. மேலது, பேட்டி எண்:98, நாள்:19.3.2000..

96. மேலது, பேட்டி எண்:120, நாள்:2.4.1999..

97. குடும்ப வழக்குகள், பேட்டி எண்:115, நாள்:26.5.1999.

98. மேலது, பேட்டி எண்:102, நாள்:6.2.2000.

99. மேலது, பேட்டி எண்:103, நாள்:204.2001

100. மேலது, பேட்டி எண்:126, நாள்:5.2.2000..

101. குடும்ப வழக்குகள், பேட்டி எண்:92, நாள்:14.4.2001.

102. மேலது, பேட்டி எண்:96, நாள்:8.4.2001.

103. குடும்ப வழக்குகள், பேட்டி எண்:95, நாள்:8.4.2001.

104. மேலது, பேட்டி எண்:93, நாள்:6.5.2001.

105. மேலது, பேட்டி எண்:94, நாள்:14.4.2001.

106. மேலது, பேட்டி எண்:122, நாள்:5.4.2000.

107. குடும்ப வழக்குகள், பேட்டி எண்:129, நாள்:18.3.2000.

108. குடும்ப வழக்குகள், பேட்டி எண்:101, நாள்:27.5.1999.

109. மேலது, பேட்டி எண்:130, நாள்:6.2.2000.

110. குடும்ப வழக்குகள், பேட்டி எண்:127, நாள்:5.2.2000.

111. மேலது, பேட்டி எண்:132, நாள்:6.2.2000

112. மேலது, பேட்டி எண்:116, நாள்:28.5..1999.

113. குடும்ப வழக்குகள், பேட்டி எண்:107, நாள்:11.9.1999.

114. மேலது, பேட்டி எண்:108, நாள்:24.4.1999.

115. குடும்ப வழக்குகள், பேட்டி எண்:88, நாள்:8.7.1999.

116. மேலது, பேட்டி எண்:86, நாள்:11.9.1999.

117. குடும்ப வழக்குகள், பேட்டி எண்:92, நாள்:14.4.2000.

118. மேலது, பேட்டி எண்:100, நாள்:20.4.2001.

119. மேலது, பேட்டி எண்:91, நாள்:25.3.2000.

120. குடும்ப வழக்குகள், பேட்டி எண்: 87, நாள்:179.1999.

121. மேலது, பேட்டி எண்: 89, நாள்:17.7.1999.

122. குடும்ப வழக்குகள், பேட்டி எண்: 134, நாள்:27.3.1999.

123. மேலது, பேட்டி எண்: 112, நாள்:8.7.1999.

124. குடும்ப வழக்குகள், பேட்டி எண்: 122, நாள்:5.4.2000.

125. மேலது, பேட்டி எண்: 113, நாள்:5.2.2000.

126. மேலது, பேட்டி எண்: 114, நாள்:2.5.1999.

127. குடும்ப வழக்குகள், பேட்டி எண்: 117, நாள்:28.5.1999.

128. மேலது, பேட்டி எண்: 118, நாள்:6.2.2000.

129. மேலது, பேட்டி எண்: 111, நாள்:6.2.2000.

130. குடும்ப வழக்குகள், பேட்டி எண்:119, நாள்:27.3.1999.

131. மேலது, பேட்டி எண்: 123, நாள்:18.7.1999.

132. குடும்ப வழக்குகள், பேட்டி எண்: 124, நாள்:8.7.1999.

133. மேலது, பேட்டி எண்: 131, நாள்:6.2.2000.

134. பொதுப்பிரச்சனைகள் தொடர்பான வழக்குகள், பேட்டி எண்: 136, நாள்:14.4.2001.

135. மேலது, பேட்டி எண்: 141, நாள்:5.2.2000.

136. பொதுப்பிரச்சனைகள் தொடர்பான வழக்குகள், பேட்டி எண்: 142, நாள்:26.5.1999.

137. மேலது, பேட்டி எண்: 137, நாள்:28.3.1999.

138. மேலது, பேட்டி எண்: 138, நாள்:9.11.1999.

139. மேலது, பேட்டி எண்: 139, நாள்:28.3.1999.

140. மேலது, பேட்டி எண்: 140, நாள்:20.4.2001.

141. மேலது, பேட்டி எண்: 143, நாள்:19.3.2000.

142. பொதுப்பிரச்சனைகள் தொடர்பான வழக்குகள், பேட்டி எண்: 144, நாள்:19.3.2000.

143. மேலது, பேட்டி எண்: 145, நாள்:18.3.2000.

144. மேலது, பேட்டி எண்: 146, நாள்:21.4.2001.

145. பொதுப்பிரச்சனைகள் தொடர்பான வழக்குகள், பேட்டி எண்: 147, நாள்:5.4.2000.

146. மேலது, பேட்டி எண்: 148, நாள்:24.4.1999.

147. மேலது, பேட்டி எண்: 149, நாள்:9.11.19999.

# *இயல்–4*

# சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களின் செயற்பாடுகள்

# இயல் - 4

## சிவகங்கை மாவட்டக் கிராம வழக்கு மன்றங்களின் செயற்பாடுகள்

கிராமங்களில் வாழும் மக்களிடையே தோன்றும் சிக்கல்களையும் பிரச்சினைகளையும் கிராம வழக்கு மன்றங்களின் பஞ்சாயத்து அமைப்பு அலசிப் பார்த்து, சீர்தூக்கிச் செம்மையாக ஆராய்ந்து அதற்குத் தக்க தீர்ப்புக்களைக் கூறுகின்றது. ஒவ்வொரு சாதிக்கெனவும் தனித்தனிப் பஞ்சாயத்து அமைப்புக்கள் இருப்பதால் அவற்றின் செயல்பாடுகளிலும் தீர்ப்புகளின் தன்மைகளிலும் பல நிலைகள் இருக்கின்றன. சிவகங்கை மாவட்டக் கிராம வழக்கு மன்றங்களின் பஞ்சாயத்துக்களின் தன்மைகளையும், வழக்குகளின் தொடக்கம், விசாரணை, முடிவு போன்ற அதன் செயற்பாடுகளையும், தீர்ப்புக்களையும் விளக்கமாக எடுத்துரைப்பது இவ்வியலின் நோக்கமாகும்.

### வழக்குகளின் தொடக்கம்

வாதி, பிரதிவாதி, பஞ்சாயத்து, தலைவர், உறுப்பினர்கள் ஆகியோர் அடங்கிய குழு அமைப்பே வழக்கு மன்றம் (பஞ்சாயத்து) ஆகும். வாதி என்பவர் (பிரதிவாதியால்) பிறரால் ஏதேனும் ஒருவகையில் பாதிக்கப்பட்டவராக இருப்பார். வாதி, தனக்குப் பாதிப்பை ஏற்படுத்தியவர் மீது வழக்கினைத் தொடுப்பார். குற்றம் சாட்டப்பட்டவர் "பிரதிவாதி" என அழைக்கப்படுகின்றார். சிவகங்கை மாவட்ட வழக்கு மன்றங்களில் பாதிக்கப்பட்டவரான வாதியே பஞ்சாயத்தைக் கூட்டுமாறு முறையிட்டு, வழக்கினைத் தொடுப்பது மரபாக உள்ளது. பாதிக்கப்பட்டவரான வாதி பஞ்சாயத்துத் தலைவரிடம் (நாட்டாமை அல்லது அம்பலகாரர்) சென்று தனக்கு இன்னாரால் இவ்வகையில் பாதிப்பு ஏற்பட்டுள்ளது, அதற்குக் காரணம் இவர்தான் என்று பிரதிவாதியின் பெயரைக் குறிப்பிட்டுத் தனக்கு நியாயம் வழங்குமாறு வேண்டுகின்றார். பஞ்சாயத்துத் தலைவர் 'ஓடும்பிள்ளை'யை அழைத்து

ஊர் சாட்டுமாறு கட்டளையிடுகின்றார். சில கிராமங்களில் பண்டாரத்தின் மூலமாகத் தகவல் தெரிவிக்கப்பட்டு வழக்கு மன்றம் கூட்டப்படுகின்றது.

தங்கள் ஊர் வழக்கு மன்றத்திற்கு இப்படியொரு வழக்கு வந்துள்ளது என்பதைக் கிராமப் பொதுமக்களுக்கு அறிவிப்பதற்காக ஊர் சாட்டுகின்றார்கள். சில கிராமங்களில் 'தோட்டி' என்பவர் தண்டோராப் போட்டும் பறையறைந்தும் ஊர்ப் பொதுமக்களுக்கு அறிவிப்பதைக் காண முடிகின்றது. 'ஓடும்பிள்ளை' அல்லது 'தோட்டி' மாலை ஆறுமணிக்குமேல் தெருத்தெருவாகச் சென்று தெருவின் முச்சந்திகளிலும் நாற்சந்திகளிலும் நின்றுகொண்டு வழக்கு யார் யாருக்கிடையே நடைபெறுகின்றது என்பதை அறிவித்து அனைவரும் கூட்டத்திற்கு வருமாறு வாயால் சத்தம் போட்டு அழைக்கின்றார்.[1] சிவகங்கை மாவட்ட கிராமங்களில் பகலில் பெரும்பான்மையினர் வேளாண்மைத் தொழிலுக்குச் சென்று வருவதால் காலத்தின் பயன்பாடு கருதி இரவு ஒன்பது மணிக்குமேல் வழக்கு மன்றத்தைக் கூட்டுகின்றனர். வேளாண்மைத் தொழில் இல்லாத காலங்களிலும், இரண்டு கிராமங்களிடையேயுள்ள பொதுவான சிக்கல்களைத் தீர்ப்பதற்காகக் கூட்டப்படும் வழக்குகளிலும், சில தவிர்க்க முடியாத முக்கியமான வழக்குகள் வரும்பொழுதும், பகல் நேரங்களில் வழக்கு மன்றங்கள் நடைபெறுகின்றன.

**கிராம வழக்கு மன்றங்களில் வழக்குகளை முன் வைத்தல்**

பஞ்சாயத்துத் தலைவர், உறுப்பினர்கள், வாதி, பிரதிவாதி மற்றும் வழக்கு மன்றங்களில் கலந்து கொள்ளும் பொதுமக்கள் அனைவரும் பஞ்சாயத்து நடைபெறும் இடத்தில் குறிப்பிட்ட நேரத்தில் கூடுகின்றனர். பஞ்சாயத்து நடைபெறும் இடத்தில் வாதியொரு பக்கமும், பிரதிவாதி மறுபக்கமும் கையைக் கட்டியவாறு நிற்பர். பொதுமக்கள் அனைவரும் பார்வையாளர்களாகத் தலைவர், உறுப்பினர்கள் அமர்ந்திருக்கும் இடத்திற்கு எதிரே அவர்கள் பக்கம் திரும்பி

அமர்ந்திருப்பார்கள். வாதியும் பிரதிவாதியும் ஆணாக இருந்தால் தலைப்பாகையை அவிழ்த்து (துண்டு) இடுப்பில் கட்டியவாறு கைகளை முன்புறம் கட்டிக்கொண்டு நிற்க வேண்டும். பெண்ணாக இருந்தால் கைகளைக் கட்டிக் கொண்டு நிற்க வேண்டும். வாதி, பிரதிவாதி ஆகிய இருவரும் பஞ்சாயத்துத் தலைவர் முறைப்படி பஞ்சாயத்துத் தொடங்குகின்றது என்று அறிவித்தவுடன், சபையை நோக்கிக் கும்பிட்டு விழுந்து சபையை வணங்க வேண்டும்.[2]

**மண்டுப் பணம் வைத்தல்**

திருப்புவனம் ஒன்றியத்திலுள்ள ஏனாதி, பூவந்தி, கீரனூர், செம்பூர், மடப்புரம் ஆகிய ஐந்து ஊர்களும் அடங்கிய பகுதி 'அஞ்சூர் நாடு' என்றழைக்கப்படுகின்றது. இதன் தலைமையிடம் ஏனாதி கிராமமாகும். பஞ்சாயத்துத் தலைவருக்கு 'நாட்டாமை' என்று பெயர். தற்போதைய பஞ்சாயத்துத் தலைவராக இருப்பவர் ஏனாதி நாட்டாமை கரு. மலைச்சாமி ஆவர். பல வழக்குகளில் இவர் வழங்கிய தீர்ப்புகள் உச்ச நீதிமன்ற நீதிபதிகளாலும் பாராட்டப் பெற்றுள்ளன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இந்த ஐந்து ஊர்க் கிராமங்களிலும் தனித்தனியே உள்ளூர் வழக்கு மன்றங்கள் உள்ளன. அந்தந்த ஊர்க் கிராம வழக்கு மன்றங்களில் தீர்க்கப்படாத வழக்குகள் அஞ்சூர் நாட்டின் தலைமையிடமான ஏனாதிக் கிராம வழக்கு மன்றத்தை வந்தடையும். ஏனாதிக் கிராம வழக்குமன்றத்தில் வழக்கினை முன் வைத்து முறையிடும் வாதி, பிரதிவாதி ஆகிய இருவரும் கிராமத்துக்கு 'மண்டுப்பணம்' செலுத்தி வழக்கு மன்றத்தில் கும்பிட்டு விழுந்து சபையை வணங்க வேண்டும். 'மண்டுப்பணம்' வழக்கின் தன்மைக் கேற்பவும், வழக்கினை முறையிடும் வாதி, பிரதிவாதி ஆகியோரின் பொருளாதாரத் தகுதிக்கேற்பவும் வழக்கு மன்றத்தினரால் நிர்ணயிக்கப்படும். தற்பொழுது குறைந்த பட்சமாக ஐம்பது ரூபாய் மண்டுப் பணம்

செலுத்துகின்றனர். அதிகத் தொகையாக ரூபாய் ஐநூறுவரை செலுத்த வைக்கின்றனர். மண்டுப் பணத்துடன் வெற்றிலை, பாக்கு முதலியனவற்றையும் வைத்துக் கும்பிட்டு விழுந்து சபையை வணங்க வேண்டும். அப்பொழுது உடலில் மேலாடை அணியக் கூடாது; தலைப்பாகையை (துண்டை) அவிழ்த்து இடுப்பில் கட்டிக் கொள்ள வேண்டும். மண்டுப் பணத்தையும் வெற்றிலை பாக்கையும் வைத்துக் கிராமத்தார் முன்னிலையில் கும்பிட்டு விழுந்து வணங்குதல்[3] ஏனாதி வழக்கு மன்றத்தின் முக்கிய மரபாகப் பின்பற்றப்பட்டு வருகின்றது.

ஏனாதி நாட்டாமை வெளியூரில் தங்கியிருக்கும் பொழுது பெரும்பாலும் வழக்கு மன்றம் கூட்டப்படுவதில்லை. தவிர்க்க இயலாத காரணத்தால் வழக்கு மன்றம் கூட்டப்பெற்றாலும் தீர்ப்புச் சொல்லும் உரிமை பிறபஞ்சாயத்து உறுப்பினர்களுக்கு இல்லை. ஏனாதி வழக்கு மன்றத்தின் தீர்ப்பினை மீறுபவர்களின் வழக்குகளைக் காவல் நிலையத்தில் பதிவு செய்யமாட்டார்கள். இவ்வழக்கு மன்றத்தின் தீர்ப்பு நீதிமன்றங்களின் தீர்ப்புக்களுக்குச் சமமானதாகும்.[4]

**பண்டாரத்தின் மூலம் ஓலை அனுப்புதல்**

ஏனாதிக் கிராமப் பஞ்சாயத்துப் பெரும்பாலும் இரவு நேரத்தில்தான் நடைபெறும். வழக்கு மன்றத்திற்கு முறையிட வரும் வாதியிடம் ஏனாதி நாட்டாமை வழக்கின் சாரத்தினை நன்கு கேட்டறிந்து, அவ்வழக்குடன் தொடர்புடைய பிரதிவாதிக்கும், அக்கிராமத்திலுள்ள முக்கியமான மன்றத் தலைவர்களுக்கும் (பஞ்சாயத்து) பண்டாரத்தின் மூலம் 'ஓலை' எழுதிக் கொடுத்துத் தகவல் தெரிவிப்பார். அந்த ஓலையில் வழக்கின் தன்மை, வழக்கு விவரம், வாதி, பிரதிவாதி, வழக்கு நடைபெற உள்ள நாள், நேரம் போன்ற தகவல்கள் இடம்பெற்றிருக்கும்.[5] அந்தத் தகவலின்படி வழக்கு மன்றம் கூடும். வழக்கு மன்றம் பெரும்பாலும் ஏனாதி 'மந்தைத்திடலில்' நடைபெறும். வழக்குடன் தொடர்புடைய சாட்சிகள்

வெளியூர்க்காரராக இருப்பின் அவருக்கும் பண்டாரத்தின் மூலமாக ஓலை அனுப்பப்படும்.

**பரம்பரை உரிமை**

அஞ்சூர் நாட்டில் அடங்கியுள்ள ஏனாதி, பூவந்தி, கீரனூர், செம்பூர், மடப்புரம் ஆகிய கிராமங்களில் கள்ளர் இனத்தவர்களே பெரும்பான்மையினராக வாழ்ந்து வருகின்றனர். ஏனாதி 'நாட்டாமை'ப் பட்டம் என்பது பரம்பரை உரிமையாகும். மூத்தவாரிசு அடிப்படையில் தொடர்ந்து வந்து கொண்டிருக்கின்றது. மக்களால் வாக்களித்துத் தேர்ந்தெடுக்கப்படும் பஞ்சாயத்துத் தலைவருக்கு வழக்கு மன்றத்தில் விசாரணைக்கு வரும் வழக்குகளில் தீர்ப்புச் சொல்லும் உரிமை இல்லை. 'அஞ்சூர் நாடு' என்னும் அமைப்பில் அடங்கியுள்ள கீரனூர் கிராமம் மதுரை மாவட்டம் மேலூர் தெற்கு ஒன்றியத்தில் அடங்கியுள்ளது. எனினும் 'கிராம வழக்கு மன்றம்' என்ற அடிப்படையில் அக்கிராமம் ஏனாதிக் கிராம வழக்கு மன்றத்திற்கு உட்பட்டதாகும்.

**அஞ்சூர் நாட்டு வழக்கு மன்றம்**

அஞ்சூர் நாட்டில் 125 கிராமங்களுக்கு மேல் அடங்கியுள்ளன. தெற்கே மானாமதுரை, நரிக்குடி வரையிலும், வடக்கே பூஞ்சுத்தி வரையிலும், கிழக்கே கண்ணாயிருப்பு வரையிலும், மேற்கே சக்குடி வரையிலும் உள்ள கிராமங்கள் அனைத்தும் அஞ்சூர் நாட்டு வழக்கு மன்றத்தின் தீர்ப்புக்களுக்குக் கட்டப்பட்ட கிராமங்களாகும். முன்னர், அஞ்சூர் நாட்டு வழக்கு மன்றம் திருமாஞ்சோலையிலுள்ள கூட்டுச்சாலையில் பெரிய ஆலமரத்தின் அடியில் நடைபெற்று வந்தது. தற்பொழுது பெரும்பான்மையான அஞ்சூர் நாட்டுப் பஞ்சாயத்துக்கள் ஏனாதிக் கிராமத்தில் அதற்கென அமைக்கப்பட்டுள்ள மந்தைத் திடலில்தான் நடைபெற்று வருகின்றன.[6]

*தற்பொழுது அஞ்சூர் நாட்டுப் பஞ்சாயத்திற்கெனத் திருப்புவனத்தில் ஒரு கிராம வழக்கு மண்டபம் கட்டியுள்ளனர். அம்மண்டபம் கட்டுவதற்குரிய இடத்தைச் சிவகங்கை மன்னர் அன்பளிப்பாகக் கொடுத்துள்ளார். அஞ்சூர் நாட்டு வழக்கு மன்றத்தின் தீர்ப்புக்கள் சில சிவகங்கை மன்னராலும் பாராட்டப்பட்டவையாகும்.*

**'பஞ்சாயத்து' முறை**

*'பஞ்சாயத்து' என்ற சொல்லுக்கு 'சமரம்', 'அமைதி' என்று பொருள் கூறுகின்றனர். கிராம வழக்கு மன்றக் கூட்டம் தொடங்கவிருப்பதைத் 'தலையாரி' கிராமத்திலுள்ள முக்கியப் பிரமுகர்களுக்கு அறிவிப்பார். ஏனாதிக் கிராமம் தவிர ஏனையக் கிராமங்கள் வழக்கில் தொடர்பு கொண்டிருந்தால் பண்டாரத்தின் மூலம் 'ஓலை' அனுப்பித் தகவல் தெரிவிப்பார். வழக்கு மன்றம் முதலில் 'சஞ்சாயத்து' முறையில் தொடங்கப்பெறும். சமரசமான முறையில் வழக்கு மன்றத்திற்கு வந்த வழக்கினை வாய்மூலமாகப் பேசிக் கொள்ளுவதற்குச் 'சஞ்சாயத்து முறை' என்று பெயர். இச்சஞ்சாயத்து முறையில் கடுமையான வாக்குவாதங்களும் விவாதங்களும் இடம்பெறாது. பின்னர், படிப்படியாக வழக்கின் சாரங்கள் விவாதிக்கப்பெறும். சஞ்சாயத்து முறையில் விவாதத்தில் (வழக்கு மன்றத்தில்) கலந்து கொள்ளும் பொதுமக்கள் அனைவருக்கும் தங்கள் கருத்துக்களை எடுத்துச்சொல்லும் உரிமை உண்டு. அக்கருத்துக்கள் வழக்கின் சிக்கலுக்குத் தக்க தீர்ப்பாக இருந்தால் ஏற்றுக் கொள்ளப்பெறும், இல்லையெனில் தள்ளப்பெறும். அஞ்சூர் நாட்டின் தலைமைக் கிராமமான ஏனாதிக் கிராமத்தின் 'நாட்டாமை' சொல்லும் தீர்ப்பே இறுதியானதாகும்.[7]*

*அஞ்சூர் நாட்டின் வழக்கு மன்றத்தில் (பஞ்சாயத்து) ஒதுக்கப்படும் வழக்குகள் பிற எந்த நாட்டுப் பஞ்சாயத்திலும் ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது; அவ்வழக்குகளில்*

தொடர்புடையவர்கள் நீதியையும் பெறமுடியாது. அஞ்சூர் நாட்டின் வழக்கு மன்றத்திற்கு வந்த வழக்குகளைக் காவல்துறையினரும் விசாரணைக்கு ஏற்றுக் கொள்ள மறுப்பர். சான்றாகப் பூவந்திக் கிராமத்தில் ஒரு காவல் நிலையம் உள்ளது. அஞ்சூர் நாட்டின் அமைப்பில் உள்ள ஒரு கிராமமே பூவந்தியாகும். இந்தக் காவல் நிலையத்தில் அஞ்சூர் நாட்டின் வழக்கு மன்றங்களில் விசாரிக்கப்பட்ட அல்லது அஞ்சூர் நாட்டின் வழக்கு மன்றத் தீர்ப்புக்களுக்குக் கட்டுப்படாத வழக்குகளைப் பதிவு செய்து விசாரணை செய்வதில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.[8]

**பூவந்திக் கிராம வழக்கு மன்றம்**

சிவகங்கை மாவட்டம் திருப்புவனம் ஒன்றியத்திலுள்ள மிகப்பெரிய கிராமம் பூவந்தி ஆகும். இக்கிராமத்தில் கள்ளர் (அம்பலம்) இனத்தவர்களே பெரும்பான்மையினர் ஆவர். பூவந்திக் கிராம வழக்கு மன்றத்தின் தலைவர் 'நாட்டாமை' என்றே அழைக்கப்படுகின்றார். இப்பட்டம் மூத்தவாரிசு அடிப்படையில் பரம்பரை உரிமையுடையதாகும். தற்பொழுது பூவந்தி வழக்கு மன்றத்தின் நாட்டாமையாக இருப்பவர் கோபாலகிருஷ்ணன் ஆவர். கள்ளர் இனத்தைச் சேர்ந்த இவர் இளம் அறிவியல் பட்டம் பெற்றவர். மக்களால் வாக்குரிமை மூலம் தேர்ந்தெடுக்கப்பட்ட ஊராட்சி மன்றத் தலைவருக்குப் பூவந்திக் கிராம வழக்குமன்ற வழக்குகளில் தீர்ப்புச் சொல்லும் உரிமை இல்லை. எனினும் அவரும் கிராம வழக்கு மன்றக் கூட்டங்களில் கலந்து கொண்டு சஞ்சாயத்து முறையில் தன்னுடைய கருத்துக்களை எடுத்துரைக்கின்றார். வழக்குகளில் பூவந்தி நாட்டாமையின் தீர்ப்பே இறுதியானதாகும். இக்கிராம வழக்கு மன்றத்தில் மீறப்படும் அல்லது தீர்க்க முடியாத வழக்குகள் ஏனாதிக் கிராம வழக்கு மன்றத்திற்குச் செல்லும்.[9]

வாதியும், பிரதிவாதியும் கிராம வழக்கு மன்றத்தையும், கிராமத்தையும் 'கும்பிட்டு விழுந்து வணங்குதல்' இவ்வழக்கு மன்றத்தின் முக்கிய மரபாக உள்ளது. வாதியோ அல்லது பிரதிவாதியோ கிராமத்தில் மதிப்பு மிக்கவராகவோ அல்லது

வயது முதிர்ந்தவராகவோ இருப்பின் அவர்களின் மகன்களில் ஒருவரோ அல்லது உறவினர்களில் ஒருவரோ கும்பிட்டு விழுந்து கிராம வழக்கு மன்றத்திற்கு 'மண்டுப்பணம்' செலுத்தலாம். 'கிராமவழக்கு மன்றத்தை வணங்குதல்' என்பது அவ்வழக்கு மன்றத்தின் தீர்ப்புக்களுக்கு வாதியும், பிரதிவாதியும் கட்டுப்பட்டவர்கள் என்பதைக் குறிக்கும்.

பூவந்திக் கிராம வழக்கு மன்றத்தில் வாதியும் பிரதிவாதியும் வழக்கு முடியும் வரை வாய்தாதோறும் 'மண்டுப்பணம்' செலுத்த வேண்டும். இம்'மண்டுப்பணம்' வழக்கு மன்றத்தில் கலந்துகொள்ளும் உறுப்பினர்கள் அனைவராலும் பகிர்ந்து கொள்ளப்பெறும். பூவந்தி நாட்டாமை இந்த மண்டுப்பணத்தைப் பெற்றுக் கொள்ள மாட்டார். மண்டுப்பணம் பெருந்தொகையாக இருப்பின் எஞ்சிய பணம் கிராம நலனுக்காகக் கிராமக் கணக்கில் செலுத்தப்பெறும். அப்பணம் ஊர்ப் பொதுக்காரியங்களுக்கும் கோவில் திருவிழாக்களுக்கும் செலவழிக்கப்பெறும்.

பூவந்திக் கிராம வழக்கு மன்றத்தின் (பஞ்சாயத்து) கீழ்ச் செயல்பட்டும் கட்டுப்பட்டும் வரும் கிராமங்கள் 'நாலூர் நாடு' என்றழைக்கப்படுகின்றன. அரசனூர், இலுப்பப்பட்டி, கிளாதரி, தமராக்கி ஆகிய நான்கு கிராமங்களும் அடங்கிய கிராம வழக்கு மன்ற அமைப்பே 'நாலூர் நாடு' ஆகும். நாலூர் நாட்டுக் கிராம வழக்கு மன்றத்தின் தலைமையிடம் தமராக்கி ஆகும். இந்த நாலூர் நாட்டுக் கிராம வழக்கு மன்ற அமைப்பில் நூறு குக்கிராமங்கள் அடங்கியுள்ளன. பில்லூர்க் கிராமம் இந்த அமைப்பினுள் உள்ளடங்கியதே ஆகும்.[10]

**அரசனூர்க் கிராம வழக்கு மன்றம்**

இக்கிராமத்தில் கள்ளர் (அம்பலம்) இனத்தவர்களே பெரும்பான்மையினராக வாழ்ந்து வருகின்றனர். இக்கிராமத்தில் 'ஊர்நாட்டாமை' என்ற மரியாதைக்குரியவராகப் பெரியகருப்பன் அம்பலம் இருந்து வருகின்றார். இவர்

ஐம்பதாண்டுக்கால வழக்கு மன்ற அனுபவம் உடையவர் ஆவார். இவர்கள் குடும்பத்திற்கு மூத்த வாரிசு அடிப்படையில் 'நாட்டாமை' பட்டம் பரம்பரை உரிமையுடையதாகும். இக்கிராமத்தில் 'ஊர் நாட்டாமை' என்ற பட்டம் என்றும் மரியாதைக்குரியதாக உள்ளது. அரசனூர் கிராமம் 'நாலூர் நாடு' என்ற அமைப்பில் பூவந்திக் கிராம வழக்கு மன்றத்தின் கட்டுப்பாட்டிலும் செயல்பாட்டிலும் இன்றும் இயங்கி வருகின்றது.[11] இக்கிராமத்தில் வழக்கு மன்றம் பகல் நேரத்தில் ஊர் மந்தையில் நடைபெற்று வருகின்றது.

நாலூர் நாட்டு வழக்கு மன்றம் முன்னர் இலுப்பக்குடி கிராமத்தில் நடைபெற்று வந்தது. தற்பொழுது தமராக்கியில் நடைபெற்று வருகின்றது. இங்கு நடைபெறும் வழக்கு மன்றம் 'நாட்டுப்பஞ்சாயத்து' என்னும் சிறப்பினைப் பெறுகின்றது.[12]

இக்கிராமத்தில் 'மண்டுப்பணம்' கிராமத்திற்குப் பத்து ரூபாய் என்ற அளவில் பரம்பரையாக வசூலிக்கப்பட்டு வந்திருக்கின்றது. இக்கிராம வழக்கு மன்றத்தினர் மண்டுப்பணத்தை 'நடுவுப் பணம்' என்றும் குறிப்பிடுகின்றனர். தீர்ப்புச் சொல்லும் நடுவர் மன்றத்திற்குக் காணிக்கையாகச் செலுத்தப்படும் பணமாதலால் இதனை 'நடுவுப்பணம்' என்று குறிப்பிடுகின்றனர். தற்பொழுது மண்டுப்பணமாகிய 'நடுவுப் பணம்' 12-24-36 என்ற முறையில் வழக்கு மன்றத்தினரால் நிர்ணயிக்கப்பட்டு வசூலிக்கப்பட்டு வருகின்றது.[13]

இக்கிராம வழக்கு மன்றத்தில் வழக்கினை விசாரித்து தீர்ப்புச் சொல்லும் முறை அஞ்சூர் நாட்டு வழக்கு மன்ற முறையிலிருந்து சற்று மாறுபட்டதாக உள்ளது. வழக்கின் தன்மை, போக்கு, சிக்கல் முதலியனவற்றை 'ஊர் நாட்டாமை' மென்மையாகவும், வன்மையாகவும் விசாரிக்கின்றார். வழக்கில் தீர்ப்புச் சொல்லும்

உரிமை அரசனூர் அம்பலத்திற்கு மட்டுமே உள்ளது. வழக்கில் தீர்ப்புச் சொல்பவர்க்கு 'அம்பலம்' என்னும் பட்டம் கொடுக்கப்பட்டிருக்கின்றது. தற்பொழுது அரசனூர் கிராம வழக்கு மன்றத்தின் 'அம்பலம்' பட்டத்திற்குரியவர் சின்னச்சாமி அம்பலம் ஆவார். இவர்கள் குடும்பத்திற்கு இப்பட்டம் பரம்பரை உரிமையுடையதாகும்.[14] இவ்வாறு அரசனூர்க் கிராமத்தில் வழக்கு மன்றக் கூட்டங்களில் 'ஊர் நாட்டாமை', 'அம்பலம்' ஆகிய இருவரும் 'இரட்டையாட்சி' செலுத்தி வருகின்றனர். மக்களால் வாக்களித்துத் தேர்ந்தெடுக்கப்படும் ஊராட்சி மன்றத் தலைவருக்கு வழக்குகளில் தீர்ப்புச் சொல்லும் உரிமையில்லை.

முதலில் வழக்கு மன்றத்திற்கு வந்த வழக்கினை விசாரணை செய்து ஊர் நாட்டாமையும் அம்பலமும் நன்கு அலசி ஆராய்கின்றனர். பின்னர் வழக்கு மன்றத்தின் உறுப்பினர்கள் அடங்கிய ஐந்து பேர் கொண்ட குழுக்கூடிக் கலந்து ஆலோசித்து அவ்வழக்கிற்கான தீர்ப்பினைத் தீர்மானிக்கின்றனர். அதன் பின்னர் இறுதியாக 'அம்பலம்' அவ்வழக்கிற்கான தீர்ப்பினை அனைவரும் ஏற்றுக்கொள்ளும் வகையில் பக்குவமாகச் சார்புத் தன்மையை அகற்றி 'நடுவுநிலைமை' தவறாமல் கூறுகின்றார்.[15]

சிவகங்கை மாவட்டத்தில் அரசனூர்க் கிராம வழக்கு மன்றத்திற்குக் கட்டுப்பட்ட கிராமங்களாகக் குமாரபட்டி, முடிகண்டம், மீனாட்சிபுரம், காரம்பேட்டை, உசிலம்பட்டி, மாரணி உசிலங்குளம், மணப்பட்டி, கோனார்பட்டி, லெட்சுமிபுரம், சங்கம்பட்டி, தாண்டவன்பட்டி, எழுவக்கரையான் பட்டி, திருமாஞ்சோலை, சித்தாலங்குறுக்குவயல், படமாத்தூர் ஆகிய உட்கிராமங்கள் அமைந்துள்ளன. இவற்றுள் தாண்டவன்பட்டி, எழுவக்கரையான் பட்டி ஆகிய கிராமங்கள் மதுரை மாவட்டம் மேலூர் ஒன்றியத்தில் அமைந்துள்ளன.[16]

அரசனூர்க் கிராம வழக்கு மன்றத்தில் மண்டுப்பணம் ஒரே ஒரு தடவைதான் வசூலிக்கப் பெறும். வாய்தாதோறும் மண்டுப்பணம் வசூலிப்பது கிடையாது. ஆனால், கிராம வழக்கு மன்றம் தொடங்கும் ஒவ்வொரு நாளும் (வாய்தாதோறும்; வழக்கு முடியும் வரை) வாதியும் பிரதிவாதியும் கிராம வழக்கு மன்றத்தை முறைப்படி கும்பிட்டு விழுந்து வணங்குதல் வேண்டும். அப்பொழுது வெற்றிலை, பாக்கு வைத்துக் கிராம சபையை வணங்க வேண்டும்.[17]

அஞ்சூர் நாட்டுக் கிராம வழக்கு மன்றங்களில் வாய்தாதோறும் 'மண்டுப்பணம்' வசூலிக்கப்பெறும். அரசனூர்க் கிராம வழக்கு மன்றத்தில் ஒருமுறை மட்டுமே 'மண்டுப்பணம்' வசூலிக்கப்பெறும். வழக்கு மன்றம் தொடங்க இருப்பதைப் 'பண்டாரம்' (கிராமக்கோயில் பூசாரி) அரசனூர்க் கிராம வழக்கு மன்றத்திலுள்ள முக்கிய பிரமுகர்களுக்கும் ஊர்ப்பொது மக்களுக்கும் அறிவிப்பார். அத்தகவலின் படி அனைவரும் வழக்கு மன்றம் நடைபெறும் ஊர் மந்தையில் கூடுவர்.

அரசனூர்க் கிராம வழக்குமன்றத்தின் தீர்ப்பைப் பெரும்பாலும் வாதியும் பிரதிவாதியும் மீறாமல் பணிந்து ஏற்றுக் கொள்கின்றனர். அவ்வாறு கூறப்படும் கிராம வழக்கு மன்றத்தார் தீர்ப்பை மீறுபவர்களுக்கு எதிராகவும், கட்டுப்படுவர்களுக்கும் ஆதரவாகவும் கிராம வழக்கு மன்றத்தினர் காவல் நிலையங்களிலும் நீதி மன்றங்களிலும் சாட்சி சொல்வது அரசனூர்க் கிராம வழக்கு மன்றத்தார் கடமையாக உள்ளது.[18]

**தமராக்கி நாட்டு வழக்கு மன்றம்**

நாலூர் நாட்டுக் கிராம வழக்கு மன்றத்தின் தலைமையிடமாக அமைந்திருப்பது தமராக்கிக் கிராமமாகும். நிருவாக வசதிக்காக தமராக்கிக் கிராமம் தமராக்கி தெற்கு, தமராக்கி வடக்கு என இரண்டாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இக்கிராமத்தில் கள்ளர் இனத்தவர்களே பெரும்பான்மையினராக வாழ்ந்து

வருகின்றனர். தமராக்கிக்கு அருகாமையில் அமைந்துள்ள குமாரப்பட்டிக் கிராமமும் தமராக்கிக் கிராம வழக்கு மன்றத்திற்கு உட்பட்டதே ஆகும். தமராக்கி தெற்கும் தமராக்கி வடக்கும் தனித்தனி ஊராட்சி மன்ற அமைப்புக்களைக் கொண்டதாகும்.

தமராக்கிக் 'கிராம வழக்கு மன்றம்' எட்டுக்கரை அம்பலக்காரர்களால் நிருவகிக்கப்பட்டு வருகின்றது. தெற்குக் கிராம வழக்கு மன்றத்திற்குப் பாஸ்கரன் அம்பலமும் வடக்குக் கிராம வழக்கு மன்றத்திற்கு அய்யாத்துரை அம்பலமும் அம்பலகாரர்களாகத் தற்பொழுது பட்டம் பெற்றுள்ளனர். தமராக்கித் தெற்கு, தமராக்கி வடக்கு, குமாரப்பட்டி ஆகிய மூன்று கிராமங்களுக்கும் நாட்டாமையாக இருப்பவர் 'பெரிய அம்பல காரர்' என்றழைக்கப்படுகின்றார். தற்பொழுது பெரிய அம்பலகாரராக இருக்கும் பாஸ்கரன் அம்பலம் எட்டாவது கரைக்காரர் ஆவார். கிராம வழக்கு மன்றத்தில் தீர்ப்புச் சொல்லக்கூடிய அனைத்து அதிகாரமும் உள்ளவர் 'பெரிய அம்பலகாரர்' ஆவார். பெரிய அம்பலக்கரராகிய பாஸ்கரன் அம்பலத்திற்கு அடுத்த நிலையில் தீர்ப்புச் சொல்லும் உரிமையைப் பெற்றிருப்பவர் காசி அம்பலம் ஆவார். இந்தப் 'பெரிய அம்பலகாரர்' பட்டம் மூத்தவாரிசு அடிப்படையில் பரம்பரை உரிமையுடையதாகும்.[19]

தமராக்கிக் கிராம வழக்கு மன்றம், வழக்குகளில் தீர்ப்புக்களைச் சொல்லுவதோடு கோயில் நிருவாகம், திருவிழாக்கள், பொதுவரவு செலவுக்கணக்கு முதலியவைகளையும் கண்காணித்து வருகின்றது. தமராக்கியின் முதல்கரை அம்பலகாரர் தற்போதைய தமராக்கித் தெற்கு ஊராட்சி மன்றத் தலைவர் ஏ. மரகதம் அய்யனார் அம்பலம் ஆவார். எட்டுக்கரை அம்பலக்காரர்களுக்கும் 'அம்பலம்' என்னும் பட்டப்பெயர் உண்டு. பெரிய அம்பலகாரருக்கு அடுத்த நிலையில் கிராம வழக்கு மன்றத்தில் தீர்ப்புச் சொல்லும் அதிகாரம் முதல்கரை அம்பலகாரருக்கு

உண்டு. இது எழுதப்படாத சட்டமாக இன்று வரை தமராக்கிக் கிராம வழக்கு மன்றத்தில் நடைமுறையில் பின்பற்றப்பட்டு வருகின்றது.[20]

தமராக்கி தெற்கு மற்றும் தமராக்கி வடக்குக்கு இடையில் 'மந்தைத்திடல்' அமைந்துள்ளது. இங்குத்தான் கிராம வழக்கு மன்றம் நடைபெறும். இந்த மந்தைத் திடல் 'நாட்டுப்பஞ்சாயத்துக் கூடம்' என்றும் அழைக்கப்படுகின்றது.[21]

கிராம வழக்கு மன்றத்தில் வாதியும் பிரதிவாதியும் தலா நூறு ரூபாய் 'மண்டுப்பணம்' செலுத்தி, வெற்றிலை, பாக்கு வைத்துக் கிராம வழக்கு மன்றத்தாரைக் கும்பிட்டு விழுந்து வணங்குதல் வேண்டும். தமராக்கிக் கிராமவழக்கு மன்றத்தில் 'நாட்டுப் பஞ்சாயத்துப் பணம்' என்ற பொருளில் 'மண்டுப்பணம்' என்ற சொல்லாட்சி ஆளப்பட்டு வருகின்றது. சிவகங்கை மாவட்டத்திலுள்ள கிராம வழக்கு மன்றங்களில் தமராக்கியில் தான் 'மண்டுப்பணம்' ஒரே சீராக தொன்று தொட்டு நிர்ணயம் செய்து வசூலிக்கப்பட்டு வருகின்றது என்கிறனர்.[22] இடப்பிரச்சினை, சொத்துப்பிரச்சினைகளில் வாதியும் பிரதிவாதியும் கிராம வழக்கு மன்றத்திற்குச் செலுத்தும் பணம் 'நடுவுப்பணம்' என்றழைக்கப்படுகின்றது.

**சஞ்சாயத்தும் இளவட்டங்களும்**

தொடக்கத்தில் வழக்குத் தொடர்பாகச் சமரசமான முறையில் வாய்வழியாகப் பேசிக்கொள்ளும் சஞ்சாயத்தில் 'இளவட்டங்கள்' அனைவரும் கலந்து கொண்டு முதலில் தங்கள் கருத்துக்களை எடுத்துரைப்பர். 'இளவட்டங்கள்' என்ற சொல்லாட்சி தமராக்கிக் கிராம வழக்கு மன்றத்தில் 'திருமணமாகாத இளைஞர்கள்' என்ற பொருளில் ஆளப்பட்டு வருகின்றது. வழக்கு மன்றத்தில் 'இளவட்டங்கள்' தங்கள் கருத்துக்களை எடுத்துச் சொல்லும் உரிமையைப் பெற்றிருப்பினும் 'பெரிய

அம்பலகாரர்' மற்றும் பஞ்சாயத்து உறுப்பினர்கள் அவர்கள் கருத்துக்களுக்குச் செவி கொடுப்பதில்லை.[23]

தமராக்கிக் கிராம வழக்கு மன்றம் கட்டுப்பாடான பஞ்சாயத்து அமைப்பு விதிமுறைகளைக் கொண்டதாகும். வழக்கு மன்றத்தார் தீர்ப்பே இறுதியானதாகும். அதிலும் குறிப்பாக நாலூர் நாட்டுப் பஞ்சாயத்து அமைப்பில் தமராக்கிப் பெரிய அம்பலக்காரர் தீர்ப்புப் பெரிதும் மதிப்புடையதாகும். அவருடைய தீர்ப்புகள் அனைவராலும் ஏற்றுக் கொள்ளக் கூடியதாகவே அமைந்திருக்கும்.

நாலூர் நாடுகளான அரசனூர், தமராக்கி, இலுப்பக்குடி, கிளாதரி ஆகிய கிராமங்கள் தங்களுக்குள் கொள்வினை, கொடுப்பினைத் தொடர்புகளைக் (திருமண உறவுகள்) கொண்டிருக்கின்றன. காரணம் இக்கிராமங்களில் ஒரே சமுதாயத்தைச் சேர்ந்த மக்கள் (கள்ளர்) பெரிதும் வாழ்ந்து வருவதே ஆகும். முன்னர் தமராக்கிக் கிராமத்திற்கும் ஏனாதிக் கிராமத்திற்கும் வழக்கு மன்ற நீதி பரிவர்த்தனை, திருமண உறவுகள் முதலான நெருங்கிய சமுதாயத் தொடர்புகள் இருந்தன. கொள்வினை, கொடுப்பினைத் தகராறு காரணமாகத் தற்பொழுது அஞ்சூர் நாட்டுத் தலைமைக் கிராமமான ஏனாதிக் கிராமத்திற்கும் நாலூர் நாட்டுத் தலைமைக் கிராமமான தமராக்கிக் கிராமத்திற்கும் எத்தகைய சமுதாயத் தொடர்புகளும் உறவுகளும் இல்லை என்கின்றார் அய்யாத்துறை.[24] 'நாட்டாமை' திரைப்படத்தின் கதை ஏனாதி தமராக்கிக் கிராமங்களுக்கு இடையேயுள்ள போராட்ட உறவுகள் பற்றியதே[25] என்கிறார் ஏனாதி நாட்டாமை கரு. மலைச்சாமி. தமராக்கிக் கிராமத்திற்கும் பூவந்திக் கிராமத்திற்கும் கிராம வழக்கு மன்றம் தொடர்பாக இருந்து வந்த உறவுகள் மஞ்சுவிரட்டுப் பிரச்சினை காரணமாக முறிந்து விட்டது. இன்று இவ்விரு கிராமங்களுக்கும் உறவு இல்லை என்றும் கூறுகின்றனர்.

**தமராக்கிக் கிராமம் தீர்ப்புச் சொல்லும் முறை - 'ஓலைமுறி' எழுதிக் கொடுத்தல்**

*தமராக்கி வழக்கு மன்றத்தில் வழங்கப்படும் தீர்ப்பினைப் பத்திரத்தில் எழுதி, அதன் ஒரு பிரதியை வாதிக்கும், இன்னொரு பிரதியைப் பிரதிவாதிக்கும் கொடுக்கின்றனர். தேவைப்பட்டால் அந்தத் தீர்ப்பின் மற்றொரு பிரதியை பெரிய அம்பலக்காரரும் வைத்துக் கொள்கின்றார். இதற்குத் தமராக்கிக் கிராம வழக்கு மன்றத்தார் 'ஓலைமுறி' எனப் பெயரிட்டு உள்ளனர்.[26] அதே வழக்குத் தொடர்பாக மீண்டும் பிரச்சினை ஏற்படுமானால் இந்த 'ஓலைமுறி'யின் அடிப்படையில் தான் அந்த வழக்கு மறுபரிசீலனை செய்யப்படும்.*

**அல்லிநகரம்-வழக்கு மன்றம்**

*திருப்புவனம் ஒன்றியத்திலுள்ள அல்லி நகரம் கிராம வழக்கு மன்றத்தின் தலைவர் 'நாட்டாமை' என்றே அழைக்கப்படுகின்றார். இக்கிராமத்தில் கள்ளர் இனத்தவர்களே மிகுதியாக வாழ்ந்து வருகின்றனர். தற்பொழுது அல்லி நகரம் கிராமத்தின் வழக்கு மன்றத் தலைவராகத் தண்டீஸ்வரன் என்பவர் இருந்து வருகின்றார். அல்லி நகரம் கிராமத்தின் ஊராட்சி மன்றத் தலைவராகவும் இருந்து வருகின்றார். அல்லி நகரத் கிராமப் பொது மக்களால் 'பெரிய வீட்டுக்கரார்' என்று அன்பு கலந்த மரியாதையுடன் அழைக்கப்பெறும் தண்டீஸ்வரன் குடும்பத்தார்க்கு மூத்த வாரிசு அடிப்படையில் 'நாட்டாமைப்'பட்டம் பரம்பரை உரிமையுடையதாகும்.[27] இக்கிராமத்தில் பகல் நேரத்தில்தான் வழக்கு மன்றம் நடைபெறும். 'வெள்ளக்கரை', அ.காலனி, பனையனேந்தல் ஆகிய கிராமங்கள் அல்லி நகரம் கிராம வழக்கு மன்றத்திற்குக் கட்டுபட்டவைகளாகும்.*

*இக்கிராமங்களில் சாதிப்பஞ்சாயத்து அமைப்புமுறை இல்லை. வழக்குமன்றத் தீர்ப்புக்களில் ஊரைவிட்டு ஒதுக்கி வைத்தல் என்பது தற்பொழுது நடைமுறையில்*

இல்லை. வழக்கு மன்றத்தில் வாதியும் பிரதிவாதியும் செலுத்தும் பணம் 'கிராமப் பணம்' என்று அழைக்கப்படுகின்றது. 'கிராமப்பணம்' மிகவும் குறைந்த தொகை (ரூபாய் ஐந்து) ஆகும். இக்கிராம வழக்கு மன்றம் இவ்வூரிலுள்ள ஸ்ரீ தண்டீஸ்வரர் அய்யனார் கோயிலில் தான் நடைபெறும்.[28]

திருப்புவனம் ஒன்றியத்திலுள்ள பெரும்பான்மையான கிராமங்களில் வழக்கு மன்றங்களில் வாதியும் பிரதிவாதியும் செலுத்தும் 'நடுவுப்பணம்', 'கிராமப் பணம்' என்று அழைக்கப்படுகின்றது. பெரும்பான்மையான கிராம வழக்கு மன்றங்கள் ஏனாதி நாட்டு வழக்கு மன்றத்திற்கு உட்பட்டதாகவே அமைந்திருக்கின்றன என்பதும் குறிப்பிடத்தக்கதாகும். திருப்புவனம் ஒன்றியத்திலுள்ள செல்லப்பனையனேந்தல், வன்னிக்கோட்டை, வில்லியாரனேந்தல் ஆகிய கிராமங்களில் 'நாட்டாமை'ப் பட்டம் பரம்பரை உரிமையுடையதன்று. இக்கிராமங்களில் மக்கள் வாக்களித்துத் தேர்ந்தெடுக்கும் ஊராட்சி மன்றத் தலைவரே 'ஊர் நாட்டாமை'யாக இருந்து கிராம வழக்கு மன்றங்களில் தீர்ப்புக் கூறுகின்றார்.[29] இக்கிராமங்களில் கள்ளர் இனத்தவர்களே மிகுதி. இக்கிராமங்களின் வழக்கு மன்றம் செல்லப்பனையனேந்தல் மந்தைத் திடலில் பகல் நேரத்தில் மட்டுமே நடைபெற்று வருகின்றது. இக்கிராமங்களின் வழக்கு மன்றங்களில் மீறப்படும் தீர்ப்புகள் ஏனாதி நாட்டு வழக்கு மன்றத்திற்குச் செல்லும்; ஆதலால், இக்கிராமங்கள் ஏனாதி நாட்டு வழக்கு மன்றத் தீர்ப்புகளுக்குக் கட்டுப்பட்டவையாகும்.

**சிவகங்கை ஒன்றியம் ஆறூர் நாட்டுவழக்கு மன்றம்**

சிவகங்கை ஒன்றியம் ஆறூர் நாட்டு வழக்கு மன்றம் இடையமேலூர், ஈசனூர், பிரவலூர், ஒக்கூர், புதூர், சாலூர் ஆகிய ஆறு கிராமங்களை உள்ளடக்கியதாகும். நாலுக் கோட்டைக் கிராமமும் இப்பிரிவில் அடங்கியதாகும். ஆறூர் நாட்டு கிராம வழக்குமன்றத்தின் தலைமையிடம் ஒக்கூர் ஆகும். ஆறூர்

நாட்டு வழக்கு மன்றத்தின் தலைவர் 'அம்பலக்காரர்' என்றும் 'பெரிய அம்பலக்காரர்' என்றும் அழைக்கப்படுகிறார். இக்கிராமங்களில் கள்ளர் இனத்தவர்களே மிகுதியாக வாழ்ந்த போதும், பல்வேறு சமுதாய இனமக்களும் பரவலாக வாழ்ந்து வருகின்றனர். தற்பொழுது பெரிய அம்பலகாரராக இருப்பவர் ஒக்கூர் முகுந்தன் அம்பலம் ஆவார். கள்ளர் இனத்தைச் சேர்ந்த இவர் பரம்பரை அம்பலகாரர் என்பது குறிப்பிடத்தக்கதாகும். ஆறுர் நாட்டு வழக்கு மன்றம் இதற்கென அமைக்கப்பட்டுள்ள 'புதூர் தம்பம்' என்ற இடத்தில் நடைபெற்று வருகின்றது.[30]

இடையமேலூர் கிராம வழக்கு மன்றத்திற்கு இடையமேலூர், மங்காம்பட்டி, வேளாங்கப்பட்டி, மம்மரங்கால்பட்டி, கூவாணிப்பட்டி, ஈசனூர், காந்தி நகர், பாரதிநகர் ஆகிய கிராமங்கள் கட்டுப்பட்டவைகளாகும்.

'பாகனேரி நாடு என்பது இப்பகுதியில் வாழும் கள்ளர்கள் ஏற்படுத்திக்கொண்ட சமுதாய ஆட்சியமைப்பாகும். இதனை வாள்கோட்டைநாடு' எனவும் குறிப்பிடுகின்றனர். காளையார்கோவில் பகுதியில் உள்ள எட்டில் மூன்று பங்குச் சிற்றூர்கள் பாகனேரி நாட்டு வழக்கு மன்றத்திற்குட்பட்டதாகும். பாகனேரி நாட்டின் நிருவாகம் கள்ளர்களை அடிப்படையாகக் கொண்டதாகும்.

**பாகனேரியில் வாழும் மக்கள் இனம்**

இப்பகுதியில் கள்ளர்கள் பெருமளவிலும் குறிப்பிடத்தக்க அளவில் பறையர்களும் வாழ்கின்றனர். ஒருசில கிராமங்களில் நாட்டுக்கோட்டை செட்டியார்கள் வாழ்கின்றனர். சில கிராமங்களில் வலையர்களும், பறையர்களும் மட்டுமே வாழ்ந்து வருகின்றனர். ஏனைய சாதியினர் சிறிய அளவில் ஆங்காங்கு வாழ்கின்றனர்.

**ஓலைச்சுவடி கல்வெட்டு**

வீரபாண்டியன் காலக் கல்வெட்டுக்களில் பாகனேரி நாடு 'கேரள சிங்கவள நாடு' என்னும் ஆட்சிப்பிரிவில் அடங்கியிருந்ததாகக் குறிக்கப் பெற்றுள்ளது. இவ்வாறு குறிப்பிடும் வழக்கம் அண்மைக் காலம் வரையில் இருந்து வந்துள்ளது. இந்நாட்டைச் சேர்ந்த பலரது வீடுகளில் ஆவணங்களாகப் பேணி வைக்கப்பட்டுள்ள ஓலைச் சுவடிகளிலும் இவ்வாறு குறிக்கப்பட்டுள்ளமையைக் காண முடிகின்றது.[31] பெரிச்சிக்கோயில் கல்வெட்டொன்று 'கேரள சிங்க வளநாட்டு மேலத்திருத்தியர் முட்டத்துக் கற்றுப்பட்டு பாகனேரி' எனக் குறிப்பிடுகின்றது.[32] வீரபாண்டியன் காலத்து வீரபாண்டியன் காலத்தைச் சேர்ந்த இக்கல்வெட்டு கற்றுப்பட்டு பாகனேரி உள்ளிட்ட 24 ஊர் நாட்டாருக்கும் பறையருக்கும் ஏற்பட்ட பகைமையை அரசன் சந்து செய்வித்துப் பறையர் உரிய காலங்களில் முரசு கொட்டுமாறும் அதற்காக நாட்டார் ஆளொன்றுக்கு, ஆண்டொன்றுக்குக் கல நெல்லும், தூணி நெல்லும் அளக்குமாறும், தவிர நன்மைக்குப் பதக்கு அரிசியும், ஒரு கோழியும், தீமைக்குப் பதக்கரிசியும், ஒரு பூசணிக்காயும் வழங்குமாறும் ஏற்பாடு செய்தமையைக் குறிப்பிடுகின்றது.

**காணியாட்சி ஒப்பந்தம்**

பாகனேரிக்குத் தெற்கேயுள்ள பனங்குடி அய்யனார் கோயிலில் காணப்படும் கல்வெட்டொன்று பாகனேரி வேளார் மரபினர்க்கும் பனங்குடி வேளார் மரபினர்க்குமிடையே காணியாட்சி தொடர்பாக ஏற்பட்டதொரு ஒப்பந்தத்தைக் குறிப்பிடுகின்றது.[33] இக்கல்வெட்டின் காலம் தெரியவில்லை.

**பாகனேரியை உருவாக்குதல்**

கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டில் சிவகங்கை சமத்தானத்தில் அமைச்சராகப் பணிபுரிந்த முள்ளையூர் தாண்டவராய பிள்ளை என்பவர் பாகனேரிக்கு

வடக்கேயிருந்த பெரியகாட்டை அழித்து ஊராக்கிச் சோலையையும் ஒரு பெரிய குளத்தையும் அமைத்தார். அக்குளத்திற்கு 'முத்துவடுகநாத சமுத்திரம்' எனத் தன்னுடைய அரசர் பெயரை வைத்தார்.[34] தற்காலத்தில் இக்குளத்தை மக்கள் 'புள்ளை வனம்' எனக் குறிப்பிடுகின்றனர். இக்காலத்தில் பாகனேரி ஊரார்க்கும் சிவகங்கை அரசாங்கத்திற்கும் நடந்த இடத்தகராறு பற்றிய ஒரு வழக்கைப் பாடுவார் முத்தப்பர் என்னும் புலவர் புல்வ நாயகி அம்மனிடம் முறையிட்டுப் பாடல் பாடித் தீர்த்து வைத்துள்ளார்.[35]

**பாகனேரி நாட்டின் கிராமங்கள்**

பாகனேரி நாட்டுக் கள்ளர்கள் 750 சதுர கிலோ மீட்டர் அளவு விரிந்தப் பகுதியில் வாழ்கின்றனர். இவர்களது வாழ்விடம் நிலையானதாகும். அடிப்படைத் தேவைகளில் இவர்கள் தன்னிறைவு பெற்றுள்ளனர். மரபுகளைக் காப்பதன் மூலம் தங்கள் தனித்தன்மையை நிலை நிறுத்தி வருகின்றார்கள். பாகனேரி நாடு சிவகங்கை மாவட்டத்தில் காளையார் கோவில், கல்லல், திருப்பத்தூர், சிவகங்கை ஊராட்சி ஒன்றியங்களின் பெரும் பகுதிகளை உள்ளடக்கியதாகும். காளையார் கோவில் ஊராட்சி ஒன்றியத்தின் பெரும்பகுதியும், கல்லல், திருப்பத்தூர், சிவகங்கை ஊராட்சி ஒன்றியங்களின் சிறு பகுதிகளும் இந்நாட்டில் இடம் பெறுகின்றன. இதன் எல்லைகளைக் குறிக்கச் சூலக்குறி பொறித்த எல்லைக் கற்கள் நடப்பட்டுள்ளன.[36] இந்நாடு சுமார் நானூறு ஆண்டுகளுக்கு முன்பு உருவாக்கப்பட்டு இங்கு வாழும் கள்ளர்களால் ஒருவகைத் தன்னாட்சி முறையில் பேணிக்காக்கப்பட்டு வருகின்றது. ஆதலின் இந்நாடு அரசு வருவாய்த்துறை அமைப்புக்களின் எல்லைகளோடு பொருந்தி அமையவில்லை.

பாகனேரி நாட்டிற்குரிய கிராமங்கள் இருபத்து இரண்டரை ஆகும். நகரம்பட்டி, காடனேரி, மாங்காட்டுப்பட்டி, பாகனேரி, நெற்புகப்பட்டி, புலவன்பட்டி,

கற்றப்பட்டு, வடக்குக் காடனேரி, அம்மன்பட்டி, வீஸனேரி, காளையார் மங்கலம், கருங்காலக்குடி, கௌரிப்பட்டி, பனங்குடி, கோவினிப்பட்டி, கீழக்கோட்டை, கீரனூர், முத்தூர், பையூர், விராணியூர், அல்லூர், சித்தத்தூர், பெரிய கண்ணனூர் ஆகியன இக்கிராமங்கள் ஆகும்.[37] இவற்றுள் கருங்காலக்குடி அரைக்கிராமம் என்ற தகுதியினைப் பெறுதலின் இந்நாடு இருபத்து இரண்டரைக் கிராமங்கள் எனக்குறிக்கப்பட்டுள்ளது. நாட்டாமை உருவாகிய காலத்தில் இருந்த மக்கள் தொகையின் அடிப்படையில் கிராமம், அரைக்கிராமம் என்ற தகுதிகள் வழங்கப்பட்டுள்ளன.

## பாகனேரிக் கள்ளர் நாடுகளும் மறவர் நாடுகளும்

பாகனேரி நாட்டின் நான்கு எல்லைகளைச் சூழ்ந்து கள்ளர் நாடுகள், மறவர் நாடுகள் இரண்டும் அமைந்துள்ளன. கள்ளர் நாடு ஒவ்வொன்றும் தனித்தனி உட்பிரிவாகிய கள்ளர்களின் அகமண உறவுக்குழு வாழும் பகுதியாகும். இவற்றுள் மல்லாக்கோட்டை, கண்டரமாணிக்கம், குன்னங்கோட்டை ஆகிய கள்ளர் நாடுகளும், மங்கலம், பூக்குழி என்னும் மறவர் நாடுகளும் நீண்ட காலமாகப் பாகனேரி நாட்டுடன் நட்புறவு கொண்டுள்ளன. ஆறூர் வட்டகை, பட்ட மங்கலம் ஆகிய கள்ளர் நாடுகள் இரண்டும் பாகனேரி நாட்டுடன் பகைமையுணர்வு உடையன. முன்னவற்றை 'வாரக்கநாடு' என்றும் பின்னவற்றைப் பகை நாடு என்றும் குறிப்பிடும் வழக்கம் உள்ளது.[38] தீர்க்க முடியாத உள்நாட்டுச் சிக்கல்கள் எல்லைச் சிக்கல் முதலியனவற்றை வாரக்க நாடுகளின் துணைக்கொண்டு தீர்க்கப்படுகின்றது.[39]

## ஆறூர் நாடு

பாகனேரி நாட்டின் நிருவாக அமைப்பின் மையமாக நகரம்பட்டி, காடனேரி, மாங்காட்டுப் பட்டி, பாகனேரி, நெற்புகப்பட்டி, புலவன்பட்டி என்னும் ஆறு

கிராமங்களும் விளங்குகின்றன. இவற்றின் தனித்தன்மையை வெளிப்படுத்தும் விதத்தில் இந்த ஆறு கிராமங்களும் சேர்ந்த பரப்புக்குத் தனி எல்லைக் கற்கள் அமைக்கப்பட்டுள்ளன. இவ்வுட்பகுதியே "ஆறூர் நாடு" என அழைக்கப்படுகின்றது.[40]

**நாட்டார்**

ஆறூர் நாட்டில் வாழும் 'கள்ளர்கள்' நாட்டார் என அழைக்கப்படுகின்றனர். இருபத்து இரண்டரைக் கிராமங்களைக் கொண்ட பாகனேரி நாட்டில் இவ் ஆறூரில் வாழும் கள்ளர்கள் மட்டுமே தொடக்க காலத்தில் இந்நாட்டை உருவாக்கினரென்றும் அதனால் அவர்கள் 'நாட்டார்' என்னும் பெயரைப் பெற்றனர் என்றும் கருதுகின்றார். காலப்போக்கில் நாட்டின் எல்லை விரிவடைந்த போதிலும் ஆறூர் நாட்டினர் மட்டுமே 'நாட்டார்' என்ற பெயரால் வழங்கப்படுகின்றனர்.[41] தஞ்சைப் பகுதியிலும் இப்பிரிவு காணப்படுகின்றது. தஞ்சைப் பகுதியில் வாழும் கள்ளர்களையும் 'நாட்டார்' என்று குறிப்பிடுகின்றனர்.

**நகரத்தார்**

இந்த ஆறூர் நாட்டுப்பகுதியில் 'தன வணிகர்' மரபினர் 'நகரத்தார்' எனக் குறிக்கப்படுகின்றனர். 'நகரத்தார்' என்னும் பெயர் எல்லாப் பகுதிகளிலும் வாழும் தனவணிக்களுக்குரிய பெயரேயாயினும் இந்நாட்டின் நிருவாக அமைப்பில் ஆறூர் நாட்டுத் தன வணிகர் மட்டுமே 'நகரத்தார்' எனக் குறிக்கப்படுகின்றனர்.[42] இவர்களைச் 'செட்டியார்' என்றும் அழைப்பர்.

**கிராமத்தார்**

ஆறூர் நாட்டு எல்லைக்குப் புறத்தே வாழும் நாட்டுக் குடிமக்கள் அனைவரும் சாதி வேறுபாடின்றி அவ்வக்கிராமத்திற்குரிய 'கிராமத்தார்' எனப்படுவர்.[43]

**தேசத்தார்**

ஆறூர் நாட்டில் கள்ளர்களையும் நகரத்தார்களையும் தவிர நாயக்கர், மேளகாரர் (இசைவேளாளர்), பணிக்கர், வாணியர், வண்ணார், நாவிதர் (மருத்துவர்), பறையர், குறவர், புரதர் ஆகிய ஒன்பது சாதியினர் நாடு அமைக்கப்பட்ட காலம் முதற்கொண்டு வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் அனைவரும் 'தேசத்தார்' எனக்குறிக்கப்படுகின்றனர். இவர்களுக்குத் தலைவராக நாயக்கரில் ஒருவர் இருந்து வருகின்றார். பாகனேரி நாட்டில் கள்ளர் சாதியினர் நிலைபெற்றகாலம் முதல் இவ்வொன்பது சாதியினரும் உடன் வாழ்ந்து வருகின்றனர். இந்நாட்டில் இவர்களுக்கு 'ஒன்பது குத்தன் தொழிலாளி' என்னும் பெயர் வழங்கப்படுகின்றது.[44] இதனால், இவர்களுக்கு மரபு வழித் தொழில்கள் இருந்தமையை அறியலாம். 'பணிக்கர்' என்னும் சாதியினர் தற்பொழுது இந்நாட்டில் இல்லை. காரைக்குப் பகுதியில் சில குடும்பங்கள் உள்ளன.

ஆறூர் நாட்டின் எல்லைக்குள் வாழும் மக்களுள் நாட்டார், நகரத்தார், தேசத்தார் என்னும் முப்பிரிவுகளில் அடங்காத வெள்ளாளர், இடையர், வலையர், நாடார் முதலிய வேறு சில சாதியினரும் அடங்குவர். ஆயினும், இவர்கள் கள்ளர்களுக்குரிய 'வாசல் வழி' என்னும் அமைப்போடு தொடர்புடையவர்களாக உள்ளனர். இவர்களது பணி சமுதாயத்திற்கு இன்றியமையாததாகக் கருதப்படாமையால் இவர்கள் தேசத்தாருடன் சேர்த்து எண்ணப்படவில்லை எனக் கருதலாம்.

தமிழ்நாட்டில் குலப்பாகுபாடும் சாதியப் பிரிவுகளும் தொன்றுதொட்டு இருந்து வருவனவாகும். ஆய்வுக்குட்பட்ட சிவகங்கை மாவட்டத்தில் உள்ள சாதியப் பிரிவுகள் பல ஆய்வின் போது வெளிப்படுகின்றன. சிவகங்கைக்கு அருகிலுள்ள

பாகனேரி மற்றும் அதனைச் சுற்றியுள்ள பகுதிகளில் பல குல மற்றும் சாதியப் பிரிவுகள் இருக்கின்றன.

**நாட்டுக்கூட்டம்**

'பாகனேரி நாடு' என்னும் அமைப்பினுள் வலிமைப் பெற்று விளங்கும் 'ஆறூர் நாடு' என்னும் சிற்றெல்லைப் பகுதி வேளாண்மைத் தொழிலின் செயல்பாட்டிற்கென நான்கு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இப்பகுதிகள் 'வாசல்கள்' எனப்படுகின்றன. இவை கீழவாசல், மேலவாசல், தெற்கு வாசல், வடக்கு வாசல் எனப்பெயர் பெற்றுள்ளன.[45] இந்நான்கு வாசல்களும் பாகனேரி நாட்டுப் பொதுத் தெய்வமாகிய புல்வநாயகி அம்மன் கோயிலைச் சுற்றி அமைந்துள்ளன. ஒவ்வொரு வாசலுக்கும் எல்லைகள் சுட்டப்பட்டுள்ளன.

பாகனேரி நாட்டின் நிருவாகம் கள்ளர்களை அடிப்படையாகக் கொண்டதாகும். இந்நிருவாகம் நாட்டு ஆட்சி, கிராம ஆட்சி என்னும் இருபிரிவுகளைக் கொண்டது. 'நாட்டு ஆட்சி' என்பது ஆறூர் நாட்டின் நிருவாகத்தைக் குறிக்கும். இதனை 'நாட்டார்' எனப்படும் கள்ளரும் 'நகரத்தார்' எனப்படும் தன வணிகரும் நிருவாகித்து வருகின்றனர். பிறசாதியினருக்கு இதில் பங்கு இல்லை. இந்நிருவாகக் குழுவே 'நாட்டுக் கூட்டம்'[46] எனப்படும்.

**நாட்டுக்கணக்கு**

நாட்டுக்கூட்டத்தின் நிருவாகத்திற்கு ஒவ்வொரு வாசல் வழி அமைப்பிலிருக்கும் ஒவ்வொருவர் நியமிக்கப்படுவர். இந்நியமனம் ஒருமனதாக அமையும். அவ்வவ் வாசலிலுள்ள கள்ளர் மரபினர் மட்டுமே இந்நிருவாகப் பொறுப்பேற்கும் தகுதியுடையவராவர். நாட்டின் வரவு செலவுகளை நாட்டாரின் ஆலோசனைகளோடு நிருவகிக்கும் பொறுப்பு இவர்களுடையதாதலின் இவர்களை

'நாட்டுக் கணக்கு' என்றும் 'கணக்குக்காரர்' என்றும் குறிப்பிடுவர்.[47] இப்பணி வருவாய் பெறாத மதிப்பியல் பணியாகும்.

**நாட்டுக்கணக்கர்**

'நாட்டுக்கணக்கு' எனப்படும் நால்வரைத் தவிர, 'நாட்டுக்கணக்கப்பிள்ளை' என ஒருவரும் உள்ளார். இவரை 'நாட்டுக்கணக்கர்' என்றும் குறிப்பிடுவர். இவர் பரம்பரையாகக் கோயில் விழாத் தொடர்பான வரவு செலவுப் பணியினைச் செய்து வருகின்றார். வெள்ளாளர் சாதியைச் சேர்ந்த இவர் இப்பணிக்கென மானியம் பெற்றுள்ளார். இவர் ஊர் மன்றத்தில் நடைபெற்ற விற்பனை முதலிய பத்திரங்களை ஓலைச் சுவடிகளில் எழுதி வந்துள்ளார். அவ்வேடுகளில் இவர் 'பாகனேரி நாட்டுக் கணக்குக் குமுழ்ராயன்' எனக் குறிப்பிடப்பட்டுள்ளார்.[48] 'குமுழ்ராயன்' என்னும் பெயர் முதன் முதலில் இருந்த நாட்டுக்கணக்குப் பிள்ளையின் பெயராக இருந்திருக்க வேண்டும். இப்பெயரைப் பின் வந்தோர் தங்கள் குடும்பப் பெயராக நிலைநிறுத்திக் கொண்டனர். புல்வநாயகி அம்மன் கோயில் விழாவில் துப்பட்டிப்பாடும் போது இவரை 'சொத்துக்கணக்கு குமிழ்ராயபிள்ளை பேரன்மார்' எனக் குறிப்பிடுகின்றார்.

**பண்டாரம்**

நாட்டுக்கூட்டத்தை நாட்டுக் கணக்குகளின் ஆணைப்படி கூட்டுவது நாட்டுப் பண்டாரத்தின் பணியாகும். இவர் பரம்பரையாக ஊதியம் பெற்றுவரும் நாட்டுக் கூட்டப் பணியாளர் ஆவார்.

**நாட்டுக் கூட்டத்தின் செயற்பாடு**

நாட்டுக் கூட்டம் கூட வேண்டிய நேரங்களில் 'நாட்டுக் கணக்கு' பண்டாரத்தை அழைத்துக் கூட்டத்திற்கு ஏற்பாடு செய்யுமாறு பணிக்கின்றார்.

பண்டாரம் ஆறு ஊர்களுக்கும் சென்று அவ்வவ்வூர் அம்பலகாரர்களிடம் சொல்லுகின்றார். மன்னர்களால் கிராம வருவாய்களை நிருவகிக்கவும் அரசாங்கத்துடன் தொடர்பு கொள்ளவும் நியமிக்கப்பட்டவர்களே அம்பலகாரர்களாகவர். ஆறூர் நாட்டுக்கு மொத்தம் எட்டு அம்பலங்கள் உள்ளனர். இவர்கள் அனைவரும் ஒரே சாதியைச் சேர்ந்தவர்களே. அவ்வவ் ஊர் அம்பலக்காரர்கள் அவ்வவ் ஊர்த் தோட்டியின் மூலம் இச்செய்தியைத் தண்டோராப் போட்டு அறிவிக்கச் செய்கின்றனர்.

நாட்டுக்கூட்டம் பாகனேரியிலுள்ள திண்ணைக் கொறட்டிலோ, நாட்டார் விடுதியிலோ நடைபெறும். கூட்டம் தொடங்குவதற்கு முன்னர் புல்வநாயகி அம்மன் கோயில் மணியை அடித்துப் பண்டாரம் ஒலி எழுப்புகின்றார். கூட்டத்தில் வயது வந்த நாட்டார் அனைவரும் கலந்து கொள்ளும் தகுதியும் சம உரிமையும் பெற்றவராவர். நில உரிமை வழக்குகள், குற்றவியல் வழக்குகள் முதலியனவற்றைக் கேட்டு நீதி வழங்குதல், திருவிழா நடத்துதல், பொது நலப்பணிகளில் நாட்டம் செலுத்துதல் ஆகியன இந்நாட்டுக் கூட்டத்தாரின் கடமைகளாகும்.

சில தலைமுறைகளுக்கு முன்பு வரையில் பொருள்களை விற்றல், ஒத்தி வைத்தல், கடன் வாங்குதல் முதலியவை இந்நாட்டுக் கூட்டத்தின் முன்னிலையில் நடைபெற்றதை ஓலைச்சுவடிகளால் அறியமுடிகிறது. தமக்குச் சொந்தமான பறையரை விற்றல். பறையர் தம் மக்களை விற்றல், வலையர் தம்மைத்தாமே விற்றல், கள்ளர் காவல் உரிமையிலுள்ள ஊரின் மீது தமக்குள்ள உரிமையை விற்றல் ஆகிய சில வழக்குகளும் நடைபெற்றுள்ளமையை ஓலைச்சுவடிகள் குறிப்பிடுகின்றன. இவ்வாறு விற்பனை செய்வோர் மன்றத்தில் விலைப்பொருளை ஏற்றுக் 'கொள்வோர் உளரோ' என மும்முறைக் கேட்டுக் 'கொள்வோமென்று' கூறுவோருக்கு மன்றத்தின் ஒப்புதலுடன் விலை நிர்ணயம் செய்து விற்பனை செய்துள்ளனர்.[49] தேவை ஏற்படின் கிராமத்தார்களும் நாட்டுக் கூட்டத்திற்கு

அழைக்கப்படுகின்றனர். இவ்வாறு நாட்டுக்கூட்டத்தின் செயற்பாடுகள் அமைந்துள்ளன.

**நாட்டுக் கூட்டத்தின் பணிகள்**

பாகனேரி புல்வநாயகி அம்மன் கோயிலில் திருவிழா நடத்துதல், ஊர்ப் பொதுப் பணிகள் புரிதல், பொது வருவாய் திரட்டல் ஆகியன நாட்டுக்கூட்டத்தின் பணிகள் ஆகும் எனினும், வழக்குகளைத்தீர்த்து வைத்தலே இதன் முக்கியப் பணியாகும். நாட்டுக் கூட்டத்தில் நாட்டார், நகரத்தார் அனைவரும் கலந்து கொள்கின்றனர். கூட்டத்தில் நாட்டார் அனைவரும் 'தலைப்பாகை' அணிந்திருந்து பேசுகின்றனர்.

**வழக்குகளைத் தீர்த்தல்**

ஊர் நலன், மக்கள் நலன், நீர்ப்பாசனம், நாட்டின் பெருமையைக் காத்தல் போன்ற பொதுத்தன்மை வாய்ந்த வழக்குகள், தனியாரால் வேண்டிக் கொள்ளப்படும் வழக்குகள் என வழக்குகள் இருவகைப்படும். இவ்வழக்குகளைத் தீர்க்கும் பொருட்டும் பாகனேரி நாட்டுக்கூட்டம் கூட்டப் பெறும். தனிப்பட்டோர் தம் வழக்கினை நாட்டுக்கணக்கிடம் கூறுவர். நாட்டுக்கணக்கு சில பெரியோர்களின் ஆலோசனைகளுடன் பண்டாரத்தை அழைத்து நாட்டுக்கூட்டத்தைக் கூட்ட ஆவணை செய்வார். பிரதிவாதிக்கும் செய்தியைத் தெரிவிப்பார். உரிய நாளில் கூட்டம் கூடியதும் வழக்கினைக் கூறும் வாதி மேலாடையை இடுப்பில் சுற்றிக்கொண்டு நாட்டார் முன் விழுந்து வணங்குவர். நாட்டார் பண்டாரத்தை வழக்கைக் கேட்குமாறு கூறுவர். வாதி கால் ரூபாய்ப் 'பருக்கைப் பணம்' வைத்து வழக்கினைக் கூறுவார்.[50] பின் குற்றவாளியை அழைத்து அவருடைய வாக்கு மூலத்தைக் கேட்பர். பிரதிவாதியும் மேலாடையை இடுப்பில் கட்டிக்கொண்டு கால் ரூபாய்ப் 'பருக்கைப் பணம்' வைத்து வணங்கி விவரமாக தம் வாக்கு மூலத்தைக்

கூறுவார். இருவரது வாக்கு மூலங்களையும் கேட்டு நாட்டார் தீர்ப்புக் கூறும் வரையில் வாதி, பிரதிவாதி ஆகிய இருவரும் கைகட்டி அசையாமல் நிற்க வேண்டும். வழக்கின் முடிவில் குற்றவாளிக்கு வழக்கின் தன்மைக்கேற்ப அபராதம் விதித்தாலோ, இழப்பீட்டுத் தொகை பெற்றுத் தருதலோ, எச்சரித்து மன்னித்து விடுதலோ, சந்து செய்வித்தலோ உண்டு.

அபராதம் விதிக்கப் பெற்றோர் நாட்டுக் கூட்டத்தாரை வணங்கித் 'தாங்கும், தாங்காது' என்று மும்முறை வேண்டுவர். அபராதத் தொகை கருணையின் அடிப்படையில் குறைக்கப்பெறும். தொகையைச் செலுத்துவதற்குரிய நாள் நிர்ணயிக்கப்பெறும். அதனை ஏற்றுக் குற்றவாளியின் சார்பில் ஒருவர் குற்றவாளியுடன் வணங்கிப் பொறுப்பேற்பர். இதனை 'ஏற்கை' என்பர்.[51] குற்றவாளி தீர்ப்புக்களுக்குக் கட்டுப்பட மறுத்தால் நாட்டு வழக்குப்படி நடந்து கொள்ளுமாறு நாட்டார் குற்றவாளியிடம் கூறுவர். கூட்டத்தை விட்டு எழுந்து குற்றவாளி வெளியேறுவார். உடனே நாட்டார்மேல் நடவடிக்கை குறித்து முடிவு செய்வர். குற்றவாளி எழுந்து செல்ல மறுத்து அமர்ந்திருந்தால் நாட்டுப் பண்டாரத்தைக் கொண்டு குற்றவாளியின் கையைப் பற்றி வெளியேற்றுவர். இதனை 'நாட்டாயுதத்தைப் பயன்படுத்துதல்' என்பர். இவ்வகைத் தண்டனைக்குள்ளாவது மிகப்பெரிய இழிவாகக் கருதப்படும். வழக்குப் பிற நாட்டிற்குத் தொடர்புடையதாயின் பண்டாரத்தின் மூலம் ஓலை அனுப்பி அவ்வழக்குப் பற்றிய விபரம் கேட்கும் பழக்கமும் உள்ளது.

**கிராமக் கூட்டம்**

நாட்டுக்கூட்டத்தைத் தவிர, ஒவ்வொரு கிராமத்தையும் நிருவாகம் செய்வதற்காகக் 'கிராமக்கூட்டம்' என்ற அமைப்பும் உண்டு. ஆறூர் நாட்டிற்குட்பட்ட கிராமங்களிலும் புறத்தே உள்ள கிராமங்களிலுமாகப் பாகனேரி நாடு முழுவதும்

உள்ள எல்லாக் கிராமங்களிலும் கிராமக் கூட்டங்கள் நடைபெற்று வருகின்றன. பாகனேரிக் கிராமத்தில் மட்டும் 'வாசல்வழி' என்ற தனி அமைப்பு இருப்பதால் கிராமக் கூட்டம் நடைபெறுவதில்லை.

கிராம நிருவாகத்தைக் கவனிப்போர் கிராமப் பிரதிநிதிகள் எனப்படுவர். கிராமத்தில் குறிப்பிடத்தக்க அளவு மக்கள் தொகையுள்ள எல்லாச் சாதியினரும் கிராமக் கூட்டத்தில் பிரதிநிதிகளாக நியமணம் பெறுவர். இந்நியமணம் ஒரு மனதாக அமையும். இவர்கள் ஐவராகவோ எழுவராகவோ இருப்பர். ஒவ்வொரு குடும்பத்தின் மூத்த உறுப்பினரும் கிராமக் கூட்டத்தில் பங்குபெறும் தகுதியுடையவராவர்.

கிராமக்கூட்டம் ஊர்ப் பொதுவிடத்தில் நடைபெறும். நீர்ப்பாசனம் தொடர்பான கூட்டங்களே மிகுதியாக நடக்கும். சிறியதும் பெரியதுமான கிராம வழக்குகளும் இங்கு விசாரிக்கப்படும். கிராமங்களின் எல்லைக்குட்பட்ட வழக்குகள் அனைத்தும் அவ்வக்கிராமக் கூட்டத்திலேயே தீர்க்கப்படும். இவை நாட்டுக்கூட்டத்திற்குக் கொண்டு செல்லப்படுவதில்லை. சில நேரங்களில் கிராமத்திற்குள்ளேயே தீர்க்க முடியாத வழக்கை நாட்டுக்கூட்டத்திற்கு எடுத்துச் சென்று தீர்த்துக்கொள்வர்.[53]

நீர்ப்பாசனச் சிக்கல்கள் கிராமக் கூட்டங்களில் அதிகமாக எழுகின்றன. வறட்சி, பருவமழைப் பொய்த்தல் காரணமாக நீர்குறைவான ஆண்டுகளில் ஒவ்வொரு குடும்பத்தாரும் எவ்வளவு நிலப்பரப்பில் வேளாண்மை செய்யலாம் என்பதைக் கிராமக் கூட்டமே முடிவு செய்கின்றது. மிகுதியாக நிலமுடையோரும் குறைவாக நிலமுடையோரும் வேறுபாடின்றிச் சமமான பரப்பில் வேளாண்மை செய்ய இத்தகைய ஆண்டுகளில் அனுமதிக்கப்படுவர். கண்மாய் நீரைப்பயன்படுத்தும் வேளாண்மைக்கு மட்டுமே இது பொருந்தும். பற்றாக்குறை நீரைக்கொண்டு பெருமளவில் வேளாண்மை செய்யத் தொடங்கிப் பின்னர் பயிர் பயனற்றுப்

போவதைத் தடுக்க இம்முறை பயன்படுகின்றது. இச்செயல்முறை சிவகங்கை மாவட்டத்தின் பல கிராமங்களில் கடைப்பிடிக்கப்படுகின்றன. இம்முறைக்கு 'ஃவித்து நடுதல்' என்று பெயர்.

**வாசல்வழி நிருவாக அமைப்பு**

ஆறூர் நாட்டுப்பகுதியில் நாட்டுக் கூட்டம், கிராமக் கூட்டம் ஆகியவற்றோடு வாசல் வழி அமைப்பும் ஒரு நிருவாக அமைப்பாகச் செயல்பட்டு வருகின்றது. ஆறூர் நாட்டுக்குள் அமைந்துள்ள நான்கு வாசல்களில் ஒவ்வொரு வாசலுக்கும் உரிய நிலப்பரப்பு தனித்தனியாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இவ்வெல்லைகளையும் கிராம எல்லைகளையும் நிர்ணயிக்கும் பொறுப்பு பறையர்களுக்கு உரியதாகும்.[55] ஆறூர் நாடு முழுவதும் இவ்வாசல்வழி நிருவாக அமைப்புக்கு உட்பட்டது. ஆயினும் இதனுடைய செயற்பாடுகள் அனைத்தும் பாகனேரியிலேயே நடைபெறுகின்றன. ஆறூர் நாட்டிலுள்ள ஏனைய ஐந்து கிராமங்கள் தமக்கெனக் கிராமக் கூட்டங்களைப் பெற்றிருப்பினும் வாசல் வழி, நாட்டமைப்புகளுக்குரிய கணக்குகளை அவ்வப்போது பாகனேரியிலுள்ள அவ்வமைப்புகளிடம் ஒப்படைக்கின்றன. இவ்வாசல் வழி அமைப்பு வாசலுக்குச் சொந்தமான கண்மாய்களின் பாசனத்தை நிருவகிக்கின்றது. ஒவ்வொரு வாசலுக்கும் இரண்டு கண்மாய்களும் அவற்றிற்குரிய இரு அய்யனார் கோயில்களும் உள்ளன.[56] இவை தவிர நான்கு வாசல்களுக்கும் 'ஏந்தல்கள்' எனப்படும் 56 சிறிய கண்மாய்களும் உள்ளன. சிறிய கண்மாய் கரைகளில் அமைந்துள்ள சிற்றூர்களுக்கு 'ஏந்தல்' என்று பெயர்.

வாசல்வழி அமைப்பு முற்றிலும் கள்ளர்களுக்குள்ளது. இந்நான்கு வாசல்களும் வெவ்வேறு பட்டங்களையுடைய பங்காளிகளுக்குரியன. இவ்வமைப்பை நிருவகிக்கும் குழுவினர் 'அம்பலங்கள்' எனப்படுகின்றனர். ஒவ்வொரு வாசலுக்கும் இருவராக எட்டு அம்பலங்கள் உள்ளனர். இவர்கள்

இவ்வாசல் அமைப்புத் தோன்றிய காலத்தில் மன்னரால் நியமிக்கப்பட்டுத் தந்தைவழி மரபால் (Patrilineage) தொடர்ந்து பணிபுரிந்து வருகின்றனர். வாசலுக்குட்பட்ட வழக்குகளைத் தீர்ப்பதும், வாசலுக்குச் சொந்தமான அய்யனார் கோயில் விழாக்களை நடத்தவதும், வாசலுக்குரிய வருவாய்களைத் திரட்டிச் செலவிடுவதும் இவ்வமைப்பின் பணிகளாகும்.

**தேசத்தார் கூட்டம்**

ஆரூர் நாட்டின் எல்லைக்குட்பட்ட மக்களுள் முன்னர் குறிப்பிட்ட ஒன்பது சாதியினரும் 'தேசத்தார்' என அழைக்கப்படுகின்றனர். இவர்களுக்குரிய நிருவாக அமைப்பு 'தேசக்கூட்டம்' எனப்படும். நாயக்கமரபினர் இதன் தலைவராக இருக்கின்றனர். தேசத்தார்க்கிடையிலான வழக்குகளும் நிதி ஆதாரங்களும் இவர்களது அதிகார எல்லைக்கு உட்பட்டவையாகும். இக்கூட்டத்தைக் கூட்ட தேசத்தார்களின் தலைவராகிய நாயக்கரின் ஆணைப்படி ஏற்பாடு செய்வது 'சாம்பான்' எனப்படும் பறையரது கடமையாகும். தேசத்தாரின் கணக்கை நிருவகிப்பவர் 'தங்கிழான்' எனப்படும் பறையராவார். புல்வநாயகி அம்மன் கோயில் திருவிழாவிற்கு உரிய பத்தாம் நாள் மண்டகப்படியை இவர்கள் ஏற்று நடத்துகின்றனர். அதற்குரிய செலவை அனைவரும் சமமாகப் பகிர்ந்து கொள்கின்றனர்.[57]

**பாடியப்பு (பாடிகாப்பு) முறை**

தேசத்தாராகிய இவ்வொன்பது சாதியருள் பறையர் தங்கள் பாதுகாப்பிற்குக் கள்ளரை முழுமையாகச் சார்ந்துள்ளனர். இவர்கள் கள்ளர்களிடம் பரம்பரையாகத் தொண்டு செய்வதாக ஓலை எழுதிக் கொடுக்கும் பழக்கம் இருந்து வந்தது. இவ்வோலையைத் 'தன்னடிமை ஓலை' என்பர்.[58] இப்பழக்கம் இன்றும் நடைமுறையில் உள்ளது. இம்மரபின்படி இந்நாட்டில் இன்றும் ஒவ்வொரு

கள்ளர்குடிக்கும் உரிய பறையர்கள் தொண்டு செய்து அவரது ஆதரவைப் பெற்று வாழ்கின்றனர். அடிமை என்று சுட்டப்பெறினும் இவர்களது பணி அடிமைத் தன்மை (Slavery) கொண்டதன்று. கள்ளர்கள் வீட்டில் நிகழும் நன்மை தீமைகளில் உடல் உழைப்புப் பணிபுரிதலும், வேளாண் பணியாளருள் முதலிடம் வகிப்பதும் தண்னடிமை என்னும் சொல்லின் பொருளாக அமைகின்றன. இதற்கு ஈடாக இவர்களது நலன்களைப் பாதுகாத்தலும் இவர்களின் இல்லங்களில் நிகழும் நன்மை தீமைகளின் போது பொருளுதவி செய்தலும் இவர்களது காப்பாளராகிய கள்ளர்களின் பணியாக உள்ளது. இம்முறையைப் 'பாடியப்பு' என்கின்றனர்.

சிவகங்கை மாவட்டத்தில் கள்ளர்கள் மிகுதியாக வாழும் 'அஞ்சூர் நாடு', 'நாலூர் நாடு' தமராக்கி நாட்டுக் கிராம வழக்கு மன்றம் போன்ற பகுதிகளிலும், திருப்பத்தூர், சிங்கம்புணரி, மானாமதுரை, இளையான்குடி, காளையார் கோயில், கல்லல் ஆகிய ஊராட்சி ஒன்றியங்களிலும் வெள்ளாளர், இடையர், வலையர், நாடார், செட்டியார் ஆகிய சாதியினர் கள்ளர்களது பாதுகாவலில் வாழ்கின்றனர் என்னும் பொருள்படக் கள்ளரை இவர்களது 'பாடியப்பு' என வழங்கும் மரபு இருந்து வருகின்றது. எனினும் இது குறித்து இவர்கள் கள்ளர்களுக்கு ஓலை எழுதித் தருவதில்லை. இப்பாடியப்பு முறை சில சடங்குளில் பங்கு பெறுதல் என்னும் அளவில் மட்டும் நிலைபெற்றுள்ளது.

பாகனேரி நாட்டின் கூட்டமைப்பில் மறவரும் அகம்படியரும் இடம் பெறுவதாகத் தெரியவில்லை. இவர்கள் இந்நாட்டில் கள்ளர் நிலைபேற்றுக்குப் பின்னர் குடியேறியவர்களாக இருக்கலாம்.

**வழக்கு விசாரணை**

பொதுவாகக் கிராம வழக்கு மன்றம் முறைப்படி தொடங்கியவுடன் வழக்கு மன்றத் தலைவர் (நாட்டாமை) வழக்கு மன்றத்தைக் கூட்டச் சொன்ன வாதியிடம் என்ன காரணத்திற்காக வழக்கு மன்றத்தைக் கூட்ட வைத்தீர்கள்? என்ன நடந்தது?

என விளக்கமாகக் கூறும்படி கட்டளையிடுகின்றார். வாதி நடந்தவற்றை விளக்கமாக கூறுகின்றார். அப்பொழுது வழக்கு மன்ற உறுப்பினர்களும் பொதுமக்களும் வாதியின் விளக்கத்தைக் கவனித்துக் கொண்டிருக்கின்றனர். வாதி தன்னுடைய குற்றச்சாட்டை எடுத்துரைத்து 'மண்டுப்பணம்' செலுத்தி, வழக்கு மன்றத்தை வணங்கி விட்டு ஓரமாக நிற்பார்.

பின்னர் தலைவர் பிரதிவாதியிடம் வாதி உங்கள் மீது சுமத்தும் குற்றச்சாட்டுகள் உண்மையா? எனக் கேட்பார். வாதி கூறியதைப் பிரதிவாதி உண்மையென ஒப்புக் கொண்டால் தலைவர் பிரதிவாதியை அவருக்குரிய இடத்தில் நிற்குமாறு கூறுவார்.

அதன்பின்னர் தலைவர், வழக்கு மன்ற உறுப்பினர்களை நோக்கி, நடந்தவற்றையெல்லாம் வாதியும், பிரதிவாதியும் கூறியதை வைத்துப் பார்க்கும் போது, பிரதிவாதி தன் தவற்றை ஒத்துக் கொள்கின்றார். நம் கிராம வழக்கு மன்ற வழக்கப்படியான தீர்ப்பைக் கூறலாமா? எனக் கேட்கின்றார். வழக்குமன்ற உறுப்பினர்களும் தங்கள் கருத்துக்களைக் கூறத் தலைவர் வாய்ப்பளிக்கின்றார். உறுப்பினர்கள் அனைவரின் கருத்துக்களையும் கேட்ட பின்னர் ஆராய்ந்து தலைவர் தன் தீர்ப்பை வழங்குகின்றார். வாதி, பிரதிவாதி ஆகிய இருவரும் தலைவர் தீர்ப்பைப் பெரும்பான்மை ஏற்றுக் கொள்கின்றனர். கிராம வழக்கு மன்றம் வழங்கும் சிறு தண்டனையையும் பிரதிவாதி ஏற்றுக் கொள்கின்றார். பின்னர் வழக்கு மன்றத் தலைவர் இத்துடன் வழக்கு மன்றம் கலைகின்றது எனக் கூறுவார்.

**பிரதிவாதியின் மறுப்பு**

சில வழக்குகளில் வாதியின் குற்றச் சாட்டுக்களைப் பிரதிவாதி முற்றிலுமாக மறுப்பதுமுண்டு. வாதி தவறான, பொய்யான தகவல்களைத் தருகின்றார். அவ்வாறு நடைபெறவில்லை எனப் பிரதிவாதி தன் பக்கத்து நிலையை

எடுத்துரைத்து மறுக்கும் நிலையில் வழக்கு மன்றத்தார் சாட்சிகளை அழைத்து விசாரிக்கின்றனர்.

**சாட்சிகள்**

வாதியும் பிரதிவாதியும் தங்கள் சாட்சிகளின் பெயர்களையோ அல்லது இருவருக்கும் பொதுவான சாட்சிகளையோ குறிப்பிடுகின்றனர். வழக்கு மன்றத் தலைவர் ஒவ்வொரு சாட்சியாக விசாரிக்கின்றனர். சாட்சிகள் முறைப்படியாக விசாரிக்கப்பட்ட பின்னரே வாதி, பிரதிவாதி ஆகிய இருவரின் முறையீட்டையும் சாட்சிகளின் வாக்கு மூலத்தையும் கேட்டறிந்த வழக்கு மன்றத்தார் பிரச்சினைக்கு மூலகாரணம் யார்? யார்? என்ன கூறினர்? யார் மீது அடிப்படைக் குற்றம் என்று தீர விசாரிக்கின்றனர். வழக்கு மன்றத் தலைவரும் உறுப்பினர்களும் தங்களுக்குள் வழக்கின் நியாயங்களையும் தவறுகளையும் விவாதிக்கின்றனர்.

**வழக்கு மன்ற விவாதங்கள்**

கடுமையான விவாதங்கள் நடைபெறும் சமயங்களில் பஞ்சாயத்து மன்ற உறுப்பினர்கள் காரசாரமான விவாதங்களில் ஈடுபடுகின்றனர். பல வழக்குகளில் எவ்வித முடிவுமின்றி, வெட்டுக்குத்து என்ற அளவில் சென்று பல வருடங்கள் கழித்து மீண்டும் கிராம வழக்கு மன்றம் மூலமே தீர்வுகள் காணப்பட்டுள்ளது. பிரச்சினைக்குரிய வழக்குகள் பல, பக்கத்துக் கிராம வழக்கு மன்ற அமைப்புக்களின் மூலம் தீர்க்கப்படுகின்றன.

**வழக்கு மன்றம் செயல்படும் விதம்**

சிவகங்கை மாவட்டத்தில் பல சிற்றூர்கள் கிராம வழக்கு மன்றங்கள் ஒரு வலிமைமிக்க அமைப்பாக இன்றும் நிலவுகின்றன. நீதி மன்றங்களிலும் காவல் நிலையங்களிலும் தீர்க்கப்படாத பல வழக்குகள் கிராம வழக்கு மன்றங்கள் மூலம் தீர்க்கப்பட்டுள்ளன. இதற்குக் காரணம் கிராம வழக்கு மன்றங்களின் தீர்க்கமான

முடிவுகளாகும். கிராமத் தெய்வங்களின் முன்னர் அமர்ந்து வாதி, பிரதிவாதி ஆகிய இருவரிடமும் சத்தியம் வாங்கிக் கொண்டு கிராம வழக்கு மன்றங்கள் நடைபெறுவதால், 'பொய் சொன்னால் தெய்வ நிந்தனைக்கு ஆட்படுவோம்' என்ற அச்சத்தின் காரணமாக வாதியும் பிரதிவாதியும் பெரும்பாலும் பொய் சொல்வதைத் தவிர்க்கின்றனர். சார்ந்து வாழ்தல், விவசாய சூழல், கொள்வினை, கொடுப்பினை போன்றவை இதற்குக் காரணமாகும்.

வழக்கு மன்றத் தீர்ப்புக்குக் கட்டுப்படாதவர்களைக் கிராமம் ஊரைவிட்டு ஒதுக்கி வைத்து விடுகின்றது. கிராம வழக்கு மன்றங்கள் நிலைத்திருப்பதற்குக் காரணம் அதன் முடிவெடுக்கும் தன்மையேயாகும். சிவகங்கை மாவட்டக் கிராம வழக்கு மன்றங்களின் தலைவர்களும் அதன் உறுப்பினர்களும் 'வெட்டு ஒன்று துண்டு இரண்டு' என்று சரியாக முடிவெடுக்கின்றார்கள். மேலும், கிராம வழக்கு மன்றங்களின் தீர்ப்பே இறுதியானது என்பது இம்மாவட்ட கிராமங்களின் எழுதப்படாத சட்டமாகும். அரசு நிறுவனங்களும் நீதி மன்றங்களும் கிராம வழக்கு மன்றங்களின் மூலம் எடுக்கப்படும் முடிபுகளை இன்றும் ஏற்றுக் கொள்கின்றன.

சாதிக்குள் நிகழும் வழக்குகளில் வாதி, பிரதி ஆகிய இருவரும் ஒரே இனத்தைச் சார்ந்தவர்களாகவும் உறவுக்காரர்களாகவும் இருக்கின்றனர். இந்நிலையில் உறவு என்பதை மறந்து நீதி, இறையாண்மை, கிராமப் பொதுநலன் என்பனவற்றின் அடிப்படையிலேயே முடிவுகள் எடுக்கப்படுகின்றன. இம்மாவட்டத்தில் பல வழக்குமன்றங்களின் தலைவர்கள் தங்கள் தீர்ப்புக்களை வழங்கும் தன்மையில் தங்களின் திறமையிலும் நடுவுநிலைமை நியாயத்தாலும் சிறப்பான பெயரைப் பெற்றுள்ளனர். இது தலைமுறை தலைமுறையாக நீடித்து அவர்களின் குடும்பங்கள் வழக்கு மன்றங்களின் தலைமைப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளும் சூழலை உருவாக்கித் தந்திருக்கின்றது. வழக்கு மன்றங்கள் சிற்றூர்களின் அடிப்படையான நிருவாக அமைப்பாகும்.

கிராம வழக்கு மன்றங்களின் தீர்ப்புகள் கடந்த கால வழக்குகளை அடிப்படையாகக் கொண்டும், சாட்சியங்களின் வாக்கு மூலங்களை மையமாகக் கொண்டும், கிராம ஒற்றுமையைப் பேணுவதாகவும் உள்ளன.

**கிராம வழக்கு மன்றங்கள் - தீர்ப்புகள் வழங்கும் முறை**

கிராம வழக்கு மன்றங்கள் வழக்கினைச் சார்ந்த வாதி, பிரதிவாதி ஆகிய இருவரது பக்கத்து நிலைகளையும் நன்கு விசாரித்தும், சாட்சிகளின் வாக்கு மூலங்களை ஆதாரமாகக் கொண்டும், வழக்கு மன்ற உறுப்பினர்களின் கருத்துக்களையும் கேட்டும், வழக்கு மன்றத் தலைவர் தன் அனுபவத்தைக் கொண்டும் தீர்ப்பு வழங்குகின்றார். சாதாரண வழக்குகளுக்குக் கூட கடுமையான முறையில் தீர்ப்புகள் சொல்லப்படுகின்றன. இத்தீர்ப்புக்களின் நோக்கம் தவறு செய்தவன் திருந்த வேண்டும் என்பதும், இதுபோன்ற தவறுகள் இக்கிராமத்தில் அல்லது சாதியில் எதிர்காலத்தில் நிகழக் கூடாது என்பதுமேயாகும். வழக்கு மன்றத் தலைவர்களின் தீர்ப்புகள் பாதிக்கப்பட்டவர்களின் நலனைவிடச் சாதி, ஊர்நலன்களையே அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன.

**தீர்ப்புகளை ஏற்றுக் கொள்ளுதல்**

வழக்கு மன்றத்தாரின் தீர்ப்புகளைச் சாதியக் கட்டுப்பாடு கருதியும் கிராமக் கட்டுப்பாட்டை மனத்தில் கொண்டும் பிரதிவாதி ஏற்றுக் கொள்கின்றனர். தீர்ப்புகள் மிகவும் கடுமையானதாக இருந்தால் தண்டனைகளின் அளவைக் குறைக்குமாறு பிரதிவாதி முறையிடலாம். 'தாங்காது சாமி', 'தாங்கதுங்க' என்று பிரதிவாதி எத்தனை முறை வேண்டுமானாலும் கிராம வழக்கு மன்றத்தாரிடம் கும்பிட்டு விழுந்து வணங்கிக் கேட்கலாம். தண்டனையின் அளவைக் குறைக்கும்படி வேண்டுதலே தண்டனையை ஏற்றுக் கொண்டதாகத்தான் பொருள்படும்.

**சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களின் தீர்ப்புகளும் தண்டனை முறைகளும்**

*சமுதாயத்தைப் பாதிக்கும் பொதுமைத் தீங்குகளைச் சட்டம் தடை செய்கின்றது. அத்தகைய தீங்குகளைச் செய்பவர்களைச் சட்டம் தண்டனைக்கு உள்ளாக்குகின்றது. இவ்வகைத் தீங்குகளே குற்றங்களாகின்றன. இதனை, "தண்டனைக்குரிய சமுதாயத்தீங்குகள் என்று சட்டத்தில் விதிக்கப்படும் செயல்களே 'குற்றங்கள்'* (Crimes) *ஆகின்றன"[59] எனச் சட்டவியல் அறிஞர்கள் வலியுறுத்திக் கூறியுள்ளனர். நீதிமன்றங்களில் தண்டனைக் குற்றத் தீங்குகளே குற்றங்கள் ஆகும். அத்தண்டனையை அரசுதான் மன்னிக்க முடியும். தனிநபரால் மன்னிக்க முடியாது.*

**தண்டனைகளின் இன்றியமையாமை**

*திருவள்ளுவர்,*

*"குடிபுறம் காத்தோம்பிக் குற்றம் கடிதல்*
*வடுவென்று வேந்தன் தொழில்"[61]*

*எனக் குறிப்பிட்டுள்ளார். குடிமக்களைப் பேணிக்காக்கும் வகையில் குற்றங்களைத் தக்கபடியான தண்டையால் ஒழித்தல் வேண்டும். இவ்வாறு தண்டிப்பது பழி அன்று; அரசனின் தொழில் என்று வள்ளுவர் வலியுறுத்தியுள்ளார். ஆதலால், சமுதாயத்தில் 'ஒறுத்தல்' முறையினால் தான் வாழ்க்கை முறை செம்மை அடைகின்றதெனலாம். ஆயினும் தண்டனை விதிப்பது என்பது ஒரு நுட்பமான கலையாகும். 'கையை உயரமாக ஓங்க வேண்டும்; ஆனால், அடிமெதுவாக விழ வேண்டும்' என்ற தண்டனை முறையின் நுணுக்கத்தை வள்ளுவரும்,*

*"கடிதோச்சி மெல்ல எறிக நெடிதாக்கம்*
*நீங்காமை வேண்டு பவர்"[61]*

*எனக்குறிப்பிட்டுள்ளார். ஆதலால், குற்றங்களுக்குரிய 'தண்டனைகள்' இன்றியமையாதன என்பதை இதன்மூலம் அறியலாம்.*

ஆதிகால நீதிமுறையில் அளிக்கப்பட்ட தண்டனைகள் கொடுமையானவை. குற்றவாளிகளின் உடலுறுப்புகளை வெட்டி விடுவது போன்ற சித்திரவதைத் தண்டனைகள் உலகின் பல நாடுகளிலும் கையாளப்பட்டுள்ளன. இங்கிலாந்து நாட்டில் கான்யூட் (Canute) மன்னன் காலத்தில், கற்பிழந்த பெண்ணின் காதுகளையும் மூக்கையும் அறிந்து விடுவது நடைமுறை வழக்கமாக இருந்துள்ளது.

நம் நாட்டிலும் குற்றவாளிகளைப் பலவாறாகச் சித்திரவதைகள் செய்துள்ளனர். கசையடிகொடுக்கும் தண்டனை முறை அண்மைக்காலம் வரையில் சட்டத்தில் இருந்தது. 1955ஆம் ஆண்டில்தான் அத்தண்டனைமுறை நீக்கப்பட்டது. நாகரிகம் வளர்ந்துள்ள சமுதாயத்தில் சித்திரவதைத் தண்டனைகள் அகற்றப்பட்டு விட்டன.

**கையிகந்த தண்டம்**

அளவுக்கு மீறிய தண்டனை அரசனின் வலிமையை நாளடைவில் நலியச் செய்யும் என்கிறார் திருவள்ளுவர். இதனை அவர் 'கையிகந்த தண்டம்'[62] எனக் குறிப்பிட்டுள்ளார்.

இன்றைய நீதிமன்றங்கள் குற்றவாளிகளுக்குத் தண்டனைகளை விதிப்பதற்கு முன்னர் பின்வரும் மூன்று கூறுகளை முக்கியமனதாக ஆராய்கின்றன.

1. குற்றத்தின் தன்மை,
2. குற்றம் இழைக்கப்பட்டதன் நோக்கம்,
3. குற்றவாளியின் பண்பு நிலை[63]

நீதிமன்றங்களில் குற்றங்களின் தன்மைகளுக்கேற்ப, தண்டனைகள் அமைகின்றன. குற்றங்களின் கொடுமைகளுக்கேற்பத் தண்டனைகள் கடுமையானதாக உள்ளன. இவ்வாறு அமைவதே நேர்மையானதாகும்.

ஒரு செயல் குற்றமா? இல்லையா? என்பதைக் காண்பதற்குச் சட்டம் குற்றம் இழைத்தவரின் கருத்தையே (Intention) நோக்குகின்றது. ஆனால், குற்றத்திற்கான தண்டனையை விதிக்கும் போது, அக்குற்றம் எந்த நோக்கத்துடன் செய்யப்பட்டது என்பதை நீதிமன்றம் ஆராய்கின்றது. இவ்வாறு, நீதிமன்றம் குற்றம் இழைத்தவரின் நோக்கத்தையும் இதர சூழ்நிலைகளையும் கொண்டு நன்கு ஆராய்ந்து தண்டையின் அளவினை அறுதியிடுகின்றது.

தன்மானம், புகழ்வேட்கை, பிறர் மதிப்பைப் பேணல், இயல்பான ஒழுக்கம், இறையுணர்வு போன்ற நற்பண்புகளே நம்மைக் குற்றவழியில் செல்லவிடாமல் தடுக்கின்றன. அற்பமான பொருளைக் கருதி அடாத குற்றங்களை இழைப்போர், ஈரமில்லா நெஞ்சோடு ஈனக்குற்றங்களை இயல்பாகச் செய்வோர் இவர்கள் குணநலமில்லாக் கொடியோர்கள் ஆவர். இத்தகைய வாடிக்கைக் குற்றவாளிகளைக் (Habitual Offenders) சட்டம் வன்மையாகத் தண்டிக்கின்றது. அதேநேரத்தில் முதற் குற்றவாளிகளையும் முதிராத நிலையிலுள்ள இளங்குற்றவாளிகளையும் நீதி மன்றம் பரிவுடன் கண்டித்து விட்டுவிடுவது, சீர்திருத்தப் பள்ளிகளில் சேர்ப்பது போன்ற முறைகளைக் கையாண்டு திருத்த முயலுகின்றது. குற்றத்தை மட்டும் பார்க்காமல் குற்றவாளியையும் கருத்திற்கொண்டு தண்டிக்க வேண்டும் என்பது குற்றவியல் நீதிக் கொள்கையாகும். 'குற்றத்தின் தன்மை, அது செய்யப்பட்ட இடம், காலம் இவற்றோடு குற்றவாளியின் வலிமை, வயது, குணம், செல்வம் முதலியவற்றையும் ஆராய்ந்து தான் தண்டனை விதிக்கப்படுதல் வேண்டும்.'[64]

தண்டனை முறையின் அடிப்படை நோக்கம் குற்றங்கள் நிகழாமல் தடுப்பதே (Prevention of Crime) ஆகும். தண்டனை முறையின் தகைமைகள் அனைத்தையும் திருவள்ளுவர்,

> "தக்காங்கு நாடித் தலைச்செல்ல வண்ணத்தால்
> ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து"[65]

என்று குறிப்பிட்டுள்ளார். 'தலைச் செல்லா வண்ணம் ஒறுத்தல் வேண்டும்' என்பது வள்ளுவர் வாக்கு. 'தலைச் செல்லா வண்ணம்' என்பது மீண்டும் குற்றத்தைச் செய்யாதவாறு தடுப்பது எனப் பொருள்படும். குற்றத்திற்குத் தக்கவாறு தண்டனை என்பது 'தக்காங்கு நாடி' ஒறுத்தல் வேண்டும் என்பதில் அடங்கியுள்ளது. குற்றவாளிக்கும் சூழ்நிலைகளுக்கும் ஏற்பத் தண்டனை அமைதல் வேண்டும் என்பதைத் தான் 'ஓத்தாங்கு ஒறுத்தல்' என்பது வலியுறுத்துகின்றது. இதுவே தண்டனையின் அளவை அறுதியிடும் இன்றைய சட்ட நெறியாகும்.

குற்றவாளிகளுக்கு விதிக்கப்படும் சிறைத்தண்டனைகள் அதை அனுபவிக்கும் குற்றவாளிகளையும் பிறரையும் அச்சுறுத்தி அவர்களை நல்வழிப்படுத்துகின்றன. குற்றச் செயல்களிலிருந்து சமுதாயத்தைப் பாதுகாக்கக் குற்றங்களைத் தடுப்பது அரசின் கடமையாகும். ஆதலால், குற்றங்களைத் தடுப்பதே தண்டனையாகின்றது.

''குற்றவாளிகள் மனநோயாளிகள் என்றும், சிறைகள் அவர்களுக்கான உளநோய், ஒழுக்க நோய்-மருத்துவமனைகள் என்றும் கூறும் காந்தியவிளக்கமே, 'குற்றநோய்போக்கும் மருந்தாகின்றது. தண்டனை' என்ற கோட்பாட்டிற்கு ஆதாரமாக உள்ளது. உலகில் முற்போக்குச் சிந்தனையுடைய குற்றவியல் வல்லுநர்கள் அனைவரும் இதனை ஒப்புக் கொள்கின்றனர்.''[66] என இந்திய நாட்டின் உச்ச நீதிமன்றம் (Supreme Court) கூறியிருப்பதும் மனங்கொள்ளத்தக்கதாகும்.

இங்கிலாந்து நாட்டில் கொலைக் குற்றத்திற்கென விதிக்கப்பட்ட மரண தண்டனை 1970ஆம் ஆண்டில் ஒழிக்கப்பட்டு விட்டது. இந்திய உச்சநீதி மன்றம் அண்மையில் மரண தண்டனை விதிப்பது அரசமைப்பு நெறிக்கு முரணானதென்று தீர்ப்பளித்துள்ளது. இருப்பினும் இன்றும் தூக்குத் தண்டனை வழங்கப்படுகின்றது.

முதற்குற்றவாளிகளையும் (First Offenders) இளம் குற்றவாளிகளையும் (Juvenile Offenders) சட்டம் பிரிவுடன் நடத்துகின்றது. சிலவகையான முதற் குற்றவாளிகளை நீதிமன்றம் கண்டித்து அறிவுறுத்தி விட்டுவிடுகின்றது. இளம் குற்றவாளிகள் சீர்திருத்தப்பள்ளிகளில் சேர்க்கப்படுகின்றனர். 'குற்றமனம்' (Guilty mind), 'குற்றச் செயல்' (Criminal Act) இரண்டும் இணைந்த செயலலைத்தான் சட்டம் 'குற்றம்' எனக் கொள்கின்றது. ஆதலால் குற்றமனத்தால் தூண்டப்பெற்ற குற்றச் செயல்களே குற்றங்கள் ஆகின்றன.

குற்றவாளிகள் தங்கள் தவறுகளை உணர்ந்து ஒத்துக்கொண்ட பின்னர், அவர்கள் செய்த குற்றங்களின் தன்மைகளுக்கேற்ப, வழக்கு மன்றத் தலைவர்களாகிய நாட்டாண்மைக்காரர்களும் பெரிய அம்பலக்காரர்களும், அம்பலகாரர்களும் பிறவழக்கு மன்ற உறுப்பினர்களும் குற்றவாளிகளுக்கு அளிக்கப்பட வேண்டிய தண்டனைகளை முடிவு செய்கின்றனர். குற்றம் புரிந்தவர்கள் திருந்தவும், கிராமங்களில் இதுபோன்ற குற்றங்கள் எதிர்காலத்தில் நடைபெறாமல் தடுக்கப்படவேண்டும் என்ற நோக்கத்தின் அடிப்படையிலும் இம்மாவட்ட கிராம வழக்குமன்றங்கள் வழங்கும் தண்டனைகள் கடுமையானதாக இருக்கின்றன. இருப்பினும் சாதாரண நிகழ்வுகளான வாய்த்தகராறு, குடும்பச் சண்டை, நீர்ப்பாசனம் போன்றவற்றில் குற்றங்கள் செய்தால் தண்டைகள் குறைவானதாகவே உள்ளன. அடிதடி தகராறுகள், வெட்டுக்குத்து, கொலை, கற்பழிப்பு, பெண்ணைக்கடத்துதல், பெண்ணைக் கூட்டிக் கொண்டு ஓடித் (உடன்போக்கு) திருமணம் செய்து கொள்ளல், திருட்டு, பிறர் இடத்தையும் நிலத்தையும் ஆக்கிரமிப்புச் செய்தல் போன்ற குற்ற வழக்குகளில் குற்றங்களின் அளவு மற்றும் தன்மைகளுக்கேற்பத் தண்டனைகள் சற்றுக் கூடுதலாக இருக்கின்றன. எனவே. சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களில் தண்டனைகளின்

தன்மைகளைப் பொறுத்தமட்டில் உரிமையியில், குற்றவியல் மற்றும் குடும்ப வழக்குகளில்,

1. வழக்கு மன்றத்தார் தீர்ப்பினைக் கோயிலில் சீட்டுப்போட்டுக் குலுக்கி எடுத்து அதன்படி நிறைவேற்றுதல்,

2. குற்றவாளியை எச்சரித்துப் பொதுமன்னிப்பு வழங்கலும், குற்றவாளி வழக்கு மன்றத்தாரிடம் பொதுமன்னிப்பு வேண்டலும்,

3. கிராம வழக்கு மன்றத்தார் இடப்பிரச்சினை, நிலப்பிரச்சினைகளில் ஆவணச் சான்றுகளைப் படித்தும், நிலத்தை அளந்து பார்த்தும் அதன்படி தீர்ப்பினை வழங்குதல்,

4. பாகப்பிரிவினை வழக்குகளில் கோயிலில் சீட்டுப் போட்டுக் குலுக்கி எடுத்தலும், அதன்படி வழக்கு மன்றத்தார் முன்னிலையில் பத்திரம் எழுதிக் கையொப்பமிடலும்,

5. கிராம வழக்கு மன்றத்தார் 'பெண்ணிற்கும் சொத்துரிமை உண்டு' எனத் தீர்ப்புக் கூறுதல்,

6. குற்றவாளிக்குத் தண்டத்தொகை விதித்தல்,

7. கடன்தொகைக்காகக் குற்றவாளியிடமிருந்து ஈடுகாணம் (சொத்துக்களை எழுதி வாங்கித்தருதல்) பெற்றுத்தருதல்,

8. சமாதானம் செய்து வைத்தல்,

9. குற்றவாளியைக் கோயிலுக்கு விளக்குப்போடச் சொல்லுதல்,

10. குற்றவாளியை முனியாண்டி கோயிலில் சத்தியம் செய்யச் சொல்லுதல்,

11. குற்றவாளியை ஊரைவிட்டு ஒதுக்கி வைத்தல்,

12. குற்றவாளியை ஊரைவிட்டு வெளியேற்றுதல்,

13. தண்டத்தொகையைக் கோயில் உண்டியலில் சேர்த்தல்,

14. காதலர்களைப் பதிவுத் திருமணம் செய்து கொள்ளும்படி தீர்ப்பு அளித்தல்,

15. காதலர்கள் வழக்கு மன்றத்தார் முன்னிலையில் திருமணம் செய்து கொள்ளல்,

16. விபத்துக்களினால் பாதிக்கப்பட்ட வாதிக்குக் குற்றவாளியிடமிருந்து (பிரதிவாதி) இழப்பீடு பெற்றுத்தருதல்,

17. மனநிலை பாதிக்கப்பட்ட கொலைக் குற்றவாளியை மன்னித்து விடுதல்

*எனப் பதினேழு வகைகளாகக் கொள்ளலாம். சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களில் 'சத்தியம் செய்தல்' என்ற தண்டனை மட்டும் பெரும்பாலும் நடைமுறைப்படுத்தப்படுவதில்லை. மற்ற தண்டனைகள் அனைத்தும் நடைமுறைப்படுத்தப்படுகின்றன.*

**1. வழக்குமன்றத்தார் தீர்ப்பினைக் கோயிலில் சீட்டுப்போட்டுக் குலுக்கி எடுத்து அதன்படி நிறைவேற்றுதல்**

*பாகப்பிரிவினை, இடப்பிரச்சினை, நிலப்பிரச்சினை, பாதைத் தகராறு போன்ற வழக்குகள் விசாரணைக்குழுவுக்கு வரும் பொழுது, வழக்கு மன்றத்தார் தங்கள் தீர்ப்பினைக் கோயிலில் சீட்டுப் போட்டுக் குலுக்கு எடுத்து, அதன்படி நிறைவேற்றுகின்றனர்.[67] வழக்கு மன்றத்தாரின் அத்தீர்ப்பினை இறைவனின் தீர்ப்பாகக் கருதி வாதி, பிரதிவாதி ஆகிய இருவரும் ஏற்றுக் கொள்கின்றனர்.*

**2. குற்றவாளியை எச்சரித்துப் பொதுமன்னிப்பு வழங்கலும், குற்றவாளி வழக்கு மன்றத்தாரிடம் பொதுமன்னிப்பு வேண்டலும்**

*நிலப்பிரச்சினை, பெட்டிக்கடையை உடைத்துத் திருடுதல், வீட்டுப் பிரச்சினை காரணமாக ஊரைவிட்டு ஒதுக்கி வைக்கப்பட்டவர், கிராம வழக்கு மன்றத்தாரிடம் பொதுமன்னிப்பு வேண்டல் போன்ற வழக்குகள் விசாரணைக்கு வரும் பொழுது, வழக்கு மன்றத்தார் தங்கள் தீர்ப்பினைக் குற்றவாளிகளை எச்சரித்துப் பொதுமன்னிப்பு வழங்கலும், குற்றவாளிக்கு அறிவுரை வழங்கலும் என்ற நிலையில் நிறைவேற்றகின்றனர்.[68] இருப்பினும் குற்றவாளியின் குற்றத் தன்மைக்கேற்பச் சிறிய அளவிலான தண்டனையும் வழங்கப்படுகின்றது.*

**3. ஆவணச் சான்றுகளைப் படித்தும், நிலத்தை அளந்து பார்த்தும் அதன்படி தீர்ப்பினை வழங்குதல்**

*இடப்பிரச்சினை, நிலப்பிரச்சினை, வீட்டு மனைப் பிரச்சினை, நடைபாதைத் தகராறு, வாய்க்கால் பிரச்சினை போன்ற வழக்குகள் விசாரணைக்கு வரும் போது, அவ்வழக்குகள் தொடர்பான ஆவணச் சான்றுகளாகிய பட்டா, பத்திரங்கள்,*

ஓலைமுறி ஒப்பந்தச் சான்றிதழ்களைப் படித்துப் பார்த்தும், பிரச்சினைக்குரிய இடம், நிலம், வீட்டுமனை, நடைபாதை, வாய்க்கால் போன்றவற்றை நேரில் பார்வையிட்டு, அளந்து பார்த்தும் அதன்படி தீர்ப்புகளை வழங்கி வருகின்றனர்.[69] இவ்வாறு தீர்ப்புகள் வழங்குவது ஏறக்குறைய நீதிமன்றங்களின் தீர்ப்புகளை ஒத்து அமைகின்றதெனலாம்.

4. கோயிலில் சீட்டுப் போட்டுக் குலுக்கி எடுத்தலும், வழக்கு மன்றத்தார் முன்னிலையில் பத்திரம் எழுதிக் கையொப்பமிடலும்

பாகப்பிரிவினை வழக்குகளில் நிலம், வீடு, இடம், வீட்டுமனை போன்றவற்றில் யாருக்கு, எந்தப்பகுதி சொந்தம் என்ற பிரச்சினை எழும்போது, கிராமக் கோயிலில் சீட்டுப் போட்டுக்குலுக்கி எடுத்து, அதன்படி வழக்குமன்றத்தார் தங்கள் முன்னிலையில் பத்திரங்களை எழுதிக் கையொப்பமிட்டுக் கொடுத்து அவ்வழக்குகளைத் தீர்த்து வைக்கின்றனர்.[70] அத்தீர்ப்பினை வாதியும் பிரதிவாதியும் ஆண்டவனின் தீர்ப்பாகக் கருதி ஏற்றுக் கொள்கின்றனர்.

5. 'பெண்ணிற்கும் சொத்துரிமை உண்டு' எனத் தீர்ப்புக் கூறுதல்

ஆண்வாரிசு இல்லாமல் தந்தை இறந்துவிட்டால் அவருடைய அனைத்துச் சொத்துக்களும் அவருடைய மகளுக்குச் சொந்தம். அதாவது 'பெண்ணிற்கும் சொத்துரிமை உண்டு' எனத்தீர்ப்பு வழங்கியுள்ளனர்.[71] இவ்வாறு தீர்ப்பு வழங்குவது நீதிமன்றங்களில் வழங்கப் பெறும் சட்டப்படியான தீர்ப்பினை ஒத்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

6. குற்றவாளிக்குத் தண்டத்தொகை விதித்தல்

குற்றவாளிகளுக்கு விதிக்கப்பெறும் தண்டத்தொகையை 'அபராதத் தொகை' என்றும், 'குற்றப்பணம்' என்றும் குறிப்பிடுகின்றனர். கிராம வழக்கு மன்றங்களில் குற்றங்களின் தன்மைகளுக்கேற்பவும், சூழ்நிலைக்குத் தக்கவாறும் இந்தத்

தண்டத்தொகை தண்டனையாகக் குற்றவாளிகளுக்கு விதிக்கப்படுகின்றது. கிராம வழக்கு மன்றத்தினர் இந்தத் தண்டத்தொகையைப் பாதிக்கப்பட்ட வாதிகளுக்குக் கொடுத்து விடுகின்றனர். பாதிக்கப்பட்ட வாதிகளுக்குக் கொடுத்தது போக எஞ்சியுள்ள தொகையைக் கிராம வழக்குமன்றத்தார் வழக்கு மன்றங்களின் பொதுப்பணமாகவும் வைத்துக் கொள்கின்றனர். முறைகேடான பாலியல் தொடர்பு, பொருந்தா மணங்களினால் ஏற்படும் சிக்கல்கள், கொள்ளை, திருட்டு போன்ற குற்றங்களுக்கு இம்மாவட்ட கிராம வழக்கு மன்றங்களில் தண்டத்தொகை விதிக்கப்படுகின்றது.

ஒருவருடைய வீட்டிலுள்ள நகை, ஆடு, மாடு, கோழி போன்றவைகளையும், தோட்டங்களிலுள்ள மரம், மோட்டார், விளைபொருள்கள், தென்னங்கன்று, நெல்நாற்று போன்றவற்றையும் திட்டமிட்டுத் திருடுதல், ஆண்-பெண் பாலுறவு வழக்குகள், கற்பழிப்பு, பெண்ணின் கையைப் பிடித்திழுத்தல், ஒருவர் பெண்ணை (உடன்போக்கு) கூட்டிக் கொண்டு ஊரைவிட்டு ஓடுதல் போன்ற குற்றங்களில் அக்குற்றங்களுக்கான தண்டனைகள், தண்டத் தொகை விதிக்கின்றனர். நகை, ஆடு, மாடு, கோழி, மோட்டார், விளைபொருள்கள் திருடிய திருட்டுக் குற்றங்களுக்குத் தண்டத்தொகை அபராதமாக வசூலிக்கப்படுகின்றது. பாதிக்கப்பட்டவர் பணமாகப் பெறாமல் அப்பொருள்களையே பெற விரும்பினால், குற்றவாளிகளைப் பொருள்களாகக் கொடுத்து விடுமாறு தீர்ப்புக் கூறிவிட்டு, அக்குற்றங்களுக்காகவும் தவறுகளுக்காகவும் ஒரு குறிப்பிட்ட அளவு பணமும் தண்டத்தொகையாக வசூலிக்கப்படுகின்றது. பெண்ணின் கையைப்பிடித்து இழுத்தல், பெண்ணைக் கூட்டிக் கொண்டு ஓடுதல், கற்பழிப்பு ஆகிய குற்றங்களுக்குத் தண்டத்தொகையாகவும் நிலமாகவும் வசூலிக்கப்படுகின்றது. இக்குற்றங்களுக்கு ரூ.50,000, ரூ.10,000 என்ற அளவில் பணம் தண்டத்தொகையாக வசூலிக்கப்படுகின்றது; அல்லது பாதிக்கப்பட்ட பெண்ணிற்குப் பாதிப்பினை

ஏற்படுத்தியவர் நன்செய் அல்லது புன்செய் நிலத்தை எழுதிக் கொடுத்தல் அக்குற்றத்திற்குரிய தண்டனையாக வழங்கப்படுகின்றது.

கிராம வழக்கு மன்றங்களில் பெண்ணைக் காதலித்துத் திருமணம் செய்து கொள்ள மறுப்பவர், அப்பெண்ணிற்கு ரூ.10,000 என்ற அளவில் தண்டத்தொகை தரவேண்டுமெனத் தீர்ப்பளித்துள்ளனர்.[72] காதல் வழக்கில் ஈடுபட்டுள்ள ஆண், பெண் இருவரும் ஒரே இனத்தினராகவும், உறவுமுறைகளாகவும் இருப்பின் வழக்கு மன்றத்தார் அவ்விருவருக்கும் முறைப்படி திருமணம் செய்து வைத்துள்ளனர்.[73] காதலில் ஈடுபட்டுள்ள ஆண் ஒரு சாதியாகவும், பெண் மற்றொரு சாதியாகவும் இருப்பினும் அவர்கள் சேர்ந்து வாழட்டும் எனத் தீர்ப்பளித்துள்ளனர்.[74] சில வழக்குகளில் அவர்கள் சட்டப்படி பதிவுத் திருமணம் செய்து கொள்ள வேண்டுமெனவும் தீர்ப்பளித்துள்ளனர்.[75] உயர்ந்த சாதி இளைஞனும் தாழ்ந்த சாதிப் பெண்ணும் காதல் திருமணம் செய்து கொண்டிருப்பின், அவர்களை வெளியூரில் சென்று பிழைத்துக் கொள்ளுமாறும் தீர்ப்பளித்துள்ளனர்.

காதலித்துப் பெண்ணைக் கர்ப்பம் அடையச் செய்துள்ள வழக்குளில், அந்தப் பெண்களை அந்த ஆடவர்களுக்கே மணம் முடித்து வைத்துள்ளனர்.[76] திருமணமான பெண்ணைப் பாலியல் பலாத்காரம் செய்ய முயன்றவரிடமிருந்து ரூ.5,000 தண்டத்தொகையும், திருமணமான பெண்ணைக் கையைப்பிடித்து இழுத்தவரிடமிருந்து ரூ.1,500 தண்டத்தொகையும் பெற்று அத்தொகைகளைப் பாதிக்கப்பட்ட பெண்களிடம் கொடுத்துள்ளனர்.[77]

கோழித்திருட்டு, பெட்டிக்கடையை உடைத்துத் திருடுதல், மிளகாய்த் திருட்டு போன்ற வழக்குகளில் குற்றவாளிகளுக்குக் குறைந்த அளவில் தண்டத்தொகை விதிக்கப்பட்டுள்ளது.[78] மோட்டார் திருட்டுப் போன்ற வழக்குகளில் திருட்டுப் பொருள்களை மீட்டு உரியவர்களிடம் ஒப்படைத்துள்ளனர். குற்றவாளி பக்கத்து ஊரைச் சேர்ந்தவன் என்பதால் அவனை மன்னித்து அறிவுரை கூறியும்

விட்டுள்ளனர்.[79] வாழைக்காய் திருடிய சிறுவனையும், நாற்றுத் திருடியவர்களையும் தண்டத்தொகை விதிக்காமல் மன்னித்துள்ளனர்.[80] மாட்டைத் திருடியவர்களுக்கு மாட்டுக்கிரையத்தைத் தண்டத்தொகையாக விதித்துள்ளனர். பணத்தைத் திருடியவரிடமிருந்து பணத்தை மீட்டுக் கொடுத்துள்ளனர். அக்குற்றவாளியை மன்னித்து அறிவுரை வழங்கியுள்ளனர். மீன் திருட்டுக்கும் தண்டத்தொகை விதித்துள்ளனர்.[81] முன்விரோதம் காரணமாகக் கையை வெட்டியவரிடமிருந்து ரூ.3,000த்தைத் தண்டத் தொகையாகப் பெற்று, அப்பணத்தைப் பாதிக்கப்பட்டவருக்குக் கொடுத்துள்ளனர்.[82] கோயில் மாட்டைக் கத்தியால் வெட்டியவருக்குத் தண்டத்தொகை விதிக்கப்பட்டுள்ளது.[83] செருப்பால் அடித்தல், வைக்கோல் போரில் தீ வைத்தல் போன்ற வழக்குகளில் குற்றவாளிகளுக்குத் தண்டத்தொகை விதிக்கப்பட்டுள்ளது.[84] கிராமப் பொது இடத்தை ஆக்கிரமித்து வீடு கட்டியவருக்குத் தண்டத்தொகை விதிக்கப்பட்டுள்ளது.[85] இடப்பிரச்சினை காரணமாகக் கிராம வழக்கு மன்றத்தார் தீர்ப்பினை மீறி காவல் நிலையம் சென்றவருக்கும், இடப்பிரச்சினை காரணமாக இன்னொருவர் மனைவியை அடித்தவருக்கும், ஒரே நிலத்தை ஒத்திக்கு ஒருவருக்கும் கிரையமாக மற்றொருவருக்கும் எழுதிக் கொடுத்தவருக்கும் இம்மாவட்ட கிராம வழக்கு மன்றத்தார் தண்டத்தொகை விதித்துள்ளனர்.[86] கிராமக் கட்டுப்பாட்டை மீறிக் குடித்து விட்டு வந்து மற்றவர்களிடம் வம்புச்சண்டை செய்தவருக்கும் தண்டத்தொகை[87] விதித்துள்ளனர்.

**7. கடன்தொகைக்காகக் குற்றவாளியிடமிருந்து ஈடுகாணம் பெற்றுத்தருதல்**

கடன் தொகைக்காகக் குற்றவாளிகளிடமிருந்து ஈடுகாணம் பெற்றுத் தந்துள்ளனர். கடன் தொகைக்காக அத்தொகை பெறுமானமுள்ள, நிலத்தையும் வீட்டையும் குற்றவாளியிடமிருந்து எழுதி வாங்கி அதனைக் கடன் கொடுத்தவருக்குக் கொடுத்துள்ளனர்.[88] வெளிநாட்டிற்கு அனுப்புவதாகக் கூறிப்பணம்

மோசடி செய்தவரிடமிருந்து அப்பணத்தை மீட்டுத் தந்துள்ளனர்.[89] கடன் தொகைக்கான வட்டியைக் குறைத்துக் கொள்ளுமாறு தீர்ப்புக் கூறியுள்ளனர்.[90]

8. சமாதானம் செய்து வைத்தல்

பெரும்பான்மையான சிறிய வழக்குகளில் வாதிக்கும் பிரதிவாதிக்கும் சமாதானம் செய்து வைத்து அமைதிப்படுத்துகின்றனர். வாய்க்கால் தகராறுகள், இரண்டு கிராமங்கள் தொடர்புடைய ஊற்றுக்கால் பிரச்சினைகள், தோட்ட வேலைத் தகராறுகள் போன்ற வழக்குகளிலும், வைக்கோல் போரில் மேய்ந்த மாட்டை வெட்டுதல், கோயில் விழாவில் மரியாதை காரணமாக ஒரே சாதிக்குள் நடைபெற்ற மோதல்[91] போன்ற வழக்குகளிலும், இரண்டு கிராமங்கள் தொடர்புடைய அய்யனார் கோயில் திருவிழாவில் முதல் மரியாதை, ஆகாசக் கருப்பர் கோயில் திருவிழா நடத்துதல், கருப்பர் கோயில் மஞ்சு விரட்டு விழாவில் முதல் மரியாதை பெறுதல், ஒரே கிராமத்தைச் சேர்ந்த இரண்டு சாதிக்குள் அய்யனார் கோயில் திருவிழாவில் முதல் மரியாதை பெறுதல் காரணமாக எழுகின்ற மோதல், கோயிலில் முதல் மரியாதை கேட்டு மற்றொரு கிராமத்தார் கட்டாயப்படுத்துதல், ஒரே பங்காளிகளுக்குள் கோயிலில் முதல் மரியாதை காரணமாக எழும் மோதல், அண்ணன்-தம்பியர்களுக்குள் 'ஊர் அம்பலகாரர்' யார்? என்பது தொடர்பாக எழும் சிக்கல்[92] போன்ற வழக்குகளில் இம்மாவட்ட கிராம வழக்கு மன்றத்தார் வாதிக்கும் பிரதிவாதிக்கும் சமாதானம் செய்து வைத்துள்ளனர்.

வீட்டுமனைப் பிரச்சினை தொடர்பான வழக்குகளும் அமைதியான முறையில் தீர்த்து வைக்கப்பட்டுள்ளன. இருபத்தைந்து வருடங்கள் தீர்த்து வைக்க முடியாத வீட்டு மனைப்பிரச்சினையைக் கிராம வழக்கு மன்றத்தார் சமாதானம் செய்து அமைதியான முறையில் தீர்த்து வைத்துள்ளனர்.[93] இவ்வாறே, நடைபாதைத்

தகராறு, இடத்தகராறு போன்ற வழக்குகளையும் கிராம வழக்கு மன்றத்தார் சமாதானம் செய்து தீர்த்து வைத்துள்ளனர்.

9. குற்றவாளியைக் கோயிலுக்கு விளக்குப் போடச் சொல்லுதல்

சிறுசிறு குற்றங்களைச் செய்த குற்றவாளிகளுக்கு அக்குற்றங்களுக்குத் தண்டனையாக அக்கிராமங்களிலுள்ள குறிப்பிட்ட கோயில்களுக்குக் குறிப்பிட்ட காலம் வரை எண்ணெய் ஊற்றி விளக்குப் போடும்படி தீர்ப்புக் கூறுகின்றனர். அதற்கெனச் சிறுதொகையைத் தண்டமாக விதிக்கின்றனர். இதற்குச் சான்றாக இம்மாவட்ட கிராம வழக்கு மன்றத்தினர் நாடகத்தில் இரண்டு கிராமத்தார்களுக்கிடையே நடைபெற்ற அடி தடிச் சண்டையைச் சமாதானம் செய்து வைத்து, அக்கிராமத்திலுள்ள மந்தையம்மன் கோயிலுக்கு விளக்கேற்றுவதற்காக இரண்டு கிராமத்தார்களிடமும் தலா ரூ.25 தண்டத்தொகை பெற்று அவ்வழக்கினை முடித்து வைத்துள்ளனர்.[94]

10. குற்றவாளியை முனியாண்டி கோயிலில் சத்தியம் செய்யச் சொல்லுதல்

வாதி, பிரதிவாதி ஆகிய இருவரில் யார் வேண்டுமானாலும் 'சத்தியப் பிரமாணம்' அல்லது சத்தியம் செய்யலாம். இம்மாவட்ட கிராமங்களில் இதனைப் புனிதமாகக் கருதுகின்றனர். இவ்வாறு சத்தியம் செய்தல், கிராம மக்களின் வாழ்வியல் நம்பிக்கையைப் பிரதிபலிக்கின்றது. வாதியும் பிரதிவாதியும் குளித்து விட்டு வழக்கு மன்றத்திற்கு வருகின்றனர். வழக்கு மன்றத்திற்குச் சற்றுத் தொலைவில் தரையை மாட்டுச் சாணத்தால் மெழுகி, அதன்மேல் வெற்றிலை, பாக்கு வைத்துச் சூடத்தைக் கொளுத்தி வைக்கின்றனர். சத்தியம் செய்பவர் அதனருகில் சென்று இரண்டு உள்ளங்கைகளையும் ஒன்று சேர்த்து நீட்டியவாறு எதிராளி குறிப்பிடும் துடியான கடவுளின் பெயரைக்கூறி 'நான் கூறியது உண்மையானது' என்று மூன்று முறை கூறுகின்றார். பின்னர் எரியும் சூடச்

சுடரைக் கையால் அணைக்கின்றார். அப்போது இரண்டு கைகளையும் அவர் தேய்க்கக் கூடாது. மேலும் சத்தியம் செய்பவர் வாய்த் திக்கக் கூடாது. அப்பொழுது தான் 'சத்தியம் செய்தல்' வழக்கு மன்றத்தாரால் ஏற்று கொள்ளப் பெறும். இல்லையெனில் குற்றமானது சத்தியம் செய்தவரையே சென்றடையும். பெரும்பாலும் இம்மாவட்ட கிராம வழக்கு மன்றங்களில் சத்தியம் செய்தல் தவிர்க்கப்பட்டே வருகின்றன.

கோழித்திருட்டு வழக்கொன்றில், 'வழக்கு மன்றத்தார் குற்றவாளியை அக்கிராமத்திலுள்ள முனியாண்டி கோயிலில் வெள்ளைச் சேவலை அறுத்து இரத்தப் பொட்டு வைத்து நான் கோழியைத் திருடவில்லை என்று சத்தியம் செய்யுமாறு வேண்டுகின்றனர்.[95] அக்குற்றவாளி சத்தியம் செய்ய மறுத்துத் திருட்டுக் குற்றத்தை ஒத்துக்கொள்கின்றான்.

11. குற்றவாளியை ஊரைவிட்டு ஒதுக்கி வைத்தல்

கிராம வழக்கு மன்றங்களில் வாதியும் பிரதிவாதியும் அல்லது இருவரும் வழக்கு மன்றத்தாரின் தீர்ப்புகளுக்குக் கட்டுப்படாத நிலையில் வழக்கு மன்றத்தாரால் கடுமையான தண்டனை வழங்கப்பட்டு வருகின்றது. வழக்கு மன்றத்தார் அவர்களுக்கு 'ஊரை விட்டு ஒதுக்கி வைத்தல்' என்னும் தண்டனையைக் கொடுக்கின்றனர். இத்தண்டனைக்கு உள்ளானவர்கள் கிராமச் சூழலில் தனித்து வாழ முடியாது. ஆதலால் அவர்கள் கிராம வழக்கு மன்றத்திற்குப் பெரிதும் கட்டுப்படுபவர்களாக உள்ளனர். 'ஊரைவிட்டு ஒதுக்கி வைத்தல்' என்பது குற்றம் செய்தவர் கிராம வழக்கு மன்றத்தின் சட்ட திட்டங்களுக்குக் கட்டுப்படாவிட்டால் அவர்களைச் சாதியை விட்டும், ஊரைவிட்டும் விலக்கி ஒதுக்கி வைப்பதாகும்.

அவ்வாறு ஒதுக்கி வைக்கப்பட்டவர்களுடன் மற்றவர்கள் எந்தவிதத் தொடர்பும் உறவும் வைத்துக் கொள்ளக் கூடாது. நேரடியாகவோ அல்லது

மறைமுகமாகவோ உறவு வைத்திருப்பதாகத் தெரிந்தால் அவர்களையும் ஊரைவிட்டு ஒதுக்கி வைத்து விடுகின்றனர். இத்தகைய தண்டனை முறைக்கு 'ஊரை விட்டு ஒதுக்கி வைத்தல்' அல்லது 'சாதிவிலக்குச் செய்தல்' என்பது பெயராகும்.

தென்னங்கன்றுகளைத் திட்டமிட்டுப் பல வருடங்களாகத் திருடியவரை வழக்கு மன்றத்தார் மூன்று மாதங்களுக்கு ஊரை விட்டு ஒதுக்கி வைத்துள்ளனர்.[96] கிராமப் பொது இடத்தை ஆக்கிரமித்து வீடு கட்டியவரையும் வழக்கு மன்றத்தார் ஊரை விட்டு ஒதுக்கி வைத்துள்ளனர்.[97] கிராமத்தில் யாருக்கும் மதிப்பும் மரியாதையும் கொடுக்காமல், அடங்காப் பிடாரியாகத் திரிந்த குடும்பத் தலைவியையும் வழக்கு மன்றத்தார் ஊரைவிட்டு ஒதுக்கி வைத்துள்ளனர்.[98] கிராமக் கட்டுப்பாட்டை மீறி கிராமத்தில் சாராயம் விற்பவரையும், ஊரைவிட்டு ஒதுக்கி வைக்கப்படும் என எச்சரித்துத் தீர்ப்புக் கூறியுள்ளனர்.

12. குற்றவாளியை ஊரைவிட்டு வெளியேற்றுதல்

குற்றம் செய்தவர்களைச் சிலசமயம் ஊரைவிட்டே வெளியேற்றி விடுகின்றனர். குற்றவாளிகள் கிராமக் கட்டுப்பாட்டிற்குக் கட்டுப்படாத சூழ்நிலையில் இவ்வாறு வெளியேற்றப்படுகின்றனர். பெண்ணின் கையைப் பிடித்து இழுத்தல், கற்பழித்தல் (வன்புணர்ச்சி) போன்ற வழக்குகளில் குற்றவாளிகள் ஊரைவிட்டு வெளியேற்றப்படுகின்றர். இதுபோன்ற குற்றங்கள் மீண்டும் அக்கிராமங்களில் நடைபெறாமல் தடுப்பதற்காகவே இத்தகைய தண்டனை குற்றவாளிகளுக்கு வழங்கப்படுகின்றது. சிவகங்கை மாவட்ட வழக்கு மன்றங்களில் உயர்ந்த சாதி இளைஞன் தாழ்ந்த சாதிப் பெண்ணைத் திருமணம் செய்து கொண்டமைக்காக அவ்விருவரும் ஊரை விட்டு வெளியேற்றப்பட்டுள்ளனர்.[99] கள்ளர் இன இளைஞன் மறவர் இனப் பெண்ணைக் கூட்டிக்கொண்டு ஓடித்

திருமணம் செய்து கொண்டதால்[100] அவ்விருவரும் ஊரைவிட்டு வெளியேற்றப்பட்டுள்ளனர்.

13. தண்டத்தொகையைக் கோயில் உண்டியலில் சேர்த்தல்

குற்றவாளிகளுக்கு விதிக்கப்பெறும் தண்டத்தொகையைக் கோயில் உண்டியலில் சேர்த்து விடும் முறையையும் காணமுடிகின்றது. ஆடுகளின் கால்களை வெட்டிய வழக்கில் குற்றவாளிக்கு ரூ.500 தண்டத்தொகை விதிக்கப்பட்டது.[101] ஆட்டின் சொந்தக்காரர், குற்றவாளி மனம் திருந்தினால் போதும், தனக்குப் பணம் வேண்டாம் எனக் கூறியதால், அந்தப்பணம் ஊர்க்கோயில் உண்டியலில் சேர்க்கப்பட்டது.

14. காதலர்களைப் பதிவுத் திருமணம் செய்து கொள்ளும்படி தீர்ப்பு அளித்தல்

காதல் வழக்குகளில் ஈடுபட்டுள்ள ஆண், பெண் ஆகிய இருவரும் வெவ்வேறு சாதிகளைச் சேர்ந்தவர்களாக இருப்பின், அவர்கள் சட்டப்படி பதிவுத் திருமணம் செய்து கொண்டு சேர்ந்து வாழட்டும்[102] எனத் தீர்ப்புக் கூறியுள்ளனர்.

15. காதலர்கள் வழக்கு மன்றத்தார் முன்னிலையில் திருமணம் செய்து கொள்ளல்

ஊரைவிட்டு ஓடிச்சென்று திருமணம் செய்து கொண்ட காதலர்கள், வழக்கு மன்றத்தாரிடம் அடைக்கலம் கேட்கின்றனர். அவர்களுக்கு வழக்கு மன்றத்தார் தங்கள் முன்னிலையில் திருமணம் செய்து வைக்கின்றனர்.[103] இவ்வழக்குகளில் ஆணும் பெண்ணும் ஒரே சாதிக்காரர்களாகவும், உறவினர்களாகவும் இருக்கின்றனர்.

16. விபத்துக்களினால் பாதிக்கப்பட்ட வாதிக்குக் குற்றவாளி (பிரதிவாதி)யிடமிருந்து இழப்பீடு பெற்றுத் தருதல்

விபத்துக்களினால் பாதிக்கப்பட்ட வாதிகளுக்குக் குற்றவாளிகளிடமிருந்து (பிரதிவாதிகள்) இழப்பீட்டுத் தொகையும் பெற்றுத் தந்துள்ளனர். சாலையில் மாட்டுவண்டியும், டிராக்டரும் மோதிக் கொண்டதில் வண்டிக்காரின் மாடு கால்

ஒடிந்து பாதிப்புக்குள்ளானது. வழக்கு மன்றத்தார் வண்டிக்காரரின் மாட்டிற்காக டிராக்டர் உரிமையாளரிடமிருந்து ரூ.2500 இழப்பீட்டுத் தொகை பெற்றுத் தந்துள்ளனர்.[104] சாலையில் டிராக்டர் மோதியதில் சைக்கிள் நொறுங்கிய வழக்கில் சைக்கிள்காரருக்கு டிராக்டர் உரிமையாளரிடமிருந்து ரூ.2000த்தை வழக்கு மன்றத்தார் பெற்றுத் தந்துள்ளனர்.[105] டிராக்டர் வான்கோழியை அடித்துக் கொன்றதற்காக வழக்கு மன்றத்தார் வான்கோழிக்காரருக்கு ரூ.250 இழப்பீட்டுத் தொகை பெற்றுத் தந்துள்ளனர்.

### 17. மனநிலை பாதிக்கப்பட்ட கொலைக் குற்றவாளியை மன்னித்து விடுதல்

பஞ்சாயத்து வழக்கு ஒன்றில், மனநிலை சரியில்லாதவர் செய்த கொலைக் குற்றத்திற்காக அவரது குடும்பத்தார் அக்குற்றத்தை ஏற்றுக் கொள்கின்றனர். வழக்கு மன்றத்தார் குற்றவாளி 'பைத்தியம்' என்பதால், 'பலித்தீர்ப்பு' என்ற முறையில் ஒரு ஏக்கர் நிலத்தைக் குற்றவாளியின் குடும்பத்தாரிடம் இருந்து பெற்று அதனைக் கொலை செய்யப்பட்ட நபரின் குடும்பத்தாருக்குக் கொடுகின்றனர்.[107] பின்னர், மனநிலை பாதிக்கப்பட்ட அக்குற்றவாளியை வழக்கு மன்றத்தார் நீதிமன்றத்தில் ஒப்படைக்கின்றனர். நீதி மன்றம் மனநோயாளி என அவரை விடுதலை செய்து விட்டது. குற்றம் சாட்டப்பட்டவர் முன்னிலையில்தான் சாட்சியம் விசாரிக்கப்பட வேண்டும் என்பது ஒரு பொதுவிதியாகும்.

நீதிபதி முன்னிலையில் நீதிமன்ற விசாரணையில் குற்றம் சாட்டப்பட்டவர் மனநிலை பாதிக்கப்பட்டவர் எனத் தக்கச் சான்றுகளுடன் மெய்ப்பிக்கப்பட்டால் பின்வரும் சட்ட விதிமுறைகளைப் பின்பற்ற வேண்டும். குற்றம் சாட்டப்பட்டவர் மனநிலை பாதிக்கப்பட்டவராக இருப்பின், அவரால் தான் செய்த குற்றத்தின் தன்மையையோ, அதற்கேற்பத் தனது எதிர்வாதத்தையோ தயார் செய்து கொள்ளவோ இயலாது. ஆதலால், அந்த நபரின் புத்தி சுவாதீனமற்ற நிலையை

நீதிபதி விசாரித்து அறியவேண்டும். புத்தி சுவாதீனமற்ற குற்றம் சாட்டப்பட்டவரை மாவட்ட முதன்மை அறுவைச் சிகிச்சை மருத்துவரைக் கொண்டு (Civil Surgeon) விசாரணை செய்தல் வேண்டும். அந்த மாவட்ட முதன்மை அறுவைச் சிகிச்சை மருத்துவரை ஒரு சாட்சியாக விசாரித்தல் வேண்டும். மருத்துவர் மற்றும் மருத்துவச் சான்று அறிக்கையின் படி மனநிலை பாதிக்கப்பட்டவர் என மெய்ப்பிக்கப்பட்டால் அவரைக் குற்றவாளி இல்லை எனக் கருதி நீதிபதி விடுதலை செய்யலாம். இதனை இந்தியக் குற்றவியல் நடைமுறைச்சட்டத்தின் 328, 329 ஆகிய பிரிவுகள் வலியுறுத்திக் கூறுகின்றன. இந்த அடிப்படையில்தான் அந்தக் கொலைக் குற்றவாளி நீதிமன்றத்தில் விடுதலை செய்யப்பட்டுள்ளார். இவ்வாறு இந்தியத் தண்டனைச் சட்டம் மனநிலை பாதிக்கப்பட்டவருக்கு முழுப்பாதுகாப்பு அளித்திருக்கின்றது. இந்த அடிப்படையிலேயே கிராம வழக்கு மன்றத்திலும் தீர்ப்பளிக்கப்பட்டுள்ளது. இருப்பினும் குற்றவாளியால் பாதிக்கப்பட்ட குடும்பத்தாருக்கு ஒரு ஏக்கர் நிலத்தைக் குற்றவாளியின் குடும்பத்தாரிடமிருந்து பெற்றுத் தந்திருப்பது பொருளாதாரப் பாதுகாப்பை நல்கக் கூடிய மனிதாபிமான தீர்ப்பாகும்.

பாகப்பிரிவினை வழக்கு ஒன்றில், வழக்கு மன்றத்தார், இறந்துவிட்ட தந்தை எழுதி வைத்த பாகப்பிரிவினைப் (உயிலின்) பத்திரத்தின்படி சொத்துக்களைப் பாகப்பிரிவினை செய்து கொடுத்துள்ளனர்.[108] பிள்ளையில்லாத இரண்டாம் தாரத்திற்கும் சொத்துரிமை உண்டு எனத் தீர்ப்பளித்துப் பாகப்பிரிவினை செய்து கொடுத்து உள்ளனர்.[109] கணவனின் சொத்துக்களை மூத்ததாரம், இளையதாரம் ஆகிய இருவருக்கும் சமமாகப் பாகப்பிரிவினை செய்து கொடுத்துள்ளனர்.[110] இருபது வருடங்களுக்கும் மேலாகப் பங்காளிகளுக்குள் நிலவிய பாகப்பிரிவினைப் பிரச்சினையையும் சமாதானமாகத் தீர்த்து வைத்துள்ளனர்.[111] பாகப்பரிவினை வழக்குகளில் பெற்றோர்கள் பெற்றிருந்த கடன்களை அடைத்தும், அவர்களுக்கு

வாழ்க்கைப் பாதுகாப்பிற்குக் குறிப்பிட்ட நிலத்தை ஒதுக்கியும் அதன்பின்னரே அவர்களின் மகன்களுக்கும் பாகப்பிரிவினை செய்தும் கொடுத்துள்ளனர்[112] என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

கணவன் குடிகாரனாக இருத்தல், அவன் குடித்துவிட்டு வந்து மனைவியை அடித்துத் துன்புறுத்துதல், கணவன் மனைவியுடன் வாழ விருப்பமில்லாமல் அவளை அடித்துக் கொடுமைப்படுத்துதல்[113] ஆகியன கணவன்-மனைவியர் குடும்பப் பிரச்சினைகளுக்குக் காரணங்களாக உள்ளன. பதினைந்து ஆண்டுகளாகக் குடிகாரக் கணவனிடமிருந்து பிரிந்து வாழ்ந்த மனைவியை இணைத்து வாழவைத்துள்ளனர்[114] என்பது சிறப்பிற்குரியதாகும்.

கணவன் மனைவியின் நடத்தை, ஒழுகலாறுகளில் சந்தேகப்படுதல்,[115] மாமியார் கொடுமைப்படுத்துதல்,[116] கணவன் மனைவியிடம் வரதட்சணை கேட்டல்[117] ஆகிய காரணங்களினால் மனைவியர் தங்கள் கணவன்மார்களிடம் வெறுப்புற்று வழக்கு மன்றத்தாரை நாடுகின்றனர். வழக்கு மன்றத்தார் முடிந்த வரையில் கணவன்-மனைவியரைச் சேர்த்து வைக்கவே முயற்சிக்கின்றனர். இத்தகைய வழக்குகளில் கணவனைக் கண்டித்து, தக்க முறையில் அறிவுரை வழங்குகின்றனர்.

மனைவி பிற ஆடவனுடன் தொடர்பு வைத்திருத்தல்,[118] கணவன்-மனைவி இருவரும் தகாத பாலுறவு கொண்டிருத்தல்,[119] மூன்று குழந்தைகளைப் பெற்ற பின்னரும் குடும்பப் பெண் நடத்தை கெட்டவளாக இருத்தல்[120] ஆகிய பாலுறவுச் சிக்கல் கணவன்-மனைவியர் குடும்ப ஒற்றுமையைப் பாதிக்கின்றன. திருமணமான ஆணுடன் அவன் திருமணமானவன் என்று தெரிந்திருந்தும் அவனுடன் பாலுறவு வைத்திருந்த பெண்ணிற்கு ரூ.500 தண்டத்தொகை விதித்துத் தீர்ப்புக் கூறியுள்ளனர்[121] என்பது சிந்தனைக்குரியதாகும்.

மனைவியின் கள்ளத்தொடர்பு காரணமாகக் கணவன் 'மணமுறிவு' கேட்கின்றான். வழக்கு மன்றத்தார் அவர்களது குழந்தையைக்காட்டி மீண்டும் அவர்களைச் சேர்த்து வைக்கின்றனர்.[122] இரண்டு குழந்தைகளுக்குத் தாயான பின்னர் மனைவி கணவனை விட்டு விட்டு இன்னொருவனுடன் ஓடி விட்ட வழக்கில், வழக்கு மன்றத்தார் அப்பெண்ணிடமிருந்து ரூ.30,000 தண்டத் தொகையைப் பெற்று அதனை அப்பெண்ணின் கணவனுக்குக் கொடுத்து 'மணமுறிவு' செய்து வைத்துள்ளனர்.[123] இரண்டு குழந்தைகளையும் அப்பெண்ணிடமே வளர்த்துக் கொள்ளுமாறு ஒப்படைத்துள்ளனர்.

மனைவியின் கள்ளத்தொடர்பு வழக்குகளில், பெரும்பாலும் கணவன்-மனைவியர் இருவருக்கும் அறிவுரைகூறிக் சேர்த்தே வைக்கின்றனர். கல்லல் நாட்டார் கண்ணப்பா வள்ளியப்பா, மனைவியின் கள்ளத் தொடர்பு வழக்கு ஒன்றில் கணவன்-மனைவியரைப் பிரித்து வைத்துள்ளார்.[124] என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

கணவன் 'ஆண்மையில்லாதவன்' எனக் கூறிப் பெண் 'மணமுறிவு' கோரிய வழக்குகளில் அப்பெண்ணிடமிருந்து அவள் கணவனுக்கு இழப்பீட்டுத்தொகை பெற்றுத் தரப்பட்டுள்ளன.[125] கணவன் தான் ஆண்மையில்லாதவன் என்று தெரிந்திருந்தும், ஏமாற்றிப் பெண்ணைத் திருமணம் செய்து கொண்ட வழக்குகளில் கணவனிடமிருந்து அப்பெண்ணிற்கு இழப்பீட்டுத் தொகையும், தண்டத்தொகையும் மாமியார் சீதனத்திற்கான தொகையும் பெற்றுத் தரப்பட்டுள்ளன.[126] கணவன் குடிகாரனாகவும், மனைவி மீது சந்தேகப் படுபவனாகவும், மனைவியை அடித்துக் கொடுமைப்படுத்துபவனாகவும் இருந்ததால் ரூ.12,000 தீர்வைத் தொகையைக் கணவனிடமிருந்து பெற்று, அதனை அப்பெண்ணிற்குக் கொடுத்து மணமுறிவு செய்து வைத்துள்ளனர்.[127] கணவன் மனைவியுடன் வாழ விருப்பமில்லாமல்

மணமுறிவு கோரிய வழக்குகளில் கணவனிடமிருந்து மிகப்பெரிய இழப்பீட்டுத் தொகையைப் பெற்று அப்பெண்ணிற்குக் கொடுத்து மணமுறிவு செய்துவைத்துள்ளனர்.[128] கணவன் மனைவி இருவரும் முறையே வழக்கு மன்றத்தாரிடம் மணமுறிவு கோரிய வழக்குகளில் பெண்ணிற்குத் தீர்வைத் தொகையாக 35,000 பெற்றுக் கொடுத்து மணமுறிவு செய்து வைத்துள்ளனர்.[129] 'குழந்தையின்மை' காரணமாகவும் கணவன் மனைவியிடம் மணமுறிவு கோரியுள்ளான்.[130] இவ்வாறு சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களில் தீர்ப்புகளும் தண்டனைகளும் வழங்கப்பட்டு வருவதைக் காணலாம்.

**சங்ககாலத் தண்டனை முறைகளும் சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களின் தண்டனைமுறைகளும்- ஒப்பீடு**

சங்ககாலத் தண்டனை முறைகள் மிகவும் கொடுமையானதாகவும் கடுமையானதாகவும் இருந்திருக்கின்றன. சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களின் தண்டனை முறைகள், சங்க காலத் தண்டனை முறைகளிலிருந்து முற்றிலும் வேறுபட்டதாக அமைந்திருக்கின்றன. சங்க காலத்தில், "ஒரு பருவப் பெண் ஆற்றில் மிதந்து வந்த அரசனுக்குரிய மாங்கனி ஒன்றினை எடுத்துண்டதால் கொலை செய்யப்பட்டாள், ஒற்றனைக் கொல்லுதல், மாற்று அரசனைச் சிறையில் வைத்துத் தண்டனை கொடுத்தல், அடுத்தவர் நிலத்தில் மாடு மேய்ந்ததனால் மாட்டுக்கு உரியவனின் கண்கள் தோண்டப்பட்டமை, பெண்ணிடம் இன்பம் துய்த்துப் பின்னர் அவளைத் தனக்குத் தெரியாது என்ற தலைவனை மரத்தில் பிணித்துச் சுண்ணாம்பு நீரினைக் கொட்டியமை முதலான கொடுமையான தண்டனைகள வழங்கப்பட்டுள்ளன. பசுவினது முலைக்காம்பை அறுத்தல், மகளிரின் கருவினைச் சிதைத்தல், பார்ப்பாருக்குக் கொடுமை செய்தல் ஆகிய மூன்றனுக்குந் தண்டனை உண்டென்றாலும் கழுவாயும் உண்டு என்று சுட்டப்பட்டுள்ளது.[131]

இதிலிருந்து சங்ககாலத் தண்டனைகள் மிகக் கடுமையானவை என அறியலாம். அரசனுக்குச் சேரவேண்டிய பொருளை மற்றவர் தொடக்கூடாது என்பதை மாங்கனியை எடுத்துண்ட பெண்ணின் தண்டனையிலிருந்து அறிய முடிகின்றது. இதே தவறைப் பிறர் செய்யக்கூடாது என்பதற்காகவே இந்தத் தண்டனை (நன்னை கொடுமை) வழங்கப்பட்டிருக்கின்றது. சங்க காலத் தண்டனை முறைகளில் குற்றவாளிகளும் எதிரிகளும் கடுமையாகத் தண்டிக்கப்பட்டுள்ளனர். எதிரிகளாக இருந்தாலும் கூட நியாயமான முறையில் தீர்ப்புகள் வழங்கப்பட்டுள்ளன. கிராம வழக்கு மன்றங்களில் மாட்டுக்காரரிடமிருந்து இழப்பீடு பெற்று, அதனை நிலத்தின் உரிமையாளரிடம் கொடுக்கின்றனர். இம்மாவட்ட கிராம வழக்கு மன்றங்களில் பெண்ணிடம் இன்பம் துய்த்துவிட்டுச் சென்ற ஆணைப் பிடித்து இழுத்து வந்து அதே பெண்ணின் கழுத்தில் தாலியைக் கட்டச் செய்கின்றனர். ஆதலால் சங்க காலத் தண்டனைகள் கடுமையாக இருந்துள்ளன. இக்கொடூரமான தண்டனைகளிலிருந்து சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களின் தண்டனைகள் மாறியுள்ளன. "தண்டனைகளில் முக்கிய முறைகளாக அபராதமும் கோவிலுக்கு விளக்குப் போடுதலும் மரண தண்டனையும் விளங்கின"[132]

இத்தண்டனை முறைகளில் இன்றுவரை சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களில் கோயிலுக்கு விளக்குப் போடுதலும் தண்டனைத் தொகை (அபராதம்) விதித்தலும் நடைமுறையில் உள்ளன. இன்று மரண தண்டனை என்ற பேச்சுக்கே இடமில்லை. தண்டனை முறைகளில், "குற்றங்களுக்கு ஏற்பத் தண்டனை வழங்கப்பட்டது. திருடியவனைக கண்டுபிடிக்க இயலவில்லை எனில் பொருளை இழந்தவனுக்குத் தன் கருவூலத்திலிருந்து பொருள் கிடைக்குமாறு செய்தான் அரசன்"[133]

சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களில் இவ்வாறு நடைபெறுவதில்லை. பொதுவாக ஊர்ப் பொதுமக்கள் நன்மையைக் கருத்தில் கொண்டே கிராம வழக்கு மன்றத்தார் தங்கள் தீர்ப்புக்களையும் தண்டனைகளையும் அளித்து வருகின்றனர்.

"நீதிபதிகளாகத் திகழ்பவர்கள் குறிப்பிட்ட குடும்பங்களைப் பற்றி மக்களைப் பற்றி, பிற நாட்டவரைப் பற்றி நன்கு தெரிந்திருக்க வேண்டும். நடுத்தர வயதுடையவர்களே தகுதியானவர்கள் எனக் கருதினர். நீதிபதிகள் குறைகள் காண முடியாதவர்களாகவும் அமைதியாகப் பேசுபவர்களாகவும் இருக்க வேண்டும். தர்மத்தைக் காக்கிற வழிகளிலேயே அவர்கள் நடக்க வேண்டும் என்றெல்லாம் எதிர்ப்பார்க்கப்பட்டது.[134]

பொதுவாக சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களின் தலைவர்கள் (நாட்டாமை, பெரிய அம்பலகாரர், அம்பலகாரர்,) நடுத்தர வயதுடையவர்களாகவும், முதியவர்களாகவும், அனுபவம் மிக்கவர்களாகவும் தர்மத்தின் வழி நடப்பவர்களாகவும் இருக்கின்றனர். அவர்கள் நேர்மையாகச் செயல்பட்டு நடுவு நிலைமை தவறாது தீர்ப்புகளையும் தண்டனைகளையும் வழங்கி வருகின்றனர்.

**தொகுப்புரை**

கிராம வழக்கு மன்றங்களில் வழக்கு விசாரனை முதலில் வாதியிடம் தொடங்குகின்றது. பின்னர் பிரதிவாதியின் ஏற்பு அல்லது மறுப்பு, முறைப்படியான சாட்சிகள் விசாரனை, வழக்கு மன்ற விவாதங்கள் நடைபெறுகின்றன.

வாதி, பிரதிவாதி, வழக்கு மன்றத் தலைவர், உறுப்பினர்கள், ஆகியோர் அடங்கிய குழுவின் அமைப்பே 'வழக்கு மன்றம்' (கிராமப் பஞ்சாயத்து) ஆகும். பிறரால் ஏதேனும் ஒருவகையில் பாதிக்கப்பட்டவர் 'வாதி' ஆவார். வாதி தனக்குப் பாதிப்பினை ஏற்படுத்தியவர் மீது கிராம வழக்கு மன்றத்தில் வழக்கினைத்

தொடுக்கின்றார். வாதியில் குற்றம் சாட்டப்பட்டவர் 'பிரதிவாதி' என்றழைக்கப்படுகின்றார். சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களில் பாதிக்கப்பட்டவரான வாதியே, வழக்கு மன்றத் தலைவரிடம் முறையிட்டு வழக்கினைத் தொடுக்கின்றார். வழக்கு மன்றத் தலைவர் 'ஓடும்பிள்ளை'யை அழைத்து ஊர் சாட்டுமாறு கட்டளையிடுகின்றார். பல கிராமங்களில் பண்டாரத்தின் மூலமாகத் தகவல் தெரிவிக்கப்பட்டு 'வழக்கு மன்றங்கள்' கூட்டப்படுகின்றன. சில கிராமங்களில் 'தோட்டி' என்பவர் தண்டோராப் போட்டும் பறையறைந்தும் ஊர்ப் பொதுமக்களுக்கு வழக்கு மன்றம் கூட விருப்பதை அறிவிருக்கின்றனர்.

கிராம வழக்கு மன்றங்களில் வழக்கு மன்றத் தலைவர் முறைப்படி பஞ்சாயத்துத் தொடங்குகின்றது என்று அறிவித்தவுடன் வாதியும் பிரதிவாதியும் மேலாடை உடுத்தாமல், தலைப்பாகையை (துண்டு) அவிழ்த்து இடுப்பில் கட்டியவாறு 'மண்டுப்பணம்' வைத்து (வெற்றிலை பாக்கு முதலியன) வழக்கு மன்றத்தார் முன்னிலையில் கும்பிட்டு விழுந்து வழக்கு மன்றத்தை வணங்க வேண்டும். பின்னர் அவர்கள் வழக்கு முடியும் வரை கைகளை முன்புறம் கட்டிக்கொண்டு நிற்க வேண்டும். பெண்ணாக இருந்தால் வழக்கு மன்றத்தைக் கும்பிட்டு விழுந்து வணங்கி கைகளைக் கட்டிக் கொண்டு நின்றால் மட்டும் போதும்.

திருப்புவனம் ஒன்றியத்திலுள்ள 'அஞ்சூர்' நாட்டு வழக்கு மன்றத்தில் தற்பொழுது குறைந்த பட்சம் ஐம்பது ரூபாயும் அதிகபட்சம் ஐநூறு ரூபாயும் 'மண்டுப்பணம்' வசூலிக்கப்பட்டு வருகின்றது. அஞ்சூர் நாட்டின் தலைமையிடம் ஏனாதி கிராமமாகும். ஏனாதி வழக்கு மன்றத்தின் தலைவர் நாட்டாமை என்றழைக்கப்படுகின்றார். இவ்வழக்கு மன்றத்தில் ஏனாதி நாட்டாமைக்கு மட்டுமே தீர்ப்புச் சொல்லும் உரிமையுள்ளது. இந்த உரிமை பரம்பரையானதாகும்.

தற்பொழுது ஏனாதி வழக்கு மன்றத்தின் தலைவராக இருப்பவர் ஏனாதி நாட்டாமை கரு. மலைச்சாமி ஆவார். அவருடைய பல வழக்குகளின் தீர்ப்புகள் உச்ச நீதிமன்ற நீதிபதிகளாலும் பாரட்டப் பெற்றுள்ளன. ஏனாதி வழக்கு மன்றத்தின் தீர்ப்புகளை மீறும் வழக்குகளைக் காவல் நிலையங்களில் பதிவு செய்யமாட்டார்கள். இவ்வழக்கு மன்றத்தின் தீர்ப்பு நீதிமன்றங்களின் தீர்ப்புகளுக்கு ஒப்பானதாகும். அஞ்சூர் நாட்டில் நூற்றி இருப்தைந்து கிராமங்கள் அடங்கியுள்ளன.

அஞ்சூர் நாட்டு வழக்கு மன்றக் கூட்டம் நடைபெற இருப்பதை ஏனாதி நாட்டாமை, பண்டாரத்தின் மூலம் 'ஓலை' எழுதிக் கொடுத்துத் தகவல் தெரிவிக்கின்றார். அஞ்சூர் நாட்டு வழக்குகள் ஏனாதிக் கிராமத்தில் அதற்கென அமைக்கப்பட்டுள்ள மந்தைத் திடலில் நடைபெற்று வருகின்றன. தற்பொழுது அஞ்சூர் நாட்டு வழக்கு மன்றத்திற்கெனத் திருப்புவனத்தில் ஒரு கிராம வழக்கு மண்டபம் கட்டியுள்ளனர். அம்மண்டபம் கட்டுவதற்குரிய இடத்தைச் சிவகங்கை மன்னர் அன்பளிப்பாகக் கொடுத்துள்ளார்.

திருப்புவனம் புஷ்பனேஸ்வரர் சௌந்திர நாயகி அம்மன் கோயில் பெருந்திருவிழாவின் போது அம்மன் தேர் இழுக்க வரும் அஞ்சூர் நாட்டு மக்கள் தங்குவதற்கு மன்றம் கட்ட இடம் வழங்கப்பட்டது. அதைத் திருப்புவனம் வரும் பொழுது எல்லாம் இவர்கள் பயன்படுத்திக் கொள்கின்றனர்.

பூவந்திக் கிராம வழக்கு மன்றத்தில் பூவந்தி நாட்டாமையின் தீர்ப்பே இறுதியானதாகும். பூவந்திக் கிராம நாட்டாமை உரிமை பரம்பரையானதாகும். இம்மன்றத்தில் தீர்க்க முடியாத வழக்குகள் ஏனாதிக் கிராம வழக்கு மன்றத்திற்குச் செல்லும்.

பூவந்திக் கிராம வழக்கு மன்றத்தின் எல்லைக்குள் செயல்பட்டு வரும் அரசனூர், இலுப்பக்குடி, கிளாதரி, தமராக்கி ஆகிய நான்கு கிராமங்களும்

உள்ளடங்கிய கிராம வழக்கு மன்ற அமைப்பே 'நாலூர் நாடு' ஆகும். இதன் தலைமையிடம் தமராக்கி ஆகும். இவ்வமைப்பினுள் அடங்கிய அரசனூர்க் கிராமத்தில் ஊர் நாட்டாமை பட்டம் மக்களால் மரியாதைக்குரியதாகக் கருதப்படுகின்றது. இது பரம்பரை உரிமையுடையதாகும். இக்கிராம வழக்கு மன்றத்தில் ஊர் நாட்டாமை வழக்கினை விசாரிக்கின்றார். வழக்கில் தீர்ப்புச் சொல்லும் உரிமை அரசனூர் அம்பலத்திற்கு மட்டுமே உரியது. இந்த 'அம்பலம் பட்டம்' பரம்பரை உரிமையானதாகும். இவ்வாறு அரசனூர் வழக்கு மன்றக் கூட்டங்களில் 'ஊர் நாட்டாமை' 'அம்பலம்' ஆகிய இருவரும் 'இரட்டையாட்சி' செலுத்துகின்றனர். மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்ட ஊராட்சி மன்றத் தலைவருக்கு வழக்குகளில் தீர்ப்புச் சொல்லும் உரிமை இல்லை.

அஞ்சூர் நாட்டு வழக்கு மன்றங்களில் வாய்தா தோறும் 'மண்டுப்பணம்' செலுத்த வேண்டும். அரசனூர்க் கிராம வழக்கு மன்றத்தில் ஒருமுறை மண்டுப்பணம் செலுத்தினால் போதுமானதாகும்.

சிவகங்கை மாவட்டம் தமராக்கியில் நடைபெறும் வழக்குமன்றம் 'நாட்டுப்பஞ்சாயத்து' என்னும் சிறப்பினைப் பெறுகின்றது. தமராக்கிக் கிராம வழக்கு மன்றம் 'எட்டுக்கரை' அம்பலகாரர்களால் நிருவகிக்கப்பட்டு வருகின்றது. தமராக்கித் தெற்கு, தமராக்கி வடக்குக் கிராம வழக்கு மன்றங்களுக்கு முறையே தனித்தனியாக அம்பலகாரர்கள் உள்ளனர். தமராக்கித் தெற்கு, தமராக்கி வடக்கு, குமாமப்பட்டி ஆகிய மூன்று கிராமங்களுக்கும் நாட்டாமையாக இருப்பவர் 'பெரிய அம்பலகாரர்' என்றழைக்கப்படுகின்றார். இப்பட்டம் மூத்தவாரிசு அடிப்படையில் பரம்பரை உரிமையானதாகும். இக்கிராம வழக்கு மன்றத்தில் வாதியும் பிரதிவாதியும் தலா நூறு ரூபாய் 'மண்டுப்பணம்' செலுத்துகின்றனர். 'நாட்டுப் பஞ்சாயத்துப்

பணம்' என்ற பொருளில் இங்கு 'மண்டுப்பணம்' என்ற சொல்லாட்சி ஆளப்பட்டு வருகின்றது. தமராக்கிக் கிராம வழக்கு மன்றம் தங்கள் தீர்ப்புகளை 'ஓலைமுறி'யில் எழுதி வாதிக்கும் பிரதிவாதிக்கும் கொடுத்து வருகின்றது.

திருப்புவனம் ஒன்றியம் அல்லி நகரத்தில் 'நாட்டாமை'ப் பட்டம் பரம்பரை உரிமையானதாகும். இக்கிராமத்தில் சாதிப்பஞ்சாயத்து அமைப்பு முறை இல்லை. இக்கிராமத்தில் 'மண்டுப்பணம்', 'கிராமப்பணம்' என்றழைக்கப்படுகின்றது. இக்கிராம வழக்கு மன்றத்தில் குற்றவாளிகள் செலுத்தும் தண்டத்தொகை இங்குள்ள அருள்மிகு தண்டீஸ்வரர் அய்யனார் கோயில் உண்டியலில் காணிக்கையாகச் செலுத்தப்பட்டு வருகின்றது. திருப்புவனம் ஒன்றியத்திலுள்ள பெரும்பான்மையான கிராம வழக்கு மன்றங்கள் ஏனாதி நாட்டு வழக்கு மன்றத்திற்குட்பட்டதாகவே அமைந்திருக்கின்றன.

'பாகனேரி நாடு' என்பது இங்கு வாழும் கள்ளர் மரபினர் ஏற்படுத்திக் கொண்டதொரு சமுதாய ஆட்சியமைப்பாகும். 'நாடு' என்ற சொல்லாட்சி கள்ளர்கள் பெரிதும் வாழும் ஒரு நிலப்பரப்பைக் குறிப்பதாக வழக்கில் வழங்கப்பட்டு வருகின்றது.

வேளாளர்களுக்கும் கள்ளர்களுக்கும் அடிக்கடி நிகழ்ந்த மோதல்களினால் பாகனேரி, கண்டரமாணிக்கம் ஆகிய பகுதிகளிலிருந்த வேளாளர்கள் இப்பகுதிகளை விட்டு வெளியேறிய பின்னர், கள்ளர்கள் தாங்கள் புதிதாகக் கைப்பற்றிய பகுதிகளைத் 'தன்னரசு நாடுகள்' என்று அழைத்துள்ளனர். இத்தன்னரசு நாடுகளில் பெருமளவில் கள்ளர்கள் வாழ்ந்து வருகின்றனர். சாதியின் பெயரால் தோன்றிய பாகனேரி நாட்டுப் பிரிவுகளின் சமூக நிருவாக அமைப்பு பழைய மரபு முறையிலேயே பேணிக்காக்கப்பட்டு வருகின்றது.

சிவகங்கை மாவட்டத்திலுள்ள பாகனேரி நாட்டை 'வாள்கோட்டை நாடு' எனவும் வழங்குகின்றனர். காளையார்கோயில் ஒன்றியத்திலுள்ள எட்டில் மூன்று பங்கு ஊர்கள் பாகனேரி நாட்டினுள் அடங்கும். பாகனேரி நாடு சுமார் நானூறு ஆண்டுகளுக்கு முன்பு உருவாக்கப்பட்டு இங்கு வாழும் கள்ளர்களால் ஒருவகைத் தன்னாட்சி முறையில் பேணிக்காக்கப்பட்டு வருகின்றது. ஆதலின் இந்நாடு ''அரசு வருவாய்த்துறை'' அமைப்புகளின் எல்லைகளோடு பொருந்தி அமையவில்லை. இந்நாட்டிற்குரிய கிராமங்கள் 22 1/2 ஆகும்.

பாகனேரி நாட்டின் நிருவாக அமைப்பின் மையமாக நகரம்பட்டி, காடனேரி, மாங்காட்டுப்பட்டி, பாகனேரி, நெற்புகப்பட்டி, புலவன்பட்டி என்னும் ஆறு கிராமங்களும் விளங்குகின்றன. இவற்றின் தனித்தன்மையை வெளிப்படுத்தும் விதத்தில் இந்த ஆறு கிராமங்களும் சேர்ந்த பரப்புக்குத் தனி எல்லைக் கற்கள் அமைக்கப்பட்டுள்ளன. இவ் உட்பகுதியே 'ஆறூர் நாடு' ஆகும். ஆறூர் நாட்டில் வாழும் கள்ளர்கள் 'நாட்டார்' என்றும், தனவணிகர் மரபினர் 'நகரத்தார்' என்றும், நகரத்தார்களையும் கள்ளர்களையும் நீக்கிய பிற ஒன்பது சாதியினர் தேசத்தார் என்றும் அழைக்கப்படுகின்றனர். தேசத்தார்களுக்குத் தலைவராக நாயக்கரில் ஒருவர் இருந்து வருகின்றார். இந்நாட்டில் இவர்களுக்கு 'ஒன்பது குத்தன் தொழிலாளி' என்னும் பெயர் வழங்கப்பட்டு வருகின்றது. ஆறூர் நாட்டு எல்லைக்குப் புறத்தே வாழும் நாட்டுக்குடிமக்கள் அனைவரும் சாதிவேறுபாடின்றித் 'கிராமத்தார்' என அழைக்கப்படுகின்றனர்.

பாகனேரி நாட்டின் நாட்டுக்கூட்டம் 'வாசல்வழி' அமைப்பின் நிருவாகத்திற்கு உட்பட்டதாகும். நாட்டுக்கூட்டத்தை நாட்டுக்கணக்குகளின் ஆணைப்படி கூட்டுவது நாட்டுப்பண்டாரத்தின் பணியாகும். நாட்டுக் கூட்டம் பாகனேரியிலுள்ள திண்ணைக்

கொறட்டிலோ, நாட்டார் விடுதியிலோ நடைபெறும். நிலஉரிமை, குற்றவியல் வழக்குகளை விசாரித்துத் தீர்ப்பு வழங்குதல் இக்கூட்டத்தின் கடமையாகும்.

பாகனேரி நாட்டுக் கூட்டத்தில் வாதி கால் ரூபாய்ப் 'பருக்கைப் பணம்' வைத்து வழக்கினைக் கூறுகின்றார். குற்றங்களுக்கு விதிக்கப்பெறும் தண்டத்தொகையைச் செலுத்துவதற்குரிய நாள் நிர்ணயிக்கப்பெறும். அதனை ஏற்றுக் குற்றவாளி சார்பில் ஒருவர் குற்றவாளியுடன் நாட்டுக் கூட்டத்தாரை வணங்கிப் பொறுப்பேற்பதற்கு 'ஏற்கை' என்று பெயர். குற்றவாளி நாட்டார் தீர்ப்புகளுக்குக் கட்டுப்பட மறுத்தால், நாட்டுப்பண்டாரத்தைக் கொண்டு கூட்டத்தை விட்டுக் குற்றவாளியின் கையைப்பற்றி வெளியேற்றுவதற்கு 'நாட்டாயுதத்தைப் பயன்படுத்துதல்' என்பர். இவ்வகைத் தண்டனைக்குள்ளாக்குவது மிகப்பெரிய ஏளனமாகக் கருதப்படுகின்றது.

பாகனேரிக் கிராமத்தில் மட்டும் 'வாசல்வழி' என்ற தனியமைப்பு இருப்பதால் 'கிராமக்கூட்டம்' நடைபெறுவதில்லை. பாகனேரி நாட்டிலுள்ள எல்லாக் கிராமங்களிலும் கிராமக் கூட்டங்கள் நடைபெற்று வருகின்றன. கிராமக் கூட்டங்கள் ஊர்ப்பொதுவிடங்களில் நடைபெற்று வருகின்றன. நீர்ப்பாசனம், நிலத்தகராறு மற்றும் சிறியதும் பெரியதுமான வழக்குகள் இங்கு விசாரிக்கப்பட்டுத் தீர்ப்பளிக்கப்பட்டு வருகின்றன.

ஆறூர் நாட்டின் எல்லைக்குட்பட்ட மக்களுள் ஒன்பது சாதியினர் 'தேசத்தார்' என அழைக்கப்படுகின்றனர். இவர்களுக்குரிய நிருவாக அமைப்பு 'தேசத்தார் கூட்டம்' ஆகும். நாயக்க மரபினர் இதன் தலைவராவார். தேசத்தார்களுக்கிடையிலான வழக்குகளும் நீதி ஆதாரங்களும் இவ்வாறு அதிகார எல்லைக்குட்பட்டதாகும்.

கள்ளர்கள் மிகுதியாக வாழும் 'அஞ்சூர் நாடு', 'நாலூர் நாடு', தமராக்கி நாட்டுக் கிராம வழக்கு மன்றம் போன்ற பகுதிகளிலும், திருப்பத்தூர், சிங்கம்புணரி, மானாமதுரை, இளையான்குடி, காளையார் கோயில், கல்லல் ஆகிய ஊராட்சி ஒன்றியங்களிலும் வெள்ளாளர், இடையர், வலையர், நாடார், செட்டியார் ஆகிய சாதியினர் கள்ளர்களது பாதுகாவலிலும் வாழ்கின்றனர் என்னும் பொருள்படக் கள்ளரை இவர்களது 'பாடியப்பு' என வழங்கும் மரபு இருந்து வருகின்றது; எனினும் இது குறித்து இவர்கள் கள்ளர்களுக்கு 'ஓலை' எழுதித் தருவதில்லை. இப்பாடியப்பு முறை சில சடங்குகளில் பங்கு பெறுதல் என்னும் அளவில் மட்டும் நிலைபெற்றுள்ளது.

கிராம வழக்கு மன்றங்கள் ஒரு வலிமைமிக்க அமைப்பாகப் பல கிராமங்களில் இன்றும் செயல்பட்டு வருகின்றன. நீதி மன்றங்களிலும், காவல் நிலையங்களிலும் தீர்க்கப்படாத பல வழக்குகள் இம்மாவட்ட கிராம வழக்கு மன்றங்களில் தீர்க்கப்பட்டுள்ளன. இம்மன்றங்கள் தீர்க்கமான முடிபுகளை எடுக்கின்றன. கிராமத் தெய்வங்களின் முன்னர் அமர்ந்து வழக்குரைப்பதால் வாதியும் பிரதிவாதியும் பொய்யுரைப்பதைத் தவிர்க்கின்றனர். இம்மன்றத் தீர்ப்புகளுக்குக் கட்டுப் படாதவர்களைக் கிராமம் ஊரைவிட்டு ஒதுக்கி வைத்து விடுகின்றது. இம்மன்றங்களின் தீர்ப்பே இறுதியானது என்பது இம்மாவட்ட கிராமங்களின் எழுதப்படாத சட்டமாகும். அரசு நிறுவனங்களும், நீதி மன்றங்களும் இம்மன்றங்களின் மூலம் எடுக்கப்பெறும் முடிபுகளை இன்றும் ஏற்றுக்கொள்கின்றன.

கிராம வழக்குமன்றத் தலைவர்களின் தீர்ப்புகள் பாதிக்கப்பட்டவர்கள் நலன், சாதி, ஊர் நலன்களை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன. பெரும்பாலும் இம்மன்றங்களின் தீர்ப்புகள் மற்றும் தண்டனைகளை வாதி, பிரதிவாதி ஆகிய இருவரும் ஏற்றுச் செயல்படுத்துகின்றனர்.

சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களில் சில வழக்கு மன்றத்தார் குற்றவாளியை எச்சரித்துப் பொதுமன்னிப்பும் வழங்குகின்றனர். பெரும் பான்மையான வழக்குகளில் வாதியையும் பிரதிவாதியையும் சமாதானம் செய்து வைக்கின்றனர். 'பெண்ணிற்கும் சொத்துரிமை உண்டு' எனத் தீர்ப்புச் சொல்லியுள்ளனர். குற்றவாளிகளுக்குக் கோயிலில் விளக்குப் போடச் சொல்லுதல், தண்டத்தொகை (அபராதத் தொகை) விதித்தல் போன்ற எளிமையான தண்டனைகளைத் தருகின்றார். அத்தண்டத் தொகையைக் கோயில் உண்டியலில் சேர்த்து விடுகின்றனர்; அல்லது கிராமப் பொதுப்பணமாக வைத்துக் கொள்கின்றனர். சில வழக்குகளில் குற்றவாளியை ஊரைவிட்டு ஒதுக்கி வைத்து விடுகின்றனர்; தவிர்க்க முடியாத சிக்கல்களில் குற்றவாளியை ஊரைவிட்டே வெளியேற்றுகின்றனர். இவ்விரண்டும் கடுமையான தண்டனை முறைகளாகும். ஆதலால், குற்றவாளிகள் ஊர்க்கட்டுப்பாடு, சாதிக்கட்டுப்பாடு ஆகியனவற்றைக் கருதி அத்தண்டனைகளையும் மன்றத்தாரின் தீர்ப்புகளையும் ஏற்கின்றனர்.

குடும்ப வழக்குகளில் 'மணமுறிவு' ஏற்படாதவாறு கணவன்-மனைவியை இணைத்தே வைக்கின்றனர். விபத்துக்களினால் பாதிக்கப்பட்டவர்களுக்குப் பிரதிவாதிகளிடமிருந்து உடனடி நிவாரணம் பெற்றுத் தருகின்றனர்.

இவ்வாறு சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களின் செயற்பாடுகளும் தீர்ப்புகளும் தண்டனைகளும் அமைந்திருக்கின்றன.

## குறிப்புகள்

1. தகவல்: எம்.முத்து, வழக்குமன்றத்தலைவர், மல்லல், நாள்:27.5.1999.
2. தகவல்: கோபாலகிருஷ்ணன், நாட்டாமை, பூவந்தி, நாள்:8.4.2001
3. தகவல்: கரு. மலைச்சாமி, நாட்டாமை, ஏனாதி, நாள்:21.4.2001
4. தகவல்: கதிரேசன், த/பெ. கருப்பணன், பூவந்தி, நாள்:21.4.2001
5. தகவல்: ம. கணேசன், ஊராட்சி மன்றத் தலைவர், பூவந்தி, நாள்:21.4.2001
6. தகவல்: கரு. மலைச்சாமி, நாட்டாமை, ஏனாதி, நாள்:21.4.2001
7. தகவல்: கோபாலகிருஷ்ணன், நாட்டாமை, பூவந்தி, நாள்:25.4.2001
8. தகவல்: மேலது.
9. தகவல்: மேலது.
10. தகவல்: பெரியகருப்பன், த/பெ. கருப்பணன் அம்பலம், ஊர்நாட்டாமை, அரசனூர், நாள்:28.3.1999.
11. தகவல்: மேலது.
12. தகவல்: மேலது.
13. தகவல்: சின்னச்சாமி அம்பலம், த/பெ. கருப்பணன் அம்பலம், தீர்ப்புக்கூறும் நாட்டாமை; 'அம்பலம்' பட்டம் பெற்றவர், அரசனூர், நாள்:28.3.1999.
14. தகவல்: சின்னச்சாமி அம்பலம், த/பெ. பாண்டி அம்பலம், அரசனூர், நாள்:28.3.1999.
15. தகவல்: மேலது.
16. தகவல்: மேலது.
17. தகவல்: பெரியகருப்பன், த/பெ. கருப்பணன் அம்பலம், ஊர்நாட்டாமை, அரசனூர், நாள்:28.3.1999.
18. தகவல்: மேலது.
19. தகவல்: பாஸ்கரன் அம்பலம், பெரிய அம்பலகாரர், தமராக்கி, நாள்:31.7.1999.

20. தகவல்: ஏ. மரகதம் அய்யனார் அம்பலம், தமராக்கித் தெற்கு ஊராட்சி மன்றத் தலைவர், தமராக்கி. , நாள்:31.7.1999.

21. தகவல்: மேலது.

22. தகவல்: மேலது.

23. தகவல்: அய்யாத்துரை அம்பலம், அம்பலகாரர், தமராக்கி வடக்கு, நாள்:31.7.1999.

24. தகவல்: மேலது.

25. தகவல்: கரு. மலைச்சாமி, நாட்டாமை, ஏனாதி, நாள்:21.4.2001.

26. தகவல்: அய்யாத்துரை அம்பலம், அம்பலகாரர், தமராக்கி வடக்கு, நாள்: 31.7.199

27. தகவல்: தண்டீஸ்வரன், த/பெ. கவுண்டந் தண்டித்தேவர், நாட்டாமை, அல்லிநகரம், நாள்:28.5.1999.

28. தகவல்: மேலது.

29. தகவல்: ஆர். பாண்டித்துரை, ஊர் நாட்டாமை, செல்லப்பனையேந்தல், நாள்:6.5.2001.

30. தகவல்: முகுந்தன் அம்பலம், பெரிய அம்பலகாரர், ஒக்கூர், 25.4.1999.

31. காண்க: பின்னிணைப்பு.

32. A.R.E. No.69/1924, Perichikoil.

33. ஆத. முத்தையா, பாகனேரி நாட்டு மக்களின் மரபும் பண்பாடும், ப.30.

34. குழந்தைக் கவிராயர், மான்விடுதூது, உ.வே. சாமிநாதையர் (பதி.ஆ.), பக்.xxii-xxiii.

35. நா. நடராஜன், பாடுவார் முத்தப்ப செட்டியார், ப.48.

36. ஆய்வாளர் கள ஆய்வில் நேரில் கண்டது.

37. தகவல்: பி.ம. பில்லப்பன், நெற்புகப்பட்டி, நாள்:27.5.1999.

38. தகவல்: பழ. கந்தன், வீர. ஒய்யான், நட்டுவர் நடராஜபிள்ளை, பாகனேரி. நாள்:27.5.1999.

39. தகவல்: மு. வைரவன், கூமாச்சிப்பட்டி, நாள்:6.2.2000.
வா. காசிவிஸ்வநாதன், நகரம்பட்டி, நாள்:28.5.1999

40. தகவல்: உல. சுப்பிரமணியம், நெற்புகப்பட்டி., நாள்:1.8.1999.

41. தகவல்: வீர. குப்பாண்டி சேர்வை, பாகனேரி, நாள்:27.5.1999.

42. தகவல்: கரு. முத்தையா சேர்வை, பாகனேரி, நாள்:27.5.1999.

43. தகவல்: பழ. வேலு, வீளனேரி, நாள்:27.3.1999.

44. தகவல்: இரா. லோகநாயகி, காளையார் மங்கலம், நாள்:1.8.1999.

45. தகவல்: வெ. உடையப்பன், நகரம்பட்டி, நாள்:8.8.1999.

46. தகவல்: பெரி. நடராசன் சேர்வை, பாகனேரி, நாள்:27.5.1999.

47. தகவல்: ஆதி. மாதவன் சேர்வை, நகரம்பட்டி, நாள்:8.8.1999.

48. காண்க: பின்னிணைப்பு.

49. காண்க: பின்னிணைப்பு.

50. தகவல்: கரு. உடையார், பாகனேரி, நாள்:25.5.1999.

51. தகவல்: உல. உடையப்பன், பாகனேரி, நாள்:27.5.1999.

52. தகவல்: பி. முத்துவயிறு, பாகனேரி, நாள்:27.5.1999.

53. "1967இல் வீளநேரி கிராமத்தில் உள்ள அழகிய மெய் அய்யனார் கோயிலில் சிலைவைத்தற்பொருட்டு அவ்வூரிலுள்ள தனிவீர பாண்டியன் வகையறாவுக்கும் சசிவர்ணம் வகையறாவுக்கும் இடையில் சச்சரவு ஏற்பட்டு வழக்குத் தீரமுடியாத நிலையில் பாகனேரி நாட்டுக் கூட்டத்திற்குக் கொண்டு செல்லப்பட்டு அங்கு தீர்வு காணப்பட்டது."

பேட்டி: பழ.வேலு, வீளநேரி, நாள்:27.3.1999.

54. தகவல்: கரு. முத்தையா சேர்வை, பாகனேரி, நாள்:27.5.1999.

55. "They are employed the boundaries of fields. Such as do this work are known as 'எல்லையோடி' or 'boundary runners' wearing as garlands round their necks the flesh of sheep sacrificed before they begin their work and beating drums tied round their waists, they run on and on till they come back of the place from which they start"

-N. thiyagarajan, A Manual of Pudukkottai Starts, p.189.

56. காண்க: பின்னிணைப்பு.

57. தகவல்: ரெ.மு. ரெங்கசாமி நாயக்கர், பாகனேரி, நாள்:27.5.1999.
பழ. கந்தன். பாகனேரி, நாள்:27.5.1999.
வீர. ஒய்யான், பாகனேரி, நாள்:27.5.1999.

58. காண்க: பின்னிணைப்பு, ஓலைச்சுவடி.

59. மா. சண்முகசுப்பிரமணியம், சட்ட இயல், ப.166.

60. குறள்: 549.

61. குறள்: 562.

62. குறள்: 567.

63. மா. சண்முகசுப்பிரமணியம், சட்ட இயல், ப.170.

64. யாக்ஞவல்கியர், அத்:1, பிரிவு: 13, விதி: 368.

65. குறள்: 561.

66. Justice V.R. Krishna Iyer - AIR 1977 S.C.1926.

67. காண்க: பேட்டி எண்.6, 17, 25, நாள்:18.7.1999, 14.4.2001, 31.7.1999.

68. காண்க: பேட்டி எண்.28, 35, நாள்:9.4.2000, 21.7.1999.

69. காண்க: பேட்டி எண்.2, 5, 8, 10, 11, 15, 27, 31.7., நாள்:21.7.1999, 5.4.2000, 14.4.2001, 15.5.2001

70. காண்க: பேட்டி எண்.6, 17, 25, நாள்:18.7.1999, 14.4.2001, 31.7.1999.

71. காண்க: பேட்டி எண்.16, நாள்:5.2.2000.

72. காண்க: பேட்டி எண்.65, நாள்:22.4.2001

73. காண்க: பேட்டி எண்.66, 72. நாள்:15.5.2001, 5.4.2000.

74. காண்க: பேட்டி எண்.69, நாள்:8.8.1999.

75. காண்க: பேட்டி எண்.68, 70, நாள்:28.3.1999, 25.9.1999.

76. காண்க: பேட்டி எண்.80, 81, 83, 84, நாள்: 28.3.1999, 31.7.1999, 14.7.2000, 14.4.2001.

77. காண்க: பேட்டி எண்.62, 63, நாள்:27.5.2000. 20.4.2001.

78. காண்க: பேட்டி எண்.33, 34, 35, 38, நாள்:2.4.1999, 26.5.199, 21.7.1999, 14.4.2001.

79. காண்க: பேட்டி எண்.36, நாள்:5.2.2000.

80. காண்க: பேட்டி எண்.37, 39, நாள்:28.3.1999, 31.7.1999.

81. காண்க: பேட்டி எண்.41, 43, நாள்:28.3.1999, 25.3.2000.

82. காண்க: பேட்டி எண்.45, 8.4.2001.

83. காண்க: பேட்டி எண்.47, நாள்:25.3.2001.

84. காண்க: பேட்டி எண்.54, 55, நாள்:5.4.2000.

85. காண்க: பேட்டி எண்.149, நாள்:9.11.2000.

86. காண்க: பேட்டி எண்.3, 7, 9, நாள்:8.8.1999, 2.5.1999, 18.3.2000.

87. காண்க: பேட்டி எண்.64, நாள்:18.7.1999.

88. காண்க: பேட்டி எண்.29, 30, நாள்: 27.3.1999, 25.5.1999..

89. காண்க: பேட்டி எண்.32, நாள்:5.2.2000.

90. காண்க: பேட்டி எண்.31, நாள்:14.4.2001.

91. காண்க: பேட்டி எண்.50, 51, 52, 48, 140, நாள்:14.4.01, 14.01. 20.4.01.

92. காண்க: பேட்டி எண்.136, 138, 137, 139, 142, 144, 145, நாள்:14.4.2001, 9.11.1999, 25.3.2000, 26.5.1999, 19.3.2000.

93. காண்க: பேட்டி எண்.27, நாள்:15.5.2001.

94. காண்க: பேட்டி எண்.49, நாள்:19.5.2001.

95. காண்க: பேட்டி எண்.33, நாள்:2.4.1999.

96. காண்க: பேட்டி எண்.40, நாள்:20.4.2001.

97. காண்க: பேட்டி எண்.28, நாள்:9.9.2000.

98. காண்க: பேட்டி எண்.149, நாள்:9.11.1999.

99. காண்க: பேட்டி எண்.67, நாள்:28.5.1999.

100. காண்க: பேட்டி எண்.75, நாள்:25.3.2000.

101. காண்க: பேட்டி எண்.46, நாள்:14.4.2001.

102. காண்க: பேட்டி எண்.68, 69, நாள்:28.3.1999, 8.8.1999.

103. காண்க: பேட்டி எண்.76, 77. நாள்:6.2.2000, 28.5.1999.

104. காண்க: பேட்டி எண்.58, நாள்:19.5.2000.

105. காண்க: பேட்டி எண்.59, நாள்:22.4.2001.

106. காண்க: பேட்டி எண்.60, நாள்:18.3.2000.

107. காண்க: பேட்டி எண்.57, நாள்:3.4.1999.

108. காண்க: பேட்டி எண்.15, நாள்:2.4.1999.

109. காண்க: பேட்டி எண்.18, நாள்:19.3.2000.

110. காண்க: பேட்டி எண்.19, நாள்:2.4.1999.

111. காண்க: பேட்டி எண்.21, நாள்:6.5.2001.

112. காண்க: பேட்டி எண்.22, நாள்:19.5.2000.

113. காண்க: பேட்டி எண்.86, 87, 91, 92, 100, நாள்:11.9.1999, 17.9.1999, 25.3.2000, 14.4.2000, 20.4.2001.

114. காண்க: பேட்டி எண்.90, நாள்:5.4.2000.

115. காண்க: பேட்டி எண்.97, 98, 101, 110, நாள்:18.3.2000, 19.3.2000, 27.5.1999.

116. காண்க: பேட்டி எண்.102, 103, நாள்:6.2.2000, 20.42.001.

117. காண்க: பேட்டி எண்.104, 105, 106, நாள்:5.9.1999, 17.7.1999, 31.7.1999.

118. காண்க: பேட்டி எண்.107, நாள்:11.9.1999.

119. காண்க: பேட்டி எண்.108, நாள்:24.4.1999.

120. காண்க: பேட்டி எண்.109, நாள்:20.4.2001.

121. காண்க: பேட்டி எண்.112, நாள்:8.7.1999.

122. காண்க: பேட்டி எண்.113, 114, நாள்:5.2.2000, 2.5.1999.

123. காண்க: பேட்டி எண்.129, நாள்:18.3.2000.

124. காண்க: பேட்டி எண்.118, நாள்:6.2.2000.

125.காண்க: பேட்டி எண்.119, 124, நாள்:27.3.1999, 8.7.1999.

126. காண்க: பேட்டி எண்.131, நாள்:6.2.2000.

127.காண்க: பேட்டி எண்.120, நாள்:2.4.1999.

128. காண்க: பேட்டி எண்.129, 121. நாள்:18.3.2000.

129. காண்க: பேட்டி எண்.133, நாள்:27.3.1999.

130. காண்க: பேட்டி எண்.134, நாள்:27.3.1999.

131. சு. தமிழ் வேலு, "சங்ககாலத் தண்டனைகள்-ஓர் ஒப்பாய்வு", தமிழியல் ஆய்வு, ப.102.

132. ம. பரதன், பழங்கால இந்தியாவின் அரசியல் சிந்தனையும் ஆட்சி முறையும், ப.185.

133. ந.க. மங்கள முருகேசன், இந்திய ஆட்சி அமைப்பு வளர்ச்சி வரலாறு, ப.48.

134. மேலது, பக்.49-49.

# இயல்-5

## சிவகங்கை மாவட்டக் கிராம வழக்கு மன்றங்களும் இக்காலச் சட்ட நடைமுறைகளும்-ஒப்பீடு

தொல்காப்பியர் காலம், சங்க காலம், மூவேந்தர் கால ஆட்சிமுறை, பிற்காலச் சோழர் கால ஆட்சி முறை, பாண்டியர், பல்லவர் கால ஆட்சி முறை, விசய நகர மன்னர் கால ஆட்சிமுறை, நாயக்கர் கால ஆட்சி முறை ஆகியவனவற்றில் கிராம வழக்கு மன்றங்கள் சிறப்பாகப் செயல்பட்டு வந்துள்ளன. இன்றும் சிற்றூர்களில் கிராம வழக்கு மன்றங்கள் நடைமுறையில் உள்ளன. அம்மன்றங்களின் நடைமுறைகளும் செயற்பாடுகளும் தனிச்சிறப்புத் தன்மைகளைப் பெற்றவை. அவை மக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டவை. ஆங்கில நீதிமன்ற மரபுகளையும், பல சட்டங்களையும் சட்ட நடைமுறைகளையும், வழக்குரைஞர்களின் வாதங்களையும், அடிப்படையாகக் கொண்ட இக்கால அரசு நீதிமன்றங்களின் தோற்றத்திற்கும் அதன் வளர்ச்சிக்கும் ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் குழுமத்தினர் வித்திட்டனர். அவர்கள் உரோமானியச் சட்ட நடைமுறைகளைத் தழுவி நீதிமன்றங்களையும், நீதி நிருவாகத்தையும் ஏற்படுத்திச் செயல்படுத்தினர். இவ்வாறு தோற்றுவிக்கப்பட்ட இன்றைய அரசு நீதிமன்றங்களும், சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களும் நீதி வழங்குவதில் பின்பற்றி வருகின்ற நடைமுறைச் செயற்பாடுகள் ஓரளவிற்கு ஒத்துக் காணப்படுகின்றன.

கிராம வழக்கு மன்றங்களின் நடைமுறைச் சிக்கல்களையும், இன்றைய அரசு நீதிமன்றங்களின் சட்ட நடைமுறைச் சிக்கல்களையும், அவற்றைச் செயல்படுத்துகின்ற முறைகளையும், தண்டனைகள் வழங்கப்படும் விதங்களையும் ஒப்பீடு செய்து அவற்றிற்கிடையே காணப்படும் ஒற்றுமை, வேற்றுமைகளை எடுத்துரைப்பது இவ்வியலின் நோக்கமாக அமைகின்றது.

**நீதிமன்றம்**

சமுதாயத்தில் நடைபெறுகின்ற முறையற்ற செயல்களால் எழும் வழக்குகளை விசாரிப்பதற்கும், அவற்றிற்குரிய முறையில் விசாரணை செய்து சரியான தீர்ப்புகளையும் தண்டனைகளையும் வழங்குவதற்கு அரசாங்கத்தினரால் அமைக்கப்பட்டுச் செயல்படுகின்ற ஓர் அமைப்பே நீதிமன்றமாகும். இன்றைய நீதிமன்றங்களைப் போல மிகப் பழங்காலத்தில் நீதிமன்றங்கள் இருந்துள்ளன. சிற்றூர்களில் இன்றைய அரசு நீதிமன்றங்களுக்கு இணையான 'கிராம வழக்கு மன்றங்கள்' அன்றிலிருந்து இன்றுவரை செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன. தமிழ் நாட்டில் ஒவ்வொரு மாவட்டத்திலும் உள்ள 'கிராம வழக்கு மன்றங்கள்' சில பொதுத் தன்மைகளையும் அந்தந்த மாவட்டங்களுக்கேயுரிய சிலத் தனித் தன்மைகளைக் கொண்ட சிறப்புக் கூறுகளையும் பெற்றிருக்கின்றன.

சட்டவியல் வல்லுநர்கள் 'நீதிமன்றம்' என்ற அமைப்பினை, நீதிமுறையில் தனியே செயல்படுவதற்கு அதிகாரம் அளிக்கப்பட்டுள்ளன. ஒரு நீதிபதியை அல்லது ஒரு குழுவாக நீதிமுறையில் செயல்படுவதற்கு அதிகாரம் அளிக்கப்பட்டுள்ள நீதிபதிகளின் குழு நீதிமுறையில் செயல்படும்போது குறிப்பவையாகும்.[1] என்று வரையறுத்துச் சுட்டிக்காட்டியுள்ளனர்.

உரிமை வழக்குகளை விசாரணை செய்து முடிவு செய்ய அதிகாரம் பெற்றிருந்து 1816 ஆம் ஆண்டு சென்னைச் சட்டத் தொகுப்பின் ஒழுங்குமுறை VII-இன்படி செயற்படும் ஒரு பஞ்சாயத்து ஒரு நீதிமன்றமாகும்.[2] இந்நீதிமன்றங்களில் உரிமையியல் குற்றவியல், தீங்கியல், திருமணம், மணவிலக்குப் போன்ற குடும்ப வழக்குகளை விசாரித்து, அவற்றிற்கேற்பத் தக்க தீர்ப்புகள் வழங்கப்பட்டு வருகின்றது. நீதிமன்றங்களில் இக்குற்றங்களுக்குரிய தீர்ப்புகளையும் தண்டனைகளையும் வழங்குபவர் 'நீதிபதி' (Judge) என்றழைக்கப்படுகின்றனர்.

**நீதிபதி**

*சட்டவியல் 'நீதிபதி'*(Judge) *என்னும் சொல் பின்வருமாறு வரையறுத்துக் கூறப்பட்டுள்ளது. எச்.எம். அபுல்கலாம் என்பவர் 'நீதிபதி' என்னும் சொல், நீதிபதி என்று அலுவல் முறையில் பதவிப்பெயர் கொடுக்கப்பட்ட ஒவ்வொருவரையும் மட்டும் அல்லாமல் சட்ட நடவடிக்கை எதிலும், உரிமை வழக்காயினும் சரி அல்லது குற்றவழக்காயினும் சரி, முடிவான ஒரு தீர்ப்பையோ, எதிராக மேல்முறையீடு செய்யப்படாவிட்டால் முடிவானதாக இருக்கும் ஒரு தீர்ப்பையோ வேறு அதிகாரி எவராலேனும் 'உறுதி' செய்யப்படாவிட்டால் முடிவானதாக இருக்கும் ஒரு தீர்ப்பையோ வழங்கச் சட்டத்தினால் அதிகாரம் பெற்றிருக்கின்ற அல்லது அத்தகைய ஒரு தீர்ப்பை வழங்க எந்த ஆட்களின் குழுவுக்கு அதிகாரம் அளிக்கப்பட்டுள்ளதோ அந்த ஆட்களின் குழுவில் ஒருவராக இருக்கின்ற ஒவ்வொருவரையும் கூடக் குறிக்கும்"*[3] *என்கிறார், நீதிமன்ற வழக்குகளில் சட்டப்படியான தீர்ப்புகளையும் நீதிபதிகளையும் வழங்குவோரே 'நீதிபதி' எனக் குறிப்பிடப்படுகின்றார் என்பதனை இதனால் உணர முடியும்.*

*"நீதிவழங்குவதற்குரிய மன்றங்களிலிருந்து வழக்குகளை விசாரித்த நீதி வழங்கும் பொறுப்பினை ஏற்போரை 'நீதி வழங்குவோர்' அல்லது 'நீதிபதி'எனலாம். 'முறை செய்வோன்' என அக்காலத்தில் நீதிவழங்குவோர் குறிக்கப்பட்டுள்ளனர்.*[4] *சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களில் 'ஊர் நாட்டாமை' 'பெரிய அம்பலகாரர்' 'அம்பலகாரர்' சாதித் தலைவர்கள் ஆகியோர் கிராம வழக்கு மன்றத் தலைவர்களாக உள்ளனர். இவர்களை இம்மாவட்ட கிராமப் பொது மக்கள் இப்பெயர்களாலேயே குறிப்பிடுகின்றனர். இவர்கள் இம்மாவட்ட கிராம வழக்குமன்றங்களில் 'நீதி வழங்குவேர்' ஆவர். இவர்கள் கிராம வழக்கு மன்றங்களில்*

வரும் வழக்குகளின் தன்மைகளுக்கேற்ப குற்றவாளிகளுக்குத் தண்டனைகளை வழங்கி பாதிக்கப்பட்டவர்களுக்கு 'இழப்பீடு'ம் பெற்றுத் தருகின்றனர். சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களில் நீதிவழங்குவோராகிய ஊர் நாட்டாமை, பெரிய அம்பலகாரர், அம்பலகாரர், ஆகியோருக்குக் கீழ் ஐந்து அல்லது ஏழு நபர்களை உறுப்பினர்களாகக் கொண்ட 'வழக்கு மன்றக் குழு'வினரும் செயல்பட்டு வருகின்றனர்.

**அரசு அதிகாரங்கள்**

அரசு அதிகாரங்கள் பின்வரும் மூன்று பகுதிகளைக் கொண்டதாகும். அவை,

1. சட்டம் இயற்றுதல்.
2. ஆட்சி செய்தல்
3. நீதி வழங்குதல்.

என்பனவாகும். சட்டங்களை இயற்றுவதற்குச் சட்ட மன்றங்களும், நீதி வழங்குதற்கு நீதிமன்றங்களும், ஆட்சியைச் செம்மையாக நடத்துவதற்கும், இயற்றப்பட்ட சட்டங்களையும் நீதியையும் நிறைவேற்றுவதற்கு நிருவாக அலுவலர்களும் அரசாங்கத்திற்கு உள்ளனர். இந்த மூன்று அங்கங்களுடன் தான் அரசாங்கம் இயங்கிச் செயல்படுகின்றது. இவற்றின் செயல்பாடுகளை இதழியல் துறை மக்களுக்கு வெளிக் கொணர்கிறது.

இதனைப் போன்றே சிவகங்கை மாவட்டக் கிராம வழக்கு மன்றங்களில் வழக்கு மன்றத் தலைவர்களாகிய ஊர் நாட்டாமை, பெரிய அம்பலகாரர், அம்பலகாரர் ஆகியோரும், வழக்கு மன்ற உறுப்பினர் குழுவும், ஓடும்பிள்ளையாகிய பண்டாரமும் வழக்கு மன்றங்களைச் செம்மையாக செயல்படுத்தி வருகின்றனர்.

**வழக்கு வகைகள்**

'வழக்கு' என்பது தம் உரிமையை நிலைநாட்டுவதற்காகவும், பிறர் தீங்கிழைப்பதைத் தடுப்பதற்காகவும் ஒருவர் நீதிமன்றத்தின் முன் கொண்டுவரும் நடவடிக்கையாகும். இந்த வழக்குகளை உரிமையியல் வழக்குகள், குற்றவியல் வழக்குகள் என இருவகைப்படுத்துவர். மக்களின் சட்டப்பூர்வமான அடிப்படை உரிமைகளைப் பாதுகாக்கும் நோக்கத்துடன் தொகுக்கப்படும் வழக்குகளை உரிமையியல் வழக்குகள் என்றும், குற்றம் செய்பவர்களைத் தடுப்பதற்காகவும் அவர்களுக்குத் தக்க தண்டனைகளை வழங்கித் தண்டிப்பதன் மூலம் திருத்துவதற்காகவும் தொடுக்கப்படும் வழக்குகளைக் குற்றவியல் வழக்குகள் என்றும் குறிப்பிடலாம்.

ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ள சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களில் இந்த இருவகையான வழக்குகளும் விசாரிக்கப்பட்டு அவற்றிற்கான தீர்ப்புகளும் குற்றச் செயல்களுக்கான தண்டனைகளும் வழங்கப்பட்டு வருகின்றன. "கிராமப்புற பஞ்சாயத்தாரிடமும் நாட்டாண்மைக்காரர்களிடமும் வரும் தகராறுகளுள் நிலத்தகராறு, வாய்க்கால் தகராறு, வரப்புத் தகராறு, கொடுக்கல்-வாங்கல் தகராறு ஒருவர் வயலில் இன்னொருவர் புகுந்து விளைந்த பயிர்களை அறுவடை செய்வதால் ஏற்படும் தகராறு போன்றவைதாம் பெரும்பாலும் இடம்பெறும் ஒவ்வொரு பிரச்சனையின் தன்மைக்கேற்பப் பஞ்சாயத்தார் தீர்ப்புக் கூறுவார்கள்"[5] என்பர். இக்கூற்று தமிழ்நாட்டுக் கிராம வழக்கு மன்றங்களுக்கு முற்றிலும் பொருத்தமுடையதாகும். சிவகங்கை மாவட்டக் கிராம வழக்குமன்றங்களில் உரிமையியல் வழக்குகளில் குடும்ப வழக்குகள், பாலுறவுச் சிக்கல்கள், மண விலக்கு, இடப்பிரச்சனை, நிலத்தகராறு, பாகப்பிரிவினை, சொத்து வழக்குகள் போன்றவைகளும் குற்றவியல் வழக்குகளில் கொலை, திருட்டு, கேலி செய்தல்,

*கற்பழிப்பு, பெண்ணை ஏமாற்றிக் கெடுத்தல், பிறரை ஏமாற்றுதல், போன்றவைகளும் நன்கு விசாரிக்கப்பட்டு அவற்றிற்குத் தக்க தீர்வுகள் வழங்கப்பட்டு வருகின்றன.*

**வழக்கு முறையீடு**

*ஒருவருக்கு எதிராக வழக்கினை நீதிமன்றத்தில் தொடுப்போர் தம்முடைய வழக்கினை நீதிமன்றத்திற்கு எடுத்துச் செல்லும் முறையினை 'வழக்கு முறையீடு' என்பர். இக்காலத்தில் நீதிமன்றங்களில் வழக்கு முறையீடு 'எழுத்துப்படிவம்' மூலம் விண்ணப்பிக்கப்படுகின்றது. வழக்கினைத் தொடுப்பவர் யார் மீது வழக்கினைத் தொடுக்கின்றார்? வழக்கின் விபரம் என்ன? என்ன காரணத்திற்காக வழக்குத் தொடுக்கப்படுகின்றது? அவ்வழக்குத் தொடர்புடைய சாட்சிகள் யார்? யார்? என்ன முடிவு வேண்டும் என்பதை வழக்கினைத் தொடுக்கும் போதே சுட்டிக்காட்ட வேண்டும்.*

*மக்களிடையே எழுகின்ற வழக்கினைத் தீர்க்கும் மன்றங்களைப் பொதுவாக 'நீதிமன்றங்கள்'* (Courts of Justice) *என்று குறிப்பிடுகின்றோம். அம்மன்றங்கள் சட்டங்களின் அடிப்படையிலேயே நீதி வழங்குகின்றன. சட்டவிதிகளைப் புறக்கணித்துவிட்டு, அவற்றுக்கு மாறாக வழக்குகளில் தீர்ப்புகள் அளிப்பது முறையற்ற செயலாகும். 'சட்டங்கள்' என்ற கால்வாய்களின் வழியாகத்தான் 'நீதி' என்ற நீர்பாய வேண்டும். இந்த முறையில் நீதி வழங்குவதுதான் நீதிமன்ற நடுவர்களின் கடமையாகும். நீதிமுறையின் செப்பமும் சிறப்பும் அது சட்டத்தின் அடிப்படையில் இயங்குவதேயாகும். ஆதலால் தான் நீதிமன்றங்களில் வழங்கப்படும் நீதியை 'சட்டத்தை ஒட்டிய நீதி'* (Justice According to Law) *எனக் குறிப்பிடுகின்றனர்.*

'சட்டம்' என்ற வரம்பிற்கு உட்பட்டு நீதிபதிகளின் சிந்தனை இயங்கும் போது, தீர்ப்புக்களில் ஒரு சிறப்பும் சீர்மையும் அமைகின்றன. சமுதாயத்தின் கூட்ட முயற்சியில் (Collective Wisdom) பிறந்த சட்டவிதிகள், தனிப்பட்ட நீதிபதிகளின் சிந்தனைகளையும் கருத்துக்களையும் விட சிறந்தவைகளாகும். ஆனால், நீதிமன்றங்கள் முன்வரும் வழக்குகள் பல திறப்பட்டவை. ஒவ்வொரு வழக்கிற்கும் சாலப் பொருந்தும் வகையில் சட்டவிதிகள் இருத்தல் இயலாது. ஆதலால் நாம் சட்டத்தை ஒட்டிய நடைமுறைகளின் (Procedure) படியே நீதிமன்றங்களில் நீதி கோர வேண்டியுள்ளது. சமுதாயத்தின் கொள்கைகளையும் குறிக்கோள்களையும் நிறைவேற்றும் வகையில் வகுக்கப் பெறுவதே சட்டமாகின்றது. அச்சட்டத்தைச் செயல்படுத்தலும் சமுதாயத்தில் நீதி நிலவச் செய்வதும் நீதிமன்றங்களின் கடமையாகவும் பணியாகவும் அமைகின்றன. இல்லாவிடில் சட்டம் பயனற்றுப்போகும். அரசியல் நாகரிகம் வளர்ந்துள்ள அனைத்து நாடுகளிலும் சட்டத்தை ஒட்டிய நீதிமுறையே சாலச் சிறந்த முறையாகப் பேணப்பட்டு வருகின்றது. ஆதலால், சட்டவியலைப் (Jurisprudence) பொறுத்தவரை 'சடத்திற்கு இசைந்ததே நீதியாகும்' என்பதே அடிப்படைக் கொள்கையாகும்.

### நீதிமன்ற நெறிமுறைச் சட்டம்

சட்டங்களை நிலைமுறைச்சட்டம் (Substantive Law) என்றும் நெறிமுறைச் சட்டம் (The Law of Procedure) என்றும் இரு பெரும் பிரிவுகளாகப் பகுப்பார்கள்.[6] நெறிமுறைச் சட்டம் என்பதை 'நடைமுறைச் சட்டம்'எனக் கொள்ள இடமுண்டு. ஒருவர் இறந்த பின் அவர் விட்டுச் சென்ற சொத்துக்கள் யார், யாருக்கு, எந்த விகிதத்தில் சேருகின்றன என்பனவற்றை 'இறங்குரிமைச் சட்டம்' கூறுகின்றது. ஒப்பந்தங்கள் கொள்வது எவ்வாறு? அவற்றால் எழும் உரிமைகள், கடமைகள்

என்ன? எத்தகைய ஒப்பந்தங்கள் செல்லுபடியாகும்? எவை செல்லுபடியாகதவை? என்பன பற்றி 'ஒப்பந்தச்சட்டம்' கூறுகின்றது. எச்செயல்கள் குற்றங்கள் ஆகின்றன. அக்குற்றங்களுக்குரிய தண்டனைகள் என்ன? என்பன பற்றிக் 'குற்றவியல் சட்டம்' கூறுகின்றது. இவ்வாறு, உரிமைகள், கடமைகள், குற்றப் பொறுப்படைவு முதலியன பற்றிக் கூறும் சட்டங்களை 'நிலைமுறைச் சட்டங்கள்' (Substantive Laws) என்று கூறுவர்.

ஒருவருக்கு இறங்குரிமையாகக் கிடைக்க வேண்டிய சொத்தை அடைவது எவ்வாறு எங்கு, எந்தக் காலத்திற்குள் வழங்கிட வேண்டும், விசாரணை செய்யும் முறை என்ன என்பது குறித்துக் கூறும் சட்டங்களை 'நெறிமுறைச் சட்டங்கள்' (The Laws of Procedure) எனலாம். ஆதலால், வழக்கிடும் முறையைக் கூறுவது நெறிமுறைச் சட்டமாகும். உரிமையியல், குற்றவியல் வழக்குகளை நடத்துவது எவ்வாறு என்பதைப் பற்றிய சட்டங்களே நெறிமுறைச் சட்டங்களாகும். பிறவகைச் சட்டங்கள் எல்லாம் 'நிலை முறைச் சட்டங்கள்' ஆகும். இன்னொரு வகையில் குறிப்பிடுவதனால் நீதிமுறை நாடும் குறிக்கோள்களைப் பற்றியதே நிலைமுறைச் சட்டமாகும். அக்குறிக்கோள்களை எய்தும் வழிமுறைகளையும் கருவிகளையும் பற்றியது நெறிமுறைச் சட்டமாகும்.

**நீதிமன்ற நெறிமுறை**

வழக்குகளில் நீதிவழங்குவதில் நீதிமன்ற நடவடிக்கைகளில் பின்வரும் ஐந்து கூறுகளும் இன்றியமையாதவைகளாக உள்ளன.

1. அழைப்பாணை **(Summons)**

வாதி, பிரதிவாதி, இருதரப்பினர்களையும் நீதிமன்றத்தின் முன் வருகைபுரிந்து தங்கள் வாதுகளைக் (வழக்குகளைக்) கூறும்படி ஆணையிடுதல்.

2. வாதுரைகள் (Pleadings)

*தீர்வுக்கு உற்ற பிரச்சனைகள் குறித்து நீதிமன்றத்திற்கு விவரித்துரைத்தல்.*

3. மெய்யுறுத்தம் அல்லது சான்று (Proof of Evidence)

*தீர்வுக்கு உற்ற பிரச்சனைகள் பற்றித் தீர்வு காண்பதற்கு ஏதுவான விவரங்களையும் சான்றுகளையும் நீதிமன்றத்திற்கு முன் வைத்தல்.*

4. தீர்ப்புரை (Judgement)

*நீதிபதி வழக்கில் ஆய்ந்து கண்ட முடிவுகளைக் கூறும் தீர்ப்புரை.*

5. நிறைவேற்றும் (Exection)

*தீர்ப்புரை நிறைவேற்றுதல்.*[7]

**சிவகங்கை மாவட்டக் கிராம வழக்கு மன்றங்களில் முறையீடு**

*சிவகங்கை மாவட்ட கிராமவழக்கு மன்றங்களில் நீதிமன்ற நெறிமுறையிலுள்ள இவ்விதிகள் பின்பற்றப்படுவதில்லை. பாதிக்கப்பட்டவராகிய வாதி தமக்குப் பாதிப்பினை ஏற்படுத்திக் குற்றம் புரிந்த பிரதிவாதியின் மீது வழக்கினைத் தொடுக்கும் போது, கிராம வழக்கு மன்றத்தில் நாட்டாமையின் முடிவு வாய்மொழி மூலமாகவே வழக்கின் விபரத்தை முறையீடு செய்கின்றார். வாதி நீதிமன்ற எழுத்துப்படிவ நடைமுறையில் உள்ளது போலவே, தாம் யார் யார் மீது வழக்கினைத் தொடுக்கின்றார். என்ன காரணத்திற்காகக் கிராம வழக்கு மன்றத்தில் இவ்வழக்குத் தொடுக்கப்படுகின்றது. தாம் என்ன முடிவினை விரும்புகின்றார் என்பதை வழக்கின் தொடக்கத்திலேயே கூறிவிடுகின்றார்.*

*நீதிமன்றங்களில் முறையீடு செய்வதற்கு நீதிமன்றங்களின் தன்மை, வழக்குகளின் தன்மைகளுக்கேற்ப வழக்கினை முறையீடும் வாதி கட்டணம் செலுத்த*

வேண்டும். சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களில் வழக்கினை முறையீடு செய்யும் வாதியும், குற்றம் சாட்டப்படுகின்ற பிரதிவாதியும் கிராம வழக்கு மன்றத்தினரை வெற்றிலை, பாக்கு வைத்துக் கும்பிட்டு விழுந்து 'மண்டுப்பணம்' அல்லது 'கிராமப்பணம்' அல்லது 'நடவுப்பணம்' செலுத்த வேண்டும். அப்பணம் கிராம வழக்கு மன்றத்தினரால் பரம்பரையாக நிர்ணயிக்கப்பட்ட தொகையாகும்.

நீதிமன்றங்களில் சாட்சிகள் இருபக்கமும், வேறு வேறு சாட்சிகளாக இருப்பார்கள். நீதிமன்ற வழக்குகளில் சாட்சிகளின் நம்பகத்தன்மை மிகவும் முக்கியமானதாகும். சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களில் வாதி, பிரதிவாதி ஆகிய இருவருக்கும் சாட்சி ஒருவராகக் கூட இருப்பார். கிராம வழக்கு மன்றங்களில் விசாரணையும் விவாதமும் நடைபெறும்பொழுது நேரடியாகச் சாட்சிகளைக் கூட்டி வந்து விசாரிக்கின்றனர். தீர்ப்புக் கூறும் உரிமையும் அதிகாரமும் பெற்ற நாட்டாமை, பெரிய அம்பலகாரர், அம்பலகாரர் ஆகியோர் கிராம வழக்கு மன்றங்களில் சாட்சிகளை நேரடியாக விசாரிக்கின்றனர். ஆனால், நீதிமன்றங்களில் சாட்சிகளை நீதிபதிகள் விசாரிப்பதில்லை. வழக்கறிஞர்கள் மட்டுமே விசாரிக்கின்றனர். நீதிமன்றங்களில் நீதிபதிகள் இரு தரப்பு வாதங்களையும் கேட்ட பின்னர் நீதி வழங்குகின்றனர்.

சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்களிலும் நாட்டாமை, பெரிய அம்பலகாரர், அம்பலகாரர் ஆகியோரும் ஏனைய வழக்கு மன்ற உறுப்பினர்களும் வாதி, பிரதிவாதி ஆகிய இருதரப்பினர் குற்றச்சாட்டுக்களையும் நன்கு கேட்டறிந்து விசாரித்துத் தீர்ப்புக்களை வழங்குகின்றனர். நீதிமன்றங்களில் நீதி வழங்கும் முறை இதிலிருந்து சற்று மாறுபாடானதாகவே உள்ளது. நீதி மன்றங்களில் ஒரு சில வழக்குகள் முடிவுபெறாமலும், முடிவான தீர்ப்பினைப் பெறாமலும் நீண்ட காலம் நிலுவையில் இருப்பதுமுண்டு. சிவகங்கை மாவட்டக் கிராம வழக்கு மன்றங்களில் அவ்வாறு வழக்குகள் நிலுவையில் இருப்பதில்லை. கிராம வழக்கு மன்றத்

தலைவராகிய நாட்டாமையும் வழக்கு மன்ற உறுப்பினர்களும் விரைவில் இருதரப்பினரையும் விசாரித்து உடனே தக்க தீர்ப்பினையும் கூறி விடுகின்றார்கள்.

சில சமயங்களில் சூழ்நிலை மற்றும் சாட்சியங்களின் அடிப்படையில் நீதிமன்றங்களில் உண்மையான நீதியையும் தக்க தீர்வினையும் பெற முடியாமல் போகலாம். கிராம வழக்கு மன்றங்களில் உண்மையான அல்லது சரியான நீதிபெரும்பாலும் கிடைத்து விடுகின்றது. நீதிமன்றங்களில் எழுத்துப்படிவம் மூலம் வாதிகள் சார்பில் விண்ணப்பித்த வழக்குகளை விசாரணை செய்வார்கள். எழுத்துப்படிவத்தில் ஏதாவது முக்கியமான தகவல்கள் விடுபட்டிருந்தால் அதனை ஏற்றுக் கொண்டு விசாரணை செய்யமாட்டார்கள். மறுபடியும் எழுத்துப்படிவத்துடன் விண்ணப்பித்தால் தான் அதனை விசாரணைக்கு எடுத்துக் கொள்வார்கள். கிராம வழக்கு மன்றங்களில் அவ்வாறு இல்லை. சில தகவல்களைச் சொல்லாமல் விட்டுவிட்டாலும் கூட பொதுவான நீதி எதுவோ அதனை ஆராய்ந்து பாதிக்கப்பட்டவர்களுக்குத் தக்க நிவாரணம் (Remedy) கிடைக்கும் வகையில் தீர்ப்புக்களைக் கூறுகின்றார்கள்.

### முறை செய்தல்

'அரசு' என்ற அமைப்பு உறுதிபெறுவதற்கு முன்னர் மனிதர்கள் தங்களுக்குள் ஏற்பட்ட பூசல்களையும் வழக்குகளையும் தங்கள் சொந்த வலிமைகளைக் கொண்டு தீர்த்துக் கொண்டனர். அந்நாளில் வேலெடுத்தவன் வெற்றி பெற்றான், கோலெடுத்தவன் கொள்கை நிலைத்தது. அரசியல் வாழ்வியல் முன்னேற்றம் அடைந்த பின்னரே, படிப்படியாக அரசு தன் வலிமையைப் பயன்படுத்தி மக்களிடையே தோன்றும் வழக்குகளைத் தீர்த்து வைக்க முற்பட்டது. தனிமனிதனின் பலத்திற்குப் பதிலாக சமூகத்தின் கூட்டு வலிமை அரசின் மூலமாகக் குடிமக்கள் ஒவ்வொருவரின் உரிமைகளையும் பாதுகாக்க முற்பட்டது. இவ்வாறு

உள்நாட்டு மக்களின் வாழ்க்கையில் அமைதி பேணப்பட்டு வந்திருக்கின்றது. மனிதன் தன் சொந்த வலிமையைப் பயன்படுத்தித் தன் உரிமைகளைப் பாதுகாக்க வேண்டிய நிலை இன்றில்லை. அப்படித் தணிப்பட்டோர் தங்கள் வலிமையைப் பயன்படுத்துவதை அரசு தடுத்து நிறுத்துகின்றது. ஒரு சமுதாயத்திலுள்ள மக்கள் தங்களுக்குள் எழும் வழக்குகளை அரசால் அமைக்கப்பட்ட நீதிமன்றங்களின் மூலம் தீர்ப்புகளுக்கு விட்டுவிட்டு, அவைகளுக்குப் பணிந்து ஏற்று நடக்கும் முறை சமுதாய நாகரிகத்தின் சின்னமாக இன்று விளங்குகின்றது.

ஆதிகாலத்தில், இருந்தே இந்திய நாட்டில் நீதி வழங்குதல் என்பது அரசனின் முக்கியக் கடமையாக இருந்து வந்துள்ளது. திருவள்ளுவர் 'நீதி வழங்குதல்' என்பதை 'முறைசெய்தல்' என்று குறிப்பிட்டுள்ளார். முறைசெய்து மக்களைக் காப்பற்றும் மன்னனை இறைவனாகக் கருதி மக்கள் போற்றியுள்ளனர். அதனை

"முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும்."[8]

என்ற குறள் மெய்ப்பிக்கும். அரசு தன் வலிமையைக் கொண்டு மக்களிடையே எழுகின்ற வழக்குகளைத் தீர்த்து நியாயம் வழங்குவதையே 'நீதி வழங்குதல்' என்றும் 'முறை செய்தல்' என்றும் குறிப்பிடுகின்றோம். இதனை ஆங்கிலத்தில் Administration of Justice எனக் குறிப்பிடுகின்றோம்.

மக்கள் தங்கள் உரிமைகளுக்கு இடையூறுகளும் இன்னல்களும் ஏற்படும்பொழுது, அவற்றைப் பாதுகாப்பதற்கென நீதிமன்றங்களை நாடுகின்றனர். அரசின் அங்கங்களான நீதிமன்றங்கள் நடுநாயகமாக விளங்கி மக்களிடையே எழுகின்ற உரிமை வழக்குகளைத் தீர்த்து வைக்கின்றன. இவ்வாறு உரிமை வழக்குகளைத் தீர்த்து அரசு நீதி வழங்குவதை 'உரிமையியல் நீதிமுறை' என்பர்.

தனி மனிதன் தன் வலிமையைப் பயன்படுத்தித் தன் உரிமைகளைப் பாதுகாத்த நிலைமாறி அரசாங்கம் மக்களின் உரிமைகளைப் பாதுகாப்பது 'உரிமையியல் நீதிமுறை' ஆகின்றது.

தனிமனிதன் தன் வலிமையால் தனக்குத் தீங்கிழைத்தோரைப் பழிதீர்க்கும் நிலைமாறி, அரசாங்கம் குற்றவாளிகளுக்குத் தண்டனை விதிப்பது 'குற்றவியல் நீதிமுறை' ஆகின்றது.

**குற்றவியல் வழக்குகளும் உரிமையியல் வழக்குகளும்**

தனிமனிதனுக்குத் திட்டமிட்டு இழைக்கப்படும் தீங்கு 'தனிமனிதத் தீங்கு' (Private Wrong) ஆகும். சமுதாயத்தின் பொது அமைதியைக் கெடுக்கும் வகையில் செய்யப்படும் தீங்கு (பொதுமைத் தீங்கு) (Public Wrong) ஆகும். உரிமையியல் நீதிமுறை தனிமனிதத் தீங்குகளைப் பொறுத்ததாகும். குற்றவியல் நீதிமுறை பொதுமைத் தீங்குகளைப் பொறுத்ததாகும். பொதுமைத் தீங்குகளைச் சட்டம் குற்றங்கள் என்று கொள்கின்றது. தனிமனிதத் தீங்குகளைப் பொறுத்து அவற்றால் பாதிக்கப்பட்ட தனிநபர் நீதிமன்றத்தில் வழக்கிட்டு அதற்கான தீர்வினைப் (Remedy) பெறுகின்றார். பொதுமைத் தீங்குகளைப் பொறுத்து அரசாங்கம். குற்றவாளிக்கு எதிராக வழக்கிட்டு குற்றவாளியைத் தண்டனைக்கு உள்ளாக்குகின்றது.

தனிமனிதத் தீங்கினைப் பொறுத்த உரிமையியல் வழக்குகளில் வாதியின் உரிமை பாதுகாக்கப்படுகின்றது. பொதுமைத் தீங்குகளைப் பொறுத்த குற்ற வழக்குகளில் எதிர்வாதி தாம் இழைத்த குற்றத்திற்கு ஏற்றவாறு தண்டணைக்கு உள்ளாகின்றார். உரிமை வழக்கினைத் தொடர்ந்த வாதி தம் விருப்பப்படி வழக்கைத் தொடர்ந்து நடத்தலாம். அல்லது நிறுத்திக் கொள்ளலாம். ஆனால் குற்ற வழக்குகளில் அரசாங்கமே வாதியாக இருப்பதால் அரசாங்கம் மட்டுமே குற்ற

வழக்கினை நிறுத்திக் கொள்ள முடியும். குற்றத்தால் பாதிக்கப்பட்டவர் குற்றவாளியை மன்னித்தோ குற்றவாளியுடன் சமாதானம் (அமைதி ஒப்பந்தம்) செய்து கொண்டோ குற்ற வழக்கினை நிறுத்திக் கொள்ள முடியாது.

பொதுவாக நீதிமன்ற நடுவர்கள் நடுவுநிலை தவறாமல் செயலாற்றுகின்றனர். மக்களிடையே அவர்கள் வேற்றுமை பாராட்டுவதில்லை. வறியோர்க்கு ஒரு நீதியும் வளமுடையோர்க்கு மற்றொருவகை நீதியும் வழங்குவதில்லை. நீதிமன்றத்தின் முன் அனைவரும் சமமாகக் கருதப்படுகின்றனர். நீதிபதிகள் தம் முன் உள்ள வழக்கின் சிக்கல்களை அணுகி ஓர்தல் வேண்டும். வழக்கில் சம்பந்தப்பட்ட எவர்மீதும் இரக்கம் (கண்ணோட்டம்) காட்டக்கூடாது. நடுவுநிலைமை சிறிதும் தவறாமல் வழக்கை ஆய்தல் வேண்டும். இறுதியாக உரிமை வழக்கில் வாதிக்கும் பரிகாரம் அளித்தலும், குற்ற வழக்கில் குற்றவாளிக்குத் தண்டனை வழங்கினாலும் அதைத் தேர்ந்து செய்தல் வேண்டும். வழக்கிலுள்ள சூழ்நிலைகளுக்கேற்ப எது பொருத்தமானதோ அதைத் தேர்ந்து அதன்படி தீர்ப்பு வழங்க வேண்டும். நீதிமுறையின் நீர்மைக் கூறுகளான இப்பண்புகள் இன்றும் போற்றப்பட்டு வருகின்றன. இக்கூறுகள் அனைத்தையும் இணைத்துத் திருவள்ளுவர்,

"ஓர்ந்து கண்ணோடாது இறைபுரிந்து யார்மாட்டும்
தேர்ந்து செய்வஃதே முறை."[9]

என்று குறிப்பிட்டுள்ளர். முறைசெய்தல், நீதி வழங்குதல் என்பதற்கு இது சிறந்த சான்றாகும். வழக்கின் கூறுகளை ஓர்ந்து, வாதி, பிரதிவாதி ஆகிய தரப்பினர் எவர்மீதும் கண்ணோடாது நடுவுநிலைமை தவறாமல் வழக்கின் தீர்ப்பினைத் தேர்ந்து செய்வதே முறை செய்யும் முறைமை ஆகுமெனக் கூறும் இக்குறள் சிந்தனைக்குரியதாகும்.

**வழக்குரைப்போர்**

*ஒருவருக்கு எதிராக நீதிமன்றத்தில் வழக்குத் 'தொடுப்பவர் வாதி'* (Plaintiff) *என்றும் குற்றம் சாட்டப்பட்டவர் 'எதிர்வாதி'* (Defendant) *என்றும் அழைக்கப்படுகின்றனர். இன்றைய நீதிமன்றங்களின் நடைமுறையில் உள்ளதைப் போலவே சிவகங்கை மாவட்டக் கிராம வழக்கு மன்றங்களிலும் 'வாதி' 'பிரதிவாதி' என்றும் அல்லது 'வழக்கினைத் தொடுப்பவர்' 'குற்றம்சாட்டப்பட்டவர்' எனவும் அழைக்கபடுகின்றனர். நீதிமன்றங்களில் வழக்காடுவதற்கென்று வழக்குரைஞர்கள் இருப்பர். கிராம வழக்கு மன்றங்களில் வழக்காடுவதற்கு வழக்கறிஞர்கள் இல்லை. வழக்குத் தொடுத்தவர் (வாதி) எதிர்வழக்காடுபவர் (பிரதிவாதி) இருவரும் தாங்கள் கூறும் கருத்துக்களை நிறுவுவதற்குத் தாங்களே வழக்குரைஞர்களாகச்* (Prosecutors) *செயல்படுகின்றனர்.*

**வாதி**

*வழக்குத்தொடுப்பவர் தான் முதலில் தன் பக்கத்து நியாயத்தை எடுத்துரைக்க வேண்டும் என்பது இன்றைய நீதிமன்றச் சட்ட நடைமுறையில் காணலாகும் ஒரு வழக்கமாகும். இந்த வழக்கம் சிவகங்கை மாவட்டக் கிராம வழக்கு மன்றங்களிலும் நடைமுறையில் இருந்து வருகின்று. சிலப்பதிகாரத்தில் கண்ணகி 'தேரா மன்னா'*[10] *என்று விளித்தே பாண்டிய மன்னனிடம் தன் வழக்கினைத் தொடங்குகின்றாள். சேக்கிழாரின் பெரிய புராணத்தில் 'தடுத்தாட் கொண்ட புராணத்தில்' இந்த மொழி 'கேண்மீன் எதிர்யாவர்களும்'*[11] *என விளித்தே தொடங்குவதாகச் சுட்டப்பட்டுள்ளது.*

*வழக்கை நீதிமன்றத்தின் முன் வைக்கும் வாதி தன்னுடைய பெயர், ஊர், மரபு போன்றவற்றைக் கூறும் முறை இன்றைய நீதிமன்றங்களின் நடைமுறையில் உள்ளது. இத்தகைய நடைமுறையும் மரபும் கிராம வழக்கு மன்றங்களில்*

நடைமுறையில் உள்ளன என்பது குறிப்பிடத்தக்கதாகும். நீதிமன்றங்களில் வழக்கினை மன்றத்தின் முன் வைக்கும் வாதி, வழக்கின் தன்மையையும் எதிர்வாதி செய்த குற்றச் செயலையும் அடுத்தடுத்துக் கூற வேண்டும் என்பது சட்ட நடைமுறை விதியாகும். கிராம வழக்கு மன்றங்களிலும் இந்த முறையே பின்பற்றப்பட்டு வருவது நினையத்தக்கதாகும்.

### எதிர்வாதி அல்லது பிரதிவாதி

வாதி, எதிர்வாதி மீதுள்ள குற்றத்தைக் கூறியவுடன் எதிர்வாதி தன்னுடைய நிலையைக் கூற வேண்டும். கூறிய குற்றத்தை மறுக்கவோ, அல்லது ஒப்புக்கொள்ளவோ வேண்டும் என்பது நீதிமன்றங்களின் சட்ட நடைமுறையாகும். இதனை எதிர்வாதம் (Defence) எனக் குறிப்பிடுவர். இந்தமுறை கிராம வழக்கு மன்றங்களிலும் அடிப்படையாக இருந்து வருவது சிந்தனைக்குரியதாகும். இம்மாவட்டக் கிராம வழக்கு மன்றங்களில் 'எதிர்வாதி', பிரதிவாதி என அழைக்கப்படுகின்றார்.

### விவாதம் நடைபெறும் முறை

வாதி வழக்கினை நீதிமன்றத்தின் முன் வைக்கவும், எதிர்வாதி அவ்வழக்கினை மறுத்து விவாதம் செய்யவும் (எதிர்வாதம்) சட்ட நடைமுறைகளைக் கொண்டு முடித்து வைக்கவும் நீதிமன்றங்களில் பின்வரும் பல நடைமுறைகள் பின்பற்றப்பட்டு வருகின்றன.

### வழக்கினை உண்மையானது என நிறுவிக்காட்டுதல்

"எதிர்வாதியின் எதிர்வாதம் முடிந்ததும் அவ்வழக்கினை மெய்ப்பிக்கும் பொறுப்பு வாதியையே சாரும் என்பர். ஒருவர் தான் முறையிட்ட வழக்கில் சட்டப்படியான தீர்ப்பைப் பெற வேண்டுமென விரும்பினால் அவர் அவ்வழக்கினை

மெய்பிக்கும் பொறுப்பினை ஏற்றவராக இருத்தல் வேண்டும். இப்பொறுப்பினைச் சட்ட நூலார் 'Burden of Proof ' என்று கூறுவர்.[12] வைக்கும் வழக்கில், தாம் கோரும் உரிமை தமக்குள்ளது என்று மெய்ப்பிக்கும் பொறுப்பு வாதியைச் சாருகின்றது. இம்முறை கிராம வழக்கு மன்றங்களிலும் நடைமுறையில் இருப்பது குறிப்பிடத்தக்கதாகும். நீதிமன்றங்களில் சாட்சிகளை விசாரிப்பதில் வாதித் தரப்புச் சாட்சிகள் தாம் முதலில் விசாரிக்கப்படும். கிராம வழக்கு மன்றங்களிலும் இந்த முறை நடைமுறையில் உள்ளது.

## சான்றுகள் (Evidences)

சான்று என்பதை ஒரு பொருண்மையில் உள்ளதாய் இருத்தலைக் குறித்து விசாரிப்பவர் மன நிறைவு கொள்ளச் செய்யும் ஒன்றாகும்.[13] என வரையறுத்துக் கூறுவர். ஆங்கிலத்தில் (Fact) என்பதைத் தமிழில் 'நிகழ்மை' எனலாம். மனநிலை, செயல் இவையனைத்தும் நிகழ்மை என்ற இச்சொல்லில் அடங்கும். ஒரு நிகழ்மையிலிருந்து வேறொரு நிகழ்மை இருந்ததா? இல்லையா? என்பதை ஊகிக்க உதவுவதுதான் 'சான்று' எனப்படுகின்றது. நீதிமுறை ஆய்வில் ஒரு நிகழ்மையை மெய்ப்பிப்பதற்கோ, பொய்ப்பிப்பதற்கோ உதவும் சட்டமுறைச் சாதனங்களே 'சான்று' ஆகும். ஒரு நிகழ்மை மற்றொரு நிகழ்மையை ஊகிப்பதற்கு எந்த அளவிக்கு உதவுகின்றதோ, அந்த அளவுக்கு அது 'சான்றுரம்' (Probative Force) கொண்டதாகின்றது. சான்றுரம் கொண்ட நிகழ்மைதான் 'சான்று' ஆகும். சான்று குறிப்பிடும் பொருள் அல்லது நிகழ்மை, உண்மையில் இருந்தது அல்லது நிகழ்ந்தது என்பதை உறுதிப்பட ஊகிக்கும் வகையில் அதற்குச் சான்றுரம் இருந்தால் அச்சான்றினை 'மெய்யுறுத்தம்' (Proof) என்றும், சான்றாக உள்ளதைச் சான்று நிகழ்மை (Evidential Fact) )என்றும், அது எதற்குச் சான்றாக உள்ளதோ அதை

'முதல் நிகழ்மை' (Principal Fact) என்றும் சட்டவியல் வல்லுநர்கள்[14] குறிப்பிடுகின்றனர்.

**துணிபு (Presumption)**

வெளிப்படையான சில உண்மைகளைக் சான்றுகள் மூலம் மெய்ப்பிப்பதற்குக் காலதாமதமும் பொருட் செலவும் ஆகலாம். எனவே, குறிப்பிட்ட ஒரு நிகழ்மையிலிருந்து வேறொரு நிகழ்மையை நீதிமன்றம் ஊகித்துக் கொள்ள வேண்டும் என்று சட்டம் விதிக்கின்றது. இவ்வாறு ஊகிப்பதைத் தான் 'துணிபு'[15] என்பார்கள். ஏழு வயதுக்குக் குறைந்த இளம்பருவத்தினர் எவருக்கும் 'குற்ற மனம்' இல்லை என்பதை நீதிமன்றம் ஊகித்துக் கொள்ள வேண்டும் என்பது சட்டமாகும். இவ்வாறு நீதிமன்றம் ஊகித்துக் கொள்வதைத் 'துணிபு' எனலாம். இத்தகைய துணிபை எவரும் மறுப்பதற்கில்லை. ஏழுவயதிற்குக் குறைந்தவனுக்குக் 'குற்ற மனம்' உண்டு என்பதைக் காட்டும் சாட்சியம் விடுப்பதைச் சட்டம் அனுமதிப்பதில்லை. இவ்வகைத் துணிபை 'மறுக்கொணாத் துணிபு' (Irrebuttable Presumption) என்பர். சிலவகைத் துணிபுகளை மறுக்கும் வகையில் சாட்சியம் விடுவதற்குச் சட்டம் அனுமதிக்கின்றது. இதனை 'மறுக்க இயலும் துணிபு' (Rebuttable Presumption) என்று கூறுவர்.

நீதிமன்றங்களில் ஓர் உரிமையை மெய்ப்பிப்பதற்கும் குற்றத்தை மெய்ப்பிற்பதற்கும் வேறுபாடு உண்டு. உரிமையியல் வழக்கில் சாட்சியங்களை ஆராய்ந்த பின்னர் ஒரு தரப்புச் சான்றே மறுதரப்புச் சான்றை விட நம்பத்தகுந்தது என்ற அடிப்படையில் தீர்ப்பினைக் கூறிவிடலாம். ஆனால், குற்றவியல் வழக்கில், குற்றம் சாட்டப்பட்டவர் தான் குற்றத்தைச் செய்தார் என்பதை நேரிய ஐயப்பாட்டிற்குச் சிறிதும் இடமில்லாமல் (Beyond Reasonable Doubt) மெய்ப்பித்தல்

வேண்டும். ஒரு சிறிது ஐயப்பாடு தோன்றினாலும் அதன்பலன் குற்றவாளியைச் சேரும் அதன் பயனாக அந்தக் குற்றவாளி விடுதலைக்கு உரியவராகின்றார்.

**சான்றுகளின் வகைகள்**

சட்டவியல் வல்லுநர்கள் தற்காலச் சான்றின் வகைகளை நான்கு வகைகளாகப் பகுத்துக் கூறியுள்ளனர். அவை

1. நேர்நிலைச் சான்று மற்றும் சூழ்நிலைச் சான்று (Direct Evidence and Circumstantial Evidence)
2. ஆவணச் சான்று மற்றும் வாய்மொழிச் சான்று (Documentary Evidence and Oral Evidence)
3. தலைநிலைச் சான்று மற்றும் சார்நிலைச் சான்று (Primary Evidence and Secondary Evidence)
4. அகநிலைச் சான்று மற்றும் புறநிலைச் சான்று (Instrinsic Evidence and Extrinsic Evidence)[15]

என்பனவாகும். இவை தவிர,

1. தெரிநிலை மற்றும் நபர் வழங்கும் சான்று (Real and Personal Evidence)
2. மூல நிலை மற்றும் செவிவழிச் சான்று (Original and Hearsay Evidence)
3. நிலைமுறை மற்றும் ஒத்துரைச் சான்று ( Substantive and Corroborative Evidence)[17]

முதலான சான்று வகைகளையும் ஆய்வாளர்கள் சுட்டிக்காட்டியுள்ளனர். இச்சான்றுகளை 'மதிப்பிடுதல்' என்பதும், இச்சான்றுகளின் நம்பகத்தன்மையும் மிகவும் இன்றியமையாததாகும்.

**நேர்நிலைச் சான்றும் சூழ்நிலைச் சான்றும்**

ஒருவன் ஒரு பொருளைத் திருடினான் என்பதை மெய்ப்பிக்க முனையும் போது இருவகையான சான்றுகள் அதற்கு உதவுகின்றன. அவன் திருடுவதை நேரில் கண்ணால் பார்த்த ஒருவரின் சான்று. இது 'நேர் நிலைச் சான்று' அல்லது 'நேர்முகச் சான்று' (Directive Evidence)ஆகும். திருட்டு நடைபெற்ற சிறிது

*நேரத்திற்குள் அவன் கையில் திருட்டுப் பொருள் இருந்ததைப் பார்த்த ஒருவரின் சாட்சியம். இதிலிருந்து அவன் தான் திருடினான்; திருடியிருக்க வேண்டும் என ஊகிப்பதைச் 'சூழ்நிலைச் சான்று'* (Circumstantial Evidence) *எனலாம்.*

*ஆதலால், சான்றினால் மெய்ப்பிக்கப்படும் நிகழ்மை அந்த வழக்கில் மெய்ப்பிக்கப்பட வேண்டிய நிகழ்மையாக* (Fact) *அமைந்திருக்குமானால் அச்சான்று நேர்நிலைச் சான்றாகும். சான்றினால் மெய்ப்பிக்கப்பட்ட நிகழ்மையைக் கொண்டு வழக்கில் மெய்ப்பிக்கப்பட வேண்டிய நிகழ்மை பற்றி ஊகிக்க முடியுமானால் அச்சான்று சூழ்நிலைச் சான்றாகும்.*

**ஆவணச் சான்றும் வாய்மொழிச் சான்றும்**

*நீதிமன்றங்கள் சான்றெனக் கொள்ளத்தக்க ஆவணங்களை 'ஆவணச் சான்று' என்றும், சாட்சிகள் கூறும் சான்றுரைகளை 'வாய்மொழிச் சான்று' என்றும் கொள்ளலாம்."ஒரு வழக்கை வாய்மொழி அல்லது ஆவணச் சான்றுகள் கொண்டு மெய்ப்பிக்க வேண்டிய சூழல் எழுகின்றபோது இவ்விருவகைச் சான்றுகளும் அடிப்படையானதாகத் திகழ்கின்ற ஓர் ஒப்பந்தம்* (Contract) *ஆகும்".*[18] *ஊழியத்துக்கான உறவு, வீட்டு வசதிக்கான உறவு, பொருள்களைப் பெறுவதற்கும் வாங்குவதற்கான உறவுகள் போன்ற உறவுமுறைகளில் சில எழுத்து வடிவத்தில் எழுதப்பட்டு முறைப்படியாக இருதரப்பினராலும் கையொப்பம் இடப்பட்ட ஆவணங்களாகத் திகழ்கின்றன. இவையே ஆவணச் சான்றுடையனவாகின்றன. சில ஒப்பந்தங்கள் பேச்சளவில் அமைந்து விடுகின்றன. இந்த உறவுமுறையே ஒப்பந்தம்* (Contract) *ஆகும்."*[18]

*இவ்வொப்பந்தங்கள் மீறப்படும் போதும் மறுக்கப்படும் போதும் எழுதிக் கையொப்பமிடப்பட்ட பத்திரங்கள் நீதிமன்றங்களில் ஆவணச் சான்றுகளாக*

வைக்கப்படுகின்றன. ஒப்பந்தங்கள் அடிப்படையில் எழுந்த வழக்குகள் பல கிராம வழக்கு மன்றங்களில் மெய்ப்பிக்கப்பட்டுள்ளன.

**தலைநிலைச்சான்றும் சார்நிலைச் சான்றும்**

நீதிமன்றங்களின் முன்னர் வைக்கப்படும் மூல ஆவணங்கள் தலை நிலைச் சான்றாகும். அத்தகைய சான்றுகள் இல்லாத போது நீதிமன்றம் அனுமதிக்கும் ஆவணங்களின் முறையான படிவங்கள் சார்நிலைச் சான்றுகளாகக் கொள்ளப்படுகின்றன.

**அகநிலைச் சான்றும் புறநிலைச் சான்றும்**

வேறு விளக்கம் ஏதுமில்லாமல் ஓர் ஆவணத்தின் வாசகத்தில் அடங்கியுள்ள சான்று 'அகநிலைச் சான்றா'கும். அந்த ஆவணத்தைத் தவிர்த்து வேறு வெளி ஆதாரங்களைக் கொண்ட சான்று 'உறவுநிலைச் சான்றாகும்.

**சான்றுகளை மதிப்பிடுதல் (The Valuation of Evidence)**

பொதுவாகச் சான்றியல் சட்டம் இரு பகுதிகளைக் கொண்டதாகும். சான்றுகளின் சான்றுரத்தை (Probative Value) மதிப்பிடும் வகையில் உள்ள விதிமுறைகளைக் கொண்டது ஒரு பகுதியாகவும், நீதிமன்றத்தின் முன் எந்த வழிமுறையில் எத்தகைய வரம்புகளுக்குட்பட்டுச் சான்றுகள் வைக்கப்பட வேண்டும் என்ற விதிகளைக் கொண்டது மற்றொரு பகுதியாகவும் உள்ளன. அளிக்கப்படும் சான்றின் பயனைக் கூறுவது முன்பகுதியாகும். அச்சான்றுகள் அளிக்கப்படும் முறையினைக் கூறுவது பின்பகுதியாகும். இருப்பினும் இருபகுதிகளும் ஒன்றோடொன்று இணைவுடையன. குறிப்பிட்ட சான்றின் பயன் என்ன என்பதை மதிப்பிடுவதன் மூலம் தான், அச்சான்றினை எவ்வாறு நீதிமன்றத்தில் அளிக்கப்பட வேண்டும் என்ற விதிகள் வகுக்கப்படுகின்றன.

சட்டத்தில் ஒரு சான்றின் பயனை வரையறுத்துக் கூறும் விதிகள் உள்ளன. நீதிமன்றம் அச்சட்டத்தின் விதிகளை ஒட்டியே ஒரு சான்றின் பண்பையும் பயனையும் உறுதி செய்கின்றது. அந்தவிதிகளைச் சால்மண்ட் (Salmond) என்னும் சட்டவியல் அறிஞர் விளக்கிக் கூறியுள்ளார்.

இந்தியச் சான்றியல் சட்டத்தில் இத்தகைய சான்றுகள் 'தள்ளத் தக்க சான்றுகள்' (Inadmissible Evidences) எனக் கூறுப்படுகின்றன.

**நீதிமன்றத்தின் முன் சான்றினை வைத்தல்**

சாட்சிகளை (நீதிமன்றத்தில் விடப்படும் சான்றின் மதிப்பு) விசாரிக்கும் முறை என்ன? அவர்களைக் குறுக்கு விசாரணை செய்வது எவ்வாறு? என்பதற்கான விதிகள் சான்றியல் சட்டத்தில் உள்ளன. சில நேர்வுகளில் மெய்ப்பிக்கப்பட நேர்வுகளில்,மெய்ப்பிக்கப்பட வேண்டிய நிகழ்மை குறித்துத் தக்க சான்றுகள் அளிக்கக் கூடியவர்களைச் சட்டம் சான்றளிக்க அனுமதிப்பதில்லை. எடுத்துக்காட்டாக வழக்காடுபவருக்கும் அவரது வழக்குரைஞருக்கும் இடையிலே நடந்த கடிதத் தொடர்புகளைச் சான்றாக அளிக்கச்சட்டம் அனுமதிப்பதில்லை.

தாம் ஒரு குற்றவாளி என்பதை மெய்ப்பிக்கும் வகையில் எவரும் சான்றளித்தலைச் சட்டம் விலக்குகின்றது. சாட்சியாக நிற்கும் ஒருவரிடம் கேட்கப்படும் வினாவிற்கு அவர் விடை கூறினால், அவர் ஒரு குற்றம் இழைத்தவர் என்று மெய்ப்பிக்கப்படுமானால், அத்தகைய வினாவிற்கு அவர் விடை கூறுவதைச் சட்டம் அனுமதிப்பதில்லை. ஒருவருக்குத் தண்டனை விதிப்பதற்குக் கருவியாக அவரையே பயன்படுத்துதலைச் சட்டம் விலக்குகின்றது.

குற்றம் சாட்டப்பட்ட ஒருவர், அக்குற்றத்தைத் தாமே செய்ததாக நீதிமன்றத்தில் 'குற்ற ஏற்புரை' (Confession) கூறலாம். இருப்பினும் அதனை

நீதிமன்றம் ஏற்க வேண்டும் என்ற கட்டாயமில்லை. ஏதோ ஒருவகைக் கட்டாயத்தால் ஏற்பட்டதே அந்தக் குற்ற ஏற்புரை என்று ஒரு சிறிது ஐயப்பாடு தோன்றினாலும், அந்தக் குற்ற ஏற்புரையை நீதிமன்றம் புறக்கணித்து விடுகின்றது.

**கிராம வழக்கு மன்றங்களின் முன் சான்றினை வைத்தல்**

கிராம வழக்கு மன்றங்கள் சான்றுகளில் ஆவணச்சான்று, காட்சிச் சான்று என்னும் இருவகைச் சான்றுகளையும் ஏற்றுக் கொண்டு செயல்பட்டு வருகின்றன. 'ஆவணச் சான்று' என்பது எழுதப்பட்ட ஒப்பந்தம் (Contract) எனப்படும் பத்திரச் சான்றாகும். இடப்பிரச்சனை, வீட்டு மனைப் பிரச்சனை, நிலப்பிரச்சனை, வாய்க்கால் தகராறு, நடைபாதைப் பிரச்சனை, நிலங்களைப் பாகப் பிரிவினை செய்தல் போன்ற வழக்குகளில் ஆவணச் சான்றாகிய பத்திரச் சான்றுகளைப் பிரதானமாக ஏற்று அதன்படி தீர்ப்புக்களை அளித்து வருகின்றன. 'காட்சிச்சான்று' என்பது வழக்கு மன்றத்திற்கு வந்த வழக்குத் தொடர்பான ஒரு நிகழ்மையைக் கண்ணால் கண்ட நபர் மூலம் மெய்ப்பிக்கப்படும் சான்றாகும். தன் வழக்கினை மெய்ப்பிக்கும் வகையில் அமைவது நேரடிச் சான்றாகும். கிராம வழக்கு மன்றங்களில் நேரடியாகச் சென்று நேரடிச் சான்று கூறும் நபர்களை மிகுதியாக அனுமதிக்கின்றனர். வாதியும் பிரதிவாதியும் தங்கள் சாட்சிகளின் பெயர்களையோ அல்லது இருவருக்கும் பொதுவான சாட்சிகளையோ குறிப்பிடுவர். வழக்கு மன்றத் தலைவர் ஒவ்வொரு சாட்சிகளின் பெயர்களையோ அல்லது இருவருக்கும் பொதுவான சாட்சிகளையோ குறிப்பிடுவர். வழக்குமன்றத் தலைவர் ஒவ்வொரு சாட்சியாக நேரடியாக விசாரிப்பார். கிராம வழக்கு மன்றங்களில் பொய்ச் சான்று கூறுவோர் கடுமையாகத் தண்டிக்கப்படுவர்.

நீதிமன்றத்தில் சான்றுரைக்கும் ஒருவர் உண்மை பேசுகின்றரா? என்பதைக் காண்பதற்கு எந்த வகை உத்தியும் பயன்படுவதில்லை. ஆதலால் சான்று உரைப்பதற்கு முன் ஒவ்வொரு சாட்சியும் தாம் உண்மையையே கூறுவதாக

உறுதிமொழி எடுக்கின்றனர். பெரும்பாலும் இந்த உறுதிமொழி கடவுள் பெயரால் எடுக்கப்படுகின்றது. நம் நாட்டு நீதிமன்றங்களில் பொய்ச் சான்று கூறுவோர் மீது கடுமையான சட்டம் இல்லை.

**நீதிமன்ற எல்லை**

வாதியால், தொடுக்கப்படுகின்ற வழக்கின் தன்மைக்கேற்பவும், வாதி, பிரதிவாதி ஆகியோரின் இருப்பிடத்திற்கேற்பவும் வழக்கை விசாரிக்கும் நீதிமன்றம் நிர்ணயிக்கப்படும். இந்த வழக்கு இந்த எல்லையிலுள்ள நீதிமன்றம் தான் சரியானது என்பதைச் சட்ட நடைமுறைகள் அறிவிக்கின்றன.[19] அவ்வாறு சட்ட நடைமுறைகளால் வழக்கிற்கான நீதிமன்றத்தை நிர்ணயம் செய்வதையே அவ்வழக்கிற்கான நீதிமன்ற எல்லை எனலாம்.

**கிராம வழக்கு மன்றங்கள் எல்லை நிர்ணயம்**

கிராம வழக்கு மன்றங்களில் வழக்கு மன்றத்தின் எல்லையாக வழக்கு மன்றம் கூடும் ஊர்ப் பொது இடத்தை வழக்கு மன்றத் தலைவராகிய நாட்டாமையும் வழக்கு மன்ற உறுப்பினர்களும் தேர்ந்தெடுத்து அறிவிப்பர். வாதி, பிரதிவாதி, ஆகிய இருவரின் சாட்சியங்கள் பற்றிய விசாரணைக்கு ஏற்ற இடமாக அவர்கள் வாழுகின்ற ஊர்களில் கிராம வழக்கு மன்ற எல்லைகளே அமைந்திருக்கின்றன.

**மறுவிசாரணையும் மேல்முறையீடும்**

சட்டப்படி அல்லது மேல் நீதிமன்ற ஆணைப்படி, ஒரு நீதிமன்றத்தின் நீதிபதி ஒரு வழக்கில் ஆய்ந்து கண்ட முடிவுகளைத் தீர்ப்புரையாகக் (Judgement) கூறியதை மீண்டும் மற்றொரு நீதிமன்றத்தில் (மாவட்ட நீதிமன்றம், உயர்நீதிமன்றம், உச்ச நீதிமன்றம் முதலியன) அந்த வழக்கின் தீர்ப்புரையை அந்த வழக்குத் தொடர்பான ஆய்வினைச் செய்வதை 'மறுவிசாரணை' எனலாம். கீழ் நீதிமன்றங்களின் தீர்ப்புரைகளால் பாதிக்கப்பட்ட வாதி, பிரதிவாதி, ஆகிய இருவரும் மேல் நீதிமன்றங்களில் மேல் முறையீடு செய்யலாம். ஒரு வழக்கின் தீர்ப்பில் மனநிறைவு

அடையாத வாதி மேல் நீதிமன்றங்களில் முறையீடு செய்யலாம். ஒரு வழக்கின் தீர்ப்புரையால் பெரிதும் பாதிக்கப்பட்டுத் தண்டனைக்குள்ளான அல்லது தண்டிக்கப்படுவதாகக் கருதிய பிரதிவாதியும் மேல் நீதிமன்றங்களில் முறையீடு செய்யலாம். நீதிமன்றங்களில் இத்தகைய சட்ட முறைகள் பின்பற்றப்பட்டு வருகின்றன.

**கிராம வழக்கு மன்றங்களில் மறுவிசாரணையும் மேல்முறையீடும்**

கிராம வழக்கு மன்றங்களில் பெரும்பாலும் உண்மையான அல்லது சரியான நீதிகள் வழங்கப்பட்டு வருகின்றன. குற்றவாளிகள் பெரும்பாலும் தப்பிக்க வாய்ப்பில்லை. கிராம வழக்கு மன்றங்களில் குடும்ப வழக்கு மன்ற அமைப்பில் தீர்க்கப்படாத வழக்குகள் பின்னர் சாதி வழக்கு மன்ற அமைப்பிலும், சாதி வழக்கு அமைப்பில் தீர்க்கப்படாத வழக்குகள் ஊர் வழக்கு மன்ற அமைப்பிலும், ஊர் வழக்கு மன்ற அமைப்புகளில் தீர்க்கப்படாத வழக்குகள் கிராம வழக்கு மன்ற அமைப்புகளிலும் மேல்முறையீடு செய்து, மறு விசாரணைக்கு உட்படுத்தி விவாதிக்கப்பட்டு முடிவெடுக்கப்படுகின்றன.

**தீர்ப்பும் தீர்ப்பினை நிறைவேற்றுதலும்**

"நீதிமன்றத்தில் தொடுக்கப்பட்ட வழக்கினை விசாரித்து நீதிபதிகளால் வழங்கப்படும் நீதிமுறையே 'தீர்ப்பு' எனப்படும். இந்தத் தீர்ப்பினை வாதியோ, எதிர்வாதியோ ஏற்று அதன்படி நடக்க வேண்டும். அப்படி அவர்கள் நடக்காதபோது அரசு சட்டத்தின் துணை கொண்டு அத்தீர்ப்பினை நிறைவேற்ற உதவி செய்யும்.[20] அப்பொழுது காவல்துறையினரின் (Police) தலையீடும், நீதிமன்றத் தீர்ப்பின்படியான தண்டனையும் வாதிக்கோ அல்லது பிரதிவாதிக்கோ நிறைவேற்றப்படும்.

**இக்கால நீதிமன்ற நடைமுறைகள்**

**சிவகங்கை மாவட்டக் கிராம வழக்கு மன்றங்களின் நடைமுறைகள் ஒப்பீடு**

*சிவகங்கை மாவட்டக் கிராம வழக்கு மன்றங்கள், சான்றுகளில் ஆவணச் சான்று, காட்சிச்சான்று, என்னும் இருவகைச் சான்றுகளையும் ஏற்றுக் கொண்டு செயல்பட்டு வருகின்றன. 'ஆவணச் சான்று' என்பது எழுதப்பட்ட ஒப்பந்தம்* (Contract) *எனப்படும் பத்திரச் சான்றாகும். இடப்பிரச்சனை, வீட்டுப்பிரச்சனை, நிலப்பிரச்சனை, வாய்க்கால் தகராறு, நடைபாதைப் பிரச்சனை, நிலங்களைப் பாகப்பிரிவினை செய்தல் போன்ற வழக்குகளில் ஆவணச் சான்றாகிய பத்திரச்சான்றுகளைப் பிரதானமாக ஏற்று அதன்படி தீர்ப்புக்களை அளித்து வருகின்றன. 'காட்சிச் சான்று' என்பது வழக்கு மன்றத்திற்கு வந்த வழக்குத் தொடர்பான ஒரு நிகழ்மையைக் கண்ணால் கண்ட நபர் மூலம் மெய்ப்பிக்கப்படும் சான்றாகும்.*

*தன் வழக்கினை மெய்ப்பிக்கும் வகையில் அமைவது 'நேரடிச் சான்றாகும்' கிராம வழக்கு மன்றங்களில் நேரடியாகச் சென்று சான்று கூறுதல் நேரடிச்சான்றாகும். இம்மாவட்ட கிராம வழக்கு மன்றங்களில் இந்த வகையான நேரடிச் சான்று கூறும் நபர்களை மிகுதியாக அனுமதிக்கின்றனர்.*

*நீதிமன்றத்தில் அளிக்கப்படும் சான்றுகளை விளக்கமாக எடுத்துரைப்பதும் அவற்றின் தன்மையான நீதிபதியும் பிறரும் தெளிவாக அறியுமாறு எடுத்துக் கூறுவதும் நீதிமன்றத்திலுள்ள எழுத்தரின் பணியாகும். கிராம வழக்கு மன்றங்களில் இப்பணிகளை ஓடும்பிள்ளையாகிய பண்டாரமே கவனித்துக் கொள்கின்றார். பறையர் இனக் கிராம வழக்கு மன்றங்களில் 'வாரியன்' எனப்படும் 'தோட்டியும்' பிறவழக்கு மன்ற உறுப்பினர்களும் கவனித்து வருகின்றனர். "குறித்த காரியத்தை முன்னிட்டு நீதிமன்றத்திற்கு வரும்படி நீதிமன்ற அலுவலகத்திலிருந்து ஒருவருக்கு*

விடப்படும் கட்டளையை 'அழைப்பாணை' (Summons) என்பர்''.[21] இதற்கு ஒத்த செயலைக் கிராம வழக்கு மன்றங்களில் ஓடும்பிள்ளையாகிய பண்டாரம், கிராம வழக்கு மன்றக் கூட்டத்திற்கு அனைவரும் வந்து கலந்து கொள்ளுமாறு 'அழைப்பு விடுத்தல்' அமைந்திருப்பதைக் குறிப்பிட இடமுண்டு.

இந்த வழக்கிற்கு இந்த எல்லையிலுள்ள நீதிமன்றம் தான் சரியானது என்பதைச் சட்ட நடைமுறைகள் அறிவிக்கின்றன. கிராம வழக்கு மன்றங்களில் இதே போன்று வழக்கு மன்றத்தின் எல்லையாக வழக்கு மன்றம் கூடும் ஊர்ப் பொது இடத்தை வழக்கு மன்றத் தலைவராகிய நாட்டாமையும், கிராம வழக்கு மன்ற உறுப்பினர்களும் தேர்ந்தெடுத்து அறிவிப்பதைக் குறிப்பிடலாம். வாதி, பிரதிவாதி, ஆகிய இருவரின் சாட்சியங்கள் பற்றிய விசாரணைக்கு ஏற்ற இடமாக அவர்கள் வாழுகின்ற ஊர்களின் கிராம வழக்கு மன்ற எல்லைகளே அமைந்திருக்கின்றன.

கீழ் நீதிமன்றங்கள் வழங்கிய தீர்ப்புரைகளை 'மறுவிசாரணை' செய்யுமாறு வாதியோ, பிரதிவாதியோ, மேல் நீதிமன்றங்களில் முறையீடு செய்கின்றனர். அதன்படி அவ்வழக்கு மறுவிசாரணை செய்யப்படுகின்றது. வழக்கினை மறு ஆய்வு செய்யும் போது கீழ் நீதிமன்றங்கள் வழங்கிய தீர்ப்புரைகளும் மாற்றமடைகின்றன. இதனைப் போன்றே கிராம வழக்கு மன்றங்களிலும் குடும்ப வழக்கு மன்ற அமைப்பில் தீர்க்கப்படாத வழக்குகள் பின்னர் சாதி வழக்கு மன்ற அமைப்பிலும், சாதி வழக்கு மன்ற அமைப்பில் தீர்க்கப்படாத வழக்குகள் ஊர் வழக்கு மன்ற அமைப்பிலும், ஊர்வழக்கு மன்ற அமைப்புகளில் தீர்க்கப்படாத வழக்குகள் கிராம வழக்கு மன்ற அமைப்புகளிலும் விவாதிக்கப்பட்டு முடிவெடுக்கப்படுகின்றன. அவ் வழக்கிற்குத் தக்க முறையில் தீர்ப்பு வழங்கப்பட்டு வருகின்றது.

நீதிமன்றங்களின் தீர்ப்புகள் (Judgement) நீதியின் அடிப்படையிலேயே அளிக்கப்படுகின்றன என்பது உண்மைதான், எனினும் அத்தீர்ப்புகளில் மட்டும் 'நீதி'

என்பது அடங்காது. ஒரு செயல் ஒழுக்கத்தை ஒட்டியதாகவும் நன்மை பயப்பதாகவும் சட்டப்படியானதாக இருப்பினும் அது நீதியை ஒட்டியதாக இருக்க வேண்டுமென்ற நியதி இல்லை. மக்களிடையேயுள்ள உறவு, நீதியின் நேர்மையின் அடிப்படையில்தான் அமைந்து இயங்குகின்றது. அவ்வாறு இயங்காத பொழுது தான் நீதிமன்றங்களின் தலையீடு எழுகின்றது. நீதிமன்றத்தினர் தங்கள் தீர்ப்புகளின் வாயிலாக நீதியை வழங்குகின்றனர். ஆதலால் நீதிமன்றத்தினர் 'நீதி வழங்குவோர்' என்கின்றனர். அவர்களை 'நீதியைப் படைப்போர்' என்று கூறுவதில்லை. நெஞ்சத்தின் நீர்மையே நேர்மையாகும். நடுவுநிலைமையே நீதியாகும்.

சட்டமன்றங்களால் சட்டங்கள் இயற்றப்படும் வளர்ந்து வரும் நாடுகளிலும் கூட, நீதிமன்றங்களாலும் சட்டங்கள் உருவாகின்றன. இதனைத் தவிர்க்க முடிவதில்லை. நீதிமன்றங்களின் முன்னர் பல்வேறு வகைப்பட்ட வழக்குகள் தீர்வுகளுக்கு வருகின்றன. இயற்றுமுறைச் சட்டங்களைச் செல்லுறுத்தும் வகையில் தான் அந்த வழக்குகள் தீர்க்கப்பெறுகின்றன. இயற்றப்பட்ட சட்டங்களில் அனைத்து வழக்குகளையும் தீர்ப்பதற்கு விதிமுறைகள் இல்லை. இந்நிலையில் தகுந்த சட்டக் கொள்கைகளை (Legal Principal) நீதி மன்றங்களே வகுத்து அவற்றின்படி, அவ்வழக்குகளில் தீர்ப்புக்களைக் கூறுகின்றன. இவ்வாறு, தீர்ப்புக்களில் எழும் சட்ட நெறிகளே 'தீர்ப்பு நெறி' ஆகும். பின்வரும் வழக்குகளில் சொல்லப்பட்ட தீர்ப்பு நெறிகளைப் பின்பற்றுகின்றனர். இதனை 'முன் தீர்ப்பு நெறி' (Precedent) என்று குறிப்பிடுகின்றனர். சட்ட நெறியைப் போன்றே நீதிமன்றங்களால் 'முன் தீர்ப்பு நெறியும்' செல்லுறுத்தப்படுகின்றன. இம்முறையில் நீதிமன்றங்களால் வகுக்கப்பெறும் சட்ட நெறியினை 'தீர்ப்பு நெறிச் சட்டங்கள்' (Judgemade Law) எனக் கருத இடமுண்டு.

நீதிமன்றங்களில் தொடுக்கப்பட்ட வழக்குகளை விசாரித்து நீதிபதிகளால் வழங்கப்படும் தீர்ப்புகளை வாதிகளும் பிரதிவாதிகளும் ஏற்று நடக்க வேண்டும். அப்படி நடக்காத பொழுது அரசாங்கம் காவல் துறையினரின் துணைகொண்டு நீதிமன்றங்கள் அத்தீர்ப்புகளை நிறைவேற்ற உதவி செய்யும். கிராம வழக்கு மன்றங்களில் ஊர் (கிராம) வழக்கு மன்றத் தலைவர்களாகிய நாட்டாமை, பெரிய அம்பலகாரர், அம்பலகாரர் ஆகியோர் வழக்குகளை விசாரித்துத் தீர்ப்புகளை வழங்குகின்றனர். ஊர்க்கட்டுப்பாடு, கிராமப் பொது நலன் ஆகியனவற்றைக் கருத்தில் கொண்டு நடக்க வேண்டும். இல்லையெனில் அவர்களுக்கு ஊரைவிட்டு ஒதுக்கி வைத்தல் முதலான தண்டனைகள் வழங்கப்பெறும்.

கிராம வழக்கு மன்றங்களில் நீதிமன்றங்களைப் போன்று 'தீர்ப்பு நெறிச் சட்டங்கள்' எழுதிவைக்கப்பட்ட சட்டங்கள் (Written Law) ஏதும் இல்லை. பரம்பரையாக மூத்த வாரிசு அடிப்படையில் தீர்ப்புகளை வழங்கும் 'நாட்டாமை'' பெரிய அம்பலகாரர்' 'அம்பலகாரர்' முதலான பட்டங்களைப் பெற்றவர்கள் தீர்ப்புகளை அளித்து வருகின்றரர்கள். அவர்கள் ஒழுக்கமும் நன்னடத்தையும் கொண்டவர்களாக இருக்க வேண்டும். அவர்கள் தங்கள் அனுபவங்களின் அடிப்படையிலும் அனுமானத்தின் அடிப்படையிலும் 'நடுவு நிலைமை' தவறாது தக்க தீர்ப்புகளை அளித்து வருகின்றனர். அத்தீர்ப்புகள் நீதிமன்றத் தீர்ப்புகளுக்கு இணையானதாக அமைந்திருக்கின்றன.

## கிராம வழக்கு மன்றங்களின் நன்மை தீமைகள்

மனிதனின் ஒவ்வொரு செயலிலும் நன்மை, தீமை ஆகிய இரு விளைவுகள் உண்டு. கிராமியச் சூழலில் பொது நோக்கில் ஏற்படுத்தப்பட்ட கிராம வழக்கு மன்ற அமைப்புகளில் நன்மை அதிகமாகவும் தீமை குறைவாகவும் இருக்கின்றன. பொது

நிலையில் கிராம வழக்கு மன்றங்கள் அமைப்பு முறையில் மக்கள் சாதி, ஊர் நலனை அடிப்படையாகக் கொண்டு ஏற்படுத்தப்பட்ட அமைப்பாகும்.

**நன்மைகள்**

மனித நடவடிக்கைகள் மற்றும் செயற்பாடுகள் ஒவ்வொன்றும் அவர்களது பொருளாதார இருப்பு நிலையை அடிப்படையாகக் கொண்டு அமைகின்றது. கிராமங்களிலேயே வழக்குகள் தீர்க்கப்படுவதால் வழக்குரைஞர் நீதிமன்றம் என வெளியிடங்களுக்குச் செல்ல வேண்டிய நிலையும் அதனால் ஏற்படும் பொருளதார இழப்பும், கால விரயமும் கிராம வழக்கு மன்றங்களின் தீர்ப்புகளால் தவிர்க்கப்படுகின்றன. வழக்குகள் நீதிமன்றங்களுக்குச் செல்லும் போது பல்வேறு சாட்சியங்களை விசாரணை செய்வதாலும் வாய்தா வழங்குவதாலும் அவ்வழக்குகளுக்குத் தீர்வுகள் கிடைக்க நீண்ட நாட்கள் ஆகின்றன. கிராம வழக்கு மன்றங்களில் வழக்குகளுக்கு உடனடித் தீர்வுகள் கிடைப்பதால் மேற்கண்ட பிரச்சனைகள், சிக்கல்கள் இல்லை.

குற்றமற்ற ஊர்களாக நிருவகிப்பதற்குக் கிராம வழக்கு மன்றங்கள் உதவுகின்றன. ஒருவன் தான் செய்யும் குற்றத்தைத் தவறு என உணரும் வரையில் மேலும் மேலும் குற்றங்களைச் செய்யும் வாய்ப்பு உண்டு. தவறான வழியில் செல்லும் மனிதனைத் தடுத்து நிறுத்தும் மிகப் பெரிய சக்தியாகக் கிராம வழக்கு மன்றம் அமைகின்றது. இம்மன்றம் தனிமனிதனைத் தவறு செய்வதிலிருந்து தடுப்பதோடு, அவன் செய்த குற்றத்தை உணரவும் மீண்டும் அந்தத் தவற்றைச் செய்யாமலிருக்கவும் வழிவகை செய்கின்றது. கிராம வழக்கு மன்றங்கள் செய்யும் இப்பணியைத் தான் நீதிமன்றங்களும் சிறைச்சாலைகளும் செய்கின்றன.

கிராம நீதிமன்றங்களாகச் செயல்படும் கிராம வழக்கு மன்றங்கள் தனிமனிதத் தவறுகளைத் திருத்தும் பணியை அறிவுரை கூறி மன்னித்து விடுதல், குற்றவாளி

கிராம வழக்கு மன்றத்தாரிடம் மன்னிப்புக் கேட்டல், குற்றவாளி கடவுளின் பெயரால் சத்தியப்பிரமாணம் செய்தல், வழக்கு மன்றத்தார் குற்றவாளிகளுக்குத் தண்டத் தொகை விதித்தல், கிராமக் கோயிலுக்கு விளக்குப் போடச் சொல்லுதல், கிராம வழக்குமன்றத் தீர்ப்புகளுக்குக் கட்டுப்பட மறுப்பவர்களை ஊரைவிட்டு ஒதுக்கி வைத்தல், ஊரைவிட்டு வெளியேற்றுதல் முதலான தண்டனைகள் மூலம் திருத்தும் பணியைச் செய்கின்றன.

தவறு செய்தவன் தண்டிக்கப்பட்டாலும்,பாதிக்கப்பட்டவன் மீண்டும் பாதிப்புக்குள்ளாகாமல் தடுக்கப்பட வேண்டும் என்பது சட்டத்தின் நீதிமுறை ஆகும். கிராம வழக்கு மன்றங்களில் பாதிப்புக்குள்ளானவர் தனக்குப் பாதிப்பினை ஏற்படுத்தியவருக்குத் தண்டனை கொடுக்க இயலாத நிலையில் நியாயம் வேண்டிக் கிராம வழக்கு மன்றத்தை நாடுகின்றார். அவ்வாறு பாதிக்கப்பட்டவர்களுக்கு நியாயம் வழங்குதல் கிராம வழக்கு மன்றங்களின் கடமையாகும்.

தவறு செய்வது தனிமனிதனின் இயல்பு என்றாலும் அத் தவற்றினை உணர்ந்து திருந்தி வாழ மனிதனுக்கு வாய்ப்பும் வழியும் காட்ட வாயில்கள் தேவை. அவ்வாயிலாகக் கிராம வழக்கு மன்றங்கள் திகழ்கின்றன. தவறு செய்தவர்களைத் தண்டித்துத் திருத்துவது சமுதாயம் மற்றும் அரசின் கடமையாகும். நல்ல சமுதாயத்தை உருவாக்கத் தவறுகளையும் குற்றங்களையும் களைய வேண்டும். தவறுகளையும் குற்றங்களையும் செய்த மனிதர்களைத் திருத்திக் குற்றமற்ற மக்கள் வாழும் சமூகமாக கிராம மக்கள் வாழ்ந்திட இவ்வமைப்புத் தேவையாகின்றது. கிராமங்களில் ஊர்த் திருவிழாக்கள், தெய்வ வழிபாடுகள் போன்ற நிகழ்வுகள் அனைத்துச் சமுதாய மக்களையும் இணைக்கும் பாலமாகத் திகழ்கின்றன. இம்மன்றங்கள் குடும்ப ஒற்றுமையையும் சிற்றூர்களின் ஒற்றுமையையும் நிலை நாட்டி வருகின்றன. கிராமங்களில் ஒழுக்கக்கேடுகள் போன்ற விரும்பத்தகாத நிகழ்வுகளால் ஒற்றுமையுணர்வு சிதையும் போதும் அவற்றைத் தடுத்து நிறுத்தும்

சக்தியாகத் திகழ்கின்றன. 'ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்' என்ற பழமொழிக்கேற்ப வழக்கு மன்றங்கள் கிராமிய மக்களின் ஒற்றுமை உணர்வின் இன்றியமையாமையை உணர்ந்து, ஊர் மக்களின் நலனுக்காகக் குடிநீர்ப் பிரச்சனை, கோயில் பிரச்சனை போன்றவைகளையும் தீர்த்து வைத்து வருகின்றன.

பெண்களுக்கு ஏற்படும் பழிச்சொல்லுக்குக் காரணமானவர்களைக் கண்டித்து அவர்களுக்குத் தண்டனை கொடுக்கின்றன. குடும்பப் பிரச்சனைகளைச் சுமுகமாகத் தீர்த்து வைக்கின்றன. பாகப்பிரிவினைப் பிரச்சனைகளில் நியாயமான முறையில் சொத்துக்களைச் சேர வேண்டியவர்களுக்குப் பிரித்துக் கொடுக்கின்றன. கிராம வழக்கு மன்றங்களில் வழக்குகள் மனிதநேய அடிப்படையில் தீர்த்து வைக்கப்படுகின்றன.

கிராம வழக்கு மன்றங்களில் தீர்ப்புகள் சமரசமான அல்லது சமாதான முறையில் தான் வழங்கப்படுகின்றன. குற்றம் செய்தவர்க்குத் தண்டனையாகப் பெரிய தொகை அபராதமாக விதிக்கபட்டுவிட்டால் அவர் கிராம வழக்கு மன்றத்தார் முன்னிலையில் அவையைக் கும்பிட்டு விழுந்து வணங்கி மன்னிப்புக் கேட்பதன் மூலம் அபராதத் தொகை குறைக்கப்படுகின்றது. இம்மாவட்ட வழக்கு மன்றங்கள் சீர்திருத்தங்களைச் செய்து வைக்கின்றன.

**தீமைகள்**

சாதிய, கிராமக் கட்டுக்கோப்பு என்ற அடிப்படையில் ஏற்படுத்தப்பட்டுள்ள கிராம வழக்கு மன்றங்களில் தீமைகளும் இருக்கின்றன. 'வல்லான் வகுத்ததே வாய்க்கால்' என்ற பழமொழிக்கேற்ப, சில வேளைகளில் நிலவுடைமையாளர்களுக்கும் வசதிபடைத்தவர்களுக்கும் சாதி அடிப்படையிலும் நீதி வழங்கப்பட்டுவிடுவதும் உண்டு. கிராம வழக்கு மன்றங்களில் உயர்ந்த, தாழ்ந்த சாதிகள் எனப் பல சாதிய

அமைப்புகள் இடம்பெறுகின்றன. சில வேளைகளில் வழக்குகளில் தாழ்த்தப்பட்ட சாதிக்காரர்களுக்கு முறையாக நீதிவழங்கப்படுவது இல்லை.

தாழ்த்தப்பட்ட சாதியப்பெண்கள் தவறு செய்தால் கடுமையான தண்டனைகளைக் கொடுத்துக் கட்டாயப்படுத்துகின்றார்கள். உயர்ந்த சாதிக்காரர், தாழ்த்தப்பட்ட இனப் பெண்ணைக் காதலித்துத் திருமணம்செய்து கொண்டதற்காக மிக அதிகமான தண்டனையைக் கொடுக்கின்றார்கள். வழக்கு மன்றங்களின் தலைவர்களாகிய தீர்ப்புச் சொல்லும் 'நாட்டாண்மைக்காரர்கள்' தாங்கள் விரும்பியவாறு தீர்ப்புக்களை வழங்கி மிகக் கடுமையான தண்டனைகளும் கொடுப்பதுண்டு. அவர்களின் கட்டுப்பாட்டிற்காகத் தவறாகக் குற்றம் சாட்டப்பட்டவர்கள் அத்தீர்ப்புகளை ஏற்று நடக்க வேண்டிய சூழ்நிலை ஏற்படுகின்றது. இருப்பினும் கிராம வழக்கு மன்றங்களினால் நன்மைகளே அதிகம் ஏற்படுகின்றன என்பதை மறுப்பதற்கில்லை.

## இன்றைய நீதிமன்றச் சட்டநெறியும் அன்றைய அறநெறியும்

சட்டங்களுக்கெல்லாம் பொதுவான ஒழுங்கு முறைகளே 'சட்ட நெறிமுறை' ஆகும். சமுதாயத்தில் வாழும் மக்களின் நலன்களைப் பேணிக்காக்கும் நோக்குடன் இயங்குவதே சட்டநெறியாகும். இதனைப் போன்றே அறத்தை ஒட்டிய ஒழுங்கு முறையினை 'அறநெறிமுறை' என்றும், ஒழுக்கத்தை ஒட்டிய ஒழுங்குமுறையினை 'ஒழுக்க நெறிமுறை' என்றும் கூறுவர். அறம் நன்மையைப் பெருக்குகின்றது. சட்டம் தீமையை ஒடுக்குகின்றது. அறம் தனிமனிதப் பண்பினை உயர்த்துகின்றது. சட்டம் சமுதாய நலப்பண்பினைக் காக்கின்றது. அறம் அறிவுறுத்துகின்றது, சட்டம் அச்சுறுத்துகின்றது. அறம் மாறாத விதிகளைக் கொண்டது, சட்டம் மாறும் விதிகளைக் கொண்டது.

இந்திய நாட்டு அரசமைப்பின் 141 வது பிரிவு, உச்ச நீதிமன்றத்தின் (Supreme Court) தீர்ப்புக்கள் இந்தியாவின் இதர நீதிமன்றங்களைக் கட்டுப்படுத்துவன என்று விதிக்கின்றது. உயர்நீதிமன்றங்களின் தீர்ப்புகள் அதன் கீழுள்ள மற்ற நீதிமன்றங்களைக் கட்டுப்படுத்துவன. கிராம வழக்கு மன்றங்களின் தீர்ப்புகள் எத்தகைய கட்டுப்பாட்டிற்கும் உட்பட்டன அல்ல.

பழக்கம் வழக்கம் ஆகின்றது, பலர்பல நாள் நடந்துசென்ற தடம் பாதையாவது போல பல நாள் செய்யப்பட்ட செயல்கள் வழக்கம் ஆகின்றன. சமுதாயத்தின் நேர்மையுணர்வு, சூழ்நிலைத் தேவைகள், சமயக் கோட்பாடுகள் போன்றவைகளுக்கேற்ப, வாழ்க்கையின் பல கூறுகளின் செயற்பாடுகள் நாளடைவில் ஒழுங்குறுத்தப்படுகின்றன. இவ்வாறு ஒழுங்குறுத்தப்படும் செயல்களே வழக்க நெறியாகப் (Custon) பின்பற்றப்படுகின்றன. காலம் செல்லச் செல்ல வழக்க நெறிகளை மக்கள் புனித நெறிகளாகப் பேணிக் காக்கின்றனர். மக்களின் உணர்வோட்டமும் உள்ளப்போக்கும் அவர்களிடையே நிலவும் வழக்க நெறியிலே வெளிப்படுகின்றன. வழக்க நெறியிலிருந்து வழுவாமையே ஒழுக்க நெறியாகக் கருதப்படுகின்றது.

"அரசுமுறை தோன்றிச் சட்டங்கள் இயற்றப்படுவதற்கு முன், சமுதாய மக்களின் வாழ்க்கையை ஒழுங்குறச் செய்தது வழக்க நெறியே ஆகும். பழங்காலத்தில் வழக்க நெறியை அடிப்படையாகக் கொண்டே நீதி வழங்கப்பட்டது. வழக்க நெறிக்கு மாறாக நடந்தவர்கள் தண்டிக்கப்பட்டனர்[22] என்பது நோக்கத்தக்கது. இம்முறையிலேயே கிராம வழக்கு மன்றங்களின் இன்றைய நீதி வழங்கும் முறையும் அமைந்திருக்கின்றது.

"தண்டமாவது அவ்வொழுக்க நெறியினும் வழக்கு நெறியினும் வழிஇனாரை அந்நெறி நிறுத்தற்பொருட்டு ஒப்பநாடி அதற்குத் தக ஒறுத்தல்"[23] என்று

பரிமேலழகர் திருக்குறளில் உரைப்பாயிரத்தில் கூறியிருப்பதிலிருந்து முற்காலத்தில் வழக்க நெறியினின்றும் வழுகியவர்கள் தண்டிக்கப்பட்டனர் என்பது தெளிவாகின்றது.

நம் செயல்களுக்கு மூலமாகச் 'சிந்தனை' இருப்பதால், நம் மனத்தைத் தூய்மைப்படுத்த முயல்கின்றது 'அறம்'. இதனைத் திருக்குறள்.

"மனத்துக்கண் மாசு இலனாதல் அனைத்து அறன்"[24]

என்று குறிப்பிடுகின்றது. மனத்தால் எவருக்கும் தீமை செய்தலாகாது. அதுவே சிறந்த அறமாகும் என்ற கருத்து ஈண்டு உணர்த்தப்பட்டுள்ளது. அதனையே,

"எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானாம்
மாணாசெய் யாமை தலை"[25]

என்ற குறளும் வலியுறுத்துகிறது. மனம் பொருந்தி எவருக்கும் தீமை செய்யக்கூடாது என்பதே திருக்குறள் குறிப்பிடும் அறநெறியாகும். 'குற்றமனமின்றிக் குற்றம் இல்லை' என்பது அறநெறியை ஒட்டியெழும் சட்டநெறியாகும். குற்றவியல் மனநிலைக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கும் வகையில் 'அறநெறி' படிப்படியாகச் சட்ட விதியென உருவெடுத்துள்ளது.

பண்டைத் தமிழ் இலக்கியங்களில் 'சட்டம்' என்ற சொல்லாட்சி இடம்பெறவில்லை. ஆனால் சட்டம் என்ற சொல் இந்நாளில் எக்கருத்துக்களை உள்ளீடாகக் கொண்டுள்ளதோ அதே கருத்துக்களைக் குறிக்கும் வகையில் 'அறம்' என்ற தமிழ்ச்சொல் பழந்தமிழ் இலக்கியங்களில் பயின்று வந்துள்ளது. 'சட்டத்தின் பயன் நீதி' என்றும் 'நீதியின் கருவியே சட்டம்' என்றும் விளங்கப்படுகின்றது. The Law (சட்டநெறி) Justice (நீதி) என்ற இரு சொற்களும் வேறுபட்ட பொருள்களைச்

சுட்டுவன அல்ல. 'சட்டத்தின் பயன் நீதி' 'நீதியின் பண்பு சட்டம்'. ஒரே பொருளின் 'பண்பைக் குறிப்பதாகச் சட்டம்' என்ற சொல்லும் பயனைக் குறிப்பதாக 'நீதி' என்ற சொல்லும் அமைகின்றன. இவ்விரு சொல்லும் வெவ்வேறாக இருந்தாலும் அச்சொற்களின் உட்பொருள் ஒன்றே ஆகும்.

'அறம்' என்ற சொல் பண்டைத் தமிழ் இலக்கியங்களில் ஒழுக்க நெறியினையும் நீதிநெறியினையும் ஒருங்கே குறித்து வந்துள்ளது. நீதி வழங்கும் அவையத்தினை 'அறங்கூறவையம்' என்றும், தனிமனிதனின் ஒழுக்கத்தை 'அறம்' என்றும் பழந்தமிழ் இலக்கியங்கள் குறிக்கின்றன. இப்பிறவியில் அறம்புரிந்தால், இறந்த பின் நற்கதி கிடைக்கும் என்ற கொள்கையினைப் பண்டைத்தமிழ்ச் சான்றோர்கள் ஏற்கவில்லை. அக்கொள்கையினை அறத்தை விலைபேசும் வணிகம் என்று கண்டித்துள்ளனர்.

''இம்மைச் செய்தது, மறுமைக்கு ஆம்எனும்
அறவிலை வணிகன் ஆய்வுலன்''[26]

என்று 'ஆய்' என்ற சங்க கால வள்ளலை முடமோசியார் என்னும் சங்கப் புலவர் பாடியிருப்பது இதற்குத் தக்க சான்றாகும். ஆதலால் இவ்வுலக இன்ப வாழ்விற்கு ஏற்ற நெறிகளையே அறநெறிகளாகப் பழந்தமிழ்ச் சான்றோர்கள் கொண்டுள்ளனர்.

மேலை நாட்டுச் சட்ட அறிஞர்கள் பலரும் 'அறம்' என்ற பொருளில் பயன்படும் Justice என்ற ஆங்கிலச் சொல்லின் உட்பொருளை விளக்கும் வகையில் ஆய்வு நூல்கள் பலவற்றை எழுதியுள்ளனர். மனித சமுதாயத்தின் பொதுவான நல்வாழ்விற்கு ஏற்ற வகையில் ஒருவனின் நடத்தை அமைதல் வேண்டும் என்பதையே அறநெறி போதிக்கின்றது. இன்பம் அளிக்கும் ஈதலும் இன்னா

செய்யாமையும் 'அறம்' எனப் போற்றப்படுகின்றன. மனித இனத்தின் இயல்பான இன்பவேட்கையே அறநெறிக்கு அடிப்படையாகும்.[27]

மனிதனுக்கு என்றுமுள்ள இன்பவேட்கையே அறவேட்கையாக அமைகின்றது என்கிறார் மேலை நாட்டுச் சட்ட நூலறிஞர் கெல்சன். இதனைத் திருவள்ளுவர்,

> ''அறத்தான் வருவதே இன்பம் மற்றெல்லாம்
> புறத்த புகழும் இல''[28]

எனக் குறிப்பிட்டுள்ளார். 'இன்பம் பயப்பது அறம்' எனக் குறிப்பிடாமல் 'அறம் எதைப் பயக்கின்றதோ அது மட்டுமே இன்பமாகும்' என வள்ளுர் சுட்டிக்காட்டியிருப்பது மனங்கொள்ளத் தக்கதாகும். 'அறம் இன்றி இன்பம் இல்லை'என்பது வள்ளுவர் வாக்கு என்பது தெளிவாகின்றது. அறத்தால் விளையும் இன்பம் 'சமுதாய இன்பம்' (Social Happiness) எனச் சட்டவியல் வல்லுநர்கள் குறிப்பிடுவதையே திருவள்ளுவரும் குறிப்பிட்டுள்ளார். 'புகழார்ந்த இன்பத்திற்கு அடிப்படையானது அறம்' என்ற குறள்நெறியாகும். 'அறம் என்பது சமுதாய இன்பம்' என்னும் இன்றைய சட்டநெறியாக அமைந்திருக்கின்றது.

சமுதாய அறத்தினைக் (Social Justice) குறிக்கோளாகக் கொண்டு இந்திய நாட்டு அரசமைப்பு இயங்குகின்றது என்பதை அரசமைப்புச் சாசனத்தின் முன்னுரை குறிப்பிடுகின்றது. சமுதாய மக்களின் இன்றியமையாத் தேவைகளான உண்டி, உடை, உறையுள், இவை நிறைவு செய்யப்படவேண்டும். இதுவே சமுதாய இன்பமான அறமாகும்.[29] என்று சட்டவியல் அறிஞர் கெல்சன் விளக்குகின்றார். இக்கருத்தினையே சீத்தலைச் சாத்தனாரும்

''அறம் எனப்படுவது யாது? எனக் கேட்பின்
மறவாது இது கேள் மன் உயிர்க்கு எல்லாம்
உண்டியும் உடையும் உறையுளும் அல்லது
கண்டது இல் . . . . .[30]

என வலியுறுத்துகிறார். ஆதலால் 'அறம்' என்பது 'சமுதாய இன்பம்' ஆகும். சமுதாய இன்பம் என்பது மக்கள் அனைவருக்கும் உண்டி, உடை, உறையுள், இவை தவறாமல் கிடைக்கச் செய்வது. இதுவே இன்றைய சட்டநெறியாகவும் பண்டைத் தமிழ்ச் சான்றோர் வாழ்க்கை நெறியாகவும் அமைந்திருக்கின்றது. இவ்வாறு 'சட்டநெறி' 'நீதிநெறி'என்ற இன்றைய சட்டவியல் சொற்கள் உணர்த்தும் கோட்பாடுகளைப் பழந்தமிழ் இலக்கியங்கள் 'அறநெறி'என்பது குறிப்பிடுவதை உணர முடியும்.

**தொகுப்புரை**

சமுதாயத்தில் நடைபெற்றுவருகின்ற முறையற்ற செயல்களைப் பற்றிய வழக்குகளை விசாரிப்பதற்கும் அவற்றிற்கும் உரிய முறையில் சரியான தீர்ப்புகளை வழங்கித் தண்டனைகளை விதிப்பதற்கும் அரசாங்கத்தினரால் அமைக்கப்படுகின்ற பொது மன்றமே நீதிமன்றமாகும். இன்றைய நீதிமன்றங்களைப் போல பழங்காலத்திலும் நீதிமன்றங்கள் இருந்துள்ளன. கிராமங்களிலும் சிற்றூர்களிலும் நீதிமன்றங்களுக்கு இணையான 'கிராம வழக்கு மன்றங்கள்' அன்றிலிருந்து இன்று வரை செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன.

நீதிமன்றங்களில் உரிமையியல் வழக்குகள் குற்றவியல் வழக்குகள், குடும்ப வழக்குகளை விசாரித்து, அந்தந்த வழக்குகளுக்கேற்பத் தக்கத் தீர்வுகளையும் தண்டனைகளையும் வழங்குவோர் 'நீதிபதிகள்' என்றழைக்கப்படுகின்றனர்.

சட்டப்படியான தீர்ப்புகளையும் நீதிகளையும் வழங்குவோரே நீதிபதிகள் எனக் குறிப்பிடப்படுகின்றனர்.

'நீதி வழங்குவோர்' பண்டைக் காலத்தில் 'முறைசெய்வோன்' எனக் குறிப்பிடப்பட்டுள்ளனர். கிராம வழக்கு மன்றங்களில் 'ஊர் நாட்டாமை', 'பெரிய அம்பலகாரர்', 'அம்பலகாரர்' ஆகியோர் நீதிவழங்குவோர் ஆவர். இவர்களே கிராம வழக்கு மன்றங்களின் தலைவர்களாக உள்ளனர். இவர்களுக்குக் கீழ் ஐந்து அல்லது ஏழு நபர்களை உறுப்பினர்களாகக் கொண்ட வழக்கு மன்றக் குழுவினரும் செயல்பட்டு வருகின்றனர். ஓடும்பிள்ளையாகிய 'பண்டாரம்' வழக்கு மன்றங்கள் செம்மையாக நடைபெறுவதற்குத் துணை செய்கின்றார்.

கிராம வழக்கு மன்றங்களில் தற்கால நீதிமன்றங்களைப் போன்றே உரிமையியல், குற்றவியல், குடும்ப வழக்குகள் தொன்று தொட்டே விசாரிக்கப்பட்டு வந்துள்ளன, வருகின்றன. கிராம வழக்கு மன்றங்களில் தீர்ப்புகள் உடன் வழங்கப்படும்.

நீதிமன்றத்தில் ஒருவருக்கு எதிராக வழக்கினைத் தொடுப்பவர் தம்முடைய வழக்கினை எடுத்துச் செல்லும் முறையினை 'வழக்கு முறையீடு'என்பர். வழக்கு முறையீடு 'எழுத்துப் படிவம்'வாயிலாக விண்ணப்பிக்கப்படுகின்றது. சட்டங்களின் அடிப்படையிலேயே நீதி வழங்குகின்றன. வழங்கப்படும் நீதியைச் 'சட்டத்தை ஒட்டிய நீதி' எனக் குறிப்பிடுகின்றனர். வழக்கிடும் முறையைக் கூறுவதற்கென 'நெறிமுறைச் சட்டங்கள்' உள்ளன.

வழக்குகளில் நீதி வழங்குவதில் நீதிமன்ற நடவடிக்கைகளில் அழைப்பாணை, வாதுரைகள், மெய்யுறுத்தம் அல்லது சான்று, தீர்ப்புரை, நிறைவேற்றம் ஆகிய ஐந்துகூறுகளும் முக்கியமானதாக உள்ளன.

*கிராம வழக்கு மன்றங்களில் வழக்கு மன்றத் தலைவராகிய நாட்டாமையின் முன்பு வாய்மொழி மூலமாகவே வழக்கின் விபரத்தை முறையீடு செய்கின்றனர். வாதி நாட்டாமையிடம் முறையீடு செய்யும் பொழுதே வழக்கின் அனைத்துச் சாரங்களையும் கூறிவிட்டு; தான் என்ன முடிவினை விரும்புகின்றார் என்பதையும் வழக்குமன்றத் தொடக்கத்திலேயே கூறி விட வேண்டும்.*

*நீதிமன்றங்களில் முறையீடு செய்யும் வாதி நீதிமன்றங்களின் தன்மை, வழக்குகளின் தன்மைகளுக்கேற்ப, கட்டணம் செலுத்த வேண்டும். கிராம வழக்கு மன்றங்களில் முறையீட்டின் அடிப்படையில் தண்டனை குறைக்கப்படுவதுமுண்டு.*

*கிராம வழக்கு மன்றங்களில் வழக்கினை முறையீடு செய்யும் வாதியும், குற்றம் சாட்டப்பட்ட பிரதிவாதியும் வழக்கு மன்றத்தாரை வெற்றிலை, பாக்கு வைத்துக் கும்பிட்டு விழுந்து வணங்கி 'மண்டுப்பணம்' அல்லது 'பருக்கைப்பணம்' அல்லது 'கிராமப்பணம்' அல்லது 'நடவுப்பணம்' ஏதாவது ஒன்று செலுத்த வேண்டும். அப்பணம் கிராம வழக்கு மன்றங்களில் பரம்பரையாக நிர்ணயிக்கப்பட்ட தொகையாகும்.*

*நீதிமன்ற வழக்குகளில் சாட்சிகளின் நம்பகத் தன்மை மிகவும் முக்கியமானதாகும். சாட்சிகளை வழக்குரைஞர்கள் விசாரிக்கின்றனர். நீதிபதிகள் விசாரிப்பதில்லை. கிராம வழக்கு மன்றங்களில் சாட்சிகளை வழக்குகளில் தீர்ப்புச் சொல்லும் உரிமையும் அதிகாரமும் பெற்ற நாட்டாமை பெரிய அம்பலகாரர், அம்பலகாரர் ஆகியோர் நேரடியாக விசாரிக்கின்றனர்.*

*நீதிமன்றங்களில் சில வழக்குகளில் முடிவான தீர்ப்பினைப் பெறாமல் நீண்ட காலம் நிலுவையில் இருப்பதுண்டு. கிராம வழக்கு மன்றங்களில் உடனடியாகத் தீர்ப்புகள் வழங்கப்பட்டு வருகின்றன. நீதிமன்றங்களில் சாட்சிகள் மற்றும் சூழ்நிலைகளைப் பொறுத்து உண்மையான குற்றவாளிகள் தப்பித்து விட*

வாய்ப்புண்டு. கிராம வழக்கு மன்றங்களில் பெரும்பாலும் உண்மையான அல்லது சரியான நீதிகள் வழங்கப்பட்டுவருகின்றன. குற்றவாளிகள் பெரும்பாலும் தப்பிக்க வாய்ப்பில்லை.

இந்திய நாட்டில் 'நீதிவழங்குதல்' என்பது முன்பு அரசனின் முக்கியக் கடமையாக இருந்துவந்துள்ளது. திருவள்ளுவர் 'நீதிவழங்குதல்' என்பதை முறைசெய்தல் என்று குறிப்பிட்டுள்ளார்.

தனிமனிதத் தீங்கினைப் பொறுத்த உரிமையியல் வழக்குகளில் வாதியின் உரிமை பாதுகாக்கப்படுகின்றது. பொதுமைத் தீங்குகளைப் பொறுத்த குற்றவியல் வழக்குகளில் எதிர்வாதி தாம் இழைத்த குற்றங்களுக்குத் தக்கவாறு தண்டனைக்கு உள்ளாகின்றார். உரிமை வழக்கினைத் தொடர்ந்த வாதி தன் விருப்பப்படி வழக்கினைத் தொடர்ந்து நடத்தலாம். அல்லது நிறுத்திக் கொள்ளலாம். ஆனால் குற்ற வழக்குகளில் அரசாங்கமே வாதியாக இருப்பதால் அரசாங்கம் மட்டுமே குற்ற வழக்கினை நிறுத்திக் கொள்ள முடியும். குற்றத்தால் பாதிக்கப்பட்டவர் குற்றவாளியை மன்னித்தோ குற்றவாளியுடன் சமாதானம் செய்து கொண்டோ குற்ற வழக்கினைக் கொள்ள முடியாது. இத்தகைய சிக்கல்கள் கிராம வழக்கு மன்றங்களில் இல்லை. கிராம வழக்கு மன்றத்தினர் உரிமையியல், குற்றவியல் ஆகிய இருவழக்குகளிலும் வாதியையும் பிரதிவாதியையும் பெரும்பாலும் சமாதானம் செய்து வைக்கின்றனர். அவர்களுக்குள் தொடர்ந்து பகைமை நிலவக்கூடாது என்பதே கிராம வழக்கு மன்றங்களின் தலையாய நோக்கமாகும்.

நீதிமன்ற நடைமுறைகளில் வழக்கினை உண்மையானது என மெய்ப்பித்துக் காட்டும் பொறுப்பு வாதியைச் சார்ந்ததாகும். சான்றுகள், துணிபு, சான்றுகளை வகைப்படுத்திக் காணுதல், சான்றுகளை மதிப்பிடுதல், நீதிமன்றத்தின் முன் சான்றினை வைத்தல், மறு விசாரணையும் மேல்முறையீடும், தீர்ப்பும்

நிறைவேற்றுதலும் ஆகிய படிநிலைகள் அவ்வழக்குகள் தொடர்பான தீர்ப்புகளை வழங்குவதற்கு நீண்ட காலமாக்குகின்றன. கிராம வழக்கு மன்றங்களில் பெரும்பாலும் மறுவிசாரணை என்ற பேச்சிற்கே இடம் அளிக்காத வகையில் தீர்ப்புகளை நிறைவேற்றிவிடுகின்றனர். கிராம வழக்கு மன்றங்களில் வழக்கு மன்றத் தலைவர்களாகிய நாட்டாமை, பெரிய அம்பலகாரர், அம்பலகாரர் ஆகியோர் வழக்குகளை விசாரித்துத் தீர்ப்புகளை வழங்குகின்றனர். ஊர்க்கட்டுபாடு, சாதியக் கட்டுப்பாடு, கிராமப் பொது நலன் ஆகியனவற்றைக் கருத்தில் கொண்டு வாதிகளும் பிரதிவாதிகளும் ஏற்று நடக்கின்றனர். இல்லையெனில் அவர்களுக்கு 'ஊரைவிட்டு ஒதுக்கி வைத்தல்' என்னும் கொடிய தண்டனை வழங்கப்படுகின்றது.

கிராம வழக்கு மன்றங்களில் நீதிமன்றங்களைப் போன்று 'தீர்ப்பு நெறிச் சட்டங்கள்' (Judge Made Law) ஏதும் இல்லை. கிராம வழக்கு மன்றங்களுக்கென எழுதிவைக்கப்பட்ட சட்டங்களும் இல்லை. பரம்பரை பரம்பரையாக மூத்தவாரிசு அடிப்படையில் தீர்ப்புகளை வழங்கும் நாட்டாமை, பெரிய அம்பலகாரர், அம்பலகாரர் முதலிய பட்டங்களைப் பெற்றவர்கள் தீர்ப்புகளை அளித்துவருகின்றார்கள். அவர்கள் ஒழுக்கமும் நன்னடத்தையும் கொண்டவர்கள். அவர்கள் தங்கள் அனுபவங்களின் அடிப்படையிலும் அனுமானத்தின் அடிப்படையிலும் நடுவுநிலைமை தவறாமல் தக்கத் தீர்ப்புகளை அளித்து வருகின்றனர். அத்தீர்ப்புகள் நீதிமன்றத் தீர்ப்புகளுக்கு இணையானதாக அமைந்திருக்கின்றன என்பது குறிப்பிடத்தக்கதாகும். ஒருவகையில் இன்றைய நீதிமன்றச் சட்டநெறியும் அன்றைய அறநெறியும் ஒத்திருக்கின்றன.

## குறிப்புக்கள்

1. எச்.எம்.அபுல் கலாம், இந்தியத் தண்டனைச் சட்டம் மற்றும் குற்றச் சட்டம், ப.54.
2. எச்.எம்.அபுல் கலாம், மு.நூ., ப.55.
3. மேலது, பக். 53-54.
4. சு. காவேரி, சட்டத்தமிழ் (மதுரை காமராசர் பல்கலைகழக எம்ஃபில் பட்ட ஆய்வேடு, 1987) ப.33.
5. லேனா தமிழ் வாணன் (பதி.ஆ) சமரசம் செய்து வைப்பது எப்படி? ப.31.
6. மா.சண்முக சுப்பிரமணியம், சட்ட இயல், ப.385.
7. மா.சண்முக சுப்பிரமணியம், மு.நூ., ப.388.
8. குறள், 388.
9. குறள், 541.
10. சிலப்பதிகாரம், வழக்குரை காதை, ப.50.
11. பெரிய புராணம், தடுத்தாட் கொண்ட புராணம், ப.50.
12. சு. காவேரி, மு.நூ., ப.55.
13. வே. முருகேஸ்வரி, சிற்றூர் வழக்கு மன்றத்தின் அமைப்பும் செயல்பாடும் (மதுரை காமராசர் பல்கலைக்கழக எம்.ஃபில் பட்ட ஆய்வேடு, 1995) ப.57.
14. மா. சண்முகசுப்பிரமணியம், மு.நூ., ப.389.
15. மேலது, பக் 389-390.
16. மா. சண்முக சுப்பிரமணியம், மு. நூ., பக்.390-391.
17. வே.முருகேஸ்வரி, மு.நூ., ப.57.
18. சு. காவேரி மு.நூ., ப.62.
19. சு. காவேரி மு.நூ., ப.64.
20. மேலது, ப.65.
21. சு. காவேரி மு.நூ., ப.66.
22. மா. சண்முக சுப்பிரமணியம், சட்ட இயல், ப.126.
23. குறள். 34.

24. குறள். 34.

25. குறள். 317.

26. புறம், 134.

27. Kelson, What is Justice, p.7.

28. குறள். 39.

29. Kelson, What is Justice, Pp.37-38.

30. மணிமேகலை, 25.

# இயல்-6

## சிவகங்கை மாவட்டக் கிராம வழக்கு மன்ற வழக்குகளும் மக்கள் வாழ்வியலும்

சிவகங்கை மாவட்டக் கிராம வழக்கு மன்றங்களின் வழக்கு மன்ற வழக்குகள் வாயிலாக கிராம மக்களின் வாழ்வியல் செய்திகளையும் அறிந்து கொள்ள முடிகின்றது. வழக்குத் தொடுத்தல், தீர்ப்பு, முடிவு, ஏற்பு, மேல்முறையீடு, தீர்ப்பின் எதிர்பார்ப்புக்கள், மன நிறைவு அல்லது நிறைவின்மை போன்றவை வழக்குகளின் வெளிப்பாடுகளாகும்.

தீர்ப்பின் விளைவுகளாகத் தெய்வத்திடம் முறையீடு, மண் தூற்றல், பலிபோடுதல், காசு வெட்டுதல், சத்தியம் செய்தல் முதலான செயல்கள் நடைபெறுகின்றன. கிராம மக்களின், பழக்க வழக்கங்கள், உணவுகள், உடைகள், அணிகலன்கள், விழாக்கள், வழிபாடுகள், சமூக மதிப்புக்கள், படிநிலைகள், ஏற்றத்தாழ்வுகள், குடிகள் இருப்பிடம், ஊர் அமைப்பு, இன, சாதிய, வேறுபாடுகள், உறவுமுறை, பாலியல் என்ற நிலைகளிலும் தொழில்கள், உரிமைகள், கடமைகள், மறுப்பு முதலானவைகளும் இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன.

### பொறாமையும் பழிவாங்கலும்

பொதுவாகக் கிராம வழக்கு மன்றங்களில் வழக்குகள் மனித நேய அடிப்படையில் தீர்த்து வைக்கப்படுகின்றன. பொறாமை காரணமாகவும், பழி வாங்கல் நோக்கத்துடனும், முன்பகை காரணமாகவும் சில சமயங்களில் வாதிகள், பிரதிவாதிகள், மீது குற்றங்களைச் சுமத்தி வழக்குகளைத் தொடுப்பதுண்டு. வாதிகளின் இத்தகைய குற்றச்சாட்டுக்கள் தக்க சாட்சிகளுடன் உண்மையானவை என நிரூபிக்கப்படவில்லையெனில், அத்தகைய குற்றச்சாட்டுகளைச் சுமத்திய வாதிகளுக்கும் தக்க தண்டனைகளை வழக்கு மன்றத்தார் விதிக்கின்றனர்.

**வாழ்க்கைப் பிரச்சனைகள்**

குற்றவியல் வழக்குகளில் திருட்டு, மனித உறுப்புகளைக் குறைத்தல், கால் நடைகளை வெட்டுதல், கோயில் மாட்டைக் கத்தியால் வெட்டுதல், இரண்டு ஊர்க்காரர்களுக்கிடையே அடிதடி, சண்டை, வாய்க்கால், ஊற்றுக்கால் தகராறு, தோட்டவேலைத் தகராறு, முன்விரோதம் காரணமாகத் தகராறு செய்தல், வைக்கோல் போரில் தீவைத்தல், சாராய விற்பனை, கொலை, வாகன விபத்துக்கள் பாலியல் பலாத்காரம், குடித்துவிட்டுப் பிரச்சனை செய்தல், வழிப்பறி முதலான பிரச்சனைகள் வெளிப்படுத்துகின்றன.

உரிமையியல் வழக்குகளில் பாதைத் தகராறு, நிலப்பிரச்சனை, சொத்துப்பிரச்சனை, பாகப்பிரிவினைச் சிக்கல், வீட்டுமனைப் பிரச்சனை, பணம் கொடுக்கல் - வாங்கல் பிரச்சனை, பணம் மோசடி முதலான் அடிப்படை வாழ்க்கைப் பிரச்சனைகள் வெளிப்படுத்தப்படுகின்றன.

குடும்ப வழக்குகளில் காதல் பிரச்சனை, காதல் திருமணம், கலப்புத் திருமணம், உடன்போக்கு, பெண்ணின் திருமணத்தைத்தாய்மாமன் தடுத்தல், காதலித்துப் பெண்ணைக் கர்ப்பம் அடையச் செய்து விட்டு, அப்பெண்ணைத் திருமணம் செய்து கொள்ள மறுத்தல், பெண்ணைக் காதலித்து ஏமாற்றுதல், கணவன்-மனைவி பிரச்சனைகள், மனைவியின் நடத்தையில் ஐயப்படுதல், குடித்துவிட்டு வந்து தன் மனைவியை அடித்துத் துன்புறுத்தல், மாமியார் கொடுமை, வரதட்சணை கேட்டல், மனைவியரின் கள்ளத் தொடர்பு, கணவன்-மனைவியர் இருவரும் கள்ளத்தொடர்பு வைத்திருத்தல், 'மணமுறிவு கோருதல்' முதலான அடிப்படைக் குடும்ப வாழ்க்கைப் பிரச்சனைகள் வெளிப்படுகின்றன.

கோயில்களில் வழிபாட்டில் முதல் மரியாதை கோருதல், இரண்டு இன மக்கள் பிரச்சனை செய்தல், வயது அடிப்படையில் முதல் மரியாதை வேண்டல்,

மஞ்சுவிரட்டு, கண்மாயில் மீன்பிடித்தலில் தகராறு முதலான பொதுவான வாழ்க்கை பிரச்சனைகளும் கிராம வழக்கு மன்றங்களின் வழக்குகளில் வெளிப்படுகின்றன.

**எதிர்பார்ப்புகள்**

சாதிய, கிராமியக் கட்டுக்கோப்பு என்ற அடிப்படையில் ஏற்படுத்தப்பட்ட கிராம வழக்கு மன்றங்களில் 'வல்லான் வகுத்ததே வாய்க்கால்' என்னும் பழமொழிக்கேற்ப, சில சமயங்களில் நிலவுடைமையாளர்களும், வசதி படைத்தவர்களுக்கும், மேல்சாதியினருக்கும் சார்பாக நீதி வழங்கப்பட்டுள்ளது. சில வேலை தாழ்த்தப்பட்ட சாதிக்காரர்களுக்கு முறையாக நீதி வழங்கப்படுவது மறுக்கப்படுகின்றது. கீழ்ச் சாதிப் பெண்கள் தவறு செய்தால் கடுமையான தண்டனைகளைக் கொடுத்து அத்தண்டனைகளை ஏற்றுக்கொள்ளுமாறு கட்டாயப்படுத்துகின்றார்கள். உயர்ந்த சாதிக்காரர், கீழ்ச்சாதிப் பெண்ணைத் திருமணம் செய்து கொண்டதற்காக ஊரை விட்டு வெளியேற்றுதல் போன்ற கடுமையான தண்டனைகளைக் கொடுக்கின்றார்கள்.

வழக்கு மன்றத் தலைவாரகிய 'நாட்டாண்மைக்காரர்' 'அம்பலகாரர்' ஆகியோர்களின் தீர்ப்பே இறுதியானது என்பதால் வழக்கினைத் தொடுத்த வாதியும், பிரதிவாதியும், கிராமப் பொதுமக்களும் அவ்வழக்கின் தீர்ப்பினைக் குறித்துப் பல்வேறு ஊகங்களையும் எதிர்ப்பார்ப்புகளையும் கொள்கின்றனர். இறுதியில் வழக்கு மன்றத் தலைவரின் தீர்ப்பினை வாதியும் பிரதிவாதியும் ஒருமனதாக ஏற்றுக் கொள்கின்றனர். பார்வையாளர்களாகிய கிராமப்பொதுமக்களும் 'இது நடுநிலையான தீர்ப்பு' என்று ஏற்றுக் கொள்ளும் வகையில் பல திருப்பங்கள் நிறைந்த தீர்ப்புக்களை இம்மாவட்டட கிராம வழக்கு மன்றத் தலைவர்கள் அளித்துள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**வழக்குத் தொடுத்தல்**

*வழக்கு மன்றம் முறைப்படி தொடங்கியவுடன் வழக்கு மன்றத் தலைவர், வழக்கு மன்றத்தைக் கூட்டச் சொன்ன வாதியிடம் நடந்தவற்றை விளக்கமாகத் தெரிவிக்கும்படி கட்டளையிடுவார். வழக்கு மன்றத் தலைவரும் பிரதிவாதியிடம் வாதியின் குற்றச்சாட்டுகள் உண்மையா? எனக் கேட்பார். வாதியின் குற்றச்சாட்டுக்களைப் பிரதிவாதி மறுக்கும்போது, இருதரப்புச் சாட்சிகளும் விசாரிக்கப்படுவர். சாட்சிகள் விசாரணைக்குப் பின்னர் வழக்கு மன்றத் தலைவரும் உறுப்பினர்களும் தங்களுக்குள் அவ்வழக்குத் தொடர்பான நியாயங்களையும் அநியாயங்களையும் விவாதித்து ஒரு முடிவுக்கு வந்து, பின்னர் வழக்கு மன்றத் தலைவர் தனது தீர்க்கமான தீர்ப்பினை வழங்குவார்.*

**தீர்ப்பு, முடிவு, ஏற்பு, மேல்முறையீடு**

*கிராம வழக்கு மன்றங்கள் வலிமையும் தன்னாட்சியும் பெற்ற அமைப்புக்களாக இன்று வரை நிலவி வருகின்றன. சமூக இயக்கம், ஊர் இயக்கம், கிராம இயக்கம், ஆகிய அனைத்தும் 'கிராமக் கட்டுப்பாடு' என்ற பெயரில் இம்மன்றங்களையே சார்ந்திருக்கின்றன. கிராம வழக்கு மன்றங்களில் வெளிப்படும் வழக்குகளின் பிரச்சனைகள் யாவும் கிராம மக்களின் அடிப்படை வாழ்க்கைப் பிரச்சனைகள் ஆகும். நீதிமன்றங்களிலும் காவல் நிலையங்களிலும் தீர்க்கப்படாத வழக்குகள் பல இக்கிராம வழக்கு மன்றங்களிலேயே தீர்க்கப்பட்டுள்ளன. கிராம வழக்கு மன்றங்களின் தீர்ப்புக்கள், நடைமுறைகள், செயற்பாடுகள் ஆகியனவற்றில் அரசாங்கமோ, காவல்துறையினரோ தலையிடுவதில்லை என்பது குறிப்பிடத் தக்கதாகும்.*

*வழக்குமன்றத் தீர்ப்புகளுக்கும் முடிவுகளுக்கும் கட்டுப்படாதவர்களைக் கிராமத்தினர் 'கிராமக் கட்டுப்பாடு', 'ஊர்க்கட்டுப்பாடு' என்ற வழிகளில் ஊரை*

விட்டு ஒதுக்கி வைத்துவிடுவார்கள்.[1] கிராம வழக்கு மன்றங்கள் நிலைத்திருப்பதற்கு மற்றொரு காரணம் அதன் திட்டவட்டமான முடிவெடுக்கும் தன்மை ஆகும். கிராம வழக்கு மன்றங்களின் முடிவுகள் இறுதியானது என்பது இம்மாவட்ட கிராமங்களின் எழுதப்படாத சட்டமாகும். அரசு நிறுவனங்களும் கிராம வழக்கு மன்றங்களின் மூலம் எடுக்கப்படும் முடிவுகளை இன்றும் ஏற்றுக் கொள்கின்றன என்பது இதன் சிறப்பாகும்.

சாதிக்குள் நிகழும் வழக்குகளில் வாதி, பிரதிவாதி இருவரும் ஒரே இனத்தைச் சேர்ந்தவர்களாகவும் உறவுக்காரர்களாகவும் இருந்தால் உறவு என்பதை மறந்து நீதி, இறையாண்மை, கிராமப் பொது நலன் போன்றவற்றின் அடிப்படையில் முடிவு எடுக்கப்படுகின்றது. பல கிராம வழக்கு மன்றங்களின் தலைவர்கள் தங்கள் முடிவுகளை வழங்கும் திறமையில் ஒரு நிலையான நியாயத்தால் சிறப்பான பெயர்களைப் பெற்றிருக்கின்றனர். இது தலைமுறை தலைமுறையாக நீடித்து அவரின் குடும்பமே வழக்கு மன்றங்களின் தலைமைப் பொறுப்பை வகிக்கும் சூழலை உருவாக்கித்தருகின்றது. முடிவுகள் சில வேளை கடந்தகால வழக்குகளை அடிப்படையாகக் கொண்டும், சாட்சியங்களை மையமாகக் கொண்டும், கிராம ஒற்றுமையை வலியுறுத்தும் வகையிலும் அமைந்திருக்கின்றன.

வழக்கைச் சார்ந்த இருவர் பக்கத்து நிலைகளையும் நன்கு விசாரித்துச் சாட்சிகள் வாக்கு மூலங்களை ஆதாரமாகக் கொண்டும், வழக்கு மன்ற உறுப்பினர்களின் கருத்துக்களைக் கேட்டும் வழக்கு மன்றத் தலைவர் தன்னுடைய அனுபவங்களைக் கொண்டும் தீர்ப்பு வழங்குகின்றார். தீர்ப்புக்கள் சாதாரண வழக்குகளுக்குக் கூடக் கடுமையான தண்டனைகளைக் கொண்டனவாக இருக்கின்றன. இதன் நோக்கம் தவறு செய்தவர்கள் திருந்த வேண்டும் என்பதும், இதுபோன்ற தவறுகள் இக்கிராமங்களில் அல்லது சாதிகளில் இனிமேல் நிகழக்கூடாது என்பதுமாகும். வழக்கு மன்றத் தலைவர்களின தீர்ப்புகள்

*பாதிக்கப்பட்டவர்களின் நலன்களைவிட சாதி மற்றும் ஊர் நலன்களை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன.*

**அடிச்சி விழுதல்**

*கிராம வழக்கு மன்றங்களில் முறையான தீர்ப்பினைப் பெறாமல் பாதிக்கப்பட்டவர்கள் சில சமயங்களில் குளித்த ஈர ஆடையுடன் கிராமங்களிலுள்ள முனியாண்டி, நொண்டிச் சமயன், காளியம்மன் போன்ற துடிப்புள்ள தெய்வங்கள் உறையும் கோயில்களுக்குச் சென்று மார்பில் அடித்துத் கொண்டு முறையீடு செய்கின்றனர். இதனையே 'அடிச்சி விழுதல்' என்கின்றனர். அவ்வாறு அடிச்சி விழுந்தால் அவருக்குப் பாதிப்பினையும் தீங்கினையும் ஏற்படுத்தியவர் விரைவில் இறந்து விடுவார் என நம்புகின்றனர். கிராம மக்களின் வாழ்க்கையில் 'அடிச்சி விழுதல்' என்னும் நம்பிக்கை பஞ்சாயத்தைச் சார்ந்து இடம் பெற்றிருப்பதை அறிய முடிகிறது.*

**காசு வெட்டுதல்**

*முறையான தீர்ப்பினைப் பெறாமல் பெரிதும் பாதிக்கப்பட்டவர்களில் சிலர் 'திக்கற்றவர்களுக்குத் தெய்வமே துணை' எனக் கருதி நியாயம் வேண்டிக் கிராமங்களிலுள்ள கோயில் ஏதேனும் ஒன்றினுக்குச் சென்று ஒரு நாணயத்தை இரண்டாக வெட்டி தெய்வத்தின் முன்போட்டு முறையிடுவர். சிலர் நாணயத்தைச் சாமியின் அடியில் போட்டு வருவர். அந்த நாணயம் பாசிபிடிக்கத் தொடங்கியவுடன் அவர்களுக்குப் பாதிப்பினை ஏற்படுத்தியவர் அல்லது குற்றத்திற்குரியோர் பாதிக்கப்படுவர் என்பது கிராம மக்களின் நம்பிக்கையாகும். இதனை 'காசு வெட்டுதல்' என்றும் 'காசு வெட்டிப் போடுதல்' என்றும் குறிப்பிடுகின்றனர்.*

*சிவகங்கை மாவட்டத்திலுள்ள கிராமங்களில் முனியாண்டி கோயிலில் தான் மக்கள் பெரும்பாலும் காசு வெட்டிப் போடுகின்றனர். இம்மாவட்டத்தில் திருப்புவனம் அருகாமையிலுள்ள மடப்புரம் காளி கோயிலிலும், நாட்டரசன் கோட்டைக்கு அருகாமையிலுள்ள வெட்டுடையர் காளி கோயிலிலும் காசு வெட்டிப் போட்டால், அத்தெய்வங்கள் குற்றத்திற்குரியவர்களைக் கடுமையாகத் தண்டிக்கும் எனக் கிராம மக்கள் நம்புகின்றனர்.*

**நடுப்போடுதல்**

*இம்மாவட்டத்திலுள்ள பழி தீர்க்கும் துடியான கிராமத் தெய்வங்களின் முன்பு நின்று தங்கள் மீது சுமத்தப்பட்ட பழிகளைத் கூறித் தங்களுக்கு நியாயம் கிடைக்க வேண்டுமென்றும் தங்கள் மீது பழிகளைத் கூறியவர்களுக்குத் தண்டனைகள் கிடைக்க வேண்டுமென்றும் முறையீடு செய்தலை 'நடுப்போடுதல்' என்று குறிப்பிடுகின்றனர்.*

**பலிபோடுதல்**

*இம்மாவட்டத்திலுள்ள பழி தீர்க்கும் துடியான தெய்வங்களான முனியாண்டி, காளியம்மன், நொண்டி, கருப்பணசுவாமி முதலான தெய்வங்களுக்குச் சேவல், ஆட்டுக்கிடாய், முதலான உயிர்களைப் பலியிட்டும் தங்கள் குறைகளை முறையீடு செய்கின்றனர். அவ்வாறு பலி கொடுப்பதன் மூலம் தங்கள் மீது சுமத்தப்பட்ட வீண்பழிகளும் குறைகளும் நீங்கி நலம்பெறலாம் என நம்புகின்றனர்.*

**மண் தூற்றல் அல்லது மண்ணைவாரி இறைத்தல்**

*கிராம வழக்கு மன்றங்களில் தொடுக்கப்படும் வழக்குகளுக்கு முறையான நியாயமான தீர்ப்புக்கள் கிடைக்காமல் பாதிப்புக்கு ஆட்படும் பொழுது பாதிக்கப்பட்டவர்கள் இம்மாவட்ட கிராமங்களிலுள்ள காளி முதலான கிராம*

தேவதை முன்பும் விநாயகர் கோயிலின் முன்பும் மண்ணை வாரி இறைத்து முறையீடு செய்கின்றனர். மண்ணை வாரித் தூற்றுபவர் தனக்குப் பாதிப்பினை ஏற்படுத்தியவரை அத்தெய்வம் தண்டிக்கும் என உறுதியாக நம்புகின்றார்.

**சத்தியம் செய்தல்**

கிராம மக்கள் உண்மையை நிறுவும் முறைகளில் ஒன்றாகச் 'சத்தியம் செய்தல்' என்னும் முறையைப் பின்பற்றி வருகின்றனர். குழந்தையைக் கீழே போட்டுத் தாண்டுதல், இடையில் உடுத்தியிருக்கும் ஆடையை அவிழ்த்துத் தரையில் போட்டுத் தாண்டுதல், தெய்வத்தின் முன்னர் எரியும் சூடத்தைக் கையால் அணைத்தல், பாலில் அடித்துச் சத்தியம் செய்தல், கையிலோ தலையிலோ அடித்துத் தெய்வத்தின் பெயரையோ தனக்கு விருப்பமானவர்கள் பெயரையோ (தாய், தந்தை) சொல்லிச் சத்தியம் செய்தல், குல தெய்வங்களின் பெயரால் சத்தியம் செய்தல் முதலியன சத்தியம் செய்யும் முறைகளில் சிலவாகும். கிராம மக்களிடம் மலைகளைப் பார்த்துச் சத்தியம் சொல்லும் முறையும் காணப்படுகின்றது. பல தெய்வங்களும் முனிவர்களும் மலைகளில் இருப்பதாகக்கருதி அவ்வாறு செய்கின்றனர்.

**சத்திய நாமா**

பாகனேரி நாட்டு மக்கள் நாட்டுக் கூட்டத்தில் ஒரு வழக்கினைத் தீர்க்க முடியாதபொழுது பிறிதொரு நாட்டாரிடம் அவ்வழக்கை அனுப்பி வைக்கின்றனர். வழக்கின் நிலையையும் அதைத் தீர்த்து வைக்க வேண்டும் என்னும் வேண்டுகோளையும் ஓர் ஓலையில் எழுதி அவ்வோலையை வீசியெறிந்து எழுத்தாணிக் கத்தியால் இரு துண்டாக்குகின்றனர். அவ்விரு துண்டுகளையும் இரு தரப்பாரையும் எடுத்துக் கொள்ளச் சொல்லுகின்றனர். அவர்கள் அவற்றை எடுத்துச் சென்று குறிப்பிட்ட நாட்டாரிடம் தருகின்றனர். அந்நாட்டார்

அவ்வழக்கினைக் கேட்டறிந்து தீர்த்து வைக்கின்றனர். அங்கும் அவ்வழக்கில் தீர்வு ஏற்படவில்லையெனில் அவ்வோலைகளுடன் கோயிலுக்கு அழைத்துச் செல்கின்றனர். ஓலையின் முதல் துண்டு உடையவரைத் தம் கருத்தைத் தெய்வத்தின் முன் ஆணையிட்டுக் கூறச் செய்து அதனை மற்றவரும் ஏற்குமாறு செய்கின்றனர். இதனைப் பாகனேரி நாட்டு மக்கள் 'சத்திய நாமா' எனக் குறிப்பிடுகின்றனர். இம்முறை பாகனேரி நாட்டில் மட்டுமே காணப்படுகின்றது.

**முனிவழிபாடு**

'முனி' என்னும் தெய்வம் இரவு வேளையில் ஒரு குறிப்பிட்ட பாதையில் செல்லும் இயல்புடையது என்ற நம்பிக்கை கிராம மக்களிடம் வலிமையாக இருக்கின்றது. இம் முனி வானளாவும் தோற்றத்துடன் கையில் சாட்டை ஏந்திக் குதிரையில் வரும் என்றும் நம்புகின்றனர். இம்முனியைப் பலர் நேரில் கண்டதாகக் குறிப்பிடுகின்றனர். தான் செல்லும் பாதையில் எதிர்ப்பட்டோரை இத்தெய்வம் கொன்றுவிடும் என்றும், ஒரு வட்டம் வரைந்து அதனுள் நின்று கொண்டால் காளியின் சக்கரமாகக் கருதி முனி அடிக்காது என் மக்கள் நம்புகின்றனர்.

**சமூக இயக்கம்**

மக்கள் கூடி வாழும் அமைப்பைச் சமுதாயம் என வரையறுப்பர். "பொதுவான மதிப்பீடுகளையும் நம்பிக்கைகளையும் பகிர்ந்து கொள்கிற ஒரு விரிந்த, நிலையான தன்னிறைவுள்ள, தன்னைத்தானே நிலை நிறுத்திக் கொள்கிற, கலந்து செயற்படும் மக்கள் கூட்டம் சமுதாயமாகும்[2]". எனச் சமூகவியலார் வரையறுத்துள்ளனர். மேலும் "சமூகம் என்பது ஒரு பொதுப் பண்பாட்டைப் பகிர்ந்து கொள்வதோர் அரசியல், மாநிலத்தின் எல்லைக்குள் வாழ்கின்ற பல்வேறு வயதினரையும் இருபாலரையும் கொண்ட தன்னை நிலை நிறுத்திக் கொள்கிற குழு"[3] என்றும் சுட்டிக் காட்டியுள்ளனர்.

*சமூகவியலாரின் பார்வையில் சமுதாயம் என்ற சொல் மக்கள் கூட்டத்தை மட்டும் குறிப்பதில்லை. ''சமுதாயம் என்ற சொல்லை ஒரு குறிப்பிட்ட குழுவினரிடையேயுள்ள பழக்க வழக்கங்களையும் விதிமுறைகளையும் அரசியல் பொருளதார உறவுகளையும் குறிக்கப் பயன்படுத்தி வருகின்றனர்.[4] இந்த அடிப்படையில் நோக்கினால் இந்திய நாகரிகத்தின் பொதுத் தன்மைகள் அரசியல் ஒருமைப்பாடு ஆகியனவற்றை அடிப்படையாகக் கொண்டு 'இந்தியச் சமுதாயம்' என்றும் தமிழக நாகரிகத்தின் பொதுத்தன்மைகள் அரசியல் ஒருமைப்பாடு பேசும் மொழி, மக்களின் வாழ்க்கை முறை, சடங்குகள், விழாக்கள் ஆகியனவற்றை அடிப்படையாகக் கொண்டும் 'தமிழச் சமுதாயம்' என்றும் சமுதாயம் என்ற சொல்லை இடத்திற்கேற்றவாறு பயன்படுத்த இடமுண்டு.*

**சாதிகளின் இணைப்பு**

*இந்தியச் சமுதாய அமைப்பில், மதமும் சாதியும் தொழிலும் பிரிக்க முடியாத கூறுகளாக அமைந்துள்ளன. இந்தியச் சமுதாயத்தில் சாதி அமைப்பே பேராட்சி செலுத்துகின்றது. இந்தியாவில் சுமார் மூவாயிரம் சாதிகள் உள்ளன என்பர்.[5] உலகில் வேறெங்கும் காணமுடியாத சாதி அடிப்படைச் சமுதாய அமைப்பு இங்கே காணப்படுகின்றது.[6] 'சாதி' என்ற சொல் வடமொழியிலுள்ள 'ஜாதி' என்பதன் தற்சமம் ஆகும். இச்சொல்லிற்குப் 'பிறப்பு' என்பது பொருளாகும்.[7] இங்கே ஒருவருடைய வகுப்பு அவருடைய பிறப்பைக் கொண்டே தீர்மானிக்கப்படுவதால் அதனைக் குறிக்கச் சாதி என்ற சொல் உருவாகியிருக்க வேண்டும். இவ்வமைப்பின் படி ஒரு சாதியில் பிறந்த ஒருவர் மற்றெரு சாதிக்கு மாற முடியாது.*

*தமிழகம் உள்ளிட்ட பழைய இந்தியாவில் இது போன்ற சாதி அமைப்புக் காணப்படவில்லை. தொழில் பிரிவுகளே காணப்பட்டன. இந்தத் தொழில் பிரிவுகள் ஆரியர்களின் வருகைக்குப் பின்னர் சாதிப்பிரிவுகளாக மாற்றம் பெற்றன.*

ஆரியர்களே இம்மாற்றத்திற்கு அடிப்படைக் காரணமாக இருந்து வந்துள்ளனர். '' 'சிந்து சமவெளி நாகரிகத்தையே அழித்து ஒரு புதிய நாகரிகத்தை உருவாக்கிய ஆரியர்கள், அடிமைகள், எசமானர்கள் என்ற வர்க்கப் போட்டிக்குப் பதிலாகத் தொடக்கத்தில் நான்கு வர்ணங்களும் பிறகு எண்ணற்ற சாதிகளும் உபசாதிகளும் அடங்கிய ஓரமைப்பை உருவாக்கினர்'.[8] என்று இ.எம்.எஸ் நம்பூதிரிபாட் கூறியிருப்பது நோக்கத்தக்கதாகும்.

தமிழகத்தில் சங்க காலத்திற்குப் பின்னர் பல்லவ, சோழ, விசய நகரப் பேரரசுகளில் ஆரியர்கள் பெற்ற ஆதிக்கத்தின் விளைவாகப் பல்வேறு சாதிகளும் சாதிக் கட்டுப்பாடுகளும் தோன்றியிருக்க வேண்டும் எனத் தெரிகின்றது. சங்க காலத்தில் நம்மால் அறியப்பட முடியாத சாதிகள் பலவும் பிற்காலக் கல்வெட்டுக்களில் காணப்படுகின்றன. ஒவ்வொரு சாதியும் அதற்கு விதிக்கப்பட்ட சட்டதிட்டங்களிலிருந்து மாறலாகாது என்ற பொதுக் கொள்கை இருந்தது என்பதையும் அறிய முடிகின்றது.[9] சாதியில் ஏற்றத் தாழ்வுகளும் தீண்டாமையும் தோன்றித் தீவிரமடைந்தன என்பதையும், இதன் விளைவாக வலங்கை, இடங்கைப் பிரிவுகள் தோற்றம் பெற்றன என்பதையும் தமிழக வரலாற்றில் அறிய முடிகின்றது. சோழர் காலத்தில் சமுதாய வரலாற்றில் வலங்கை, இடங்கைக் குலங்கள் மிக முக்கியப் பங்கு வகித்தன. வலங்கை வகுப்பினர்க்கு அரசுச் செல்வாக்கும், வாழ்க்கை வசதிகள் போன்ற நலன்களும், சிறப்புகளும் ஏராளமாய் வழங்கப்பட்டமையாலும், இடங்கையினர் நிலைமை தாழ்ந்தே இருந்து வந்தமையாலும் இடங்கையினர் மனம் புழுங்கி வலங்கைனரின் மேல் போர் தொடுத்தனர்.[10] இச்சாதிப்பிரிவினர்க்குள் ஓயாத பூசல்கள் ஏற்பட்டன. உயர்சாதியினராகிய வலங்கைப்பிரிவினர் அரசின் ஆதரவுடன் சுகவாழ்வு நடத்திய அதே நேரத்தில் ஏனையோர் வரிச்சுமையாலும் தீண்டாமையாலும் அல்லலுற்றனர் என்பதை வரலாறு சுட்டிக் காட்டுகின்றது.[11]

இன்று சாதி அமைப்பு முறை சமுதாயத்தை ஆட்டிப் படைக்கின்றது. சாதிய ஏற்றத் தாழ்வுகள், அதனால் ஏற்படும் சமூகப் பூசல்கள் இன்றும் மிகுதியாகக் காணப்படுகின்றன.[12] கிராம அமைப்புக்கள் சாதி அமைப்போடு நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன.

சிவகங்கை மாவட்ட கிராமங்களைப் பொறுத்தவரையில் கள்ளர், அகமுடையர், மறவர் ஆகிய சாதிகளைச் சேர்ந்தவர்கள் மிகுதியாக வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் 'முக்குலத்தோர்' என்றழைக்கப்படுகின்றனர். இவர்களுக்கு அடுத்த நிலையில் இடையர், வெள்ளாளர், செட்டியார், முத்தரையர் ஆகிய சாதியினர் வாழ்ந்து வருகின்றனர்.

மூப்பர், பறையர், பள்ளர், வளையர், குறவர், இடும்பர், குடும்பர் ஆகிய சாதியினரும் பரவலான எண்ணிக்கையில் வாழ்கின்றனர். ஒவ்வொரு கிராமத்திலும் அம்பட்டையன், வண்ணார், தச்சர், பண்டாரம் ஆகிய சாதிகள் ஓரிரு குடும்பங்களில் வாழ்ந்து வருகின்றனர். சில குறிப்பிட்ட கிராமங்களில் நாயக்கர் இனத்தவர்களும் வாழ்ந்து வருகின்றனர். கிறித்துவர்களும் இசுலாமியர்களும் ஓரிரு கிராமங்களில் சிறுபான்மையினராக இருக்கின்றனர்.

## குடும்பங்கள் இணைப்பு

தந்தையின் குடும்பப் பெயரையும் சொத்துடைமையையும் பெறும் முறை 'தந்தைத்தாயம்' எனப்படுகின்றது. இம்முறை நம் நாட்டுக் குடும்பங்களின் பொதுத் தன்மையாகும். இந்தியாவில் குடும்பங்கள் தந்தைத் தாயத்தைக் (Patrilineal) கொண்டவை. தந்தை பெயர்வழியே குடும்பத்தினர் அழைக்கப்படுவர். சொத்து தந்தையின் குடும்ப உறுப்பினர்களிடையே தான் கைமாறிவரும்.[13] 'குழு' என்ற சொல்லிருந்து 'குடும்பம்' உருவாகியிருக்க வேண்டும். 'குடும்பம்' என்ற சொல்லுக்கு

உறவு, ஒரு குடியில் உள்ளார், மனைவி, வீடு,சமுசாரம், குலம், குடி இனத்தார் ஒரு குடிசையிலுள்ளோர் என்று அகராதிகள் பொருளுரைக்கின்றன.[14] குடும்பமாவது ஒருவனைச் சூழ்ந்த அகச் சுற்றம்; குலம் என்பது புறச்சுற்றம் என்று விளக்கம் தரப்பட்டுள்ளது.[15] சங்க காலத்தில் 'குடி' என்ற சொல்லே குடும்பம் என்ற பொருளில் கையாளப்பட்டுள்ளது.[16] முதன் முதலில் திருக்குறளில் 'குடும்பம்' என்ற சொல் ஓரிடத்தில் கையாளப்பட்டிருப்பினும் 'குடி' என்ற சொல்லே மிகுதியாகக் கையாளப்பட்டிருக்கின்றது.[17] திருக்குறள் காலத்திற்குப் பின்னர்தான் 'குடும்பம்' என்ற சொல் பெருவழக்குப் பெற்றுச் செல்வாக்கு அடைந்தது எனக் கருத முடிகிறது. நடைமுறை வாழ்க்கையில் ஒரு வீட்டில் வசிக்கும் இரத்த உறவுடைய உறவினர்கள் அனைவரையும் சுட்ட 'குடும்பம்' என்ற சொல் பயன்படுகின்றது. ஒரு வாழ்விடத்தில் ஒருவனைச் சார்ந்து வாழும் அகச் சுற்றம் என்று இச்சொல்லுக்குப் பொருள் விளக்கம் தருவது பொருத்தமுடையதாக அமையும்.

**கூட்டுக்குடும்பம்**

குடும்பத்தின் தோற்றத்தை பற்றிச் சமூகவியலார், "குடும்பம் என்பது சமூக நிறுவனங்களில் மிகவும் இயற்கையானதாகும். சந்ததி விருத்தியால் மனிதனுக்கு இயல்பாகவே இருக்கும் ஆர்வத்தின் காரணமாகவே இது தோற்றம் பெறுகிறது."[18] எனக் குறிப்பிட்டுள்ளனர். இந்திய நாட்டின் தன்மைகளில் கூட்டுக்குடும்ப முறையும் ஒன்றாகும். "நமது நாட்டில் கூட்டுக்குடும்பங்கள்தான் அதிகம் காணப்படுகின்றன. இந்தியச் சமூகத்தின் சிறப்புத் தன்மையாக இது கருதப்படுகிறது. ஒருவன் திருமணமானவுடன் தனிக்குடும்பமாகச் செல்வதில்லை. பெற்றோர்களுடனும் உறவினர்களுடனும் சேர்ந்தே வாழ்கிறான்[19] என்பது இவண் நோக்கத்தக்கது. கூட்டுக் குடும்ப அமைப்பு முறை சிவகங்கை மாவட்ட கிராமங்களில் பெரிதும் காணப்படுகின்றன.

**தனிக்குடும்பம்**

கூட்டுக் குடும்ப அமைப்பு முறை சிவகங்கை மாவட்டத்தில் பாகனேரிக் கள்ளர்களிடையே காணப்படவில்லை. இங்கு தனிக்குடும்ப அமைப்பு முறை காணப்படுகின்றது. பெரும்பான்மையான கிராமங்களில் தனிக் குடும்ப அமைப்பு முறையே காணப்படுகின்றது. கணவன், மனைவி அவர்கள் பெற்ற குழந்தைகள் ஆகியோர்களைக் கொண்ட தனிக்குடும்பம்[20] என்னும் அமைப்பு முறையே இங்குக் காணப்படுகின்றது.

அனைத்துச் சாதிகளிலும் மூத்த மகனுக்குத் திருமணம் ஆகும் வரையில் கணவனும் மனைவியும் குழந்தைகளும் ஒரு குடும்பமாக வாழ்கின்றனர். முதல் மகனுக்கு மணமான சில நாட்களில் குடும்பச் சொத்து பாகப்பிரிவினை செய்யப்படுகின்றது. குடும்பங்களில் பாகப்பிரிவினை தொடர்பாக ஏற்படும் பிரச்சனைகளைக் கிராம வழக்கு மன்றங்கள் நியாயமான முறையில் தீர்த்து வைத்துக் குடும்பங்களின் அமைதியைப் பேணுகின்றன.[21] பாகப்பிரிவினைக்குப் பின்னர் மூத்த மகனும் அவன் மனைவியும் தனிக்குடும்பமாக வாழ்க்கையை மேற்கொள்ளுகின்றனர். பாகப்பிரிவினை நிகழ்ந்த போதிலும் திருமணமாகாத ஏனைய மக்கள் தந்தையுடனேயே வாழ்ந்து வருகின்றனர்.

**பலதாரமணம்**

இருதார மணத்தடைச் சட்டம் இந்திய நாட்டின் நடைமுறையில் இருந்த போதிலும் கிராமங்களில் அண்மைக்காலம் வரையில் பலதார மணம் (Polygamy) வழக்கிலிருந்து வந்துள்ளது. உழவர்களும் ஆயர்களும் நிறைந்திருந்த பண்டையக் கிராம சமுதாயத்தில் ஒருவனது மனைவியருடன் மக்களும் உழைத்து அவனது சொத்தைப் பெருக்கியமை பலதாரமணத்துக்கு உரிய காரணங்களுள் ஒன்றாகும். என்ற பெர்ட்ராண்டுரஸ்ஸல் கருத்து நினைவுகூரத் தக்கதாகும்.[22] முதல் மனைவியின்

மலட்டுத் தன்மைகாரணமாகவும் அல்லது காரணமே இல்லாமலும் கூடப் பல பெண்களை மணக்கும் பழக்கம் இருந்து வந்துள்ளது. இச்செயல் பண்பாட்டுக் குறைவானதாகக் கருதப்படவில்லை. முதல் மனைவியின் ஒப்புதலுடன் மறுமணம் நிகழ்ந்திருக்கமாயின் இருமனைவியரும் ஒரே வீட்டில் வாழ்ந்து வருவர். இல்லையெனில் ஒவ்வொரு மனைவியும் தன் குழந்தைகளோடு தனித்தனி வீட்டில் வாழ்ந்து வருவர். கணவன் தான் விரும்பியவாறு வீட்டில் அவ்வப்போது தங்குவதுண்டு. முதல் மனைவியும் அவள் மக்களுமே சாதி, சமூக மற்றும் குடும்பச் சடங்குகளில் பங்குபெறும் உரிமையுடையோர் ஆவார்கள்.

கிராமங்களில் வசதிபடைத்த செல்வந்தர்களாகிய கள்ளர், தேவர், மறவர், அகமுடையர், செட்டியார், இடையர் இனத்தவர்கள் இடையே இருதார மணம் அங்கீகரிக்கப்பட்ட ஒன்றாகவே காணப்படுகின்றது.[23] பறையர் இனத்தவர்களிடம் இருதா மணம் பரவலாகக் காணப்படுகின்றது.[24] கடந்த சில ஆண்டுகளாகவே பலதார மணமுறை அருகி வருகின்றது. கல்வி வளர்ச்சியும் பிறபகுதி மக்களோடு கலந்து பழகுதலும் இம்மாற்றத்திற்குக் காரணங்களாகும்.

## அறுத்துக்கட்டுதலும் சரடுபோடுதலும்

கைம்பெண் மணம் கள்ளர், தேவர், மறவர், இடையர், அகமுடையர் ஆகிய இனத்தவர்களிடையில் கிராமங்களில் நெடுங்காலமாக ஒப்புக்கொள்ளப்பட்ட ஒன்றாகும். ஒருவன் இறந்தால் அவன் மனைவியை அவன் சகோதரன் மணந்து கொள்ளும் முறை 'மதனிமணம்' (Levirate) என்றழைக்கப்படுகின்றது. இத்தகைய மணங்களில் வயது வேறுபாட்டைக் கருதுவதில்லை. மறுமணம் புரிந்த கைம்பெண்ணின் மக்கள் அவரவர் தந்தையின் சொத்துக்களைப் பெறுகின்றனர். கைம்பெண் மணத்தை 'அறுத்துக் கட்டுதல்' என்று குறிப்பிடுகின்றனர்.[25]

மறுமணத்தில் தாலி அணிதலைத் 'திருப்பூட்டுதல்' என்று குறிப்பிடாமல் 'சரடுபோடுதல்' என்றழைக்கின்றனர்.[26]

**துரும்பு கொடுத்தல்**

மணமுறிவும் ஒப்புக்கொள்ளப்பட்ட வழக்கங்களில் ஒன்றாகும். கணவன் மனைவியரது மணமுறிவு கோரும் வேண்டுகோள்களைச் சாதிப் பஞ்சாயத்தார்களும் கிராம வழக்கு மன்றத்தார்களும் நெருங்கிய கிளையார்களும் கேட்டுத் தீர்க்கின்றனர். வழக்கு மன்றத்தார்கள் பெரும்பாலும் கணவன்-மனைவியர்களுக்கிடையில் ஒற்றுமையை ஏற்படுத்திக் குடும்பங்களை இணைத்து வைக்கவே முயல்கின்றனர். இருவருக்கும் தக்க அறிவுரைகளை வழங்கிக் கண்டிக்கின்றனர். அது இயலாத நிலையில் தவிர்க்க முடியாத காரணத்தால் மணமுறிவு பெறுவதற்கு இசைவு தருகின்றனர். இதன் அடையாளமாக ஒரு வைக்கோல் துரும்பை இரண்டாகக் கிள்ளி இருவரிடமும் தருகின்றனர். இவ்வழக்கத்தைத் 'துரும்பு கொடுத்தல்' என்கின்றனர். சில கிராம வழக்கு மன்றங்களில் வழக்கு மன்றத்தார் தங்களுடைய மணமுறிவு பற்றிய தீர்ப்புகளைப் பத்திரம் முதலிய ஆவணங்களில் எழுதிக் கொடுக்கின்றனர்.[27] இவ்வாறு மணமுறிவு கோரும் ஆணோ பெண்ணோ மற்றவருக்கு ஈட்டுத்தொகை தருதல் வேண்டும் இத்தொகையைக் கிராம வழக்கு மன்றங்களில் 'பரிசம்' முதலான பல்வேறு பெயர்களில் குறிப்பிடுகின்றனர். இதில் மனைவி கணவனுடன் கூடி வாழ விருப்பமில்லையெனில் கணவனுக்கு ஈட்டுத்தொகையும் கிராம வழக்கு மன்றத்திற்கென்று ஒறுப்புத்தொகையும் கொடுக்க வேண்டும். கணவன் மனைவியுடன் கூடி வாழ விரும்பவில்லையெனில் மனைவிக்கு ஈட்டுத்தொகையைச் செலுத்த வேண்டும். இருவரும் பிரிய விரும்பினால் கணவன், மனைவிக்குச் சீதனப் பணத்தையும் சீதனப் பொருட்களையும் திருப்பித் தருதல்[28] வேண்டும். கணவனை இழந்த பெண் மீண்டும் திருமணம் செய்து கொண்டு வாழ

விரும்பினால் கணவன் சொத்தின் மதிப்பில் குறிப்பிட்ட அளவினைத் தீர்வைப்பணமாகப் பெற்றுப் பிரிந்து சென்று மறுமணம் செய்து கொண்டு வாழலாம்.

**தீர்த்துக் கட்டுதல்**

கிராமங்களில் வாழும் பெரும்பான்மையான சாதியினர் கிராம வழக்கு மன்றங்களிலேயே மணமுறிவு பெறுகின்றனர். அவ்வாறு மண முறிவு பெற்ற ஆணும் பெண்ணும் மறு மணம் செய்து கொள்வதற்குத் தகுதியும் உரிமையும் உடையோர் ஆவர். மணமுறிவு பெற்ற பெண் மறுமணம் செய்து கொள்வதைத் 'தீர்த்துக் கட்டுதல்' என்றழைக்கின்றனர்.[29]

**மணவிலக்கு**

கணவன் மனைவியின் நடத்தையில் சந்தேகப்பட்டு மனைவியைக் கொடுமைப்படுத்துதல்[30] பல பெண்களுடன் பாலியல் தொடர்பு வைத்திருத்தல்,[31] ஆண்மையில்லாதவனாக இருத்தல்[32] மனைவியுடன் சேர்ந்து வாழ விருப்பமின்மை[33] குடிப்பழக்கம்,[34] வேலைக்குச் செல்லாமை[35] மனைவியை ஒழுங்காக வாழ வைக்காமை[36] போன்ற காரணங்களினால் மனைவியர் கணவன்மார்களிடமிருந்து மணவிலக்குக் கோருகின்றனர்.

பல குடும்பங்களில் கணவன்மார்கள் மனைவியிடம் அடிக்கடி செலவுக்குப் பணம் கேட்டு மனைவியைத் துன்புறுத்துகின்றனர். மனைவியின் உழைப்பைச் சுரண்டுகின்றனர்.[37] இத்தகைய வழக்குகளில் கிராம வழக்கு மன்றத்தினர் கணவன்மார்களைக் கண்டித்து அறிவுரை வழங்கி, கணவன்-மனைவியரை இணைத்து வைத்துக் குடும்பம் நடத்துமாறு ஆலோசனை வழங்குகின்றனர். வழக்கு மன்றத்தார் தீர்ப்பை மீறுபவர்கள்மீது கடுமையான நடவடிக்கைகளை

மேற்கொள்கின்றனர். குடும்பங்களை இணைப்பதில் கிராம வழக்கு மன்றங்கள் பெரும்பங்காற்றுவதைக் காணலாம்.

மனைவியின் கள்ளத்தொடர்பு[38] மூன்று குழந்தைகளுக்குத் தாயான குடும்பப் பெண் நடத்தை கெட்டவளாக இருத்தல்[39] அவள் கொழுந்தனுடன் தொடர்பு வைத்திருத்தல்[40] போன்ற காரணங்களினால் கணவன் மனைவியிடமிருந்து மணவிலக்குக் கோருகின்றான். கிராம வழக்கு மன்றத்தினர் அத்தகைய குடும்பப் பெண்களின் கள்ளத்தொடர்புகளைக் கண்டித்து அறிவுரை வழங்கி கணவன்-மனைவியரை இணைத்து வாழ வைக்கின்றனர். குடும்ப அமைப்பில் கணவன்-மனைவியர் உறவுக்குக் குழந்தைப் பேறு அடிப்படையான காரணங்களில் ஒன்றாகும்.[41] குழந்தையின்மையைக் காரணம் காட்டியும்[42] மனைவி அடிக்கடி காரணமில்லாமல் அவள் தாயார் வீட்டில் சென்று தங்கிக் கொள்வதைக் காரணம் காட்டியும்[43] கணவன் மனைவியிடமிருந்து மணவிலக்குக் கோருகின்றான். இதனால் குடும்ப அமைப்புச் சிதைவடைகின்றது. கணவன் மனைவி ஆகிய இருவரும் தகாத உறவு வைத்திருப்பதும் மணவிலக்குப் பெறுவதற்குரிய காரணங்களில் ஒன்றாக அமைகின்றது.[44] இத்தகைய வழக்குகளில் கிராம வழக்கு மன்றத்தார் கணவன்-மனைவியைச் சேர்த்து வைத்துக் குடும்பஅமைப்பினைச் சிதையாமல் இணைத்து வைக்கின்றனர்.

இரண்டு குழந்தைகளுக்குத் தாயான பின்னரும் கள்ளத்தொடர்பு வைத்திருக்கும் மனைவி அவள் கள்ளக் காதலனுடன் ஓடிவிட்ட வழக்கில் மணவிலக்குச் செய்து வைத்துள்ளனர்.[45] கணவன் மனைவியர் அன்புறவுக்குத் தடையாக மாமியார் கொடுமை[46] மாமனார்-மாமியார் கொடுமை[47] கணவன் மனைவியிடம் வரதட்சிணை கேட்டல்[48] ஆகிய காரணங்கள் அமைகின்றன. இத்தகைய வழக்குகளில் கிராம வழக்கு மன்றத்தினர் கணவன்-மனைவியரை இணைத்து வைக்கின்றனர். குற்றத்திற்குரியவர்களாகக் கருதப்படும் மாமியார்,

*மாமனார், கணவர் ஆகியோர்களைக் கண்டித்து அறிவுரை வழங்கி நல் வழிப்படுத்துகின்றனர்.*

*தவிர்க்க இயலாத காரணங்களினால் மட்டுமே அவர்களுக்கு மணவிலக்குச் செய்வதற்கு ஒப்புதல் அளிக்கின்றனர். அத்தகைய வழக்குகளில் பெண்ணிற்குத் தீர்வைத் தொகையும் பெற்றுத் தருகின்றனர்.[49] இவ்வாறு சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றத்தினர் குடும்ப அமைப்புச் சிதைந்து விடாமல் குடும்பங்களைக் கட்டிக்காத்து ஒருங்கிணைத்து வருகின்றனர் என்பதை இம்மாவட்ட வழக்குகளிருந்து அறியமுடிகிறது.*

**கிராமம் ஊர் இயக்கம்**

*சிவகங்கை மாவட்டக் கிராமங்களில் கிராமக் கட்டுப்பாடுகளையும் ஊர்க்கட்டுப்பாடுகளையும் மீறி நடப்போரைத் தள்ளி வைத்தலும் ஒதுக்கி வைத்தலும் நடைமுறையிலுள்ள பழக்கங்களாகும். கிராம வழக்கு மன்றத்தினர் ஒரே சாதியைச் சேர்ந்த காதலர்களின் திருமணத்தை வழக்கு மன்றத்தார் முன்னிலையில் நடத்தி வைக்கின்றனர்.[50] காதல் திருமணத்தை எதிர்த்த பெற்றோர்கள் பின்பு மனம் திருந்தி ஒன்றுபட்டு அக்காதல் திருமணத்தை ஏற்றுக் கொள்கின்றனர். தாழ்ந்த சாதியினருக்குள் (பறையர் இனப்பெண்ணும் வளையர் இன இளைஞனும், ஆசாரி இனப்பெண்ணும் பறையர் இன இளைஞனும்) நடைபெறும் காதல் திருமணங்களைக் கிராம வழக்கு மன்றத்தார் சட்டப்படி பதிவுத் திருமணம் செய்து கொள்ள வேண்டும்.[51] எனத் தீர்ப்பளித்துள்ளனர். உயர்ந்த சாதி இளைஞனைத் தாழ்ந்த சாதிப்பெண் (கள்ளர் இன இளைஞன் வண்ணார் இன பெண்) காதலித்துத் திருமணம் செய்து கொண்ட வழக்கில் அவ்விவருரையும் ஊரைவிட்டு வெளியேறுமாறு[52] தீர்ப்பளித்துள்ளனர். இருவேறு கிராமங்களைச் சேர்ந்த கள்ளர் இன இளைஞனும் மறவர் இனப்பெண்ணும் காதலித்துத் திருமணம் செய்து கொண்ட வழக்கில், கிராம வழக்கு மன்றத்தினர் அவ்விருவரையும் சமூகக்*

கட்டுப்பாடுகளை மீறியவர்கள் எனக்கூறி ஊரைவிட்டு வெளியேறுமாறு[53] தீர்ப்பளித்துள்ளனர். காதலித்துப் பெண்ணைக் கர்ப்பம் அடைச் செய்து விட்டு அப்பெண்ணைத் திருமணம் செய்து கொள்ள மறுத்த இளைஞனுக்கும் அப்பெண்ணிற்கும் கிராம வழக்கு மன்றத்தினர் கிராமக் கோயிலில் திருமணம் செய்து வைத்துள்ளனர்.[54] காதலித்த பெண்ணையே (ஒரே சாதிக்குள்) திருமணம் செய்து கொள்ள வேண்டும்; வேறு யாரும் அவனுக்குப் பெண் கொடுக்கக்கூடாது.[55] என்று கிராம வழக்கு மன்றத்தினர் தீர்ப்பளித்துள்ளனர். இத்தகைய தீர்ப்புகள் கிராமக் கட்டுப்பாடு, ஊர்க்கட்டுப்பாடு, சமூகக் கட்டுப்பாடு என்ற நிலைகளில் கிராமங்களில் இன்றும் கண்டிப்பான முறையில் நடைமுறைப்படுத்தப்பட்டு வருகின்றன. கிராம வழக்கு மன்றத்தார் அளிக்கும் தீர்ப்புகளையும் தண்டனைகளையும் ஏற்றுக்கொள்ள மறுப்பவர்கள் ஊரைவிட்டு ஒதுக்கி வைக்கப்படுகின்றனர்.[56] இது இம்மாவட்ட கிராமங்களில் எழுதப்படாத சட்டமாக அமைந்திருக்கின்றது.

'சாரயம் விற்கக் கூடாது' என்பது கிராமக் கட்டுப்பாடாகும்.[57] கிராமக் கட்டுப்பாட்டினை மீறிச் சாராயம் விற்பவர்களைக் கிராம வழக்கு மன்றத்தினர் ஊரைவிட்டு வெளியேறுகின்றனர். செருப்பால் அடிப்பதையும், செருப்பால் அடிவாங்குவதையும்[58] இம்மாவட்ட கிராமத்தினர் மிகவும் மரியாதைக் குறைவான செயல்களில் ஒன்றாகக் கருதுகின்றனர். இத்தகைய குற்றம் புரிந்தோரைக் கிராம வழக்கு மன்றத்தினர் மிகவும் கடுமையான முறையில் தண்டிக்கின்றனர்.

'ஊரோடு ஒத்து வாழ்'[59] என்பதே கிராம சமூக இயக்கத்தின் தாரக மந்திரமாக அமைந்திருக்கின்றது. கிராம வழக்கு மன்றங்கள் சாதிகளை இணைப்பதற்கும் குடும்பங்களை இணைப்பதற்கும் பெரும்பங்காற்றுகின்றன. நீதிமன்றங்களில் பல ஆண்டுகள் வரை நிலுவையிலிருக்கும் மணவிலக்குப் போன்ற வழக்குகளைக் கூட குடும்ப நலன் கருதியும், சாதிய, சமுதாய நலன் கருதியும், கிராம

வழக்கு மன்றத்தினர் மிக எளிதாகவும் திறமையாகவும் தீர்த்து வைக்கின்றனர். பெரும்பாலும் மணவிலக்கினைத் தவிர்த்துக் கணவன்-மனைவியரைச் சேர்த்து வைக்கின்றனர். கிராமங்களில் மனைவியர்களின் கள்ளத் தொடர்புகள் குடும்ப அமைப்புச் சிதைவடைவதற்குக் காரணமாகின்றது. இத்தகைய குடும்பங்களைக் கிராம வழக்கு மன்றத்தினர் இணைத்து வைக்கின்றனர். கிராமம் மற்றும் ஊர் இயக்கம் முழுமையாகக் கிராம வழக்கு மன்றங்களையும், கிராமக் கட்டுப்பாடு, ஊர்க்கட்டுப்பாடு, சமுதாயக்கட்டுப்பாடுகளையும் சார்ந்திருக்கின்றன என்பது இம்மாவட்ட வழக்கு மன்றங்களின் வழக்குகளிலிருந்து பெறப்படுகின்றது.

**பழக்க வழக்கங்கள்**

'பழக்க வழக்கங்கள்' என்னும் இப்பகுதியில் சிவகங்கை மாவட்டக் கிராம மக்களிடம் காணலாகும் உணவுகள், அணிகலன்கள், உடைகள், விழாக்கள், தெய்வ வழிபாடு முதலான பழக்க வழக்கங்களும், குடிகள், இருப்பிடம், ஊர் அமைப்பு, சமூக மதிப்புக்கள், படிநிலைகள்,ஏற்றத்தாழ்வுகள், இன-சாதிய வேறுபாடுகள், உறவுமுறை, பாலியல் முதலான செய்திகளும் விளக்கப்படுகின்றன. உணவுகள், அணிகலன்கள், உடைகள் போன்ற மக்களின் பழக்க வழக்கங்கள் தொடர்பாகப் பிரச்சினைகள் ஏற்பட்டு அவை வழக்கு மன்றங்களுக்கு வருவதில்லை. ஆனால் விழாக்கள், தெய்வ வழிபாடு ஆகியனவற்றின் மூலமாகப் பிரச்சனைகள் தோன்றி அவை கிராம வழக்கு மன்றங்களுக்கு வருகின்றன. சமூகப் பழக்க வழக்கங்கள் மக்களின் வாழ்க்கை முறையை நெறிப்படுத்துவதால், அவை கிராம வழக்கு மன்றங்களுடன் தொடர்புடையனவாகும்.

மக்கள் பல்வேறு சாதியினராக இருந்தாலும் அவர்கள் சமுதாயப் பொதுவிழாக்களின் மூலம் இணைக்கப்படுகின்றனர். இவ்விழாக்களால் ஊரக மக்களிடையேயுள்ள ஏற்றத் தாழ்வுகள் ஓரளவிற்கு நீக்கப்பெற்றுத்

தீண்டாமைப்பிணியிலிருந்து விடுவித்துக் கொள்ளவும் வாய்ப்புகள் உள்ளன. பெரும்பாலான கிராம அமைப்பை உற்று நோக்கும் பொழுது ஒவ்வொரு கிராமமும் 'ஊர்', 'சேரி' என்ற இரண்டு அமைப்புக்களைக் கொண்டிருக்கின்றன. சேரியில் தாழ்த்தப்பட்டவர்களான பறையர் இனத்தவர்கள் மிகுதியாக வாழ்ந்து வருகின்றனர். ஊரில் வாழும் உயர்ந்த சாதியினருக்கும் சேரி மக்களுக்கும் ஏற்படும் பிரச்சனைகளைக் கிராம வழக்கு மன்றங்கள் தீர்த்து வைக்கின்றன.

விவசாயி, ஆசாரி, தச்சன், கொல்லன், நாவிதர், வண்ணார், மடையன், தோட்டி, கணக்கன், நாட்டாமை, தலையாரி ஆகியோர் தம் தொழில்களையும் கடமைகளையும் ஒழுங்காகச் செய்து வரவேண்டும். அவர்களின் இத்தகைய தொழில்களுக்குக் குறிப்பிட்ட ஊதியமும் உரிமைகளும் வழங்கப்படுகின்றன. அவர்கள் தங்கள் தொழில்களைச் செய்ய மறுக்கும் போதும், அவர்கள் தொழில்களைச் செய்தமைக்கான உரிமைகள் மறுக்கப்படும்பொழுதும் பிரச்சனைகள் தோன்றுகின்றன. அதனால் பாதிக்கப்பட்டோர் கிராம வழக்கு மன்றங்களை நாடுகின்றனர். இவ்வாறு சமூகப் பழக்க வழக்கங்களுக்கும் கிராம வழக்கு மன்றங்களுக்கும் உள்ள தொடர்பு இப்பகுதியில் விளங்கப்பட்டுள்ளன.

**உணவுகள்**

"உணவுச் சேர்க்கையை அடிப்படையாகக் கொண்டு சிலவகை உணவுகளும் சிறப்பித்துப் பேசப்படுகின்றன. இறைச்சி,மீன் முதலியனவற்றைப் பச்சையாக உண்ணும் பழக்கம் அநாகரிக நிலையைக் குறிக்கும். தமிழகத்தில் அந்நிலை இல்லை.[60] கிராம மக்களின் உணவுமுறையில் சோறு, கஞ்சி, கூழ், களி முதலியன முதன்மை உணவுகளாக அமைகின்றன. இட்லி, தோசை, புட்டு, கொழுக்கட்டை, அப்பம், பணியாரம், அதிரசம், முறுக்கு முதலிய சிற்றுண்டிகள் சிறப்பு நாட்களில்

பயன்படுத்தப்படும் முதன்மை உணவுகளாக அமைகின்றன. இவற்றைப் 'பலகாரம் பட்சணம்' என்றும் குறிப்பிடுகின்றனர்.

நெல்லரிசி, கம்பு, கேழ்வரகு, சோளம், வரகரிசி முதலியன சமையலுக்குப் பயன்படுத்தப்படும் தானியங்கள் ஆகும். வேர்க்கடலை மிகுதியாக விளையும் பகுதிகளில் உணவுமுறைகளில் சிறப்பிடத்தைப் பெறுகின்றது. ஆடு, கோழி, பன்றி, எலி, உடும்பு, அணில், மாடு முதலியவற்றின் இறைச்சிகளும், மீன், நண்டு, கருவாடு, கோழி முட்டை, வாத்து முட்டை முதலியனவும் அசைவ உணவுப் பொருள்களாகும். கத்தரிக்காய், மாவடு, கொள், பூசணிக்காய், நெல்லிக்காய் முதலியனவும் குழம்பு, சாம்பார், வறுவல், பொரியல், வதக்கல், தொவயல், ஊறுகாய் போன்ற பல்வேறு வடிவங்களில் முதன்மை உணவுகளுக்குத் துணை உணவுளாகின்றன.

**அணிகலன்கள்**

"மானிடரின் அழகுணர்ச்சியின் வெளிப்பாடே அணிகலன்களாக உருவெடுத்துள்ளன. முதலில் மலர், காய், கனி விதைகளையும் பின்பு சங்கு, முத்து, பவளம் முதலியவற்றலான அணிகளையும் அதன்பிறகு பொன், வெள்ளி போன்ற உலோக அணிகளையும் மக்கள் பயன்படுத்தினர்"[61] என்பர் அ. இராகவன் உலோகங்களுக்கு மந்திர சக்தி உண்டு என்ற நம்பிக்கை காரணமாகப் பேய்பிசாசுகள் அணுகாமலிக்கும் பொருட்டுக் காப்பு முதலிய அணிகளை அணிந்ததால் உலோக அணிகள் பெருகின என்றும், பிற்காலத்தில் ஆடவர் தங்கள் செல்வ வளத்தைக் காட்டப் பெண்களுக்கு அணிகலன் அணிவித்ததால் அவை பெருகின என்றும் சுட்டிக்காட்டியுள்ளனர்.[62] அணிகலன்கள் தமிழர்களின் அழகுணர்ச்சியையும் தொழில் நுட்பத்தையும், செல்வ நிலைகளையும் சமுதாயப் பழக்க வழக்கங்களையும் எடுத்துக்காட்டுவனவாக அமைந்துள்ளன. கிராமங்களில் ஆண்கள் அதிகமாக அணிகலன்களால் ஒப்பனை செய்து கொள்வதில்லை.

பெண்கள் எல்லாச் சமயங்களிலும் காதணியும் சங்கிலியும் வளையலும் அணிகின்றனர். காலில் கொலுசு, தண்டை அணிகின்றனர். மணமான பெண்கள் மிஞ்சி (மெட்டி) அணிகின்றனர். மணமாகாத பெண்கள் கருகமணி அணிகின்றனர். இம்மாவட்டத்துப் பெண்கள் காது வளர்த்துப் பொன்னோலை அணியும் வழக்கம் சில ஆண்டுகளுக்கு முன்பு வரை இருந்து வந்தது. இக்காதணியைத் 'தண்டட்டி' என்றும் குறிப்பிடுவர். இவ்வழக்கம் தற்பொழுது சில வயதான பெண்களிடம் மட்டுமே காணப்படுகின்றது. விழாக் காலங்களில் செல்வ வளமுடைய குடும்பத்துப் பெண்கள் காசுமாலை, பசுமாலை (பவுன்மாலை) அட்டிகை, இரட்டை வடம், சங்கிலி, முத்துமாலை, பதக்கம், ஒட்டியாணம் ஆகியனவற்றை அணிகின்றனர். முழங்கைக்குமேல் குடங்கை வளையலையும் அணிகின்றனர். இதனை 'வங்கி' எனக் குறிப்பிடுகின்றனர். சற்றே வயதில் முதிர்ந்த பெண்கள் அன்னப்பொட்டு, லெட்சுமிப் பொட்டு, மாங்காய்ப் பொட்டு, மணிக்கோவை, பவழமணி முதலான அணிகலன்களையும் காதின் மேற்பகுதியில் பூடியும் முருகும் அணிகின்றனர். காதில் தட்டு, தருப்பு முதலியனவற்றை அணிகின்றனர். கைம்பெண்கள் அணிகலன்கள் அணிவதில்லை. வெண்ணூலில் மணிகோத்து அணிகின்றனர். அதனைத் 'தும்புமணி' எனக் குறிப்பிடுகின்றனர்.

**உடைகள்**

மக்கள் அணியும் உடைகளில் சில தனித் தன்மைகள் காணப்படுகின்றன. ஆண்கள் இடையில் வேட்டியும் தோளில் துண்டும் அணிகின்றனர். கிராமக் கூட்டங்களிலும் திருமண ஊர்வலங்களிலும் திருவிழாக் கூட்டங்களிலும் சட்டை அணிந்து மேல் துண்டைத் தலைப்பாகையாகக் கட்டிக் கொள்கின்றனர். இறை வழிபாட்டு நேரங்களில் துண்டை இடுப்பில் கட்டிக் கொள்கின்றனர். இறப்பு (இழவு) நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளும் பொழுது சட்டையின்றி வேட்டியின் மீது

துண்டைத் தட்டுச் சுற்றாகக் கட்டிக் கொள்வர். உடல் உழைப்பில் ஈடுபட்டிருக்கும் காலங்களில் வேட்டியை வரிந்து கட்டிக் கொள்கின்றனர். இதனை 'மறுதார்ப் பாய்ச்சிக் கட்டுதல்' என்கின்றனர். பெண்கள் பொதுவாகப் பருத்திப் புடவையையும் திருவிழா நாட்களில் பட்டுப்புடவையையும் உடுத்திக் கொள்கின்றனர். புடவையைப் பின்கொசுவம் வைத்துக் கட்டிக் கொள்வது இங்குள்ள பெண்களின் வழக்கமாகும். வயதில் மூத்த பெண்கள் இரவிக்கை அணிவதில்லை. திருமணத்தின் போது மட்டும் மணப்பெண் கட்டிக்கொள்ளக் கூடிய புடவையைக் 'கூறைச் சேலை' எனக் குறிப்பிடுகின்றனர். இது சிறு சிறு கட்டம் போடப்பட்ட எளிய புடவையாகும். கூறை, நல்லாடை, பட்டாடை என்று திவாகரம் குறிப்பிடும் மூன்று தரங்களில் கூறை சாதாரண ஆடையாயிருத்தல் வேண்டும் என்று எஸ். வையாபுரிப்பிள்ளை கூறும் கருத்தும் ஈண்டு மனங்கொள்ளத் தக்கதாகும்.[63] கூறைப்புடவை பட்டாலும் நெய்யப்படுவதுண்டு.

**விதவையும் அணிகளும்**

அணிகலன்கள் அணிந்து ஒப்பனை செய்து கொள்வது மனதுக்கு இன்பம் நல்கக்கூடியது. கணவனைப் பிரிந்திருக்கும் மகளிர் அவன் திரும்பும் வரை இன்பங்களை விழைவது கூடாது என்பதை வலியுறுத்தவே அம்மகளிர் அணிகலன்கள் அணிவதில்லை என்று இலக்கியம் படைக்கப்பட்டன.[64] அத்துடன் கணவனை இழந்த பெண்கள் நிரந்தரமாக இன்பத்தினை விழையக்கூடாது என்று கருதியே இன்ப உணர்வே அவர்களுக்குத் தோன்றக்கூடாது என்ற நோக்கில் இன்பப் பொருட்களை விலக்குமாறு உடைமைச் சமுதாயம் அவர்களைப் பழக்கி வந்துள்ளது. கணவனை இழந்த மகளிர் கைவளை முதலிய அணிகளைக் களைதல் பற்றிப்பழைய இலக்கியங்கள் தெளிவுபடுத்துகின்றன.[65] இம்மாவட்ட

கிராமங்களிலுள்ள பெண்கள் கணவனை இழந்த நிலையில் தாலி, சங்கிலி, வளையல் போன்ற அணிகளை நீக்கும் போது கதறித் துடித்து அழுகின்றனர்.

**விழாக்கள்**

கிராமங்களில் வாழும் மக்கள் பல்வேறு சாதியினராக இருந்தாலும் அவர்கள் சமுதாயப் பொது விழாக்களின் மூலம் இணைக்கப்படுகின்றனர். ''விழா என்பது நாட்டை வாழ்விக்க வரும் நல்ல நாளேயாகும். நாட்டில் எத்துணை வேறுபாடுகள் இருந்தாலும் அவை விழா நாட்களில் நீங்கப் பெறல் வேண்டும்''[66] என்பர் அ.மு. பரமசிவானந்தம். ஊர் நாடு முழுமைக்கும் பொதுவாக நடைபெறும் பொதுக் கோயில் திருவிழாவைத் தவிர அய்யனார் கோயில் புரவியெடுப்பு விழாக்களும், மாரியம்மன் கோயில் விழாக்களும் வேறு சில விழாக்களும் ஆங்காங்கு கொண்டாடப்பட்டு வருகின்றன.

**மாரியம்மன் கோயில் திருவிழாக்கள்**

கிராமங்களிலும் மிகுந்த அளவில் வழிபடப்படும் தெய்வம் மாரியம்மனாகும். இத்தெய்வம் ஊர் மக்களை நோய்களினின்றும் காக்கும் ஆற்றலுடையது என்ற அடிப்படையில் வழிபாடு நிகழ்ந்து வருகின்றது. மழை வேண்டலும் இவ்வழிபாட்டின் ஒரு கூறாகும். கள்ளர் குடியிருப்புகள் மட்டுமல்லாமல் பறையர்கள் உள்ளிட்ட அனைத்துச் சாதியினரும் வாழும் இடங்களிலும் மாரியம்மன் கோயில்கள் அமைந்துள்ளன. இளையாண்குடி ஒன்றியம் தாயமங்கலம் கிராமத்தில் அமைந்துள்ள முத்துமாரியம்மன் கோயில் மிகவும் சக்தி வாய்ந்த தெய்வமாக இவ்வட்டாரக் கிராம மக்களால் நம்பப்பட்டு வழிபடப்படும் தெய்வமாகும். இத்தெய்வத்திற்கு ஆண்டுதோறும் பங்குனி மாதம் தொடர்ந்து விழாக்கள் எடுக்கப்பட்டு வருகின்றன. முத்தலைச் சூலத்தையே மாரியம்மனாக வழிபடும் மரபும் காணப்படுகின்றது. மாரியம்மன் வழிபாட்டில் 'முளைப்பாறி போடுதலும்', 'கரகம் எடுத்தலும்',

*'அக்கினிச்சட்டியும்' சிறப்பிடம் பெறுகின்றன. இத்தெய்வத்தை வழிபடுவோர் அனைவரும் அந்நாட்களில் விரதமிருக்கின்றனர். சில ஊர்களின் மாரியம்மன் திருவிழாக்களில் 'பூக்குளி' எனப்படும் தீக்குழியில் நடந்து சென்று கரகத்தைச் சேர்க்கும் முறையும் காணப்படுகின்றது. இம்மாரியம்மன் வழிபாடு இடத்துக்கு இடம் சிறிய வேறுபாடுகளுடன் அமைகின்றது.*

*கிராமங்களிலுள்ள கோயில்கள் கிராம நிருவாகத்திற்கு உட்பட்டவை. கிராம மக்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து கோயில் திருவிழாக்களை நடத்துகின்றனர். கோயில் திருவிழாக்களில் பிரச்சனைகள் தோன்றுவதற்கும் இடமுண்டு. அவ்வாறு கோயில் விழாக்கல் தொடர்பான பிரச்சனைகள் தோன்றும் போது, கிராம வழக்கு மன்றத்தினர் அவற்றைத் தீர்த்து வைக்கின்றனர்.*

**ஏரிடும் பூசையும் சிறப்பு விடுதலும்**

*கிராமங்களில் வாழும் மக்களின் முதன்மையான தொழீல் உழவாகும். இந்த உழவுத் தொழிலோடு தொடர்புடையனவாகப் பல நம்பிக்கைகளும் பழக்க வழக்கங்களும் நிலவுகின்றன. சித்திரை மாதம் முதல் நாளில் 'ஏரிடும் பூசை' என்னும் நிகழ்ச்சி சிறப்பாக நடைபெறுகின்றது. அந்நாளில் அனைத்துக் குடும்பத்தினரும் தங்கள் வயல்களுக்குச் சென்று வேளாண்மைக் கருவிகளை வைத்துப் பூசை செய்து இறைவனை வணங்குகின்றனர். குடும்பத்தில் மூத்தவர் ஏரைப்பிடித்துச் சற்று நேரம் உழுகின்றனர். இதனை 'ஏரிடல்' என்றும் 'ஏரிடும் பூசை' என்றும் அழைக்கின்றனர். மழையின் பொருட்டுத் தெய்வத்திற்குப் பலியிடும் வழக்கம் சங்க காலத்திலேயே இருந்து வந்துள்ளமை சிந்தனைக்குரியதாகும்.*[67]

**தெய்வ வழிபாடு**

*கிராம மக்களிடம் சிறு தெய்வங்கள் மீதும் மிகுதியான நம்பிக்கைகள் இருந்து வருகின்றன. "மக்களிடையே நல்ல குடும்ப வாழ்வு அரசியலமைப்பு, சமுதாயக்*

கட்டுப்பாடு முதலியவைகள் தெய்வ நம்பிக்கையாகுப் பிறகு தான் உண்டாயின"[68] என்பார் சாமி. சிதம்பரனார். ஆகம விதிமுறைகளின்படி வழிபடப்படும் தெய்வத்தைப் பெருந்தெய்வமென்றும் கிராம மக்களின் நடைமுறைக்கு உகந்தவாறு வழிபடப்படும் தெய்வத்தைச் சிறுதெய்வம் என்றும் குறிப்பிடலாம். இவ்வழிபாட்டு முறைகளை முறையே 'பெருமரபு' என்றும் 'சிறுமரபு' என்றும் குறிப்பிடுகின்றனர்.

"ஞானிகள் சமயச் சான்றோர், இலக்கிய ஆசிரியர்கள் மரபு பெருமரபு பாமர மக்களின் மரபு சிறு மரபாகும். சிறுமரபு எழுத்தறிவற்ற கிராம மக்களிடம் அவர்களின் சமுதாயத்தில் தானே தோன்றி வளர்வது"[69] என்பார் துளசி. ராமசாமி இச்சிறு தெய்வங்களைத் திராவிடத் தெய்வமென்று குறிப்பிடுவது காலப் பொருத்தமுடையது எனவும் அவர் சுட்டிக்காட்டியுள்ளார்.

**குல முன்னோர்கள் வழிபாடு**

இச்சிறுதெய்வங்களைத் தவிர தங்களின் குலமுன்னோர்களையும் வழிபடும் வழக்கம் உள்ளது. இவர்களது உருவங்கள் அய்யனார் கோயில்களில் நிறுவப்பட்டுள்ளன. இவற்றைப் 'பட்ட தெய்வங்கள்' என்றழைக்கின்றனர். இவ்வழிபாடு சங்க காலம் முதற்கொண்டு தமிழ் இலக்கியங்களில் காணப்படும் 'நடுதல் வழிபாட்டு மரபை' ஒட்டியதாக அமைகின்றது.[70] மறைந்த சான்றோர்களுக்கு உருவச்சிலை வைத்துப் பட்டதெய்வமாக வழிபடுவது போலக் கற்புடைய பெண்களையும் வழிபடும் வழக்கம் இருந்து வருகின்றது. இவ்வகையில் சிவகங்கை மாவட்டம் பாகனேரி நாட்டு அழகியம்மன் குறிப்பிடத்தக்க தெய்வமாகும். நகரம்பட்டியில் பிறந்த அழகம்மை என்ற பெண் பாகனேரியில் வாழ்க்கைப்பட்டிருந்தாள். ஒருநாள் அப்பெண் நீர் எடுக்கச் செல்லும் பொழுது கூடியிருந்த கூட்டத்திலிருந்த அப்பெண்ணின் கொழுந்தன் 'என் அண்ணி போற

ஒயிலப்பாரு' எனப் பாடியதைக் கேட்டு, அப்பாடலைப் பொறுக்கமாட்டாமல் புல்வ நாயகி அம்மன் கோயில் கிணற்றில் விழுந்து தற்கொலை செய்து கொண்டாள். அவளை எரித்த போது அவளது பட்டாடையின் ஒரு பகுதி பறந்து சென்று அவள் பிறந்த ஊராகிய நகரம்பட்டியில் சென்று விழுந்தது. அதுமுதல் அவளது தாய் வீட்டாராகிய 'வேங்கைப்புலி புரத்தார்' அப்பெண்ணைத் தெய்வமாக வழிபடலாயினர். இத்தெய்வத்தை அவர்கள் விளக்காக வைத்து வழிபட்டு வருகின்றனர். பாகனேரியில் அப்பெண்ணின் புகுந்த வீட்டாரும் அத்தெய்வத்தை வழிபடுகின்றனர்.

**அய்யனார், கருப்புசாமி வழிபாடு**

கிராமங்களிலுள்ள அய்யனார் கோயில்களில் கள்ளர்களின் காவல் தெய்வமாகிய கருப்புத் தெய்வம் வழிபடப்படுகின்றது. அழகர் கோயிலில் குடிகொண்டுள்ள பதினெட்டாம்படிக் கருப்பர் கள்ளர்களது வழிபாட்டிற்குப் பெரிதும் உரியவர் என்னும் பல அறிஞர் தம் கருத்துக்களை மேற்கோள்காட்டி தொ. பரமசிவன் நிறுவியுள்ளார்.[71] அய்யனாருக்குப் பொங்கல் வைத்தும் கருப்புசாமிக்கு உயிர்ப்பலியிட்டும் வழிபட்டு வருகின்றனர். கருப்புசாமியின் ஆயுதமாக 'வளரி' என்னும் தடி அமைந்துள்ளது. அழகர்கோயில் விழாவில் கருப்புசாமியை வளரி தாங்கியவராக அலங்காரம் செய்யும் வழக்கமும் உள்ளது. இவ்வளரி தனித்தன்மை வாய்ந்த ஓர் ஆயுதமாகும். இது இலக்கினைத் தாக்கி விட்டு எய்தவரிடமே வந்து சேரும் ஒரு வளைத்தடியாகும். இவ்வகையில் இது ஆஸ்திரேலியப் பழங்குடி மக்களின் 'பூம்மராங்' என்னும் கருவியை ஒத்துள்ளது. வளரி கள்ளர்களுக்குரியது என்பதனைத் தர்ஸ்டன், கூட்டன் ஆகிய அறிஞர்களும் நிறுவிக் காட்டியுள்ளனர்.[72]

இக்கருவி சிவகங்கைச் சீமையில் தான் பெருமளவில் பயன்படுத்தப்பட்டு வந்தது என்று மீ. மனோகரன் குறிப்பிடுகின்றார்.[73] மருதுபாண்டியர் தூக்கிலிடப்பட்டபின் இவ்வளைத் தடியைப் பயன்படுத்துவதை ஆங்கிலேய அரசு தடை செய்தமையால் இவ்வளைத் தடியைப் பயன்படுத்தும் முறை இக்கால மக்களுக்குத் தெரியாமல் போயிற்று. ஆயினும் இக்கருவி இம்மாவட்ட கள்ளர்கள் சிலரிடம் தற்பொழுதும் உள்ளது. அவர்கள் பொங்கல் நாளில் இக்கருவியையும் வைத்து வழிபடுகின்றனர்.

**குடிகள் இருப்பிடம்**

ஒருநாட்டின் இயற்கைச் சூழல்களுக்கேற்பவும் தொழில் மாற்றம் பொருளாதார ஏற்றத் தாழ்வுகளுக்கேற்பவும் வீடுகள் அமைந்திருக்கும். சிவகங்கை மாவட்டக் கிராம மக்களின் வீடுகள் இருவகையான அமைப்பைக் கொண்டுள்ளன. எளிய மக்கள் மண்சுவர் கொண்ட கூரைவீடுகளில் வாழ்ந்து வருகின்றனர். இவ்வீடுகளின் கூரைகள் பனையோலையால் வேயப்பட்டுள்ளன. வீட்டையொட்டிச் சமையலறை இருக்கின்றது. இதனை 'இரண்டாங்கட்டு' என்றழைக்கின்றனர். ஒவ்வொரு வீட்டையும் சுற்றிச் செங்கற்களாலோ மண்ணாலோ ஆகிய சுவரோ அல்லது முள்வேலியோ அமைந்திருக்கின்றன. முள்வேலி இல்லாத சில வீடுகளில் பனையோலைகளையும் தென்னை மட்டைகளையும் பயன்படுத்தி மறைவு கட்டியுள்ளனர். இதனைத் 'தெத்துக்கட்டுதல்' என்று குறிப்பிடுகின்றனர். வீட்டையடுத்தோ அல்லது வீட்டையொட்டியோ மாட்டுக் கொட்டகை அமைந்திருக்கின்றது.

கிராமப்புறங்களில், சாதிக் கொடுமைகள் (தீண்டாமை) காரணமாகத் தாழ்த்தப்பட்ட சாதியினர் மாடிவீடு கட்டிக் கொள்ளத் தடை செய்திருந்த செய்திகளை வரலாறு சுட்டுகின்றது.[74] இன்று அதுபோன்ற தடை ஏதும் இல்லை.

இருப்பினும் இம்மாவட்ட கிராமங்களில் பொருளாதார ஏற்றத்தாழ்வு காரணமாகக் குடிசைகளும் மாளிகைகளும் அடுத்தடுத்து உள்ள நிலையைக் காணமுடிகின்றது.

**ஊர் அமைப்பு**

கிராம அமைப்பை உற்று நோக்கும் பொழுது ஒவ்வொரு கிராமமும் 'ஊர்', 'சேரி' என்ற இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரிந்திருப்பதைக் காண முடிகிறது.

ஊருக்கும் சேரிக்கும் முறையே தனித்தனி நீர்நிலைகள், இடுகாடுகள், கோயில்கள் முதலியன உள்ளன. சாதித்தலைவர்கள், ஊர்ப்பஞ்சாயத்து முதலியன தனித்தனியே உண்டு. சேரிப்பஞ்சாயத்து ஊர்ப்பஞ்சாயத்துக்கும் கட்டுப்பட்டதாகும். அதே நேரத்தில் ஊர்ப்பஞ்சாயத்து, சேரிப்பஞ்சாயத்துக்குக் கட்டுப்படாதது என்பது சிந்திக்கத்தக்கதாகும்.

பொதுவாகச் சமூக விடுதலையும் சுதந்திரமும் உடைய செல்வக் குடியினர்-உடைமையாளர்கள் வாழும் அல்லது வாழ்ந்த கிராமங்களிலேயே ஊர், சேரி என்ற அமைப்பு காணப்படுகின்றது. உடைமையற்ற எளிய மக்கள் வாழும் பகுதிகளில் இவ்வமைப்புக் காணப்படவில்லை. ஆதலால், உடைமையாளர்கள் தங்கள் வாழ்க்கை வளத்திற்காகத் தொழில் புரியும் மக்களைத் தனித்து வைத்துச் 'சேரி' என்ற அமைப்பை உருவாக்கியிருக்க வேண்டும். இதில் ஏற்றத்தாழ்வுகளும் தீண்டாமையும் தோன்றி வளரப் பார்ப்பனர்கள் பெரிதும் காரணமாக இருந்திருக்கின்றனர். 'நிலையான செல்வக் குடியினருக்கு அடியில் (enduring aristocracy) உழைக்கும் வர்க்கம் பல்வேறு தொழில் அமைப்புக்களாக (Trade Guilds) இயங்கி வந்துள்ளது.'[75] என்ற வில்டூரண்ட் (Will Durant) கருத்திற்கேற்பத் தமிழகத்தின் கிராம அமைப்புக் காணப்படுகின்றது. சிவகங்கை மாவட்ட கிராமங்களும் இந்த அமைப்பு முறையிலேயே காணப்படுகின்றன.

**சமூக மதிப்புகள்**

'சமுதாயம்' என்பது மனித இனத்தின் சமூக, பொருளாதார, அரசியல் ஈடுபாடுகளினாலும் தொடர்புகளினாலும் இயங்கி வரும் ஓர் அமைப்பாகும். இவ்வமைப்பு ஒரு குறிப்பிட்ட நாகரீக அமைப்பிற்குள் இயங்கி வருகின்றது. சிவகங்கை மவாட்ட கிராமங்கள் சாதியமைப்பை அடிப்படையாகக் கொண்ட கிராம சமுதாயங்கள் ஆகும். இம்மாவட்ட கிராம வழக்கு மன்றங்களிலும் சாதியம் பேராட்சி செலுத்துகின்றது. பொதுவாக மக்கள் கூடி வாழும் அமைப்பைச் சமுதாயம் என்பர்.

'பொதுவான சமூக மதிப்பீடுகளையும் நம்பிக்கைகளையும் பகிர்ந்து கொள்கின்ற ஒரு விரிந்த, நிலையான, தன்னிறைவுள்ள, தன்னைத்தானே நிலை நிறுத்திக் கொள்கிற, கலந்து செயல்படும் மக்கள் கூட்டம் சமுதாயமாகும்'[76] இந்த அடிப்படைகளில்தான் கிராம சமுதாயங்களின் சமூக மதிப்புக்கள் அடங்கியுள்ளன. மேலும், 'சமூகம் என்பது ஒரு பொதுப் பண்பாட்டைப் பகிர்ந்து கொள்வதோர் அரசியலாகும். மாநிலத்தின் எல்லைக்குள் வாழ்கின்ற பல்வேறு வயதினரையும், இருபாலரையும் கொண்ட தன்னை நிலைநிறுத்திக் கொள்கிற குழு'[77] எனச் சமூகவியலார் வரையறுத்துக் கூறியுள்ளனர்.

சமூகவியலாரின் பார்வையில் சமுதாயம் என்ற சொல் மக்கள் கூட்டத்தைக் குறிப்பதோடு மட்டும் அமைவதில்லை. 'ஒரு குறிப்பிட்ட குழுவினரிடையேயுள்ள பழக்க வழக்கங்களையும் விதிமுறைகளையும் சமூகச் செயற்பாடுகளையும் சமூக மதிப்புக்களையும் சமுதாய வாழ்க்கை முறைகளையும் அரசியல் பொருளாதார உறவுகளையும் குறிக்கவும்'[78] பயன்படுத்துகின்றனர்.

கிராமங்களில் வழக்கு மன்றங்களின் தலைவர்களாக இருப்பவர்கள் 'நாட்டாண்மைகள்', 'அம்பலகாரர்' என்னும் பட்டங்களைப் பெறுகின்றனர். இது

*அவர்களுடைய பரம்பரை உரிமையாக, வாழையடி வாழையாகத் தொடர்ந்து கொண்டிருப்பதைக் காணமுடிகின்றது. இருப்பினும் அவர்களே அந்தக்கிராமங்களில் பெரும்பான்மையினராக இருந்து வருகின்றனர். ஏனைய சாதிகளைச் சேர்ந்தவர்கள் வழக்கு மன்றங்களின் உறுப்பினர்களாக இருந்து, வழக்கு மன்றத் தலைவர் தீர்ப்புகளை வழங்குவதில் உதவி செய்கின்றனர். இம்மாவட்ட கிராமங்களில் வழக்கு மன்றங்களின் தலைவர்களும் உறுப்பினர்களும் சமூக மதிப்புடையவர்களாகவும்* (Social Value) *மரியாதைக்குரியவர்களாகவும் கிராம மக்களால் கருதப்பட்டு வருகின்றனர்.*

*கிராமங்களில் கள்ளர், மறவர், அகமுடையார் இனத்தைச் சேர்ந்தவர்கள் பெரும்பான்மையினராக வாழ்ந்து வருகின்றனர். இவர்களே அவ்வவ் கிராமங்களில் நாட்டாண்மையாகவும் அம்பலகாரராகவும் இருந்து வழக்கு மன்றங்களில் தீர்ப்புக்களையும் வழங்கி வருகின்றனர். சிற்சில கிராமங்களில் மட்டுமே இடையர், வெள்ளாளர், செட்டியார் இனத்தைச் சேர்ந்தவர்கள் நாட்டாண்மைகளாக இருந்து வருகின்றனர். ஒருசில கிராமங்களில் முத்தரையர், குடும்பர் இனத்தவர்கள் நாட்டாண்மைகளாக இருந்து வருகின்றனர். இக்கிராமங்களில் இச்சாதியினர் மடடுமே வாழ்ந்து வருகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும். இம்மாவட்டத்தின் அனைத்துக் கிராமங்களிலும் வழக்கு மன்றங்களின் தலைவர்களும் வழக்கு மன்றங்களின் உறுப்பினர்களும் சமூக மதிப்புடையவர்களாக விளங்கி வருகின்றனர்.*

**படிநிலைகள்**

*பண்டைத் தமிழராட்சியில் மன்னனே நாட்டிற்குத் தனிநாயகமாக இருந்தான். 'திருவாக்கிற்கு எதிர்வாக் குண்டோ?', 'அரசன் அன்று கொல்வான்; தெய்வம் நின்று கொல்லும்' என்னும் பழமொழிகள் மன்னனுக்கிருந்த அதிகார வலிமையை உணர்த்துவன. அரசன் அமைச்சரோடும், படைத்தலைவரோடும் சூழ்ந்து வினை*

செய்வது வழக்கம்; எனினும் மன்னன் விரும்பியதையே நிறைவேற்றுவதற்கு எதுவும் தடையாக இருந்ததில்லை. தலைமை அமைச்சனுக்கும், படைத்தலைவனுக்கும் அரசனால் ஏவப்பட்ட காரியங்களைப் பற்றி அவர்தம் கருத்தைத் தெரிவிக்கும் உரிமையிருந்ததே தவிர, அவனைக் கட்டுப்படுத்தும் அதிகாரமில்லை. மன்னன் அனைத்துக் காரியங்களையும் தலைமை அமைச்சனோடு கலந்து ஆலோசித்த பின்னரே ஒரு முடிவிற்கு வருவான்.

ஊர்ச்சபையார், நாட்டதிகாரிகள், கோயிற்கண்காணிப்பாளர், பொதுமக்கள் முதலியவர்களுள் தனிப்பட்டவரோ ஒரு குழுவினரோ ஒரு காரியத்திற்கு மன்னனுடைய ஒப்புதலையும் தீர்ப்பினையும் பெறவேண்டும். தலைநகரிலிருந்த அறங்கூறவையத்தில், பொதுவகையான வழக்குகளையெல்லாம் அவையத்தாரே தீர்த்து வைத்துள்ளனர். 'தனபதிச் செட்டியாரின் வழக்கை மதுரையிலுள்ள அறங்கூறவையத்தார் தீர்த்துவைத்ததாக'ப்[79] பரஞ்சோதிமுனிவர் கூறியிருத்தல் இதற்குத் தக்க சான்றாகும்.

மன்னன் தன்னுடைய நாடுகாவற் சுற்றுப்போக்கில், ஆங்காங்குள்ள அதிகாரிகள் தம் கடமைகளைச் செவ்வனே நிறைவேற்றுகிறார்களா எனக் கணிப்பதும், ஊர்ச்சபையாரும் அறங்கூறவையத்தாரும் தீர்க்க முடியாத வழக்குகளைத் தீர்த்து வைப்பதும், குடிகளின் முறையீடுகளைக் கேட்டு அவர்கள் குறைகளை நீக்குவதும், குற்றம் செய்தவரைத் தண்டிப்பதும், தக்கார்க்குத் தானம் செய்வதும், சீர்திருத்தமும், மக்கள் நலமும் பற்றிய ஆணைகளைப் பிறப்பிப்பதும் வழக்கமாகும்.

பண்டைய தமிழகத்தில் சிற்றரசர் நாடுகளுக்கெல்லாம் தன்னாட்சியுரிமை (Self-Government) அளிக்கப்பட்டிருந்தது. திறைப்பொருட்களைச் செலுத்துவதும், பேரரசர்களுக்குப் படையுதவி புரிவதும், சிற்றரசர்கள் செயலாகும்.

நாட்டதிகாரிகள் தம் நாடுகளைச் சுற்றிப் பார்த்து அதிலுள்ள ஊர்ச்சபையார், கண்காணிப்பாளர், அறநிலையப்பாதுகாவலர் முதலியோர் தத்தம் கடமைகளைச் செவ்வனே செய்து வருகின்றனராவெனக் கவனிப்பதும், ஊர்க்கணக்கு, கோயிற்கணக்கு, அறநிலையக்கணக்கு முதலியனவற்றைத் தணிக்கையிடுவதும், குற்றங்கண்டவிடத்துத் தண்டிப்பதும், ஆங்காங்குள்ள வழக்குகளைத் தீர்த்து வைப்பதும், அரசாணைகளை நிறைவேற்றுவதும், ஊர்ச்சபைத் தேர்தலை நடத்தி வைப்பதும் முதலான செயல்களைச் செய்து வருகின்றனர்.

சிற்றூர்களான கிராமங்கள் நாட்டதிகாரிகளின் கண்காணிப்பிலும், பேரூர்களான நகரங்கள் அரசனது நேரடிக் கண்காணிப்பிலும் இயங்கி வந்துள்ளன. "ஊர்ச்சபையார், தம் குற்றத்தை மறைத்தற்பொருட்டும், தம்மேற்குற்றத்தை ஏற்றாமைப் பொருட்டும், தம்மைக் கண்காணிக்கும் நாட்டதிகாரிகட்கும் தம்மை வினவவரும் வேறதிகாரிகட்கும் கையூட்டும் கொடுப்பதுண்டென்பது, சடாவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில், ஓர் ஊர்ச்சபையார் வாரப்பற்றிலிருந்தும், கடமைப் பற்றிலிருந்தும் வரும் வாரத்தையும் கடமையையும், சுந்தரபாண்டியனுடைய அதிகாரிகளின் நட்பைப் பெற செலவிட்டதிலிருந்து"[80] அறியலாம்.

ஊர்ச்சபையாருள், ஒவ்வொரு வாரியத்தாரும் தத்தம் கடமையை ஆற்றி வந்தனர். அவருள் ஊர்வாரியத்தினர்க்கு உரிமை வழக்கு, குற்றவழக்கு ஆகிய இருவகை வழக்கையும் தீர்க்கவும், குற்றவாளிகளைத் தண்டிக்கவும் முழு அதிகாரம் இருந்தது. ஊர்ச்சபையாரால் தீர்க்க முடியாத வழக்குகளும், தீர்த்த வழக்குகளின் மேல்முறையீடுகளும் (Appeal) மன்னனிடம் கொண்டு செல்லப்பட்டன. ஒரே வாரியத்திற்குரிய பணிகளை அவ்வவ் வாரியத்தாரும், பல வாரியங்களுக்குரிய பணிகளை அனைத்து வாரியத்தாரும் கூடிச் சூழ்ந்து முடிவு செய்தனர். ஊர்ச்சபைக் கூட்டங்கள் காளமூதியும் பறைசாற்றியும் கூட்டப்பட்டன. கூட்டம் கூடுவதற்கு

ஊர்மண்டபம் அல்லது மாளிகை இருந்தன. அது இல்லாத ஊர்களில் கோயில் மண்டபங்களில் கூட்டங்கள் நடைபெற்றன.

அவ்வப்போது வரும் அரசாணைகளைத் தலைமேற்கொண்டு அவற்றை நிறைவேற்றி வைப்பதும், அவற்றுள் முக்கியமானவற்றையும், ஊராட்சியில் தாம் செய்துள்ள புதுமையான ஏற்பாடுகளையும் கல்லில் வெட்டுவித்துச் சபை மண்டபத்திலாவது கோயில் மண்டபத்திலாவது பதிப்பிப்பதும் ஊர்ச்சபையார் கடமையாகும். ஊர்க்குடியிருப்பையும், வெள்ளாண்மையையும் இரவில் காவல் செய்வது 'பாடிகாவலன்' வேலையாகும். ஊரவையாரின் ஊராட்சி, 'ஊராண்மை', 'ஊரனம்' என்னும் பெயர்களில் சொல்லப்பட்டுள்ளன.

"ஆள்நிலப் பிரிவான ஒரு கூட்டூரின் பகுதியாக ஒரே குலத்தார் அல்லது ஒரு குலத்தார் பெரும்பான்மையினராக இருக்கும் சிற்றூரில் அவ்வக் குலத்திற்கும் இடத்திற்கும் ஏற்ப அம்பலகாரன், ஊராளி, கவுண்டன், கிழவன், குடும்பன், சேர்வை (சேர்வைகாரன்), தலைமகன், தலைவன், நாடன் (நாடான், நாடாள்வி), நாட்டான், நாட்டம்பலம், நாட்டாண்மைக்காரன், கட்டக்காரன், பட்டங்கட்டி, பட்டத்துப்பிள்ளை, பண்ணாடி, பெரியதனக்காரன், மணியக்காரன், மன்றாடி (மண்ணாடி மந்திரி), மூப்பன் முதலிய பெயர்களுள் ஒன்றைப் பூண்டு, ஊராரால் தேர்ந்தெடுக்கப்படாமல் தந்தையினின்று மகனுக்கு வரும் வழிமுறை உரிமைப்படி ஊர்த்தலைவனாயிருப்பவன், தன் ஊர் வழக்குகளில் கொலையொழிந்த பிறவற்றையெல்லாம் தானே தீர்த்து வந்துள்ளான்"[81] என்பார் தேவநேயப்பாவணர்.

சிற்றூர்களிலிருந்து மன்னனுக்கு வரவேண்டிய வரிகளெல்லாம் ஒழுங்காக வந்து, ஊர்த்தலைவனோடு முற்றும் ஒத்துக் காரியங்கள் அமைதியாக நடந்து வந்ததினால், மன்னனும், நாட்டதிகாரியும் கூட்டூர்ச் சபையாரும், சிற்றூர் வழக்கு மன்றத் தீர்ப்புகளில் பெரும்பாலும் தலையிடவில்லை. கூட்டூரைச் சேர்ந்த எல்லா

ஊர்கட்கும் பொதுவான செய்திகளையும், சிற்றூர்ச் செய்திகளில் ஊர்த்தலைவன் அதிகாரத்திற்கு மேற்பட்டவற்றையுமே ஊர்ச்சபையார் கவனித்து வந்துள்ளனர்.

ஒவ்வொரு சிற்றூர்க்கும் நீர்ப்பாய்ச்சியொருவனும் 'குடிக்காவல்' என்னும் 'ஊர்க்காவலன்' ஒருவனும் இருந்துள்ளனர். ஊர்வழக்குகளைத் தீர்ப்பதற்கும் ஊரில் சட்ட திட்டங்களை வகுத்தற்கும் ஊர்த்தலைவன் கூட்டும் கூட்டம், ஊர் மண்டபத்திலாவது, ஒரு மரத்தடியிலாவது, வெள்ளிடையிலாவது நடைபெற்று வந்துள்ளன.

**அறங்கூறவையத்தார் செயல்**

பழந்தமிழகத்தின் நகரங்களிலிருந்த அறமன்றத்தார் வழக்காளி (Plaintift) எதிர் வழக்காளி (Defendant) ஆகிய இருவரின் சொல்லையும் பலமுறை கேட்டுக்கரியும் (Witness) சான்றும் (Evidence) இருப்பின் அவற்றைக் கொண்டும், அவையில்லாவிடின் நூல் உத்தி, பட்டறிவு ஆகியனவற்றைத் துணைகொண்டும் வழக்குகளை நடுநிலையாக ஆராய்ந்து தீர்ப்புக்களை வழங்கி வந்துள்ளனர்.

சாட்சியும் சான்றும் இல்லாத வழக்குகளில், பழுக்கக் காய்ச்சிய இரும்பைக் கையால் பிடித்தல், பாம்புக் குடத்திற்குள் கையிடுதல் முதலிய தெய்வச்சான்றுகள் வாயிலாகத் தம் மெய்ம்மையை நாட்டும்படி, வழக்காளரை மன்றத்தார் கேட்டுள்ளனர். அத்தகைய சான்று பல வழக்குளில் உண்மைக்கு மாறாக இருந்தது என்பதை 'பாழ்ந்தனிசு வேண்டிப் பாம்புக்குடம் பெற்றான்' என்னும் பழமொழியாலும்,

> "கைவிட்ட ஒண்பொருள் கைவர வில்லென்பார்
> மெய்ப்பட்ட வாறே உணர்ந்தாரால்-மெய்யா
> மடம்பட்ட மானோக்கின் மாமயிலன்னாய்
> கடம்பெற்றான் பெற்றான் குடம்"[82]

என்னும் பழமொழி நானூற்றுச் செய்யுளால் அறியலாம். இம்முறை பிற்காலத்தில் கைவிடப்பட்டுள்ளது. வழக்குகள் இக்காலத்தில் நீதிமன்ற வழக்குகள் போல அக்காலத்தில் உரிமை வழக்குகள் என்றும், குற்ற வழக்குகள் என்றும் பிரிக்கப்படவில்லை. இருவகை வழக்குகளும் எல்லா அறமன்றங்களிலும் விவாதித்துத் தீர்க்கப்பட்டுள்ளன.

பண்டைய தமிழகத்தின் பழந்தமிழர் ஆட்சிமுறையின் இத்தகைய படிநிலையாகத்தான் இன்றைய கிராமங்களின் கிராம வழக்கு மன்றங்கள் அமைப்புமுறைகளாலும், செயற்பாடுகளாலும் ஒத்திருக்கின்றன என்பது சுட்டிக் காட்டத்தக்கதாகும். நிலவரி, வீட்டுவரி, விற்பனைவரி முதலான வருவாய் இனங்களை மட்டும் அரசாங்கம் எடுத்துக் கொண்டுள்ளது. இம்மாவட்டக் கிராம வழக்கு மன்றங்கள் உரிமையியல் வழக்குகளையும், குற்றவியல் வழக்குகளையும் விசாரித்துக் குற்றங்களுக்குத் தக்கவாறு தண்டனைகளை வழங்கி வருகின்றன. பாதிக்கப்பட்டவர்களுக்கு ஈட்டுத் தொகையைப் பெற்றுத் தருவதோடு, குற்றவாளிகளிடமிருந்து ஒறுப்புத் தொகை அல்லது தண்டத் தொகை என்ற பெயரில் ஒரு குறிப்பிட்ட தொகையைக் கிராம வருவாயாகப் பெற்றுக் கொள்கின்றன. அத்தொகையைக் கொண்டு கோயில் பராமரிப்பு, கோயில் விழாக்களை நடத்துதல், கிராமங்களுக்குக் குடிநீர் வசதிகளைச் செய்து கொடுத்தல் போன்ற பொதுக் காரியங்களையும் இம்மாவட்ட கிராம வழக்கு மன்றங்கள் செய்து வருகின்றன.

**ஏற்றத் தாழ்வுகள்**

கிராமங்களில் சாதிய அடிப்படையிலும் பொருளாதாரப் பின்புலங்களிலும் ஏற்றத்தாழ்வுகள் காணப்படுகின்றன. விருந்தோம்பலும், இரப்போர்க்கு ஈதலுமாகிய வேளாண்மைத் தொழிலைச் செய்வதனாலேயே உழவர்கள் 'வேளாளர்'

எனப்பட்டனர். இம்மாவட்டத்திலுள்ள அனைத்துச் சாதியினரும் வேளாண்மைத் தொழிலையே விரும்பிச் செய்கின்றனர். பண்டைய தமிழகத்தில் உழவர் அமைதிக் காலத்தில் உழுவுத் தொழிலைச் செய்துவந்ததோடு, போர்க்காலங்களில் போர்த் தொழிலும் புரிந்து வந்தனர் என்பதைத் தொல்காப்பியர்,

"வேந்துவிடு தொழிலின் படையுங் கண்ணியும்
வாய்ந்தனர் என்ப அவர் பெறும் பொருளே"[83] எனக் குறிப்பிட்டுள்ளனர்.

அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்னும் நாற்பெருங்குலத்தாருள், வேளாளர் ஏனைய முக்குலத்தில் அறத்தாரையும் தாங்கி வந்ததனால், வேளாளரே சிறந்த இல்லறத்தாராகக் கருதப்பட்டனர் என்பதைத் திருவள்ளுவர்,

"இல்வாழ்வா னென்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றி னின்ற துணை"[84] என்னும் குறளில் குறிப்பிட்டுள்ளார்.

அக்காலத்தில் மருத நிலத்து ஊர்களில் நிலையாக வாழ்ந்து ஆறிலொரு பங்கை முறையாக வரிப்பணமாக மன்னனுக்கு ஒழுங்காகச் செலுத்தி வந்தவர்களும் வேளாளரே "வண்ணான், மயிர்வினைஞன், செம்மான், குயவன், கொத்தன், கொல்லன், கன்னான், தட்டான், தச்சன், கற்றச்சன், செக்கான், கைக்கோளன், பூக்காரன், கிணையன்(கிணைப்பறையன்) பாணன், கூத்தன், வள்ளுவன், மருத்துவன் ஆகிய பதினென் தொழிலாரும் உழவனுக்குப் பக்கத்துணையிருந்து தத்தம் தொழிலைச் செய்து அவனிடம் கூலி அல்லது தாம் செய்த பொருட்கு விலை பெற்று வந்தனர். இதனால் அவர் பதினென் குடிமக்கள் எனக் கூறப்பட்டு வேளாளருக்குள் அடக்கப்பட்டனர்.[85] என்பர்

இங்ஙனம் உணவளித்துக் காத்தமையினாலேயே வேளாண்மையினைத் 'திருக்கை வழக்கம்' எனக் கம்பர் சிறப்பித்தார். தெய்வத்திற்குப் படைத்த திருச்சோற்றைப் பலர்க்கும் வழங்குவது திருக்கை வழக்கமாகும். திருவள்ளுவர்,

இல்வாழ்க்கை, விருந்தோம்பல், உழவு ஆகிய அதிகாரங்களில் உழவனைச் சிறப்பித்துக் கூறியுள்ளமையால் உழவனே தலைமைக் குடிமகன் (Chief Citizen) என்பது புலனாகின்றது.

மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாத ஊணுடைக் கருவிப் பொருட்களும், அரசாட்சிக்கு இன்றியமையாத வரியும், போருக்கு நேர்முகமாகவும் மறைமுகமாகவும் தேவையான பணிகளும் உழவரால் அமைவதை நோக்கும் போது.

"பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்பர்
அலகுடை நீழ லவர்." என வள்ளுவரும்.

"பொருபடை தருஉங் கொற்றமும் உழுபடை
யூன்றுசொல் மருங்கி னீன்றதன் பயனே
பகடுபுறத் தருநர் பார மோம்பிக்
குடிபுறந் தருகுவே யாயினின்
அடிபுறந் தருகுவர் அடங்கா தோரே"[87] என்று வெள்ளைக்குடி நாகனாரும்.
"புரப்போர் கொற்றமும்- உழவிடை
விளைப்போர்"[88]

என்று இளங்கோவடிகளும் கூறியிருப்பது ஒரு சிறிதும் மிகையாகாது.

வேளாளர் உழுதுண்பாரும் உழுவித்துண்பாரும் என இருவகைப்படுவர் உழுதுண்பாருக்கு 'கரங்களமர்', 'காராளர்' என்னும் பெயர்களும் உழுவித்துண்பாருக்கு 'வெண்களமர்', 'வெள்ளாளர்' என்னும் பெயர்களும் உரியன. உழவர் களமர், கடையர், வேளாளர் என்பன இருசாரருக்கும் பொதுவான பெயர்களாகும். ஆயினும் ஈற்றுப்பெயர் தவிர ஏனைய வெல்லாம் உழுதுண்பார்க்கே

சிறப்பாக வழங்கப்பட்டன. அவருக்கு 'மள்ளர்' என்னும் பெயரும் உண்டு அவர் தன் நிலத்தில் உழுவாரும் பிறர் நிலத்தில் உழுவாரும் என்னும் இரு நிலையர் உள்ளனர்.

மக்கள் அனைவரும் பெரும்பாலும் முன்னோர் தொழிலையே செய்து வந்தாலும், அவர்களும் விரும்பிய தொழிலை மேற்கொள்ள உரிமையிருந்தது. குலப்பிறப்பும், அப்பிரிவு பற்றிய ஏற்றத் தாழ்வும், தீண்டாமையும் பண்டைய தமிழகத்தில் இல்லை. தொழில் பற்றிய குலப்பிரிவும், அறிவும், துப்புரவும், ஒழுக்கமும் பற்றிய ஏற்றத்தாழ்வுகளுமே இருந்து வந்தன. பாணர் நாடகத் தொழிலையும், வள்ளுவர் சோதிடத் தொழிலையும், மருத்துவர் மருத்துவத் தொழிலையும், அம்பட்டையன் முடிவெட்டும் தொழிலையும் செய்து வந்தனர்.

பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்டு உழவனையே தலைமைக் குடிமகனாகப் பண்டைத் தமிழகம் போற்றி வந்தது. மக்களிடையே ஒற்றுமையும், மன்னனுக்கும் குடிமக்களுக்கும் இடையே இருதலையான அன்பும் இருந்து வந்தன. அரசனின் 'அரசாணை'க்கு அனைவரும் கட்டுப்பட்டிருந்தனர். தமிழ் நாட்டிற்குள் ஆரியர்கள் நுழைந்த பின்னர் இந்நிலைமை மாறியது. பிறப்புப் பற்றிய குலப்பிரிவு தோன்றியது. இந்நிலைமை மாறியது. பிறப்புப் பற்றிய குலப்பிரிவு தமிழ் நாட்டில் ஏற்பட்டதிலிருந்து தொழில் நிலைமை மாறிவருகின்றது. தமிழருக்குள் குலப்பற்றும் சாதிய உணர்ச்சியும் காலப்போக்கில் மேலோங்கி மிகுந்து இனவுணர்ச்சியும் நாட்டுப் பற்றும் (National Feeling) குன்றிப் போயிற்று. தீண்டாமையாலும் சாதிய ஏற்றத்தாழ்வுகளாலும் தாக்குண்ட தமிழினம் தன் சீரிய நிலைமைகளையும் உயரிய கொள்கைகளையும் சிறப்பான வாழ்க்கை முறைகளையும் இழந்து வருகின்றது.

ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்பட்ட சிவகங்கை மாவட்டக் கிராமங்களிலும், கிராம வழக்கு மன்றங்களிலும் இத்தகைய ஏற்றத்தாழ்வுகளையும், சாதிய உயர்வு தாழ்வுகளையும், பல்வேறு குலப் பிரிவுகளையும் தீண்டாமைக் கொடுமையும்

இன்றும் தொடர்கின்றன. இருப்பினும் இம்மாவட்ட கிராம வழக்கு மன்றங்கள் கிராம மக்களிடையே ஒற்றுமையையும் அமைதியையும் ஏற்படுத்தும் வகையில் செயல்பட்டு வருகின்றன என்பது சுட்டத்தக்கதாகும். சாதிகள் இணைப்பு, குடும்பங்கள் இணைப்பு, கிராமம், ஊர் இயக்கம், கிராமக் கட்டுப்பாடு என்ற படிநிலைகளில் கிராம வழக்கு மன்றங்கள் செயல்பட்டு வருகின்றன. சாதியும் தொழிலும் மக்களிடம் இயல்பிலேயே பின்னிப்பிணைந்து விட்ட ஒன்றாகக் காணப்படுகின்றது. ஆதலால் இம்மாவட்டக் கிராம மக்கள், இத்தகைய ஏற்றத்தாழ்வுகளைப் பொருட்படுத்துவதில்லை.

## இன சாதிய வேறுபாடுகள்

கிராமங்களில் இந்துக்கள் மிகுதியாகவும் இசுலாமியர்களும் கிறித்துவர்களும் சிறுபான்மையினராகவும் வாழ்ந்து வருகின்றனர். உலகில் வேறெந்தப் பகுதியிலும் காண முடியாத சாதி, அடிப்படைச்சமுதாய அமைப்பு இந்தியாவில் காணப்படுகின்றது. இந்தியச் சமுதாயத்தில் சாதிய அமைப்பே சிறப்பான இடத்தைப் பெறுகின்றது. இந்தியாவில் சுமார் மூவாயிரத்திற்கும் மேற்பட்ட சாதிகள் உள்ளன. கிராம அமைப்புகள் சாதி அமைப்போடு நெருக்கமான தொடர்புகளைக் கொண்டுள்ளன சிவகங்கைக் கிராமங்களும் இதற்கு விதிவிலக்கன்று.

கிராமங்களில் ஒருவருடைய வகுப்பு (Community)அவருடைய பிறப்பைக் கொண்டே தீர்மானிக்கப்படுவதால் அதனைக் குறிக்க 'சாதி' என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றனர். இவ்வமைப்பின் படி ஒரு சாதியில் பிறந்த ஒருவர் மற்றொரு சாதிக்கு மாற முடியாது. இன்றும் காணப்படும் இத்தகைய சாதியமைப்பு தமிழகம் உள்ளிட்ட பழைய இந்தியாவில் இல்லை. அன்று தொழில் பிரிவுகள் மட்டுமே காணப்பட்டன. இந்தத் தொழில் பிரிவுகளே ஆரியர்களின் வருகைக்குப்

பின்னர் சாதிப் பிரிவுகளாக மாற்றம் பெற்றன. ஆரியர்களே இம்மாற்றத்திற்கு அடிப்படைக் காரணமாக இருந்துள்ளனர்.

'ஒவ்வொரு சாதியும் அதற்கென விதிக்கப்பட்ட கட்டுதிட்டங்களிலிருந்து மாறலாகாது என்ற பொதுக் கொள்கையும் இருந்தது என்பதைக் கல்வெட்டுக்களால் அறியமுடிகின்றது.'[89]

சாதியில் ஏற்றத்தாழ்வுகளும் தீண்டாமையும் தோன்றித் தீவிரமடைந்ததன் விளைவாக வலங்கை, இடங்கைப்பிரிவுகள் தோற்றம் பெற்றன. இச்சாதி பிரிவினர்களுக்குள் ஓயாத பூசல்களும் சண்டைகளும் ஏற்பட்டன. உயர்சாதியினர் அரசின் ஆதரவுடன் இன்ப வாழ்க்கையை மேற்கொண்டனர். ஏனையோர் வரிச்சுமையாலும் தீண்டாமையாலும் அல்லலுற்றனர் என்பதை வரலாறு உணர்த்துகின்றது. சோழர் காலத்தில் சமுதாய வரலாற்றில் வலங்கை, இடங்கைக் குலங்கள் மிக முக்கியப் பங்கு வகித்தன. வலங்கை வகுப்பினர்க்கு அரசுச் செல்வாக்கும், வாழ்க்கை வசதிகள் போன்ற நலன்களும் சிறப்புக்களும் ஏராளமாய் வழங்கப்பட்டமையாலும், இடங்கையினர் நிலைமை தாழ்ந்தே இருந்து வந்தமையாலும் இடங்கையினர் மனம்புழுங்கி வலங்கையினர் மேல் போர் தொடுத்தனர்.[90]

'பறையர்' என்ற குலத்தினரைப்பற்றி இலக்கியங்களிலும் சோழர் கால கல்வெட்டுகளிலும் செய்திகள் கிடைக்கின்றன. பறையர்கள் தனித்தனிச் சேரிகளில் வாழ்ந்து வந்தனர். அவர்களுக்கெனத் தனிச்சுடுகாடும் ஒதுக்கப்பட்டிருந்தன. ஏனைய குலத்தினரைப் போலவே அவர்கள் முழுச் சொத்துரிமை பெற்ற குடிகளாக வாழ்ந்தனர். கிராமத்தார்கள் எழுதிக் கொடுத்த ஆவணங்களில் பறையர்கள் கையெழுத்திட்டுள்ளனர்.[91] சோழர் காலத்தில் தீண்டத்தகாதவர்கள் என்றோ சண்டாளர்கள் என்றோ இவர்கள் அழைக்கப்படவில்லை. 'புல்லுப் பறிக்கிற

பறையன்' தாழ்ந்தவனாகக் கருதப்பட்டான். அத்துடன் ஆவுரித்துத் தின்று வாழ்ந்த புலையரும் சமூகத்தில் தாழ்ந்தவராகக் கொள்ளப்பட்டனர். இக்குலத்தினருள் 'ஊர்ப்பறையன்' என்ற ஒரு பிரிவினரும் இருந்தனர்.[93]

இத்தகைய தீண்டாமைக் கொடுமைகளையும் சாதிய ஏற்றத்தாழ்வுகளையும் கொண்ட சமுதாய அமைப்பினை இன்றும் சிவகங்கை மாவட்ட கிராமங்களில் காணமுடிகின்றது. சாதி அமைப்பு முறையே கிராம சமூகப் பூசல்களுக்கும் சண்டைகளுக்கும் காரணமாக அமைகின்றன.

ஊர்களில் மிக உயர்ந்த சாதியாகக் கருதப்படும் புரோகிதத் தொழில் புரியும் பார்ப்பனர்கள் ஒரு சிலரே வாழ்ந்து வருகின்றனர். பெருநிலக் கிழார்களாகவும் பெருஞ் செல்வந்தர்களாகவும் திகழும் வெள்ளாளர்கள் இம்மாவட்ட கிராமங்களில் குறிப்பிடத்தக்க எண்ணிக்கையில் வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் முற்படுத்தப்பட்டோர் (Forward Community) என்ற பிரிவில் அடங்குவர். நிலவுடமையாளர்களாகவும் சிறுநிலக்கிழார்களாகவும் ஓரளவு வசதியும் சமூக சுதந்திரமும் கொண்ட கள்ளர், மறவர், அகமுடையர், இடையர், சாணார், செட்டியார், முதலியார், முத்தரையர் ஆகியோர் பிற்படுத்தப்பட்டோர் (Backward Community) என்ற பிரிவில் அடங்குவர். இவர்களைச் சார்ந்து வாழும் தச்சர், வண்ணர், குயவர், நாவிதர் முதலிய தொழிலாளர்கள் ஊரின் ஒதுக்குப் புறங்களில் வாழ்ந்து வருகின்றனர். ஒட்டர் முதலானோர் ஊர் மக்களால் ஒதுக்கப்பட்ட நிலையில் சேரிக்குப் போகப் பிடிக்காமல் ஊரையொட்டிய தனியிடங்களில் வாழ்ந்து வருகின்றனர். பழங்குடியிரான குறவர்களும் இவர்களைப் போலவே வாழ்ந்து வருகின்றனர். சில கிராமங்களில் ஒரே சாதிக்காரர்கள் மட்டுமே வசிக்கின்றனர். பல்வேறு சாதிக்காரர்கள் ஒரே கிராமத்தில் வாழ்ந்தால் அவர்கள்

பெரும்பாலும் தனித்தனி தெருக்களில் வாழ்கின்றனர். சமூகச் சமநிலை பெற்ற சாதியினர்கள் கலந்து வாழ்ந்து வருகின்றனர்.

ஊரிலிருந்து சற்று இடைவெளி விட்டுச் சேரி அமைந்திருக்கின்றது. சேரியில் தாழ்த்தப்பட்டவர்களான பறையர்கள் மிகுதியாக வாழ்கின்றனர். இவர்களுக்குப் புரோகிதர்களாகச் செயல்படும் வள்ளுவர்கள் சேரியிலேயே சற்று ஒதுக்குப்புறத்தில் வாழ்கின்றனர். சேரிக்கென்று வண்ணார், நாவிதர் முதலியோர் தனியே உள்ளனர். ஆயினும் அவர்கள் தனியிடங்களில் வாழ்வதில்லை. இருளர்களும், பள்ளர்களும், மூப்பர்களும் தனியிடங்களில சேரியினின்று சற்று ஒதுக்குப் புறங்களில் வாழ்ந்து வருகின்றனர். சக்கிலியர், பறையரினும் தாழ்ந்தவராகக் கருதப்படுகின்றனர். சேரி மக்கள் அனைவரும் ஊரிலுள்ள உடைமையாளர்களைச் சார்ந்தே வாழ்கின்றனர். ஊருக்கும் சேரிக்கும் தனித்தனி நீர்நிலைகள், இடுகாடுகள், கோயில்கள் உள்ளன. சாதித்தலைவர்கள், ஊர்ப்பஞ்சாயத்து முதலியன தனித்தனியே உள்ளன. சேரிப்பஞ்சாயத்து ஊர்ப்பஞ்சாயத்துக்குக் கட்டுப்பட்டது. ஊர்ப்பஞ்சாயத்து சேரிப்பஞ்சாயத்திற்குக் கட்டுப்படாததாகும்.

இவ்வாறு சிவகங்கை மாவட்டக் கிராமங்களில் இன, சாதிய வேறுபாடுகள் மேலோங்கி உள்ளன. சாதியும் தொழிலும் பிரிக்கமுடியாத வகையில் பின்னிப் பிணைந்துள்ளன. இன, சாதிய வேறுபாடுகள் தொடர்பாகப் பிரச்சனைகள் தோன்றும் போது அவற்றைக் கிராம வழக்கு மன்றங்கள் தீர்த்து வைக்கின்றன.

**உறவுமுறை**

சமூக அமைப்பில் குடும்பத்தைப் போன்று உறவுமுறைகளும் தொன்றுதொட்டு அடிப்படையாக இருந்து வருகின்றன. உறவுகள் இருவகைப்படும். அவை பிறப்பால் நிகழும் உறவு ( Consangunieous Kinship) திருமணத்தால் ஏற்படும் உறவு (Afflinal

Kinship) என்பனவாகும்.[94] இவ்வுறவு முறைகளின் அடிப்படையில் உறவுமுறைப் பெயர்கள் அமைகின்றன. ஒரே உறவுமுறையைக் சுட்டுவதற்கு வேறு வேறு சொற்கள் வேறு வேறு இனத்தவரிடையே வழங்கப்பட்டுவருகின்றன. உறவுமுறைப் பெயர்கள் ஒரு சமுகத்தின் பண்பாட்டை அறிய உதவுவன. சான்றாகச் 'சக்களத்தி' என்ற சொல் வழக்கு பலதாரமணம் நடைமுறையில் இருப்பதைக் காட்டுவதாகும். பலதாரமணம் இல்லாத நாடுகளில் 'சக்களத்தி' என்னும் பொருள்தரும் சொல்லைக் காணமுடியாது. கள்ளரிடையே வழக்கிலிருக்கும் உறவுமுறைப பெயர்களும் அவை காட்டும் உறவுமுறைகளும் பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளன.[95]

**தவிர்ப்பு உறவுமுறை**

உறவு முறைகளில் தவிர்ப்பு உறவும் கேலி செய்யும் உறவும் அடிப்படையானதாகும். "உறவுமுறைக் குழுவான குடும்பத்திலும் கால்வழியிலும் சில நடத்தைமுறைக் கோலங்கள் (Patterns) காணப்படுகின்றன."[96] (Avoidance) கேலி செய்யும் உறவும் (Joking Relationship) குறிப்பிடத்தக்கன.

பெரும்பான்மையான சமுகங்களில் (சாதிகள்) மருமகன் இருக்குமிடத்தில் மாமியார் வந்து பேசுதல் இல்லை. மாமனாரும் மருமகளும் ஒரே இடத்தில் இருப்பதையும், உரையாடுவதையும் தவிர்க்கின்றனர். இவ்வழக்கம் கள்ளர்கள், தேவர்கள், மறவர்கள், அகமுடையர், மூப்பர், முத்தரையர், இடையர், வெள்ளாளர், செட்டியார், பள்ளர், வளையர், குடும்பர், தச்சர் ஆகியோர்களிடையிலும் காணப்படுகின்றது. ஒரு பெண்ணுக்கு அவள் மாமனார் தவிர்ப்புக்குரிய உறவு ஆவார். இருப்பினும் அவளை தாய்மாமன் மணந்திருப்பின் தன் மாமனாரைத் தாய்மாமனாகவே தொடர்ந்து கருதுகின்றாள். அவரைத் தவிர்ப்புக்குரியவராகக் கருதுவதில்லை. மாறாக அவரது இறுதிக் காலத்தில் அவருக்கு இன்றியமையாப் பணிகள் செய்வது அவளது முக்கியக் கடமையாகின்றது. மாமியார்-மருமகன் உறவு

தவிர்ப்பு முறைக்குரியதாயினும் தன் அத்தை மகளை மணந்த ஒருவன் தன் மாமியாருடன் பேசுவது தவிர்க்கப்படுவதில்லை. ஒரு பெண் தன் கணவனது தமையனோடு (அண்ணன்) தவிர்ப்பு முறையைக் கடைப்பிடிக்கின்றாள். ஆனால் கணவனது தம்பியோடு பேசுதல் தவிர்க்கப்படுவதில்லை. அண்ணன் மனைவி தாய்க்குச் சமமானவள் என்னும் சிந்தனை இந்நிலைக்குக் காரணம் எனக் கொள்ளலாம்.

**உறவுமுறைப்பெயர்கள் மரபுகள்**

உறவுமுறைப் பெயர்களைப் பயன்படுத்துவதில் சில மரபுகள் காணப்படுகின்றன. பிற சாதியினர் ஒருவரால் 'அப்பு' என மரியாதையுடன் அழைக்கபடும் கள்ளர் ஒருவர் அவரை 'வாப்பா' 'போப்பா' எனக் குறிப்பிடுகின்றார். இவ்வாறு ஒருவரையொருவர் அழைக்கப்பயன்படுத்தும் சொற்களைக் கொண்டே அவர்களது 'சமூக மதிப்புக்களை' உணர முடிகின்றது.

புருசன், பொண்டாட்டி, கொழுந்தனார், நாத்தனார், கொழுந்தியாள், சகலை, மாமனார், மாமியார், பேத்தி, பேரன் முதலிய உறவுமுறைச் சொற்கள் பிறரிடத்தில் உறவுநிலையை விளக்க மட்டுமே பயன்படுகின்றன. இப்பெயர்கள் விளிப்பெயர்களாகப் பயன்படுவதில்லை. ஒரு பெண் தன் கணவனை 'இந்தாங்க' என்றோ, 'என்னங்க' என்றோ அழைக்கின்றாள். அவள் தன் பிள்ளைகளின் பெயர்களைக் சொல்லி 'சுப்பையா அப்பு', 'வள்ளி அப்பு' என்று அழைக்கும் வழக்கத்தைக் காணமுடிகின்றது. பிறரிடத்தில் பேசும் போது மனைவி தன் கணவனை இதே முறையில் குறிப்பிடுகின்றாள். கணவன் தன் மனைவியைப் பெயர் சொல்லி அழைக்கின்றார். வயதில் மூத்தவர் தன் மனைவியை 'என்னளா' என்று அழைக்கின்றான். கணவன் தன் மனைவியை 'வீட்டில' 'எங்க வீட்டில'

சொன்னங்க என்னும் வகையில் பேசும் மரபு வழக்கத்தில் இருந்து வருகின்றது. இவ்வழக்கம் பாகனேரி நாட்டுக் கள்ளர்களிடம் மட்டும் இல்லை.

உறவுமுறைப் பெயர்களோடு இடப்பெயர்களையும் சேர்த்துப் பயன்படுத்தும் மரபு பழங்காலம் முதற்கொண்டு தமிழ் நாட்டில் இருந்து வருகின்றது. 'யாயும் ஞாயும்'[97] எனத் தொடங்கும் குறுந்தொகைப் பாடலில் தாயையும் தந்தையையும் குறிக்கும் உறவுமுறைச் சொற்கள் தன்மை முன்னிலை ஆகிய இடத்துக் கேற்றவாறு வேறுபட்ட வடிவங்களைக் கொண்டிருப்பதைக் காணலாம். (யாய்-என் தாய், ஞாய்-உன் தாய், எந்தை- என் தந்தை, நுந்தை- உன் தந்தை,) இத்தகைய வழக்கத்தை இம் மாவட்ட கிராம மக்களிடம் தற்பொழுதும் காணலாம். நப்பு, நாத்தா, நண்ண, நக்கா, நங்கச்சி என்பன தன்மை இடப்பெயரோடு சேர்ந்த உறவுமுறைச் சொற்களாகும். இவை முறையே என் தந்தை, என் தாய், என் அண்ணன், என் அக்காள், என் தங்கை எனப் பொருள் தரும். முன்னிலை இடத்தினரின் உறவினரை விளிக்க நொப்பு, நோத்தா, நொண்ண, நொக்கா, நொங்கச்சி முதலிய சொற்கள் பயன்படுகின்றன. இவை 'உன்' என்ற முன்னிலை இடப் பெயரோடு உறவுமுறைப் பெயர்கள் சேர்ந்த சொல் வடிவங்களாகும். படர்க்கையிடத்தில் இத்தகைய ஒட்டுச் சொற்களைப் பயன்படுத்துவதில்லை. பல்வேறு சாதியினரையும் உறவுமுறைகூறி அழைத்தல் இணக்கமான சமூக உறவுக்குத் துணைநிற்கின்றது. உறவுநிலைகளில் பிரச்சனைகள் தோன்றும் போது அவற்றைக் கிராம வழக்கு மன்றத்தினர் தீர்த்து வைக்கின்றனர்.

**பாலியல்**

சமுதாயத்தில் குற்றங்கள் நிகழ்வதற்குச் சமூகம் (Social), பொருளாதாரம் (Economic), உடற்கூறும் வளர்ச்சி நிலையும் (Physical and Development), நிலவியல் (Geographical) அரசியல் (Political) ஆகிய ஐவகைக் காரணங்களைக்

குறிப்பிடுகின்றார். ராம்நாத்சர்மா[98] சமூகக் காரணத்தை விளக்கும் போது பிளவுபட்ட குடும்பம் (Broken Family), சமுதாயக் கட்டுப்பாடின்மை (Absence of Social Control), கல்விக் குறைபாடுகள் (Defective Education), திரைப்படம், செய்தித்தாள்கள், மதுவிலக்கு, திருமணத்தால் நிகழும் குறைபாடுகளும் வரதட்சணைக் கொடுமைகளும், விதவை மறுமணத்தடை, சமயம் சமுதாய மாற்றங்கள் (Change in Social Value) என்ற பத்துக் காரணங்களைக் குறிப்பிடுகின்றார்.[99] மேற்கூறப்பட்ட காரணங்களை ஆராயும் பொழுது பெரும்பாலும் குற்றங்கள் நிகழ்வதற்குப் பாலியலும் பொருளாதாரமும் அடிப்படைக் காரணங்களாக இருப்பதைக் காணமுடிகிறது.

ஆண்கள், உடல் வலிமையும் சுதந்திரமும் மிக்கவர்கள். பெண்களின் மென்மையையும் இயலாமையையும் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு அவர்களைத் தங்களின் இச்சைக்கு இணங்கச் செய்வது தங்கள் இச்சையை முடித்துக் கொண்ட பிறகு அவர்களைக் கைவிட்டுவிடுவதும் கிராமப்புறச் சமுதாயத்தில் மிகுதியாகக் காணமுடிகின்றது. ஒரு பெண்ணின் இளமையைத் துய்த்தபின் அவளை அறியேன் என்று கூறிய இளைஞன் ஒருவனை மரத்தில் பிணித்து நீறு பூசி சாம்பல் தலைப்பெய்து அவமானப்படுத்தியது சங்க காலச் சமுதாயம்[100] என்று அகநானூற்றுப் பாடலொன்று தெளிவுபடுத்துகின்றது.

'சொல்லித் தெரிவதில்லை மன்மதக்கலை' என்பது பழமொழி. வாய்மொழி இலக்கியங்களுள் பலவும் கோயில் சிற்ப ஓவியங்களும் பாலுறவுகளை மிகைப்படுத்திக் காட்டுவதை உணரமுடிகின்றது.[101] இவை முறையான போதனைக்கு வழிவகுக்கின்றன என்று கூற இயலாவிட்டாலும் பாலுணர்வு பற்றிய உணர்வைத் தோற்றுவிக்கவும் அது பற்றிய சிந்தனைகளை வளர்த்துக் கொள்ளவும் துணை செய்கின்றன என்று கருதலாம்.

**சோரம் போதல்**

கிராமப்புறங்களில் ஆண்கள் மனைவியைத் தவிர்த்து வேறு பெண்களோடு தொடர்பு கொள்வது சமுதாயத்தில் ஓரளவு கண்டிக்கப்பட்டாலும் அதனை மாபெரும் குற்றமாகக் கருதுதில்லை. அதே நேரத்தில் அவர்களுக்கு உடந்தையாக இருக்கும் பெண்களும் பரத்தமையொழுக்கத்தில் ஈடுபடும் பெண்களும் இழிந்துரைக்கப்படுகின்றனர். பெண்கள் கணவனைத் தவிர்த்து வேறு ஆண்களோடு தொடர்பு கொண்ட நிகழ்ச்சிகளை வெளிப்படுத்தும் போதும், சம்பந்தப்பட்ட பெண்களே கடுமையான விமர்சனத்திற்கும் தண்டனைக்கும் உள்ளாகிறார்கள். ஆண்களுக்குக் கிடைக்கும் சலுகைகளும் மன்னிப்பும் பெண்களுக்குக் கிடைப்பதில்லை. பெண்கள் மீது ஆண்கள் செலுத்தும் ஆதிக்கத்தின் விளைவே இச்சமநீதியின்மை ஆகும்.

கிராம வழக்கு மன்றங்களில் மனைவி கணவனைத் தவிர்த்து பிற ஆடவனுடன் பாலுறவு வைத்திருத்தல்[102], மூன்று குழந்தைகளுக்குத் தாயான குடும்பப்பெண் பிற ஆடவனுடன் கள்ளத்தனமாகப் பாலுறவு வைத்திருத்தல்[103], மனைவி அவள் கொழுந்தனுடன் கள்ளத்தனமாக உடலுறவு வைத்திருத்தல்[104] முதலான வழக்குகளில் வழக்கு மன்றத்தார் சோரம் போன மனைவியைக் கண்டித்து, கணவனுக்கும் மனைவிக்கும் தக்க அறிவுரைகளை வழங்கி அவர்களை மீண்டும் இணைத்து வைத்துள்ளனர். இதனால் கிராம வழக்கு மன்றங்கள் குடும்ப அமைப்பினைச் சிதையாமல் கட்டிக்காத்து வருகின்றன என்பது பெறப்படுகிறது. சிலவேளைகளில் கணவன்-மனைவி ஆகிய இருவரும் கள்ளத்தொடர்பு (சோரம் போதல்) கொண்டிருப்பதைக் காணமுடிகின்றது. இத்தகைய வழக்குகளிலும் கிராம வழக்கு மன்றத்தினர் கணவன் மனைவியரைச் சேர்த்து வைக்கின்றனர்.

கணவன் பல பெண்களுடன் பாலுறவு கொண்டிருத்தல்[106] கணவன் ஆண்மை இல்லாதவனாக இருத்தல்[107], பல ஆண்டுகள் தாம்பத்ய வாழ்க்கையில்

குழந்தையின்மை[108], போன்ற காரணங்களினால் கணவனும் மனைவியும் கிராம வழக்கு மன்றங்களில் மணவிலக்குக் கோருகின்றனர். இதற்கு அடிப்படைக் காரணம் அவர்கள் உடலுறவில் மனநிறைவு கொள்ளாமையே ஆகும். மேலும் சில குறிப்பிட்ட இனத்தவரிடம் பலதார மணம் இன்றும் நடைமுறையில் இருப்பதைக் காணமுடிகின்றது. இம்மாவட்ட வழக்கொன்றில், இரண்டாவது திருமணத்திற்குக் காரணமாகக் கணவனது காமப்பசி அமைந்திருப்பதைக் காணமுடிகின்றது.[110] இவ்வாறு இம்மாவட்ட கிராமங்களில் கணவன்-மனைவியருடைய கள்ளத்தொடர்புகள் குடும்ப அமைதியைக் கெடுப்பதையும், கிராம வழக்கு மன்றத்தார் குடும்ப அமைதியை ஒழுங்குப்படுத்துவதையும் அறிய முடிகின்றது.

**ஐயுறல்**

ஏட்டிலக்கியங்களில் பெண்கள் கணவனை ஐயுற்றுச் சிறுசிறு பிணக்குகள் செய்வதாகச் செய்திகள் உள்ளன. கணவனின் பரத்தையரொழுக்கம் 'வாயில் மறுத்தல்' வாயிலாக நேரடியாகக் கண்டிக்கப்படுகின்றது. நாட்டுப்புற இலக்கியங்கள் உள்ளிட்ட தமிழிலக்கியங்களில் மனைவி ஐயுறுதல் காரணமாகக் குடும்பம் அழித்தற்கான சான்றுகள் இல்லை. கிராம வழக்குமன்ற வழக்கொன்றில், கணவன் பல பெண்களுடன் பாலியல் தொடர்புவைத்திருப்பதாக ஐயுற்ற மனைவியொருத்தி கிராம வழக்கு மன்றத்தாரிடம் மணவிலக்குக்[111] கோரியுள்ளாள்.

**மனைவியை ஐயுறல்**

தான் எப்படியிருந்தாலும் தன் மனைவி புனிதமானவளாகத் தனக்கே உரியவளாக இருந்து, தனக்கேயுரிய குழந்தைகளைத் வாரிசாகத்தர வேண்டும் என நினைக்கும் ஆண்களின் மனத்தில் ஐய உணர்வு தோன்றுகின்றது. மனைவி மீது ஐயுறவுகொண்டு அழிந்த ஷேக்ஸ்பியரின் (Shakespeare) ஒத்தெல்லோ (Othillo) போன்ற பாத்திரங்களைத் தமிழக ஏட்டிலக்கியங்களில் காண இயலாவிட்டாலும் நாட்டுப்புற இலக்கியங்களில் காண முடிகின்றது. மனைவி மீது ஐயுற்று வினவல்,

அவளை மறைமுகமாகச் சோதனை செய்தல், சோதனைக்கு உட்படுத்துதல் போன்ற பொருண்மையமைந்த விடுகதைகளும் பாடல்களும் மிகுதியாகக் கிடைக்கின்றன.

கிராம வழக்கு மன்றங்களில் கணவன், மனைவியின் பாலியல் நடத்தையில் ஐயுற்று அவளைக் கொடுமைப்படுத்தலும், அதனால் குடும்ப அமைப்புச் சீர்குலைதலும்[112] என்ற நிலையில் பல வழக்குகள் உள்ளன. இவ்வாறு பாலியல் தொடர்பாக கணவன் மனைவி ஆண்-பெண்களுக்கிடையே ஏற்படும் பிரச்சனைகளைக் கிராம வழக்கு மன்றத்தினர் தீர்த்து வைக்கின்றனர். இதனால் சமுதாய நிறுவனங்களில் ஒன்றாகிய குடும்ப அமைப்பினைக் கிராம வழக்கு மன்றங்கள் பேணிக் காத்து வருகின்றன என்பது புலப்படும்.

**தொழில்கள்**

இந்தியச் சமுதாயத்தில் சாதி அமைப்பே பேராட்சி செலுத்தி வருகின்றது. இந்தியாவில் சுமார் மூவாயிரம் சாதிகள் உள்ளன என்பர்.[113] உலகில் வேறெங்கும் காணமுடியாத சாதியடிப்படைச் சமுதாய அமைப்பு இந்தியாவில் காணப்படுகின்றது.[114] 'சாதி' என்ற சொல்லாட்சியை வடமொழியில் காணலாம். 'ஜாதி' என்ற சொல்லின் தற்சமம் ஆகும். இச்சொல்லிற்குப் பிறப்பு என்பது பொருளாகும்.[115] தமிழகம் உள்ளிட்ட பழைய இந்தியாவில் இதுபோன்ற சாதி அமைப்பு காணப்படவில்லை. தொழில் பிரிவுகளே காணப்பட்டடன. இந்தத் தொழில் பிரிவுகளே ஆரியர்களின் வருகைக்குப் பின்னர் சாதிப்பிரிவுகளாக மாற்றம் பெற்றன. ஆரியர்கள் இம்மாற்றத்திற்குக் காரணமாவர்.

"சிந்து சமவெளி நாகரிகத்தையே அழித்து ஒரு புதிய நாகரிகத்தை உருவாக்கிய ஆரியர்கள் அடிமைகள் எசமானவர்கள் என்ற வர்க்க வேறுபாட்டிற்குப் பதிலாகத் தொடக்கத்தில் நான்கு வர்ணங்களும் பிறகு எண்ணற்ற சாதிகளும் உபசாதிகளும் அடங்கிய ஓரமைப்பை உருவாக்கினர்".[116] என்று இ.எம்.எஸ்

நம்பூதிரிபாட் கூறுவதை இங்குச் சான்றாகக் கொள்ளலாம் தமிழகத்தைப் பொறுத்தவரை சங்க காலத்திற்குப்பின்னர் பல்லவ, சோழ, விசயநகரப் பேரரசுகளில் ஆரியர்கள் பெற்ற ஆதிகத்தின் விளைவாகப் பல்வேறு சாதிகளும் சாதிக்கட்டுப்பாடுகளும் தோன்றின. ஒவ்வொரு சாதியும் அதற்கென விதிக்கபட்ட கட்டுதிட்டங்களிலிருந்து மாறலாகாது என்ற பொதுக் கொள்கை இருந்தது என்பதையும் கல்வெட்டுக்களால் அறியமுடிகின்றது.[117] சாதியில் ஏற்றத் தாழ்வுகளும் தீண்டாமையும் தோன்றித் தீவிரமடைந்தன என்பதையும் இதன் விளைவாக வலங்கை, இடங்கைப் பிரிவுகள்[118] தோற்றம் பெற்றன என்பதையும், இச்சாதிப் பிரிவினர்களுக்குள் ஓயாத பூசல்கள் ஏற்பட்டன என்பதையும், உயர்சாதியினர் அரசின் ஆதரவுடன் சுகவாழ்வு நடத்திய அதே நேரத்தில் ஏனையோர் வரிச்சுமையாலும் தீண்டாமையாலும் அல்லுற்றனர் என்பதையும் வரலாறு உணர்த்துகின்றது.[119] இன்றுங்கூட சாதி அமைப்பு முறையே சமுதாயத்தை ஆட்டிப் படைக்கின்றது. சாதிய ஏற்றத்தாழ்வுகள், அதனால் ஏற்படும் சமூகப் பூசல்கள் இன்றும், மிகுதியாகக் காணப்படுகின்றன.[120] தமிழகக் கிராம அமைப்புகள் சாதி அமைப்போடு நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன.

### சாதி அமைப்பும் தொழில்களும்

சிவகங்கை மாவட்டக் கிராமங்களின் சாதி அமைப்புக்கள் பற்றியும் அதனோடு தொடர்புடைய தொழில்கள் பற்றியும் இப்பகுதி விளக்குகின்றது.

### வெள்ளாளர்

வேளாண்மை செய்த மக்கள் 'வேளாளர்' எனப்பட்டனர். இவர்கள் பண்டைக் காலத்தில் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற உயர்சாதி நான்கனுள் நான்காவதாக வைத்து எண்ணப்பட்டனர். இன்றுள்ள வேளாளர்களுக்கும் அவர்களுக்கும் எந்த அளவு தொடர்புண்டு என்பது

ஆய்வுக்குரியதாகும். வேளாளர் என்ற சொல்லே சிவகங்கை மாவட்டத்தில் 'வெள்ளாளர்' என்று வழங்கப்படுகின்றது. இவர்கள் பெரும்பாலும் 'பிள்ளை' என்ற பட்டப்பெயரைப் பயன்படுத்துகின்றனர்.

**செட்டியார்**

பண்டைக்காலத்தில் அரசர்க்கு அடுத்த நிலையில் பொருளதாரத்தில் மேம்பாடுடையவர்களாக வணிகர்கள் விளங்கினர். 'சிலப்பதிகாரம்' இவர்களின் பண்டைய வாழ்க்கை நிலையையும் 'கோவிலன் கதை' இவர்களின் இடைக்கால மற்றும் பிற்கால வாழ்க்கை முறைகளையும் தெளிவுபடுத்துகின்றன. தொன்றுதொட்டு வணிகத்தில் ஈடுபட்டிருக்கும் சில பிரிவினர் இன்று பெரும்பாலும் 'செட்டியார்' என்னும் சிறப்புப் பெயரினைப் பூண்டுள்ளனர். இவர்களில் வாணியஞ்செட்டி, காசிச்செட்டி, கோமுட்டிச்செட்டி முதலான பிரிவுகள் உள்ளன.

எண்ணெய் விற்கும் செட்டியார்கள் வாணியஞ் செட்டியார்கள் என்றும், நகைக்கடை வைத்திருக்கும் செட்டியார்கள் காசிச் செட்டியார்கள் என்றும், ஆந்திரத்திலிருந்து வந்த தெலுங்கர்கள் கோமுட்டிச் செட்டியார்கள் என்றும் அழைக்கப்படுகின்றனர். சிவகங்கை மாவட்டத்தில் கோமுட்டிச் செட்டியார்கள் இல்லை. பாகனேரி நாட்டில் வாணியஞ் செட்டியார்களும் காசிச் செட்டியார்களும் மிகுதியாக வாழ்ந்து வருகின்றனர். பாகனேரி நாட்டுச் செட்டியார்கள் தனி வீதிகளில் வசித்து தனிக் கிணறுகளை வைத்திருக்கின்றனர்.

**இடையர்**

இடையர்கள் பண்டைய இலக்கியங்களில் 'ஆயர்' என்று அழைக்கப்பட்டனர். சங்க இலக்கியங்களும் சிலப்பதிகாரமும் இவர்களின் பண்டைய வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டுகின்றன.[121] இடையர்கள் பல்வேறு ஊர்களில்

சிறுபான்மையினராகவும் திருப்பத்தூர் ஒன்றியத்தில் பெரும்பான்மையினராகவும் வாழ்ந்து வருகின்றனர். இவர்களை 'இடையன்' 'எடப்பயல்' 'எடையஞ் சாதிக்காரன்' என்றும் குறிப்பிடுகின்றனர். 'கோனார்' 'யாதவ்' என்பது இவர்களைக் குறிக்கும் உயர்வுச் சொற்களாகும். இடையர்கள் இந்நாட்டின் தொன்மையான குடிமக்கள் ஆவர். இவர்கள் உலகில் முதன்முதலாகத் தோன்றியதாகக் கருதப்படும் கால்நடை வளர்ப்பினை முதன்மைத் தொழிலாகக் கொண்டவர்கள். 'எருமை மாட்ட மேய்ச்சிக் கட்ட எடப்பயலும்' என்ற வழக்காறு இவர்களின் தொழிலைக் குறிப்பதாக அமைகின்றது. பழங்காலத்தில் கால்நடைகள் தான் செல்வமாகக் கருதப்பட்டன. இன்றும் தென்னார்க்காடு மாவட்டம் கல்வராயன் மலை மக்களின் முதன்மையான செல்வமாகக் கால் நடைகள் இருத்தலைக் காணமுடிகின்றது. சிவகங்கை மாவட்டக் கிராமப் புறங்களிலும் இந்நிலை காணப்படுகின்றது. இம்மாவட்ட இடையர்களுள் செல்வந்தர்களாக உள்ளோர் மேய்த்தல் தொழிலில் தாங்கள் நேரடியாக ஈடுபடாமல் கூலி ஆட்களை ஈடுபடுத்தி வருகின்றனர். இவர்களின் வாழ்க்கைத் தொழில்களாக ஆடு, மாடு மேய்த்தலும், பால், தயிர், மோர் முதலியனவிற்றலும் அமைந்திருக்கின்றன.

**சாணார்**

நாடார், கிராமணி என்பன இவர்களின் சிறப்புப் பெயர்களாகும். கூலியில்லாமல் காவிரி அணை கட்டுமாறு கூறிய கரிகால் வளவனின் ஆணையை எதிர்த்துப் போராடி உயிர் துறந்த சகோதரர்களுள் எஞ்சிய ஏழாமவன் தென்பாண்டி நாட்டிற்குச் சென்று, பனைமரங்களைப் பராமரித்துப் பெருஞ் செல்வமடைந்தான் என்று 'வலங்கையர் கதை' என்ற நூல் இவர்களின் வரலாற்றைக் குறிப்பிடுகின்றது.[122] சிவகங்கை மாவட்டம் உள்ளிட்ட தமிழகத்தின் தென் மாவட்டங்களில் மிகுதியாகவும் வடமாவட்டங்களில் சிறுபான்மையினராகவும்

வசிக்கும் இவர்கள் மரமேறுதலும் கள்ளிறக்குதலுமான தொழில்களைச் செய்து வருகின்றனர். இன்று இத்தொழில்கள் நசிவடைந்து வருவதைக் காணமுடிகின்றது.

**தச்சர்**

இவர்கள் 'ஆசாரி' எனவும் அழைக்கப்படுகின்றனர். தச்சு மரவேலை இவர்களின் முதன்மைத் தொழிலாகும். சிவகங்கை மாவட்ட கிராமங்களில் வாழும் தச்சர்கள் வேளாண்மைத் தொழிற்கருவிகளான கலப்பை, பறம்பு, ஏற்றம் முதலியவற்றையும் மாட்டுவண்டி, கோயில் தேர், குழந்தைகளுக்கான தொட்டிலும், செய்து வருகின்றனர். ஓட்டுவீடுகள் கட்டும் பணியிலும், வீடுகளுக்குத் தேவையான சன்னல்கள், நிலைகள் ஆகியனவற்றைச் செய்து தருவதிலும் இவர்கள் ஈடுபட்டு வருகின்றனர்.

**கொல்லர்**

இரும்பினாலாகிய பொருட்களைச் செய்வது இவர்களின் தொழில் ஆகும். இவர்கள் தொழிலைப் புறநானூற்றுப்பாடல் 'வேல் வடித்துத் கொடுத்தல் கொல்லற்குக் கடனே' என்று குறிப்பிடுகின்றது. கிராமங்களில் இவர்கள் கலப்பையில் உழுவதற்குப் பயன்படுத்தப்படும் கொழு, அரிவாள், மண்வெட்டி போன்ற வேளாண்மைக் கருவிகளைச் செய்து கொடுத்துப் பிழைத்து வருகின்றனர்.

**தட்டார்**

இவர்களை 'விஷ்வகர்மா' என்றும் குறிப்பிடுவர். இவர்கள் 'பொன் செய்கொல்லர்' 'பொற்கொல்லர்' என்று இலக்கியங்களில் சுட்டப்படுகின்றனர். ஒரு பொற்கொல்லான் செய்த தவறுக்காக ஆயிரக்கணக்கான பொற்கொல்லர்கள் பலியிடப்பட்டட கொடுமையைச் சிலப்பதிகாரம் சுட்டிக் காட்டுகின்றது.[124] இவர்கள் சமுதாயததில் மிகவும் தாழ்ந்த நிலையில் இருந்து வந்தனர் என்பதை வரலாறு

உணர்த்துகின்றது.[125] இன்றைய நிலையில் 'கத்தர்' என்றும் அழைக்கப்படும் இவர்கள் பொன் அணிகளைச் செய்யும் தொழில் புரிந்து வருகின்றனர். திருமணத்திற்கு மிகவும் இன்றியாமையாத தாலியை இவர்கள் செய்வதாலும், இவர்கள் முக்கியத்துவம் பெறுகின்றனர். தாலி நிலைத்திருப்பதில் தட்டானின் கைராசியும் முக்கியம் என்பது மக்களின் நம்பிக்கையாகும். சிவகங்கை மாவட்டத்தில் இவர்கள் சிறுபான்மையினராக வாழ்ந்து வருகின்றனர்.

**வண்ணார்**

வண்ணார் இனத்தவர்கள் சிறுபான்மையினராக வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் குடியிருக்கும் பகுதி 'வண்ணார வீதி' என்றழைக்கப்படுகின்றது. 'ஏகாலி' என்றும் அழைக்கப்படுகின்றனர். வண்ணாரப் பெண்களைக் குறிக்கும் போது 'அழுக்கெடுக்கிற' என்ற அடையைச் சேர்த்து 'அழுக்கெடுக்கிற வண்ணாத்தி' என்று சுட்டுகின்றனர். ஊராரின் துணிகளை வெளுத்தல் இவர்களின் முதன்மைத் தொழிலாகும். துணி வெளுத்தலைத் தவிர வேறு சில கடமைகளும் இவர்களுக்குண்டு. கிராமத்தில் ஒரு பெண் பூப்படைந்துவிட்டால் வெளியூர்களில் உள்ள அப்பெண்ணின் உறவினர்களுக்குச் செய்தி கூறல், ஊர்க்கோயில் விழாக்களின் போது தேர்முதலியனவற்றைத் துணியால் அலங்கரித்தல் முதலான கடமைகளும் இவர்களுக்குரியதாகும். பறையன், இருளன், குறவன் முதலியவர்களைவிட இவர்கள் உயர்ந்தவர்கள் ஆவர்.

**நாவிதர்**

கிராமங்கள் தோறும் நாவிதர் வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் 'மருத்துவர்' என்ற சிறப்புப் பெயரைப் பயன்படுத்துகின்றனர். அம்பட்டன், அம்பட்டையன்,

குடிமகன், பரியாரி அல்லது பரியாலி என்றும் அழைக்கப்படுகின்றனர். சிகை அலங்கரித்தல் இவர்களின் முதன்மைத் தொழிலாகும்.

**பறையர்**

பழந்தமிழ் இலக்கியம் சுட்டும் நான்கு குடிகளுள்[126] இவர்களும் அடங்குவர். இவர்கள் வாழும் இடம் 'சேரி' என்று சுட்டப்படுகின்றது. இச்சொல் பழங்காலத்தில் ஊர்ப்புறத்தே வசித்த பார்ப்பணர், தவசிகள், வெளிநாட்டினர் ஆகியோரின் இருப்பிடத்தைச் சுட்டியது. ஆனால் இன்று ஊர்ப்புறத்தே ஒதுக்கி வைக்கப்பட்ட மக்களைக் குறிக்கின்றது. பாப்பாரத் தெரு, செட்டித் தெரு என்பதைப் போல இதுவும் ஊரின் ஓர் அங்கம் என்ற நிலையில் 'பறைத்தெரு' என்று சுட்டப்படுகின்றது. 'பாழும் பறைத்தெரு' என்ற தொடர் அக்குடியிருப்பை இழிவுடன் சுட்டுகின்றது.

பறையர் பெரும்பாலும் உடைமையற்றவர்கள்; அவர்கள் விவசாயக் கூலிகளாகவும் பண்ணையாட்களாகவும் பண்ணை முதலாளிகளின் கால்நடைகளைப் பராமரிப்பவர்களாகவும் வாழ்க்கையை நடத்துகின்றனர். அவர்கள் வறுமையின் காரணமாக நண்டு, மாட்டிறைச்சி முதலிய உணவுகளை உண்கின்றனர். இவ்வுணவு முறை இவர்களைச் சமுதாயத்தில் தாழ்ந்தவர்களாக ஆக்குகின்றது. இக்காரணங் கருதியே இவர்கள் 'புலைச்சாதியினர்' என ஒதுக்கி வைக்கப்பட்டனர் என்பதை வரலாறு சுட்டிக்காட்டுகின்றது.[127] செத்த மாட்டிறைச்சியை உண்ணும் பழக்கம் இன்று இவர்களிடையே மறைந்து வருகின்றது. மீன் பிடித்தல், பன்றி வளர்ப்பு முதலிய துணைத் தொழில்களில் ஈடுபட்டுத் தங்கள் உணவுத் தேவையை நிறைவு செய்து கொள்கின்றனர். தாங்கள் சார்ந்திருக்கும் மேல்சாதியைச் சேர்ந்த பண்ணையார்கள் வீடுகளில் நிகழும் சாவுச் செய்திகளை அவர்களின் உறவினர்களுக்கு அறிவித்தல் போன்ற கடமைகள் இவர்களுக்குள்ளன. இதற்காக

*இவர்கள் இறப்புச் சடங்குகளில் 'வாமுட்டு' அல்லது 'வாய்க்கரிசி' என்ற பெயரில் நெல், பணம் முதலியனவற்றைச் சன்மானமாகப் பெறுகின்றனர். மேலும் இறப்பு நிகழும் வீடுகளில் பறைமேளம் அடித்தலும், இழவுப் பாடல்களைப் பாடுதலும் இச்சாதியினரின் கடமைகளாக உள்ளன.*

*இன்றைய சமுதாயத்தில் இவர்கள் 'அரிசனங்கள்' என்று சுட்டப்படுகின்றனர். 'பறையர்' என்று சுட்டப்படுவதை இவர்கள் இழிவாகக் கருதுகின்றனர். தங்கள் இருப்பிடத்தை 'சேரி' என்று குறிப்பதை விரும்பாமல் 'காலனி'* (Colony) *என்ற ஆங்கிலச் சொல்லில் குறிப்பதையே சிறப்பாக விரும்புகின்றனர். இச்சாதிய இழிவிலிருந்து விடுபட வேண்டுமென்று இம் மக்களின் விழிப்புணர்வே இந்த மாற்றங்களுக்கு அடிப்படைக் காரணமாகும்.*

தோட்டி

*பறையர் இனத்தவர்களுள் ஊர்க் கடமைகளைச் செய்தவற்காகச் சிவகங்கை மாவட்டக் கிராமங்களில் நியமிக்கப்படுபவரே 'தோட்டி' ஆவர். 'தோட்டி' பறையர் இனத்தவர்களின் தலைவனாக இருப்பான். கிராமக் கூட்டம் ஊர்க் கூட்டம், நாட்டுக்கூட்டம் முதலிய கூட்டங்கள் நடைபெற விருப்பதைக் கிராமங்களிலுள்ள பொது மக்களுக்குத் தண்டோரப் போட்டுத் தெரிவிப்பது தோட்டியின் கடமையாகும். அக்கூட்டங்கள் தொடங்கியது முதல் முடியும் வரை தோட்டி கையில் கம்புடன் நின்று கொண்டிருப்பான்.*

**சக்கிலியர்**

*இவர்கள் சிறுபான்மையினராக வாழ்ந்து வருகின்றனர். அருந்ததியினர் என்றும் அழைக்கப்படுகின்றனர். கிராமப்புறங்களில் இறக்கும் மாடுகளை அப்புறப்படுத்துதல், அதன் தோலை உரித்துப் பதப்படுத்திச் செருப்பு முதலிய தோல்*

பொருட்கள் செய்தல் முதலியன இவர்களின் தொழிலாகும். ஜமீன்தார்களும் பணம் படைத்தவர்களும் சக்கிலியப் பெண்களுடன் உறவு கொள்வதில் விருப்பமுடையவர்களாக இருந்தனர் என்பதை இ.தர்ஸ்ட்டனின் (E. Thurston) குறிப்பிலிருந்து அறிந்து கொள்ள முடிகின்றது.[158] பார்ப்பன இளைஞன் முத்துப்பட்டன் சக்கிலியப் பெண்களை மணந்து அவர்களோடு வாழ்ந்து மடிந்த செய்தியை 'முத்துப்பட்டன்' கதைப்பாடல் தெளிவுபடுத்துகின்றது. சக்கிலியர்களுள் தெலுங்கு பேசுவோர் நாயக்க மன்னர்களின் படைகளோடு தமிழகம் வந்தவர்கள் ஆவார்.[129]

**மடையன்**

திருமணம் முதலான விழாக்களுக்குச் சமையல் தொழில் புரிவோர் 'மடையன்' என்றழைக்கப்படுகின்றனர். இவர்கள் சமையல் தொழிலுக்கான ஊதியத்தைப் பெறுகின்றனர்.

**கணக்கன்**

கிராமக் கோயில்களில் வருமானம், கிராம வழக்கு மன்றங்களில் ஒறுப்புத்தொகை மூலம் கிடைக்கும் வருமானம் போன்ற கணக்குகளையும் கோயில் விழாக்கள் தொடர்பான வரவு செலவுகளையும் எழுதி வைப்பது இவர்கள் கடமையாகும். இதற்கான மதிப்பூதியத்தை இவர்கள் பெறுகின்றனர்.

**நாட்டாமை**

வழக்கு மன்றங்களுக்கு வரும் வழக்குகளை நடுநிலையோடு விவாதித்துத் தீர்ப்புகளை வழங்குவது நாட்டாமையின் கடமையாகும். கிராமத்தின் ஒட்டுமொத்தமான செயற்பாடுகளும் நடவடிக்கைகளும் இயக்கங்களும் நாட்டாமையை மையமிட்டே அமைந்திருக்கின்றது.

**தலையாரி**

நாட்டாமைக்கு எல்லா நிலைகளிலும் உதவியாக இருப்பவர் தலையாரி ஆவார். கிராம மக்களிடம் வரி வசூல் செய்வது இவரது தலையாய கடமையாகும். விவசாயி, ஆசாரி, தச்சன், கொல்லன், நாவிதர், வண்ணார், மடையன், தோட்டி, கணக்கன், நாட்டாமை, தலையாரி ஆகியோர் தம் தொழில்களைக் கடமை தவறாமல் செய்ய வேண்டும். அவர்களுக்கென விதிக்கப்பட்டுள்ள கடமைகளை அவர்கள் செவ்வனே செய்யும் போது அவரவர்களுக்குரிய உரிமைகளையும் சமுதாயம் நல்க வேண்டும். அவர்கள் தங்கள் கடமைகளைச் செய்யத் தவறும்போதும், அவர்களுக்குரிய உரிமைகள் மறுக்கப்படும் போதும் சமுதாயத்தில் பிரச்சனைகள் தோன்றுகின்றன. இப்பிரச்சனைகளினால் பாதிக்கப்பட்டோர் கிராம வழக்கு மன்றங்களில் வழக்குகளைத் தொடுக்கின்றனர். கிராம வழக்கு மன்றத்தினர் அவ்வழக்குகளை விசாரித்துத் தக்க தீர்ப்புகளை வழங்கி வருகின்றனர். சமூக இயக்கத்தில் ஏற்படும் பல்வேறு வாழ்க்கைப் பிரச்சனைகளுக்கும் பொதுப் பிரச்சனைகளுக்கும் கிராம வழக்கு மன்றங்களினால் தீர்வுகள் காணப்பட்டு, கிராமக் கட்டுப்பாடு என்ற அடிப்படையில் கிராமம் மற்றும் ஊர் இயக்கம், சமூக இயக்கம் முதலியன வாழையடி வாழையாகத் தொடர்ந்து இயங்கிக் கொண்டிருப்பதைக் காணலாம்.

**தொகுப்புரை**

கிராம சமுதாயத்தில் நடைபெறும் முறையற்ற செயல்களைப் பற்றிய வழக்குகளை விசாரிப்பதற்கும் உரிய முறையில் தண்டனைகள் விதிப்பதற்கும் கிராம ஒற்றுமையையும் அமைதியையும் காப்பதற்கும், கிராம மக்களால் அமைக்கப்பட்டுச் செயல்பட்டு வருகின்ற பொது மன்றமே கிராம வழக்கு மன்றமாகும். 'வழக்கு' என்பது ஒருவர் தம் உரிமையை நிலை நாட்டுவதற்காகவும் பிறர் தமக்குத்

தீங்கிழைப்பதைத் தடுப்பதற்காகவும் வழக்கு மன்றத்தின் முன்னர் கொண்டு வரும் நடவடிக்கையாகும்.

சிவகங்கை மாவட்டக் கிராமங்களில் உடைமைப் பொருள்களாலும் உரிமைகளாலும், மனத்தாலும், உடலாலும் பாதிக்கப்பட்டவர்களுக்கு நியாயம் வழங்குதல் வழக்கு மன்றங்களின் கடமைகளாக அமைந்திருக்கின்றன. பொறாமை காரணமாகவும் முன்பகையை மனத்தில் கொண்டு பழிவாங்கல் நோக்கத்துடனும் தொடுக்கப்படும் வழக்குகளில் வாதிகளும் குற்றவாளிகளாக்கப்பட்டுத் தண்டிக்கப்படுகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

உரிமையியல், குற்றவியல், குடும்பம் மற்றும் பொதுப்பிரச்சனைகள் தொடர்பான வழக்குகளில் மக்களின் அடிப்படையான வாழ்க்கைப்பிரச்சனைகள் வெளிப்படுகின்றன. அவற்றைக் கற்பனையானவை என்று கூறி ஒதுக்கிவிட முடியாது. வழக்கில் வெளிப்படும் பிரச்சனைகள் தக்க சாட்சிகள் மூலம் மெய்ப்பிக்கப்படுகின்றன. கிராம தேவதைகளின் மீது சத்தியம் செய்து வாதியும் பிரதிவாதியும் வழக்கு மன்றத்தாரிடம் வழக்கினை முறையீடு செய்கின்றனர். சாட்சிகளும் அவ்வாறே ஆண்டவன் மீது ஆணையிட்டுத் தாங்கள் நேரில் கண்டவற்றையும் கேட்டவற்றையும் முறையிட்டுக் கூறுகின்றனர். வழக்குகள் வழக்குத் தொடுத்தல், வழக்கு விசாரணை, சாட்சிகள் விசாரணை, வழக்கு மன்றத்தார் விவாதங்கள், தீர்ப்புகள், முடிவுகள், வாதியும் பிரதிவாதியும் தீர்ப்புகளை ஏற்றல், மேல் முறையீடு என்னும் பல்வேறு படிநிலைகளைக் கொண்டிருக்கின்றன. நீதிமன்றங்களிலும் காவல் நிலையங்களிலும் தீர்க்கப்படாத வழக்குகள் பல கிராம வழக்கு மன்றங்களிலேயே தீர்க்கப்பட்டுள்ளன. இதற்குக் காரணம் கிராம வழக்கு மன்றங்களின் தீர்க்கமான தீர்ப்புக்களாகும்.

'பொய் சொன்னால் தெய்வத்தின் நிந்தனைக்கு ஆட்படுவோம்' என்ற அச்சத்தின் காரணமாக வாதி, பிரதிவாதி ஆகிய இருவரும் பொய் சொல்வதைத் தவிர்க்கின்றனர். வழக்கு மன்றத் தீர்ப்புகளுக்கும் முடிவுகளுக்கும் கட்டுப்படாதவர்களைக் கிராமம் 'கிராமக் கட்டுப்பாடு' 'ஊர்க்கட்டுப்பாடு' என்ற நிலைகளில் ஊரை விட்டு ஒதுக்கி வைத்துவிடும். கிராம வழக்கு மன்றங்கள் நிலைத்திருப்பதற்கு மற்றொரு காரணம் அதன் திட்டவட்டமான முடிவெடுக்கும் தன்மையாகும். கிராம வழக்கு மன்றங்களின் மூலம் எடுக்கப்படும் முடிவுகளே இறுதியானது என்பது இம்மாவட்டக் கிராமங்களின் எழுதப்படாத சட்டமாகும்.

பெரும்பான்மையான வழக்குகளின் தீர்ப்புக்களில் பிரதிவாதியும் வாதியும் மனநிறைவு கொள்கின்றனர். சிறுபான்மை வழக்குகளின் தீர்ப்புக்களில் மனநிறைவின்மை ஏற்பட்டாலும் கூட பிரதிவாதிகள் அவற்றை ஏற்றுக் கொள்கின்றனர்.

வழக்குகளின் தீர்ப்புகளினால் பாதிக்கபட்டவர்களும், பேரிழப்பிற்கு ஆட்பட்டவர்களும் கிராமங்களிலுள்ள கோயில்களுக்குச் சென்று தெய்வங்களின் முன்னர் தங்கள் மனக்குறைகளை முறையீடு செய்கின்றனர். தங்களுக்குத் தீங்கிழைத்தவர்களைத் தண்டிக்கும்படி பலிபோடுகின்றனர். அடிச்சி விழுதல், காசு வெட்டுதல், நடுப் போடுதல், பலி போடுதல், மண் தூற்றல் அல்லது மண்ணை வாரி இறைத்தல், சத்தியம் செய்தல், சத்திய நாமா முதலான பல முறைகளில் தெய்வத்திடம் முறையீடு செய்கின்றனர். பொருளாதார நிலையில் மிகவும் பின் தங்கியவர்கள் கிராம வழக்கு மன்றங்களின் வழக்குகளின் தீர்ப்புக்களை எதிர்க்கும் வலிமையற்றவர்கள் ஆகியோர் இம்முறைகளைப் பின்பற்றுகின்றனர். வலிமை படைத்தவர்களும் நிலவுடமையாளர்களும் வழக்குத் தீர்ப்பினை எதிர்த்துச் சில சமயங்களில் நேரடி மோதலில் ஈடுபடுகின்றனர்.

பல்வேறு சாதியினர் கலந்து வாழ்ந்து வருகின்றனர். இச்சாதிய அமைப்புக்கள் அனைத்தும் கிராம வழக்கு மன்றங்களுக்குக் கட்டுப்பட்டவைகளாகும். இக்கிராம வழக்கு மன்றங்கள் சாதிகளுக்கிடையே ஏற்படுகின்ற பிணக்குகளையும் உட்பூசல்களையும் தீர்த்து, சாதிகளை இணைத்துக் கிராம ஒற்றுமையைக் காத்து வருகின்றன. இதனால் சாதிக் கலவரங்கள் தவிர்க்கப்படுகின்றன.

கிராம வழக்குமன்றங்கள் தனிக்குடும்பம், கூட்டுக்குடும்பம் போன்ற குடும்ப அமைப்புகளில் ஏற்படுகின்ற சிக்கல்களை நுட்பமாக அணுகித் தீர்த்து வைக்கின்றன. கணவன் மனைவியின் நடத்தையில் ஐயுறல், கணவன் பல பெண்களுடன் பாலியல் தொடர்பு கொண்டிருத்தல், கணவன் ஆண்மையில்லாதவனாக இருத்தல், மனைவியின் கள்ளத் தொடர்பு போன்ற பிரச்சனைகளால் கணவன்-மனைவியர் மணவிலக்குக் கோரும் வழக்குகளில் கிராம வழக்குமன்றத்தார் முடிந்த வரையில் மணவிலக்கினைத் தவிர்த்து அவர்களை இணைத்துவைக்கின்றனர். குடும்ப அமைப்புச் சிதைந்து விடாமல் குடும்பங்களைக் கட்டிக்காத்து ஒருங்கிணைத்து வருகின்றனர்.

கிராமக் கட்டுப்பாடுகளையும் ஊர்க் கட்டுப்பாடுகளையும் மீறி நடப்போரைத் தள்ளிவைத்தலும் ஒதுக்கி வைத்தலும் நடைமுறையிலுள்ள பழக்கங்களாகும். இதற்குரிய முழுமையான தன்னாட்சி அதிகாரங்களைக் கிராம வழக்கு மன்றங்கள் பெற்றிருக்கின்றன. இந்த அடிப்படையில் தான் இம்மாவட்ட கிராமங்களின் சமூக இயக்கம் அமைந்திருக்கின்றது.

உணவுகளில் 'கூழ்' சிறந்த உணவாகக் கருதப்படவில்லை. சாதிகளுக்கென்று உணவு வகைகள் உள்ளன. இம்மாவட்ட பெண்கள் எல்லா வேலைகளிலும் காதணியும், சங்கிலியும், வளையலும் அணிகின்றனர். காலில் கொலுசு, தண்டை ஆகியவற்றை அணிகின்றனர். மணமான பெண்கள் (மிஞ்சி) மெட்டியும் மணமாகாத

பெண்கள் கருகமணியும் அணிகின்றனர். கைம்பெண்கள் அணிகலன்கள் அணிவதில்லை. வெண்ணூலில் மணிகோத்து அணிகின்றனர். அதனை 'தும்பு மணி' எனக்குறிப்பிடுகின்றனர். பெண்களும், ஆண்களும் உடுத்தும் உடைகள் பொதுவாகத் தமிழ்ப்பண்பாட்டையொட்டியே அமைந்திருக்கின்றன. வெள்ளைப் புடவையை அமங்கலமாகக் கருதும் பழக்கம் இல்லை.

மக்கள் பல்வேறு சாதியினராக இருந்தாலும் அவர்கள் சமுதாயப் பொது விழாக்களின் மூலம் இணைக்கப்படுகின்றனர். இவ்விழாக்களால் ஊரக மக்களுக்கடையேயுள்ள ஏற்றத்தாழ்வுகள் ஓரளவுக்கு நீக்கப்பெற்றுத் தீண்டாமைப் பிணியிலிருந்து விடுவித்துக் கொள்ளவும் வாய்ப்புக்கள் உள்ளன. நாடு முழுமைக்கும் பொதுவாக நடைபெறும் பொதுக்கோயில் திருவிழாவைத் தவிர, அய்யனார் கோயில் புரவியெடுப்பு, மாரியம்மன், ஆலடிக்கருப்பு, கருப்பர் கோயில், அழகிய நாச்சியம்மன், ஆகாசக் கருப்பர், கருப்பர் கோயில் மஞ்சுவிரட்டு விழா முதலான விழாக்களும் ஆங்காங்குக் கொண்டாடப்பட்டு வருவதை இம்மாவட்ட வழக்கு மன்றங்களின் வழக்குகளால் அறியலாம்.

கள்ளர் இனத்தவர்கள் அழகர் கோவிலிலுள்ள பதினெட்டாம்படிக் கருப்பரைக் குலதெய்வமாக வழிபட்டு வருகின்றனர். பறையர் இனத்தவர்களிடம் 'முனி' என்னும் சிறு தெய்வ வழிபாடு சிறப்பாகக் காணப்படுகின்றது. பரவலாகக் காளியம்மன், மாரியம்மன், முனியாண்டி, கருப்புச்சாமி, நொண்டிச்சமயன் முதலான சிறு தெய்வங்களை வழிபடும் வழக்கம் காணப்படுகின்றது. இச்சிறு தெய்வங்களைத் தவிர தங்கள் குல முன்னோர்களையும் தெய்வமாக வழிபடும் வழக்கம் உள்ளது.

பெரும்பாலான கிராம அமைப்பை உற்று நோக்கும் பொழுது ஒவ்வொரு கிராமமும் 'ஊர்' 'சேரி' என்ற இரண்டு பெரும் பிரிவுளாகப் பிரிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். ஊரிலிருந்து சற்று இடைவெளி விட்டுச் சேரி அமைந்திருக்கின்றது.

சேரியில் தாழ்த்தப்பட்டவர்களான பறையர் இனத்தவர்கள் மிகுதியாக வாழ்ந்து வருகின்றனர். கள்ளர், மறவர், அகமுடையர் இனத்தவர்கள் பெரும்பான்மையினராக வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் அவ்வவ் கிராமங்களில் நாட்டாண்மையாகவும் அம்பலகாரராகவும் இருந்து வழக்கு மன்றங்களில் தீர்ப்புகளையும் வழங்கி வருகின்றனர். அனைத்துக் கிராமங்களிலும் வழக்கு மன்றங்களின் தலைவர்களும் அதன் உறுப்பினர்களும் சமூக மதிப்புடையவர்களாக விளங்குகின்றனர். இவர்கள் நடுத்தர, முதிய வயதுடையவர்களாகவும் அனுபவங்கள் மிக்கவர்களாகவும் நேர்மையாகவும் நாணயமாகவும் செயல்படுபவர்களாகவும் இருப்பதால், மக்களின் நம்பிக்கைக்குரியவர்களாக விளங்கிச் சமூக மதிப்புக்களைக் பெறுகின்றனர். நடைமுறைச் சமுதாய வாழ்க்கையில் சாதிய அடிப்படையில் சமூக மதிப்புக்கள் அளவிடப்படுகின்றன.

பண்டைத் தமிழராட்சியில் மன்னனே நாட்டிற்குத் தனி நாயகமாக இருந்தான். அவனுக்கு உதவியாக தலைமை அமைச்சர், ஊர்ச்சபையார், நாட்டதிகாரிகள், கோயிற் கண்காணிப்பாளர், அறங்கூறவையத்தார் முதலானோர் இருந்துள்ளனர். இத்தகைய படிநிலையை இன்றைய சிவகங்கை மாவட்ட கிராம வழக்கு மன்றங்கள் அமைப்பு முறைகளாலும் செயற்பாடுகளாலும் ஒத்திருக்கின்றன. வரிவசூல் மட்டுமே அரசாங்கத்திடம் உள்ளது.

பொருளாதார ஏற்றத்தாழ்வுகலும், சாதிய உயர்வு தாழ்வுகளும், குலப்பிரிவுகளும், தீண்டாமைக் கொடுமைகளும் இன்றும் உள்ளன. எனினும் கிராம வழக்கு மன்றங்கள் கிராம மக்களிடையே ஒற்றுமையையும் அமைதியையும் ஏற்படுத்தும் வகையில் செயல்பட்டு வருகின்றன. சாதிகள் இணைப்பு, குடும்பங்கள் இணைப்பு, கிராமம், ஊர் இயக்கம், கிராமக் கட்டுப்பாடு என்ற படிநிலைகளில் இம் மாவட்ட கிராம வழக்கு மன்றங்கள் செயல்பட்டு வருகின்றன. சாதியும் தொழிலும்

இயல்பாகவே பின்னிப்பிணைந்துவிட்ட காரணத்தால் இத்தகை ஏற்றத்தாழ்வுகளைப் பொருட்படுத்துவதில்லை எனலாம்.

மக்களிடம் இன, சாதிய,வேறுபாடுகள் மேலோங்கிக் காணப்படுகின்றன. உறவுமுறைகளில் தவிர்ப்பு உறவும் கேலி செய்யும் உறவும் அங்கீகரிக்கப்பட்டுள்ளன. பாலியல் உறவும் தொடர்பும் சமூக ஒழுக்கத்தை அடிப்படையாகக் கொண்டு ஒழுங்குபடுத்தப்பட்டு வருகின்றன.

விவசாயி, ஆசாரி, தச்சன், கொல்லன், நாவிதர், வண்ணார், மடையன், தோட்டி, கணக்கன், நாட்டாமை, தலையாரி ஆகியோர் தம் தொழில்களையும் கடமைகளையும் ஒழுங்காகச் செய்து வர வேண்டும். அவர்களின் இத்தகைய தொழில்களுக்குக் குறிப்பிட்ட ஊதியமும், உரிமைகளும் வழங்கப்படுகின்றன. அவர்கள் தங்கள் தொழில்களைச் செய்யாதபோதும், அவர்கள் தொழில்களைச் செய்தமைக்கான உரிமைகள் மறுக்கப்படும் பொழுதும் சமூக இயக்கத்தில் பிரச்சனைகள் தோன்றுகின்றன. அதனால் பாதிக்கப்பட்டோர் கிராம வழக்கு மன்றங்களில் வழக்கினைத் தொடுக்கின்றனர். வழக்கு மன்றங்களின் மூலம் அப்பிரச்சனைகள் தீர்க்கப்படுகின்றன.

## குறிப்புக்கள்

1. பேட்டி, எண்.28, நாள்:25.3.2000.
2. Matta Spencer, Foundations of Modem Sociology, p.4.
3. Ronald W. Smith, Frederic W. Preston, Sociology An Introduction, p.549.
4. R. Serge Denisoft Ralph Wabrman, An Introduction to Society, p.80.
5. கலைக்களஞ்சியம், தொகுதி-4, ப.562.
6. மேலது.
7. ஆறு இராமநாதன், நாட்டுப்புறப் பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல், ப.30.
8. இ.எம்.எஸ் நம்பூதிபாட், இந்திய வரலாறு, ப.36.
9. மா. இராசமாணிக்கனார், கல்வெட்டுக்களில் அரசியல், சமயம், சமுதாயம், ப.91.
10. ந.க.மங்களமுருகேசன் இந்தியச் சமுதாய வரலாறு, பக்.235-236.
11. வி.டி செல்வம், தமிழக வரலாறும் பண்பாடும், ப.182.
12. S.G.Sardesai, Class Struggle and Caste Conflict in Rural Areas, Pp.88-90.
13. டி சுந்தரம் (பதி.ஆ) சமூகவியல், ப.75.
14. தமிழ்ப் பேரகராதி, சென்னைப் பல்கலைக்கழக வெளியீடு, ப.942.
15. புலவர், இளங்குமரன் (தொகு.ஆ) உரையாசிரியர்கள் கண்ட சொற்பொருள் நுண்மை விளக்கம், 'குடி' என்ற தலைப்பில் உள்ளது.
16. "ஒரு குடிப்பிறந்த பல்லோருள்ளும் புறம்", 183.
17. குடும்பம் என்ற சொல் பயின்று வரும் குறள், 1029. குடி என்ற சொல் பயின்று வரும் குறள்கள், 171, 381, 390, 502, 542, 544, 549, 554, 602, 609, 632, 681, 793, 794, 887, 888, 952, 954, 957, 992, 1022, 1023, 1025, 1028, 1030.
18. M. Halayya, Social Sciences, p.33.
19. டி. சுந்தரம் (பதி.ஆ), மு.நூ. ப.75.
20. Roger M. Keesing, Cultural Anthropology – A Contemporary Perspective, p.563.
21. பேட்டி எண்: 15, 17, 18, 19, 20, 21, 22, 23, 25.

22. பெர்ட்ராண்டு ரஸ்ஸல், திருமண முறைகள், தமிழாக்கம் கோ. கோ. மாதவன், ப.145.

23. பேட்டி எண் 101, நாள்:25.5.199.

24. பேட்டி எண்: நட்டுவர் நடராஜபிள்ளை, பாகனேரி.

25. பேட்டி: பி. ம பில்லப்பன், நெற்புகப்பட்டி.

26. பேட்டி: வீர, அழகம்மை, காளையார் மங்கலம்.

27. பாகனேரி நாட்டுக்கூட்டத்தில் இம்முறை பின்பற்றப்பட்டு வருகின்றது.

28. பேட்டி எண்: 120, 129, 131, நாள்:6.2.2000.

29. சிவகங்கை மாவட்ட கிராமங்களில் கள்ளர் இனத்தவர்கள் இவ்வாறு குறிப்பிடுகின்றனர்.

30. பேட்டி எண்: 110, நாள்:25.5.1999.

31. பேட்டி எண்:122, நாள்:11.1.1999.

32. பேட்டி எண்கள்: 123, 124, 131, 132, நாள்:21.7.1999, 6.2.2000.

33. பேட்டி எண்:121, நாள்:27.5.1999.

34. பேட்டி எண்:88, நாள்:18.7.1999.

35. பேட்டி எண்:88, நாள்:18.7.1999.

36. பேட்டி எண்:93, நாள்:18.7.1999.

37. பேட்டி எண்:88, நாள்:18.7.1999.

38. பேட்டி எண்:107, நாள்:20.4.2001.

39. பேட்டி எண்: 109. நாள்:20.4.2001.

40. பேட்டி எண்: 115, நாள்:26.5.1999.

41. பேட்டி எண்:90, நாள்:5.4.2000.

42. பேட்டி எண்:134, நாள்:31.7.1999.

43. பேட்டி எண்:92., நாள்:4.4.2001.

44. பேட்டி எண்:108, நாள்:27.3.1999.

45. பேட்டி எண்:116, நாள்:28.5.1999.

46. பேட்டி எண்:102, நாள்:6.2.2000.

47. பேட்டி எண்:103, நாள்:20.4.2001.

48. பேட்டி எண்:104, நாள்:5.9.1999.

49. பேட்டி எண்:120, நாள்:19.9.1999.

50. பேட்டி எண்:66, நாள்:19.5.2001.

51. பேட்டி எண்:70, நாள்:25.4.1999.

52. பேட்டி எண்:67, நாள்:29.5.1999.

53. பேட்டி எண்:75, நாள்:25.2.2000.

54. பேட்டி எண்:81, நாள்:31.7.1999.

55. பேட்டி எண்:80, நாள்:28.3.1999.

56. பேட்டி எண்:28, நாள்:9.4.200.

57. பேட்டி எண்:56, நாள்:17.7.1999.

58. பேட்டி எண்:54, நாள்:5.4.2000.

59. பேட்டி எண்:149, 9.11.1999.

60. ஆறு. இராமநாதன், நாட்டுப்புறப்பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல், ப.158.

61. அ. இராகவன், தமிழ்நாட்டு அணிகள், ப.64.

62. மேலது, ப.64.

63. எஸ். வையாபுரியப்பிள்ளை, தமிழர் பண்பாடு, ப.19.

64. புறம்: 147: 5-8 சிலம்பு:380.

65. புறம்: 238: 6-7, 250: 3-6, 253:5 280:14.

66. அ.மு. பரமசிவானந்தம், தமிழர் விழாக்கள், முன்னுரை, ப.188.

# முடிவுரை

"சிவகங்கை மாவட்டக் கிராம வழக்கு மன்றங்கள்" என்னும் பொருளில் அமைந்துள்ள இந்த ஆய்வில் பெறப்பெற்ற கருத்துக்களின் சாரமாகவும் தொகுப்பாகவும் இந்த 'ஆய்வு முடிபுகள்' என்னும் பகுதி அமைகின்றது.

'பஞ்சாயத்து' என்பது 'சிற்றூர் வழக்கு மன்றம்' என்றும், 'கிராம வழக்கு மன்றம்' என்றும் வழங்கப்பெறும். அது ஐந்திற்கும் மேற்பட்ட ஊர்ப் பெரியவர்கள் கூடி விவாதிக்கும் 'நியாயசபை' ஆகும். ஒரே பண்பாட்டு இயல்புடைய சிற்றூரைச் சேர்ந்தவர்கள் அவர்களுக்குள் தோன்றும் சிக்கல்களைத் தீர்க்க ஏற்படுத்தப்பட்ட அமைப்பு 'சிற்றூர்ப் பஞ்சாயத்து' ஆகும். அது கிராமப் பெரியவர்களின் வழக்காடு மன்றமாக அமைந்திருப்பதனால் அதனைக் 'கிராம வழக்கு மன்றம்' எனக் குறிப்பிடுவர். பழங்காலத்தில் மனிதன் நாடோடிகளாகக் காடுகளில் வேட்டைத் தொழிலை மேற்கொண்டு வாழ்ந்தான். பின்னர் நீர்நிலைகளைக் கொண்ட செழிப்பான ஆற்றுப்பகுதிகளை நாடி ஓரிடத்தில் நிலையாகத் தங்கி வீடுகளைக் கட்டிக் கொண்டு வாழத் தொடங்கினான். இவ்வாறு மனிதர்கள் கூட்டம் கூட்டமாக வாழத் தொடங்கிய நிலையினையே வரலாற்று ஆய்வாளர்கள் 'இனக்குழு வாழ்க்கை முறை' எனச் சுட்டிக்காட்டியுள்ளனர். இந்த இனக்குழுவே பின்னர் கிராமமாகப் பரிணாம வளர்ச்சி பெற்றது.

'வழக்கு மன்றம்' என்ற அமைப்பு முறையானது. அது 'கிராமம்' என்ற அமைப்புத் தோன்றி மனிதன் கூடி வாழத் தலைப்பட்ட போது தோன்றியது. அம்மன்றங்கள் கிராம மக்களிடையே ஏற்படும் ஒட்டுமொத்தமான சிக்கல்களைத் தீர்த்து வைப்பதைக் கருத்தில் கொண்டு தோன்றியது.

சங்க இலக்கியங்களில் 'மன்றம்', 'பொதியில்', 'அம்பலம்', 'அவை', 'அறங்கூறவையம்' போன்ற சொற்கள் இடம் பெற்றுள்ளன. இவை கிராம வழக்கு மன்றங்களைக் குறிக்கும் ஒரு பொருள் பல சொற்களாகும். பண்டைய தமிழகத்தில் நீதியை நிருவாகம் செய்வதற்கு மன்னர்களுக்கு உறுதுணையாக ஐம்பெருங் குழுவினரும், எண்பேராயத்தினரும் இருந்துள்ளனர். தலைநகரத்தில் அறங்கூறவையத்திற்கு மன்னனே தலைமைதாங்கியுள்ளான். சோழர்காலத்தில் நாட்டாட்சி முறையில் - கிராம தலசுய ஆட்சி முறையில் கிராம நிருவாகத்துக்குச் சிறப்பிடம் கொடுக்கப்பட்டது. கல்வெட்டுக்களில் 'ஊரவை' பற்றியும், ஊரவையினரின் பணிகள் பற்றியும் செய்திகள் காணப்படுகின்றன. இலக்கியம் மற்றும் கல்வெட்டுச் சான்றுகளைக் கொண்டு நோக்கும் போது, சிற்றூர் வழக்கு மன்றங்கள் மன்றம், அவை, அவையம், அறங்கூர் அவையம், அறக்களம் முதலான பல்வேறு பெயர்களில் சங்க காலம் முதல் சோழர் காலம் வரையில் தொடர்ந்து இருந்துள்ளமையை அறியலாம். சிற்றூர் வழக்கு மன்றங்கள், நீதி மன்றங்கள் பெருகியுள்ள தற்காலத்திலும் மக்களின் நம்பிக்கையைப் பெற்றிருப்பது சுட்டத்தக்கதாகும்.

ஆங்கில நீதிமன்ற மரபுகளையும், பல சட்டங்களையும், சட்ட நடைமுறைகளையும், வழக்குரைஞர்களின் வாதங்களையும் அடிப்படையாகக் கொண்ட இக்கால நீதிமன்றங்களின் தோற்றத்திற்கும் அதன் வளர்ச்சிக்கும் ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் குழுமத்தினர் வித்திட்டனர். அவர்கள் உரோமானியச் சட்ட நடைமுறைகளைத் தழுவி நீதிமன்றங்களையும், நீதி நிருவாகத்தையும் ஏற்படுத்திச் செயல்படுத்தினர்.

கிராம வழக்கு மன்ற அமைப்பு முறையானது, இனத்துக்குள் தோன்றும் சிக்கல்களுக்குத் தீர்வுகாணுதல் மட்டுமின்றித் தங்களைத் தாங்களே ஆட்சி

செய்யவும் உதவியது. தங்கள் இன மக்களுக்குத் தேவையான பொதுப்பிரச்சினைகளைக் கவனிக்கும் பொருட்டுத் தேவையான நீதிமுறைகளைத் தாங்களே ஏற்படுத்திக் கொண்டனர். கிராமங்களின் நீதி, நிதி, நிருவாகம் ஆகிய மூன்றினையும் இவ்வமைப்புக் கவனித்துக் கொண்டது. இவ்வாறு கிராம வழக்கு மன்றங்கள் ஒரு மாதிரி அரசாக (Model Government) விளங்கியது. இதுவே கிராம சுயாட்சி முறையாகும். சங்க இலக்கியங்கள், சேர, சோழ, பாண்டிய, பல்லவர், விசய நகர, நாயக்கர்கால ஆட்சிகளில் சிற்றூர்களில் 'கிராம வழக்கு மன்றங்கள்' சிறப்பாகச் செயல்பட்டு வந்துள்ளன. இந்த அமைப்பு பல்வேறு அம்சங்கள் சேர்ந்த ஒரு வடிவமாகச் செயல்பட்டு வருகின்றது. ஒரு குடும்பம், இனம் அல்லது சாதி, கிராமம் எனப் பல வடிவங்களாக விளங்குகின்றன.

வழக்குகளின் தன்மையையொட்டி பல்வேறு வடிவங்களில் அவை தீர்த்து வைக்கப்படுகின்றன. சிறு சிக்கல்கள் குடும்ப அளவிலும், குடும்ப அமைப்பில் தீர்க்கப்படாத சிக்கல்கள் சாதிய அமைப்பிலும், பல்வேறு சாதியச் சிக்கல்கள் ஊர்ப்பஞ்சாயத்து அமைப்பிலும், பல ஊர்ச்சிக்கல்கள் கிராம வழக்கு மன்றம் மற்றும் நாட்டுப் பஞ்சாயத்து அமைப்பிலும் தீர்த்து வைக்கப்படுகின்றன. கிராம வழக்கு மன்றங்களை அவற்றின் அமைப்பு முறைகளை அடிப்படையாகக் கொண்டு குடும்பப் பஞ்சாயத்து, சாதிப் பஞ்சாயத்து, ஊர்ப்பஞ்சாயத்து, கிராமப் பஞ்சாயத்து, நாட்டுப்பஞ்சாயத்து என வகைமைப்படுத்தி விளக்கப்பட்டுள்ளன.

ஆய்வாளர் களத்தில் சேகரித்த வழக்குகளின் உள்ளடக்கச் செய்திகளையும் அவற்றின் அடிக்கருத்துக்களையும் அடிப்படையாகக் கொண்டு உரிமையியல் வழக்குகள், குற்றவியல் வழக்குகள், குடும்ப வழக்குகள், பொதுப்பிரச்சினைகள் தொடர்பான வழக்குகள் என வகைமைப்படுத்தப்பட்டுள்ளன. உரிமையியல் வழக்குகள் சொத்து வழக்குகள், கொடுக்கல்-வாங்கல் வழக்குகள் என இருவகைப்படும். குற்றவியல் வழக்குகள் திருட்டு, வெட்டுக்குத்து, அடிதடிச்

சண்டை, வாய்க்கால், ஊற்றுக்கால், தோட்டவேலை, குடித்துவிட்டுத் தகராறு செய்தல், முன் விரோதம், மான இழப்பு, தீ வைப்பு, சாராய விற்பனை, கொலை, விபத்து, பெண்ணைக் கடத்தல்-பாலியல் வன்முறை என்பனவற்றுள் அடங்கும்.

குடும்ப வழக்குகள், திருமணச் சிக்கல்கள், வரதட்சணை, நடத்தையில் ஐயம், மாமியார்-மருமகள் மோதல், வாழ விருப்பமின்மை, ஆண், பெண், ஒழுங்கீனம், சோம்பேறித்தனம், ஊதாரித்தனம், குழந்தையின்மை, பாலியல், மணமுறிவுகள் பற்றியதாகும். சமூக அமைப்பின் அடிப்படை நிறுவனம் குடும்பம். கிராமங்களில் விவசாயம் போன்ற கூட்டுச் சார்ந்த தொழில்களைச் செய்யும் சூழலில் கூட்டுக் குடும்ப முறை பெரிதும் உள்ளது. இக்குடும்ப உறுப்பினர்களிடையே சில சமயங்களில் போட்டி மனப்பான்மை, பொறாமை போன்றவற்றால் பிரச்சினைகள் எழுவதுண்டு. இதுமுற்றி, சண்டை, சச்சரவுகளாக மாறிட குடும்பத்தகராறுகளாக மாறுவதும் உண்டு. இவ்விதத் தகராறுகள் வழக்கு மன்றங்களுக்கும் வருகின்றன. கணவன்-மனைவி பிரச்சினைக்கு உளவியல் அடிப்படையிலான பிடிவாதம், விட்டுக் கொடுக்கும் மனமின்மை, சகிப்புத் தன்மை இன்மை, குடும்ப நிலை பேசுதல், குடி போன்ற பல காரணங்கள் சேர்ந்து வாழாமைக்குக் காரணங்களாக வெளிப்படுகின்றன. 'மண முறிவுகள்' பற்றிய வழக்குகளில் கணவன் ஆண்மையில்லாதவனாக இருத்தல், பிரதானக் காரணமாக அமைகின்றது. நடத்தை தவறிய ஆண்-பெண் இருபாலரையும் வழக்கு மன்றத்தினர் சேர்த்து வைக்கின்றனர்.

இரண்டு கிராமத்தார்களுக்கிடையே கோவில், கோயிலில் உரிமைப் பிரச்சினை, கண்மாயில் மீன்பிடித்தலில் பிரச்சினை போன்றவற்றில் கிராம வழக்கு மன்றத்தினர் முடிந்த வரையில் பொது அமைதியைக் காப்பதற்கும், கிராமங்களுக்கிடையே ஒற்றுமையை வளர்ப்பதற்கும் பாடுபட்டு வருகின்றனர்.

கிராம வழக்கு மன்றங்களில் வழக்கு விசாரணை முதலில் வாதியிடம் தொடங்குகின்றது. பின்னர் பிரதிவாதியின் ஏற்பு அல்லது மறுப்பு, முறைப்படியான சாட்சிகள் விசாரணை என வழக்கு மன்ற விவாதங்கள் நடைபெறுகின்றன. வாதி, பிரதிவாதி, வழக்கு மன்றத் தலைவர், உறுப்பினர்கள் அடங்கிய குழுவின் அமைப்பே 'வழக்கு மன்றம்' ஆகும். பிறரால் ஏதேனும் ஒருவகையில் பாதிக்கப்பட்டவர் 'வாதி' ஆவார். வாதி தனக்குப் பாதிப்பினை ஏற்படுத்தியவர் மீது வழக்கு மன்றத்தில் வழக்கினைத் தொடுக்கின்றார். வாதியால் குற்றம் சாட்டப்பட்டவர் 'பிரதிவாதி' ஆவார். வழக்கு மன்றத் தலைவரிடம் வாதி முறையிட்டு வழக்கினைத் தொடுக்கின்றார். வழக்கு மன்றத் தலைவர் 'ஓடும் பிள்ளையை' அழைத்து ஊர் சாட்டுமாறு கட்டளையிடுகின்றார். பல கிராமங்களில் பண்டாரத்தின் மூலமாகத் தகவல் தெரிவிக்கப்பட்டு 'வழக்கு மன்றங்கள்' கூட்டப்படுகின்றன. சில கிராமங்களில் 'தோட்டி' என்பவர் தண்டோராப் போட்டும் பறையறைந்தும் ஊர்ப் பொதுமக்களுக்கு வழக்கு மன்றம் கூட விருப்பதை அறிவிக்கின்றார்.

வழக்கு மன்றத்தலைவர் 'முறைப்படி பஞ்சாயத்துத் தொடங்குகின்றது' என்று அறிவித்ததும் வாதியும் பிரதிவாதியும் மேலாடையைக் களைந்து, தலைப்பாகையை அவிழ்த்து (துண்டு) இடுப்பில் கட்டியவாறு 'மண்டுப்பணம்' வைத்து வழக்கு மன்றத்தார் முன்னிலையில் கும்பிட்டு விழுந்து வழக்கு மன்றத்தை வணங்குகின்றனர். வழக்கு முடியும் வரை அவர்கள் கைகளை முன்புறம் கட்டிக் கொண்டு நிற்கின்றனர். பெண்ணாக இருந்தால் வழக்கு மன்றத்தைக் கும்பிட்டு விழுந்து வணங்கி கைகளைக் கட்டிக் கொண்டு நின்றால் மட்டும் போதும்.

ஒவ்வொரு கிராம வழக்கு மன்றமும் வாதி, பிரதிவாதி, வழக்கு மன்றத் தலைவர், கலந்து கொள்பவர்கள் எனப் பல அங்கங்களைக் கொண்ட அமைப்பாகும். இத்தகைய அமைப்புக்களைக் கொண்ட வழக்கு மன்றத்தின் செயல்பாடானது,

சிக்கல்களை உரியவரிடம் தெரிவித்தல் அதாவது வழக்குகளை முன் வைத்தல், வழக்குகளை விசாரித்தல், மறுப்பு, விவாதம், தீர்ப்புக் கூறல், தீர்ப்பை ஏற்றுக் கொள்ளுதல் எனப் பல அமைப்புச் செயல்பாட்டு முறையினைக் கொண்டுள்ளது.

கிராம வழக்கு மன்றங்கள் ஒரு வலிமைமிக்க அமைப்பாகும். நீதி மன்றங்கள், காவல் நிலையங்களில் தீர்க்கப்படாத பல வழக்குகள் இம்மன்றங்களில் தீர்க்கப்பட்டுள்ளன. இம்மன்றங்கள் தீர்க்கமான முடிபுகளை எடுக்கின்றன. கிராமத் தெய்வங்களின் முன்னர் அமர்ந்து வழக்குரைப்பதால் வாதியும் பிரதிவாதியும் பொய்யுரைப்பதைத் தவிர்க்கின்றனர். இம்மன்றத் தீர்ப்புகளுக்குக் கட்டுப்படாதவர்களைக் கிராமம் ஊரைவிட்டு ஒதுக்கி விடுகின்றது. இம்மன்றங்களின் தீர்ப்பே இறுதியானது என்பது எழுதப்படாத சட்டமாகும். அரசு நிறுவனங்களும் நீதிமன்றங்களும் இம்மன்றங்களின் மூலம் எடுக்கப் பெறும் முடிபுகளை இன்றும் ஏற்றுக் கொள்கின்றன.

வழக்கு மன்றத்தார் குற்றவாளியை எச்சரித்துப் பொது மன்னிப்பு வழங்குகின்றனர். வாதியையும் பிரதிவாதியையும் சமாதானம் செய்து வைக்கின்றனர். பெண்ணிற்கும் சொத்துரிமை உண்டு எனத் தீர்ப்புச் சொல்லியுள்ளனர். குற்றவாளிகளுக்குக் கோயிலில் விளக்குப் போடச் சொல்லுதல், தண்டத்தொகை விதித்தல் போன்ற எளிமையான தண்டனைகளைத் தருகின்றனர். அத்தண்டத்தொகையைக் கோயில் உண்டியலில் சேர்த்து விடுகின்றனர். தவிர்க்க முடியாத சிக்கல்களில் குற்றவாளியை ஊரைவிட்டே வெளியேற்றுகின்றனர். இவ்விரண்டும் கடுமையான தண்டனை முறைகளாகும். ஆதலால் குற்றவாளிகள் ஊர்க்கட்டுப்பாடு, சாதிக்கட்டுப்பாடு ஆகியனவற்றைக் கருதி அத்தண்டனைகளையும் மன்றத்தாரின் தீர்ப்புக்களையும் ஏற்கின்றனர்.

சங்ககாலத்தில் அரசனால் விதிக்கப்பட்ட தண்டனைகள் மிகவும் கொடூரமானதாகப் பழிக்குப் பழி வாங்கல் நோக்கத்தில் கண்ணுக்குக்கண், பல்லுக்குப்

பல் என்றிருந்தது. ஆனால், சிற்றூர் வழக்கு மன்றங்களில் மிகவும் நேர்மையான முறையில் அக்குற்றத்தைக் குற்றவாளி மீண்டும் செய்யாதவாறு தண்டனை வழங்கப்பட்டு வருகின்றது.

கிராம வழக்கு மன்றங்களின் இச்செயல்பாட்டு முறையானது, இன்றுள்ள நீதிமன்றச் செயல்பாட்டு முறைகளோடு ஒத்திருப்பதை நோக்கும்போது, தற்கால நீதிமன்றங்கள், சிற்றூர் வழக்கு மன்றங்களில் வளர்ச்சி நிலையே எனக் கருத இடமுண்டு. சிற்றூர் வழக்கு மன்றங்களில் உரிமை வழக்குகளும், குற்றவியல் வழக்குகளும் ஒன்றாகவே கருதப்பட்டன. குற்றத்தின் தன்மையைப் பொறுத்தும், விதிக்கப்பெறும் தண்டனையைப் பொறுத்தும் குற்றங்கள் மதிப்பீடு செய்யப்பட்டன.

நீதிமன்றங்களில் நீதி வழங்குவோர் 'நீதிபதிகள்' என்றழைக்கப்படுகின்றனர். கிராம வழக்கு மன்றங்களில் 'ஊர் நாட்டாமை', 'பெரிய அம்பலகாரர்', 'அம்பலகாரர்' ஆகியோர் நீதி வழங்குகின்றனர். நீதி மன்றங்களில் 'வழக்கு முறையீடு', 'எழுத்துப் படிவம்' வாயிலாக விண்ணப்பிக்கப்படுகின்றது. சட்டங்களின் அடிப்படையில் நீதி வழங்கப்படுகின்றது. நீதிமன்ற நடவடிக்கைகளில் அழைப்பாணை, வாதுரைகள், மெய்யுறுத்தம் அல்லது சான்று, தீர்ப்புரை, நிறைவேற்றம் ஆகிய ஐந்து கூறுகளும் முக்கியமானதாகும். கிராம வழக்கு மன்றங்களில் வழக்கு மன்றத் தலைவராகிய நாட்டாண்மையின் முன்பு வழக்கின் விபரத்தை 'வாய்மொழி மூலமாகவே' முறையீடு செய்கின்றனர். நீதி மன்றங்களில் முறையீடு செய்யும் வாதி நீதிமன்றங்கள், வழக்குகளின் தன்மைக்கேற்ப, கட்டணம் செலுத்த வேண்டும். கிராம வழக்கு மன்றங்களில் முறையீடு செய்து வாதிட 'மண்டுப்பணம்' அல்லது 'படுக்கைப் பணம்' செலுத்த வேண்டும். அப்பணம் கிராம வழக்கு மன்றங்களில் பரம்பரையாக நிர்ணயிக்கப்பட்ட தொகையாகும்.

*நீதி மன்றங்களில் சாட்சிகளின் நம்பகத்தன்மை மிகவும் இன்றியமையாதது. சாட்சிகளை வழக்குரைஞர்கள் விசாரிப்பர். நீதிபதிகள் விசாரிப்பதில்லை. கிராம வழக்கு மன்றங்களில் சாட்சிகளை வழக்கு மன்றத் தலைவர்களாகிய நாட்டாமை, பெரிய அம்பலகாரர், அம்பலகாரர் ஆகியோர் நேரடியாக விசாரிப்பார். நீதிமன்றங்களில் சில வழக்குகள் முடிவான தீர்ப்பினைப் பெறாமல் நீண்டகாலம் நிலுவையில் இருப்பதுண்டு. கிராம வழக்கு மன்றங்களில் உடனடியான தீர்ப்புகள் கிடைக்கின்றன. நீதிமன்றங்களில் சாட்சிகள் மற்றும் சூழ்நிலைகளைப் பொறுத்து உண்மையான குற்றவாளிகள் தப்பித்து விட வாய்ப்புண்டு. கிராம வழக்கு மன்றங்களில் உண்மையான சரியான நீதிகள் கிடைக்கின்றன. குற்றவாளிகள் பெரும்பாலும் தப்பிக்க வாய்ப்பில்லை. கிராம வழக்கு மன்றங்களில் முறையீட்டின் அடிப்படையில் தண்டனைகள் குறைக்கப்படுவதுமுண்டு.*

*நீதிமன்ற நடைமுறைகளில் வழக்கினை உண்மையானது என மெய்ப்பித்துக் காட்டும் பொறுப்பு வாதியைச் சார்ந்ததாகும். கிராம வழக்கு மன்றங்களில் நீதிமன்றங்களைப் போன்று 'தீர்ப்பு நெறிச்சட்டங்கள்'* (Judge Made Law) *ஏதும் இல்லை. கிராம வழக்கு மன்றங்களுக்கென எழுதி வைக்கப்பட்ட சட்டங்களும் இல்லை. பரம்பரை பரம்பரையாக மூத்தவாரிசு அடிப்படையில் தீர்ப்புகளை வழங்கும் நாட்டாமை, பெரிய அம்பலகாரர், அம்பலகாரர் முதலான பட்டங்களைப் பெற்றவர்கள் தீர்ப்புக்களை அளித்து வருகின்றார்கள். அவர்கள் ஒழுக்கமும் நன்னடத்தையும் கொண்டவர்கள். அவர்கள் தங்களின் அனுபவங்கள், அனுமானங்களின் அடிப்படைகளில் நடுவுநிலைமை தவறாமல் தக்க தீர்ப்புகளை அளித்து வருகின்றனர். அத்தீர்ப்புகள் நீதிமன்றத் தீர்ப்புகளுக்கு இணையானதாக அமைந்திருக்கின்றன. ஒருவகையில் இன்றைய நீதிமன்றச் சட்டநெறியும் அன்றைய அறநெறியும் ஒத்திருக்கின்றன.*

கிராம வழக்கு மன்றங்களின் வழக்குகள் வாயிலாக கிராம மக்களின் வாழ்வியல் செய்திகளையும் அறியமுடிகிறது. வழக்குத் தொடுப்பதன் நோக்கம், பாதிப்பு, பொறாமை, பழிவாங்கல் முதலான உளவியல் காரணங்களே என்பது புலப்படுகின்றது. வழக்குகளில் வெளிப்படும் வாழ்வியல் பிரச்சினைகள் உண்மையானவை. வழக்குத் தொடுத்தல், தீர்ப்பு, முடிவு, ஏற்பு, மேல்முறையீடு, தீர்ப்பின் எதிர்ப்பார்ப்புகள், மனநிறைவு அல்லது நிறைவின்மை போன்றவை வழக்குகளின் வெளிப்பாடுகளாகும். தீர்ப்பின் விளைவுகளாகத் தெய்வத்திடம் முறையீடு, மண்தூற்றல், பலிபோடுதல், காசுவெட்டுதல், சத்தியம் செய்தல் முதலான செயல்கள் நடைபெறுகின்றன.

கிராம வழக்கு மன்றங்களின் வழக்குத் தீர்ப்புகளை அடிப்படையாகக் கொண்டு சமூக இயக்கம் அமைந்திருக்கின்றது. சாதிகள் இணைப்பு, குடும்பங்கள் இணைப்பு, கிராமம், ஊர் இயக்கம் முதலியன கிராம வழக்கு மன்றங்களைச் சார்ந்தும் மையமிட்டும் அமைந்துள்ளன.

கிராம மக்களின் பழக்க வழக்கங்கள், உணவுகள், உடைகள், அணிகலன்கள், விழாக்கள், வழிபாடுகள், சமூக மதிப்புக்கள், படிநிலைகள், ஏற்றத்தாழ்வுகள், குடிகள் இருப்பிடம், ஊர் அமைப்பு, இன, சாதிய வேறுபாடுகள், உறவுமுறை, பாலியல் என்ற நிலைகளில் தொழில்கள், உரிமைகள், கடமைகள், உரிமைகள் மறுப்பு முதலானவைகளும் இந்த ஆய்வுரையில் நோக்கப்பட்டுள்ளன.

இவ்வாறு கிராம வழக்கு மன்ற அமைப்பு முறையிலும், செயல்பாட்டு முறையிலும் இன்றுள்ள நீதிமன்றத்தைச் சிற்றூர் வழக்கு மன்றத்துடன் ஒப்பிட்டு அணுகிப் பார்க்கும் போது, சிற்றூர் வழக்கு மன்றங்களில் ஏராளமான நன்மைகள் உள்ளன. இத்தகைய பயன்பாட்டுக் காரணங்களால் தான் சிற்றூர் வழக்கு மன்றங்கள் இன்றும் நிலைத்து நிற்கின்றன.

# துணைநூற்பட்டியல்

## தமிழ் நூல்கள்


1. அகத்தியலிங்கம் - 'தமிழகப் பழங்குடி மக்கள்' மொழியியல் துறை-ஆராய்ச்சி மாணவர் வெளியீடு, சிவகாமி அச்சகம், அண்ணாமலை நகர். 1972.

2. அபுல்கலாம், எச்.எம்., - இந்தியத் தண்டனைச் சட்டம் மற்றும் குற்றச் சட்டம் மெஹர் வெளியீடு, சென்னை, 2000.

3. அழகப்பன், ஆறு., - 'நாட்டுப்புறப் பாடல்கள்- திறனாய்வு' கழக வெளியீடு, சென்னை, 1973.

4. ஆந்திரயெவ், இ.லி., - 'ஏங்கெல்சின் குடும்பம், தனிச்சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம், முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ சோவியத் நாடு. 1987.

5. ஆரோக்கியசாமி, மு., - 'தென் இந்திய வரலாறு' அமுதா நிலையம், நேஷனல் ஆர்ட் பிரஸ், சென்னை, 1955.

6. இராகவன், அ., - 'தமிழ்நாட்டு அணிகலன்கள்' கலைநூற் பதிப்பகம், திருநெல்வேலி, 1970.

7. இராசமாணிக்கனார், மா., - 'கல்வெட்டுக்களில் அரசியல் சமயம் சமுதாயம்' சேகர் பதிப்பகம், சென்னை, 1977.

8. இராசமாணிக்கனார், மா., - 'பல்லவர் வரலாறு' கழக வெளியீடு சென்னை, 1944.

9. இராமகிருட்டினன், ஆ., - 'தமிழக வரலாறும் தமிழர் பண்பாடும்' சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை, 2001.

10. இராமநாதன், ஆறு., - 'நாட்டுப்புறப் பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல்' மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1982.

11. இராமசாமி, துளசி., - 'நெல்லை மாவட்ட நாட்டுப்புறத் தெய்வங்கள்' உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை, 1985.

12. இராமானுஜாசாரி, ஆர்., - பிளேட்டோவின் குடியரசு, சாகித்ய அக்காதெமி, புதுதில்லி, 1966.

13. இளங்குமரன், புலவர்., - உரையாசிரியர்கள் கண்ட சொற்பொருள் நுண்மை விளக்கம், கழக வெளியீடு, சென்னை, 1971.

14. இராசு, செ., - 'செந்தமிழ்வேளிர் எம்.ஜி.ஆர்- ஒரு வரலாற்று ஆய்வு, கொங்கு ஆய்வு மையம், ஈரோடு, முதற்பதிப்பு, 1985.

15. ஏங்கெல்ஸ், பிரடெரிக்., - 'குடும்பம் தனிச்சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம்' (தமிழ்மொழி பெயர்ப்பு) முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ, பதிப்பு, ஆண்டு இல்லை.

16. ஔவையார்., - 'கொன்றைவேந்தன்' நீதி நூற்கொத்து, முதல் பாகம் கழக வெளியீடு, சென்னை, 1968.

17. கனகசபை, வி., - ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம், மொழி பெயர்ப்பு கா. அப்பாதுரை, கழகம், சென்னை, 1962.

18. குழந்தைக் கவிராயர், மிதிலைப்பட்டி, - மான்விடு தூது, லாஜர்னல் அச்சுக்கூடம் மைலாப்பூர், சென்னை, 1936.

19. சச்சிதானந்தன், வை., - மேலை இலக்கியச் சொல்லகராதி, மாக்மில்லன் இந்தியா லிமிடெட் சென்னை, 1983.

20. சண்முகசுந்தரம், சு., - திருநெல்வேலி மாவட்ட நாட்டுப்புறப் பாடல்களில் சமுதாய அமைப்பு நாவல் ஆர்ட் பிரிண்டர்ஸ் சென்னை, 1988.

21. சண்முக சுப்பிரமணியம், மா., - 'சட்ட இயல்' தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1984.

22. சதாசிவபண்டாரத்தார், டி.வி., - 'பாண்டியர் வரலாறு' கழக வெளியீடு சென்னை, 1969.

23. சாமிநாத வர்மா, வெ., - பிளேட்டோவின் அரசியல் இரண்டாம் பாகம் திருமகள் நிலையம், சென்னை, 1986.

24. சிதம்பரனார், சாமி., - பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும், இலக்கிய நிலையம், சென்னை, 1974.

25. சுந்தரம், டி.(பதி.ஆ) - 'தொல்காப்பியம் பொருளதிகாரம்' (அகத்திணையியல் புறத்திணையியல்) அண்ணாமலைப் பல்கலைக் கழகம், சிதம்பரம், 1986.

26. சுப்பிரமணியன், ந., - 'சங்ககால இலக்கியங்களில் கால வாழ்வியல்' (சங்கத் தமிழரின் அரசுமுறையும் சமூக வாழ்வும்) நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் பிரைவேட் லிமிடெட் சென்னை, 1986.

27. -------------------,. - தமிழக வரலாறு (கி.பி.1565 வரை) என்னெஸ் பப்ளிகேஷன்ஸ், மதுரை, 1979.

28. சுவாமிநாதன், அ., - தமிழ்நாட்டு வரலாறு தீபா பதிப்பகம், பெருங்குடி 1993.

29. சுவாமி விவேகானந்தர் - ஞானதீபம், சுடர்-3, 1985.

30. செந்துரை முத்து, புலவர்., - தமிழர் வரலாறு நாகரிகம் பண்பாடு.

31. செல்லம், வே.தி., - தமிழக வரலாறும் பண்பாடும் மதுரை பப்ளிஷிங் ஹவுஸ், மதுரை, 1976.

32. தங்கராஜ், பெ., - பள்ளர் யார்? (பள்ளர் வரலாறு) புரட்சிக் கனல் வெளியீடு, சென்னை, 1975.

33. தமிழ்நாட்டு வரலாற்றுக்குழு - தமிழ்நாட்டு வரலாறு (சங்க காலம் அரசியல்) தமிழ்நாட்டுப் பாட நூல் நிறுவனம், சென்னை, 1983.

34. லேனா தமிழ்வாணன், (பதி.ஆ.), - சமரசம் செய்து வைப்பது எப்படி? மணிமேகலைப் பிரசுரம், சென்னை, 1990.

35. தேவ ஆசீர்வாதம், இரா., - மூவேந்தர் யார்? இராமதேவன் பதிப்பகம், தஞ்சாவூர், 1977.

35. தேவநேயன், ஞா., - மூவேந்தர் யார்?
இராமதேவன் பதிப்பகம்,
தஞ்சாவூர்,
1977.

36. ---------------., - பழந்தமிழர் அரசியல் கோட்பாடுகள்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை,
1999.

37. தொல்காப்பியர், - தொல்காப்பியம்-எழுத்ததிகாரம்,
இளம்பூரணர் உரை,
கழகம்,
சென்னை,
1959.

38. ------------------., - தொல்காப்பியர்-சொல்லதிகாரம்,
சேனாவரையர் உரை,
கழகம்,
சென்னை,
1959.

39. -----------------., - தொல்காப்பியர்-பொருளதிகாரம்,
இளம்பூரணர் உரை,
கழகம்,
சென்னை,
1958.

40. -----------------., - தொல்காப்பியம்-பொருளதிகாரம்,
நச்சினார்கினியர் உரை,
கழகம்,
சென்னை,
1973.

41. நடராசன், நா., - பாடுவார் முத்தப்ப செட்டியார்,
மன்னவன் வெளியீடு,
கீழச்சிவல்பட்டி,
இராமநாதபுர மாவட்டம்,
1980.

42. நம்பூதிரிபாட், இ.எம்.எஸ்., - இந்திய வரலாறு - ஒரு மார்க்சீய கண்ணோட்டம்,
பி.ஆர். பரமேஸ்வரன், (மொ.பெ.ஆ.),
பாட்டாளிகள் வெளியீடு,
சென்னை,
1978.

43. பரமசிவானந்தம், அ.மு., - தமிழ்நாட்டு விழாக்கள்,
தமிழ்க் கலைப்பதிப்பகம்,
சென்னை,
1967.

44. பரதன், ம., - பழங்கால இந்தியாவின் அரசியல் சிந்தனையும் ஆட்சிமுறையும், தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1977.

45. பாஸ்கல், கில்பர்ட்., - சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், ஜெ. நாராயணன் (மொ.பெ.ஆ.), தமிழ் வெளியீட்டுக் கழகம், சென்னை, 1964.

46. பிள்ளை, கே.கே., - தமிழக வரலாறு-மக்களும் பண்பாடும், தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1979.

47. பெர்ட்ராண்டு ரஸ்ஸல், - திருமண முறைகள்: கோ. மாதவன், பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, 1965.

48. மங்கள முருகேசன், ந.க., - தமிழக ஆட்சிமுறை, கூடல் பப்ளிஷர்ஸ், மதுரை, 1979.

49. ------------------., - இந்திய ஆட்சி அமைப்பு வளர்ச்சி வரலாறு, தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1972.

50. --------------., - இந்தியச் சமுதாய வரலாறு, தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1975.

51. முத்துத்தேவர், பி., - மூவேந்தர் குலத்தேவர் சமூக வரலாறு, காக்க வீரன் வெளியீட்டகம், உசிலம்பட்டி, 1982.

52. முத்துச்சாமி, அ., - சங்க இலக்கியத்தில் ஆயர், இராணிப்பதிப்பகம், இராயப்பேட்டை, சென்னை, 1993.

53. முத்தையா, ஆத., - பாகனேரி நாட்டு மக்களின் மரபும் பண்பாடும், ஆனந்தாயி பதிப்பகம், தஞ்சாவூர், 1998.

54. யாக்ஞ வல்கியர், - அத்தியாம்:1, பிரிவு:13, விதி:368.

56. லூர்து, தே., (பதி.ஆ., - நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகள், தொகுதி-1, பெருமாள் புரம், திருநெல்வேலி, 1976.

57. ----------------., - நாட்டார் வழக்காற்றியல், மாணிக்க வாசகர் பதிப்பகம், சென்னை, 1988.

58. வானமாமலை, நா., (பதி.ஆ.), - தமிழர் நாட்டுப் பாடல்கள், நியூசெஞ்சுரி புக்ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 1977.

59. ---------------------., - முத்துப்பட்டன் கதை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 1971.

60. வேங்கடசாமி நாட்டார், ந.மு., - கள்ளர் சரித்திரம், டாட்சன் பிரஸ், திருச்சி, 1923.

61. வேங்கடகிருஷ்ணய்யங்கார், தி., (உரை.ஆ.), - உரைநடைப் சிலம்பு, வானதி பதிப்பகம், சென்னை, 1970.

62. வையாபுரிப்பிள்ளை, எஸ்., - தமிழர் பண்பாடு, பாரிநிலையம், சென்னை, 1968.

**சங்க இலக்கியங்கள்**

1. அகநானூறு- களிற்றியானை நிரை, - சோமசுந்தரனார், பொ.வே., உரை, கழகம், சென்னை, 1970.

2. அகநானூறு-மணிமிடை பவளம், நித்திலக்கோவை, - சோமசுந்தரனார், பொ.வே., உரை, கழகம், சென்னை, 1973.

3. ஐங்குறுநூறு, - சோமசுந்தரனார், பொ.வே., உரை, கழகம், சென்னை, 1972.

4. கலித்தொகை, - சோமசுந்தரனார், பொ.வே., உரை, கழகம், சென்னை, 1973.

5. குறுந்தொகை, - சாமிநாதையர், உ.வே., உரை, தியாகராச விலாச வெளியீடு, சென்னை, 1962.

6. நற்றிணை, - சோமசுந்தரனார், பொ.வே., உரை, கழகம், சென்னை, 1973.

7. நெடுநல்வாடை, - கோதண்டபாணிப்பிள்ளை, கு. (உரை.ஆ.), சென்னைத் தமிழ்ச் சங்கம், சென்னை, 1947.

8. பத்துப்பாட்டு (முதற் தொகுதி), - சோமசுந்தரனார், பொ.வே., உரை, கழகம், சென்னை, 1972.

9. பத்துப்பாட்டு (இரண்டாம் தொகுதி), - சோமசுந்தரனார், பொ.வே., உரை, கழகம், சென்னை, 1972.

10. புறநானூறு, - சாமிநாதையர், உ.வே., உரை, சாமிநாதையர் நூல்நிலையம், சென்னை, 1971.

11. ----------------., - துரைசாமிப்பிள்ளை, ஔவை, சு., உரை, கழகம், சென்னை, 1970.

**காப்பிய இலக்கியங்கள்**

1. இளங்கோடிவகள், - சிலப்பதிகாரம், கழகம், சென்னை, 1942.

2. சீத்தலைச் சாத்தனார், - மணிமேகலை, உ.வே. சாமிநாதையர் உரை, தியாகராச விலாச வெளியீடு, 1965.

3. சேக்கிழார், - பெரியபுராணம், குமரகுருபரன் சங்கம், ஸ்ரீவைகுண்டம், 1964.

4. கொங்குவேளிர், - பெருங்கதை, கழகம், சென்னை.

**சங்கம் மருவிய கால இலக்கியங்கள் (பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள்)**

1. திருவள்ளுவர், - திருக்குறள், பரிமேலழகர் உரை, பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, 1970.

2. ---------------, - நாலடியார், பாலசுந்தரம்பிள்ளை, தி.சு. (உரை.ஆ.), கழகம், சென்னை, 1964.

3. காரியாசான், - சிறுபஞ்சமூலம், வையாபுரிப்பிள்ளை பதிப்பு, சென்னை, 1944.

4. -----------------., - பழமொழி நானூறு, செல்வ கேசவராய முதலியார் பதிப்பு, 1916.

**BOOKS IN ENGLISH**

1. Beterlee, Andrew, - Caste Old and New, Asia Publishing House, Madras, 1956.

2. Claude Levistrauss, - Structural Anthropology, Basic Books Incorporated, New York, 1963.

3. Crane, R.S., - The Language of Criticism and the Structure of Poetry, New York, 1953.

4. Densisoff, Serge, R., Wabrman, Ralph, - An Introduction to the Society, Cappies Macmillan Publishers, London, 1975.

5. Ghurge, G.B., - Caste and Religion in India, Popular Prakashan, Bombay, 1960.

6. Gopalan, R., - Pallavas of Kanchi, Popular Prakashan, Bombay, 1966.

7. Halayya, M., - Social Sciences, Asia Publishing House, Bombay, 1961.

8. Hutton, J.W., - Caste in India, Its Nature, Function and Origins, Oxford University Press, 1969.

9. Kanagasabai Pillai, P., - The Tamils Eighteen Hundred Years Age, The South India Saivasiddantha Works Publishing Society, Madras, 1969.

*நான் விக்கிற குடியாவது நான் என்னைக் கொள்வாருளரோவென ஒருகாலாவது இருகாலாவது முக்காலத்து விலைமுகங்கூறி இவர் எம்மொழி எதிர்மொழித்து கொள்வோமென்று வந்த வயிரவனுக்கு விற்போமென்று விற்பதற்கிசைந்த குப்பான் கருப்பனேன் பாகனேரி மன்றத்து ஏற்றி பல நடுவர் முன் விலை நிச்சயித்து"*

**(ஈ) கள்ளர் காவல் உரிமையை விற்றல்**

*"காவலூர் வயிரவன் விலைப்பிரமாணம் பண்ணிக் குடுத்த பரிசாவது. இவ்றை விற்கிற காவலூராவது எங்கள் தனிக் காவலாவது வேம்பத்தூர், பாசாங்கரை, மான்குழி, ஒக்கூர், பெருங்குடி, திருமலை, திருக்கோட்டியூர், மற்றும் உண்டான தனிக்காவல் சீர்மை உண்டானதெல்லாம் பொதுக்காவாலூரில் என் பங்குண்டானதும் இதில் உண்டான காவல் காணி குடிபடை எற்பேர்பட்ட சுதந்திரமும் கொள்வாருளரோ கொள்வாருளலெப என்று நான் விலை முற்கூற இவர் பிற்கூறிய என்மொழி கேட்டு எதிர்மொழி மொழிந்து கொள்வேனென்ற குறும்பனுக்கு நானும் விற்பதற்கிசைந்து பாகனேரியில் மறைத்து ஏற்றி பல நடுவர் முன்பாக விலை நிர்ணயம் செய்து"*

**அடிக்குறிப்பு எண்: 58**

**பரம்பரையாக வந்தபறையர் மீது தமக்குள்ள பங்கை விற்றல்**

*" கீழவாசல் பிறஞ்சேரியிலிருக்கும் பறையரில் கொச்சியப்பன் மகன் ஆதனே என்பங்கு பாதி போக என் தமையன்ட கருப்பணன் எறந்து போவன் பங்கு பாதியை கொள்வாருளரோ என நான் கூற இவர் பிற்கூற என்மொழிகேட்டு எதிர்மொழி தந்து கொள்வோமென்று கொள்வதற்கிசைந்து வந்த முத்தணனுக்கு நானும் விற்போமென்று விற்பதற்கிசைந்து"*

## அடிக்குறிப்பு எண்: 95

## இயல்:ஆறு

*சிவகங்கை மாவட்டக் கிராமக் கள்ளரிடையே வழக்கிலிருக்கும் உறவு முறைப் பெயர்களும் அவை காட்டும் உறவுமுறைகளும்*

| வ.எண். | உறவுமுறைப்பெயர் | உறவுமுறை |
|---|---|---|
| 1. | பூட்ட(ன்) | பாட்டன் அல்லது பாட்டியின் தந்தை |
| 2. | பூட்டி | பாட்டன் அல்லது பாட்டியின் தாய் |
| 3. | பாட்ட(ன்) | தந்தையின் தந்தையின் தந்தை, தந்தையின் தாயின் தந்தை, தாயின் தாயின் தந்தை |
| 4. | பாட்டி | தந்தையின் தந்தையின் தாய், தாயின் தந்தையின் தாய், தந்தையின் தாயின் தாய், தாயின் தாயின் தாய். |
| 5. | அய்யா | தந்தையின் தந்தை, தாயின் தந்தை |
| 6. | அப்பத்தா | தந்தையின் தாய் |
| 7. | ஆயா | தாயின் தாய் |
| 8. | அப்பு | தந்தை |
| 9. | ஆத்தா | தாய் |
| 10. | பெரியப்பு | தந்தையின் தமையன் |
| 11. | சித்தப்பு | தந்தையின் தம்பி |
| 12. | நடப்பு | சகோதரர்கள் மூவருள் நடவில் பிறந்தவர். மூத்தவரின் பிள்ளைகளுக்கும் இளையவரின் பிள்ளைகளுக்கும் 'நடப்பு' என்னும் உறவுடையவராவார். |
| 13. | பெரியத்தா | தாயின் மூத்த சகோதரி |
| 14. | சின்னத்தா | தாயின் இளைய சகோதரி |
| 15. | அம்மெ (அம்மான்) | தாயின் சகோதரன் |
| 16. | பெரியம்மெ | தாயின் சகோதருள் மூத்தவன் |

| வ.எண். | உறவுமுறைப்பெயர் | உறவுமுறை |
|---|---|---|
| 17. | சின்னம்மேமே | தாயின் சகோதரருள் இளையவன் |
| 18. | அயித்தெ (அத்தை) | தந்தையின் சகோதரி |
| 19. | பெரியயித்தே | தந்தையின் சகோதரியருள் மூத்தவள் |
| 20. | சின்னயித்தே | தந்தையின் சகோதரியருள் இளையவள் |
| 21. | அண்ணெ (அண்ணன்) | மூத்த சகோதரன் |
| 22. | அண்ணமிண்டி (மதினி) | மூத்த சகோதரன் மனைவி |
| 23. | தம்பி | இளைய சகோதரன் |
| 24. | தம்பியொண்டி கொழுந்தியா | இளைய சகோதரன் மனைவி |
| 25. | அக்கா | மூத்தசகோதரி |
| 26. | மச்சான் | சகோதரியின் கணவர், மாமனின் மகன், அத்தையின் மகன், |
| 27. | தங்கச்சி | இளையசகோதரி |
| 28. | மயென் | மகன் |
| 29. | மக | மகள் |
| 30. | மருமகென் | ஓர் ஆணின் சகோதரி மகன், ஒரு பெண்ணின் சகோதரன் மகன், மகளின் கணவன். |
| 31. | மருமகள் | ஓர் ஆணின் சகோதரி மகள், ஒரு பெண்ணின் சகோதரன் மகள், மகனது மனைவி. |
| 32. | பேரென் | மகன்/மகளது மகன் |
| 33. | பேத்தி | மகள்/மகளது மகள் |
| 34. | அத்தாச்சி | மாமன்/அத்தையின் மகள் |
| 35. | பொண்டாட்டி | மனைவி |
| 36. | கொழுந்தே(ன்) | கணவனின் தம்பி |
| 36. | கொழுந்தனார் | கணவனின் அண்ணன் |

| வ.எண். | உறவுமுறைப்பெயர் | உறவுமுறை |
|---|---|---|
| 37. | நாத்னா | கணவனின் சகோதரி |
| 38. | மாப்பிளை | மனைவியின் சகோதரன், சகோதரியின் கணவன், மகளின் கணவன், |
| 39. | சகலெ | மனைவியின் சகோதரியின் கணவர் |
| 40. | மாமனார் | மனைவியின் தந்தை/கணவனின் தந்தை |
| 41. | மாமியார் | கணவனின் தாய்/ மனைவியின் தாய் |



ஏனாதி நாட்டுக் கிராமப் பஞ்சாயத்து நடக்குமிடம்





ஏனாதி நாட்டுத்தலைவர் கரு.நாகராஜன்
உச்சநீதிபன்றத் தலைமை நீதிபதி
திரு. ரங்கநாத் மிஸ்ராவால் பாராட்டப்பட்டார்.


SIVAGANGA DISTRICT
78°15'
78°30'
78°45'
79°
10°30'
10°15'
10°
9°45'
9°30'
N
W
E
S
6 0 6 Kilometers
SINGAMPUNERI
TIRUPATHUR
SAKKOTTAI
KALLAL
KANNANGUDI
DEVAKOTTAI
SIVAGANGAI
KALAYARKOIL
THIRUPUVANAM
MANAMADURAI
ILLAYANGUDI
சிவகங்கை மாவட்ட வரைபடம்

## பின்னிணைப்பு-VI

## ஆய்விற்குரிய முதன்மை ஆதாரங்கள் (வழக்குகள்)

### 1. உரிமையியல் வழக்குகள்

**பேட்டி எண்:1**

| வழக்குத் தொடுப்பவர் | : | கருப்பசாமி |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | நாடியான் |
| வழக்கு விவரம் | : | பாதைத் தகராறு |
| ஊர் | : | பனையூர் |
| சாதி | : | மூப்பர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப் பஞ்சாயத்து |
| நாள் | : | வைகாசி 20, 1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிவகங்கை |

பனையூர் கிராமத்தைச் சேர்ந்த கருப்பசாமி என்பவர் தன் இடத்தில் ஊர் மக்கள் நடப்பதாகவும், நடைபாதையாக இருந்த இடத்தை நாடியான் என்பவர் அடைத்துவிட்டதாகவும் இதனைக் கேட்டுக் கொடுக்க வேண்டுமெனவும் 1999 ஆம் ஆண்டு வைகாசி மாதம் 20ம் தேதி பனையூர் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தார். கருப்பசாமியிடம் பஞ்சாயத்தார் விசாரித்தனர். மூப்பர் அனைவரும் கூடிப் பேசினர். கருப்பசாமி நாடியான் ஆகிய இருவர் இடத்திற்குமிடையே நடைபாதை இருந்தது, குழாய்த் தண்ணீர் அங்கு வந்து தேங்கியதால் நாடியான் தன் இடத்தில் யாரும் நடக்கக் கூடாது என்று அதனை அடைத்து விட்டார். தற்பொழுது அனைவரும் என் இடத்தில் தான் நடக்கின்றனர், நாடியான் பாதைக்கு இடம் விட மறுக்கின்றார் எனக் கருப்பசாமி பிரச்சனையைப் பஞ்சாயத்தாரிடம் விளக்கிக் கூறினர். பஞ்சாயத்தார் நாடியானை விசாரித்தனர் அவர் குழாய்க் கழிவு நீர் என் இடத்தில் தேங்கியதால் பாதையை அடைத்தேன் என்றார். பின்னர் பஞ்சாயத்தார் குழாய்க் கழிவுநீர் செல்ல இருவர் இடத்திற்கு நடுவிலும் சிறுவாய்க்கால் போட்டு, நடப்பதற்கு இருவரும் சமமாக இடத்தை விட்டுக் கொடுக்க வேண்டுமெனத் தீர்ப்புக் கூறினர்.

**பேட்டி எண்:2**

| | | |
|---|---|---|
| வழக்குத் தொடுப்பவர் | : | மாயாண்டி, முனியாண்டி |
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | ராக்கன் |
| வழக்கு விவரம் | : | இடத்தகராறு |
| ஊர் | : | மேலப்பூங்குடி |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப் பஞ்சாயத்து |
| நாள் | : | ஆடி 27, 1995 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிவகங்கை |

மேலப்பூங்குடிக் கிராமத்தைச் சேர்ந்த மாயாண்டி, முனியாண்டி ஆகிய இருவரது இடத்தினையும் அதே ஊரைச் சேர்ந்த ராக்கன் என்பவர் ஆக்கிரமித்துக் கொண்டதால் அவர்கள் இருவரும் மேலப்பூங்குடிப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1995 ஆண்டு ஆடி மாதம் 27 ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தார். மாயாண்டி, முனியாண்டி ஆகிய இருவரும் பறையர் இனத்தைச் சேர்ந்தவர்கள். இராக்கன் கள்ளர் சமுதாயத்தைச் சேர்ந்தவர். எனவே இருதரப்பினரும் தங்களுக்கு வேண்டியவர்களைப் பஞ்சாயத்திற்கு அழைத்து வந்தனர். அன்று பகல் 12.00 மணிக்கு நாட்டுப் பஞ்சாயத்துக் கூடியது. சிவகங்கை, மதகுபட்டி, காடனேரி போன்ற பல ஊர்களில் இருந்து பஞ்சாயத்தார்கள் வந்திருந்தனர். மாயாண்டியும் முனியாண்டியும் பஞ்சாயத்துத் தலைவர்களிடம் தங்கள் வீட்டு மனையை ராக்கன் என்பவர் எடுத்துக்கொண்டு தங்களை மிரட்டுவதாகவும், பஞ்சாயத்தார் எப்படியாவது தங்களுடைய இடத்தைப் பெற்றுத் தர வேண்டுமென்றும் முறையிட்டு வேண்டிக் கொண்டனர். ராக்கன் பஞ்சாயத்தார்களிடம் தான் கடந்த ஐந்து வருடக் காலமாக அந்த இடத்தில் இருப்பதாகவும் அந்த இடம் தனக்குத்தான் சொந்தம் என்றும் வாதாடினார். பஞ்சாயத்தார் இடத்தை நேரில் பார்வையிட்டனர். பஞ்சாயத்தார்களுக்கு இடம் ஆக்கிரமிக்கப்பட்டிருப்பது தெளிவாகப் புலனாகியது. ஆதலால் பஞ்சாயத்தார் இராக்கனிடம் அடுத்தவன் இடத்திற்கு ஆசைப்படக்கூடாது என்றும், மாயாண்டி, முனியாண்டி ஆகியோருக்குச் சொந்தமான இடத்தில் இனிமேல் வேலிபோடக்கூடாது என்றும் தீர்ப்புக்கூறி இடத்தில் கல் ஊண்டி அவ்விடத்தை மாயாண்டிக்கும் முனியாண்டிக்கும் மீட்டுக் கொடுத்தனர்.

**பேட்டி எண்:3**

| வழக்குத் தொடுப்பவர் | : | இருதயசாமி |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | ஆரோக்கியத்தாய் |
| வழக்கு விவரம் | : | இடத்தகராறு |
| ஊர் | : | செங்குளம் |
| சாதி | : | இடையர் (கோனார்) |
| பஞ்சாயத்து அமைப்பு | : | ஊர்ப்பஞ்சாயத்து |
| நாள் | : | மார்கழி 11,1997 |
| ஒன்றியம்/வட்டம் | : | காளையார்கோவில் |

செங்குளம் கிராமத்தை சேர்ந்த இருதயசாமி என்பவர் தனக்குச் சொந்தமான இடத்தை மீட்டுத்தர வேண்டுமென 1997 ஆம் ஆண்டு மார்கழி மாதம் 11 ஆம் தேதி செங்குளம் பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று பகல் 11.00 மணிக்கு ஊர்ப்பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்துத் தலைவர் இருதயசாமியிடம் விசாரித்தார். அவர் பஞ்சாயத்துத் தலைவரிடம் ஆரோக்கியத்தாய் என்பவர் தனக்குச் சொந்தமான இடத்தில் பல நாட்களாக டீக்கடை நடத்தி, அந்த இடத்தைப் புறம்போக்கு எனப் பட்டாப் போட்டு ரசீதும் பெற்றுவிட்டார் என்றார். ஆரோக்கியத்தாய் பஞ்சாயத்துத் தலைவரிடம் தான் மூன்றாண்டுகளாக அந்த இடத்தில் டீக்கடை நடித்தி வருவதாகவும், அந்த இடத்திற்கு வரி செலுத்தி ரசீது பெற்றிருப்பதாகவும் கூறினாள். பஞ்சாயத்தார் தீர்ப்பை ஆரோக்கியத்தாய் ஏற்றுக்கொள்ளாமல் காவல் நிலையம் சென்றாள். காவல் துறையினர் பஞ்சாயத்தாரிடம் விசாரித்தனர். காவல் துறையினர் இந்த வழக்கினை ஊர்ப்பஞ்சாயத்தில் தீர்த்துக்கொள்ளுமாறு ஆரோக்கியத்தாயை அனுப்பிவிட்டனர். இதன் காரணமாக அதே நாள் இரவில் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார் தமது தீர்ப்பில் இருதயசாமி இடத்தினை ஆக்கிரமித்து, ஊர்க்கட்டுப்பாட்டை மீறி காவல்துறையினரிடம் சென்றமைக்காக ஆரோக்கிதாய்க்கு ரூபாய்.200 அபராதம் விதித்தனர். அந்த இடத்தைமீட்டு இருதயசாமியிடம் ஒப்படைத்தனர்.

**பேட்டி எண்:4**

| வழக்குத் தொடுப்பவர் | : | இரமேஷ் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | திரவியம் |
| வழக்கு விவரம் | : | இடத்தகராறு |
| ஊர் | : | நெடுங்குளம் |
| சாதி | : | இடையர் (கோனார்) |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | புரட்டாசி 25, 1996 |
| ஒன்றியம்/வட்டம் | : | காளையார்கோவில் |

நெடுங்குளம் கிராமத்தைச் சேர்ந்த இரமேஷ் என்பவர் தனது இடத்தில் திரவியம் என்பவர் வீடுகட்டிவிட்டார், எனக்கு என்னுடைய இடத்தை மீட்டுத் தாங்கள் என்று நெடுங்குளம் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1996 ஆம் ஆண்டு புரட்டாசி மாதம் 25 ம் தேதி வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று இரவு 9.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பின்னர் பஞ்சாயத்து இரண்டு நாட்கள் தள்ளி வைக்கப்பட்டு, அந்த இடம் பஞ்சாயத்தார் முன்னிலையில் அளக்கப்பட்டது. மீண்டும் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது இடத்தை அளந்து பார்த்தில் திரவியம் நான்கு அடி இடத்தை ரமேஷ் இடத்திலிருந்து ஆக்கிரமித்து வீடு கட்டியிருப்பது தெரியவந்தது. ஆதலால் திரவியம் நான்கு அடிப்பாதை விட்டுக் கொடுக்க வேண்டுமென்று பஞ்சாயத்தார் தீர்ப்புக் கூறினர். தற்பொழுது இருவரும் வீடு கட்டி அந்த இடத்தில் சமாதானமாக வாழ்ந்து வருகின்றனர்.

**பேட்டி எண்:5**

| வழக்குத் தொடுப்பவர் | : | ஆர். இராமச்சந்திரன் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | கேசவன் |
| வழக்கு விவரம் | : | இடப்பிரச்சனை |
| ஊர் | : | செம்பனூர் |
| சாதி | : | அகமுடையார் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | சித்திரை 20, 1997 |
| ஒன்றியம்/வட்டம் | : | காளையார்கோவில் |

செம்பனூர்க் கிராமத்தைச் சேர்ந்த கேசவன் என்பவர் மீது பங்காளிகள் நிலத்தை அதிகமாக எடுத்துக் கொண்டுவிட்டதாக அதே ஊரைச் சேர்ந்த ஆர்.இராமச்சந்திரன் என்பவர் செம்பனூர் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1997 ஆம் ஆண்டு சித்திரை மாதம் 20ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று பகல் 10.00 மணிக்குக் கிராமப் பஞ்யசாத்துக் கூட்டப்பட்து. பஞ்சாத்துத் தலைவரிடம் இராமச்சந்திரன் தனது பங்காளிகளில் ஒருவராகி கேசவன், தன் பங்காளிகளுக்குச் சொந்தமான நிலத்தில் அதிகமாக எடுத்துக் கொண்டுவிட்டார் என முறையிட்டார். கேசவன் அதனை மறுத்தார். பஞ்சாயத்தார் நிலத்தை நேரடியாகப் பார்வையிட்டனர். நிலம் பத்துப் பேர்களுக்குச் சொந்தமாதலால் பஞ்சாயத்தார் சர்வேயரைக் அழைத்து வந்து அளந்து சமமாகப் பிரித்துக் கொடுத்தனர்.

**பேட்டி எண்:6**

| வழக்குத் தொடுப்பவர் | : | கருப்பையா |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | பாண்டி |
| வழக்கு விவரம் | : | இடப்பிரச்சனை |
| ஊர் | : | திடியமங்கலம் |
| சாதி | : | இடையர் (கோனார்) |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | மார்ச் 10, 1998 |
| ஒன்றியம்/வட்டம் | : | இளையான்குடி |

திடியமங்கலம் கிராமத்தைச் சேர்ந்த கருப்பையா என்பவர் அதே ஊரைச் சேர்ந்த பாண்டி என்பவருக்கும் தனக்குமுள்ள இடப்பிரச்சனையைத் தீரத்து வைக்க வேண்டுமென்று திடியமங்கலம் பஞ்சாயத்துத் தலைவரிடம் 10.3.98இல் வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று இரவு 9.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்துத் தலைவர் இருவருவரையும் நன்கு தெரிந்தவர், இருவரும் பங்காளிகள், ஆதலால் பஞ்சாயத்தார் பொது இடம், பொது வீடு இரண்டையும் அளந்து சமமாகப் பகிர்ந்து கொடுத்துத் தீர்ப்பு வழங்கினர். இதன் மறுநாளே இருவரும் சண்டையிட்டுக் கொண்டனர். இதன் காரணமாக

மீண்டும் கிராமப் பஞ்சாயத்தைக் கூட்டி சீட்டுப்போட்டுக் குலுக்கி எடுத்து யாருக்கு வடக்குப் பக்கம் என்பதையும் யாருக்குத் தெற்குப் பக்கம் என்பதையும் தீர்த்து வைத்தனர். வீட்டில் வடக்கு பக்கமும் இடத்தில் மேற்குப்புறமும் கருப்பையாவிற்குக் கிடைத்தது. இருவரும் பஞ்சாயத்தார் தீர்ப்பை முழுமனதாக ஏற்றுக் கொண்டனர்.

**பேட்டி எண்:7**

| வழக்குத் தொடுப்பவர் | : | மாதவன் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | முத்தையா |
| வழக்கு விவரம் | : | இடப்பிரச்சனை |
| ஊர் | : | கட்டக்கான்பட்டி |
| சாதி | : | முத்தரையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆவணி 7, 2000 |
| ஒன்றியம்/வட்டம் | : | கல்லல் |

கட்டக்கான்பட்டி கிராமத்தைச் சேர்ந்த மாதவன் என்பவர் தன் மனைவியை இடப்பிரச்சனையில் அதே ஊரைச் சேர்ந்த முத்தையா என்பவர் அடித்து மண்டையை உடைத்துவிட்டார் என்று கட்டக்கான்பட்டிக் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 2000ஆம் ஆண்டு ஆவணி மாதம் 7ஆம் தேதி வழக்குத் தொடுத்தார். இதன் காரணமாக அன்று இரவு 10.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்துக் தலைவர் இருதரப்பினரிடமும் விசாரித்துப் பிரச்சனையைத் தெரிந்து கொண்டார். இடப்பிரச்சனையில் முத்தையாவை பெண்பிள்ளையாகிய மாதவன் மனைவி அடித்தது தவறு என்று பஞ்சாயத்தார் தீர்ப்புக் கூறினர். அவருக்கு ரூபாய் 100 அபராதம் விதித்து இனிமேல் இவ்வாறு நடந்து கொள்ளக்கூடாது என அறிவுரை கூறினர். பஞ்சாயத்தார் தீர்ப்புக்கு கட்டுப்பட்டார்.

**பேட்டி எண்:8**

| வழக்குத் தொடுப்பவர் | : | மு.மு.சின்னழகு |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | பிச்சை |
| வழக்கு விவரம் | : | இடப்பிரச்சனை |
| ஊர் | : | காளாப்பூர் |
| சாதி | : | இடையர் (கோனார்) |
| பஞ்சாயத்து அமைப்பு | : | ஊர்ப்பஞ்சாயத்து |
| நாள் | : | 18.06.2000 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிங்கம்புணரி |

பிச்சை என்பவர் தனது இடத்தை அதிகமாக எடுத்துக்கொண்டு தகராறு செய்வதாக மு.மு.சின்னழகு காளாப்பூர் பஞ்சாயத்துத் தலைவரிடம் 18.06.2000 இல் வழக்குத் தொடுத்தார். இதன் காரணமாக அன்று பகல் 10.00 மணிக்கு ஊர்ப்பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார் பட்டா, பத்திரங்களைப் படித்துப் பார்த்து யாருக்கு எவ்வுளவு இடம் என முடிவு செய்து ஒரு ஆசாரியைக் கூட்டி வந்து அளந்து இடத்தின் முன்பக்கம் மு.மு.சின்னழகுவிற்கும் பின்பக்கம் பிச்சைக்கும் கொடுத்துப் பஞ்சாயத்தார் தீர்ப்புக் கூறினர்.

**பேட்டி எண்:9**

| வழக்குத் தொடுப்பவர் | : | காலமேகம் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | பொன்னையா |
| வழக்கு விவரம் | : | இடப்பிரச்சனை |
| ஊர் | : | மருதிப்பட்டி |
| சாதி | : | மறவர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | வைகாசி 7, 1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிங்கம்புணரி |

காலமேகம் என்பவர் இடம் விற்பனையில் தன்னை ஏமாற்றிவிட்டதாகப் பொன்னையா என்பவர் மீது மருதிப்பட்டிக் கிராம பஞ்சாயத்துத் தலைவரிடம் 1999 ஆம் ஆண்டு வைகாசி மாதம 7 ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று இரவு 10.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. நிலத்தை ஒருவருக்கு ஒத்திப்பத்திரம் எழுதிக்கொடுத்து விட்டு, பின்னர் அதே

நிலத்தை மற்றொருவரிடம் கிரையம் செய்து கொடுத்து விட்டார் என்பதே அந்த வழக்கின் முக்கிய பிரச்சனையாகும். பஞ்சாயத்தார் காலமேகத்திடம் முதலில் விசாரித்தனர். பின்னர் பொன்னையாவிடம் விசாரித்தனர். அவர் காலமேகத்திடம் அந்நிலத்திற்கு ஒத்தித் தொகை ரூபாய் 3000 பெற்றுக் கொண்டு எழுதிக் கொடுத்தது உண்மை, ஆனால் இப்போது தன்னிடம் பணம் இல்லை என்றார். பஞ்சாயத்தார் ஒத்திவைத்த நிலத்தை அவருக்குத் தெரியாமல் ஏமாற்றி விட்டு மற்றவரிடம் கிரையம் செய்தது தவறு என ரூபாய் 1000 அபராதம் பொன்னையாவிற்குப் போட்டு மூன்று மாதத்திற்குள் ஒத்திப் பணம் முழுவதையும் ஒரே தவணையில் கட்ட வேண்டுமென்று தீர்ப்புக் கூறினர். இதனைப் பொன்னையா ஏற்றுக் கொண்டார்.

**பேட்டி எண்:10**

| வழக்குத் தொடுப்பவர் | : | முருகவேல் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | வில்லப்பன் |
| வழக்கு விவரம் | : | நிலப்பிரச்சனை |
| ஊர் | : | லெட்சுமிபுரம் |
| சாதி | : | இடையர் (கோனார்) |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | கார்த்திகை 9, 1996 |
| ஒன்றியம்/வட்டம் | : | இளையாண்குடி |

லெட்சுமிபுரம் கிராமத்தைச் சேர்ந்த முருகவேல் என்பவர் தன்னுடைய நிலத்தை அதே ஊரைச் சேர்ந்த வில்லப்பன் என்பவர் உழவிடாமல் அபகரித்துக் கொண்டார் எனவும், அந்நிலத்தை மீட்டுத்தர வேண்டுமெனவும் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1996 ஆம் ஆண்டு கார்த்திகை மாதம் 9ம் தேதி வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று இரவு 10.00 மணிக்கு லெட்சுமிபுரத்தில் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. முருகவேல் பஞ்சாயத்தாரிடம் தன்மாமன் வில்லப்பன் தன்னுடைய தந்தையார் காலத்திலிருந்து அந்நிலத்தை உழுது வந்தார் என்றும், அவருடைய மகளுக்கும் தனக்கும் பொருத்தம் சரியில்லாத காரணத்தால் அவர்

தன்னுடைய மகளை வேறு இடத்தில் மணம் முடித்துக் கொடுத்துவிட்டார். நான் தற்பொழுது வேறு இடத்தில் திருமணம் செய்துள்ளேன். எங்கள் திருமணத்திற்குப் பின்னரும் என் மாமன் வில்லப்பன் எங்கள் நிலத்தை விட மறுக்கின்றார் என முறையிட்டார். இருபது வருடங்களாக வில்லப்பன் அனுபவித்து வந்த நிலத்தை அளந்து 70 செண்ட் நிலத்தை வில்லப்பன் முருகவேலிடம் ஒப்படைக்க வேண்டுமெனத் தீர்ப்புக் கூறினர். பஞ்சாயத்தார் தீர்ப்பினை வில்லப்பன் ஏற்றுக் கொண்டார்.

**பேட்டி எண்:11**

| வழக்குத் தொடுப்பவர் | : | மணி |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | ஞானகுரு |
| வழக்கு விவரம் | : | நிலப்பிரச்சனை |
| ஊர் | : | லாடனேந்தல் |
| சாதி | : | அகமுடையார் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆனி5, 2000 |
| ஒன்றியம்/வட்டம் | : | திருப்புவனம் |

லாடனேந்தல் கிராமத்தைச் சேர்ந்த மணி என்பவர் தன் அண்ணன் ஞானகுரு அதிகமாக நிலத்தை எடுத்துக் கொண்டார் எனவும், சரியாகப் பாகப்பிரிவினை செய்யவேண்டுமெனவும் ஆனிமாதம் 5ம் தேதி (2000 ஆம் ஆண்டு) வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று பகல் 11.00 மணிக்கு லாடனேந்தல் நாட்டார் பஞ்சாயத்துத் தலைவர் முன்னிலையில் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார் நிலப்பட்டாக்களை வைத்துக் கணக்கு பார்த்தனர். பின்னர் நிலங்கள் அனைத்தையும் சரியாக அளந்து ஆளுக்குப் பாதியாக பாகப்பிரிவினை செய்து குச்சியை ஊண்டித் தீர்த்து வைத்தனர். இன்று அவர்கள் சமாதானமாக விவசாயம் செய்து வருகின்றனர்.

**பேட்டி எண்:12**

| வழக்குத் தொடுப்பவர் | : | கட்டை அம்பலம் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | சுப்பிரமணியன் |
| வழக்கு விவரம் | : | நிலப்பிரச்சனை |
| ஊர் | : | வேலூர் |
| சாதி | : | அகமுடையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | ஊர்ப்பஞ்சாயத்து |
| நாள் | : | 08.10.1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | மானாமதுரை |

வேலூர் கிராமத்தைச் சேர்ந்த அருச்சுணன் என்பவர் தன் நிலத்தை சுப்பிரமணியன் என்பருக்குக் கிரையம் செய்து கொடுத்தார். அது செல்லாது என அருச்சுணன் மகன் கட்டை அம்பலம் வேலூர் பஞ்சாயத்துக் தலைவரிடம் 08.10.1999 இல் வழக்குத் தொடுத்தார். இதன் காரணமாக அன்று 9.00 மணிக்கு வேலூரில் ஊர்ப்பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார் விசாரணை நடந்தது. அருச்சுணன் மகள் இருளாயி அந்த நிலம் தனக்குத்தான் சொந்தம் என்றும், அந்நிலத்தை கிரையம் முடித்தது செல்லாது என்றும் வாதிட்டாள். அவர்கள் நீதிமன்றத்தில் முறையீடு செய்தனர். நீதிமன்றத்தில் அருச்சுணன் கிரையம் எழுதிக் கொடுத்தது செல்லுபடியாகும் என தீர்ப்புக் கூறினர். இதற்கு இடையில் நிலத்தை கிரையம் செய்து கொடுத்த அருச்சுணன் இறந்து விடுகின்றார். அருச்சுணன் மகன் கட்டை அம்பலம் அந்நிலம் தன் அக்கா இருளாயிக்குத்தான் சொந்தம் என்றும், அது 'பெண்அடிகாணி' என்றும் வாதிட்டார். அதனைப் பஞ்சாயத்தார் ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டனர். பின்னர் இருளாயி மகன் பல வருடங்களாக நாங்கள் விவசாயம் செய்யாமல் இருந்ததால் அந்நிலத்திலுள்ள கருவேலமரங்களை நாங்கள் வெட்டிக் கொள்கின்றோம் எனப் பஞ்சாயத்தாரிடம் வேண்டிக் கொண்டான். இதனைப் பஞ்சாயத்தார் ஏற்றுக்கொண்டனர். இறுதியாகப் பஞ்சாயத்தார் இருளாயி மகன் கருவேல மரங்களை வெட்டிக் கொண்ட பின்னர் சுப்பிரமணியன் நிலத்தை உழுது கொள்ளலாம் எனத் தீர்ப்புக் கூறினர்.

**பேட்டி எண்:13**

| வழக்குத் தொடுப்பவர் | : | சமயத்துரை |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | உ. மலைச்சாமி |
| வழக்கு விவரம் | : | நிலத்தகராறு |
| ஊர் | : | வி.புதுக்குளம் |
| சாதி | : | அகமுடையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | 25.3.1998 |
| ஒன்றியம்/வட்டம் | : | மானாமதுரை |

வி.புதுக்குளம் கிராமத்தைச் சேர்ந்த சமயத்துரை என்பவர் தான் ஒத்திக்கு வாங்கிய நிலத்தைத் தனக்கே கிரையத்திற்குத் தரவேண்டுமென 25.3.1998 இல் வழக்குத் தொடுத்தார். இதன் காரணமாக அன்று இரவு 9.00மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. முதலில் சமயத்துரையிடம் பஞ்சாயத்துத் தலைவர் விசாரித்தார். அவர் பஞ்சாயத்துத் தலைவரிடம் நிலத்தை ஐந்துவருடமாக நான் ஒத்திக்குப் பேசி உழுதுவருகின்றேன். அந்நிலத்தை எனக்குக் கிரையம் கொடுக்கவிடாமல் தடுத்து என் ஒத்தி முடிவதற்குள் மலைச்சாமி என்பவர் ரூபாய் 60,000 கொடுத்து விலைக்கு வாங்கி விட்டார். எனக்கு நியாயம் வேண்டுமென சமயத்துரை பஞ்சாயத்துத் தலைவரிடம் தெரிவித்தார். மலைச்சாமியைப் பஞ்சாயத்தார் விசாரித்த போது மூன்றுவருட ஒத்தி முடிந்து விட்டது என்ற உண்மை புலனாகியது. இருதரப்பு வாதங்களையும் கேட்ட பஞ்சாயத்துத் தலைவர், ஒத்தி வாங்கியவருக்கே நிலத்தைக் கிரையம் கொடுக்க வேண்டுமென்ற அவசியம் இல்லை, ஆதலால் சமயத்துரை ஒத்திப் பணத்தை வாங்கிக் கொண்டு நிலத்தை விட்டு வெளியேற வேண்டுமென தீர்ப்புக் கூறினர்.

**பேட்டி எண்:14**

| வழக்குத் தொடுப்பவர் | : | பெரியண்ணன் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | போஸ் |
| வழக்கு விவரம் | : | நிலப்பிரச்சனை |
| ஊர் | : | வையாபுரிப்பட்டி |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | வையாபுரிப்பட்டிக்கு உட்பட்ட நான்கு ஊர்ப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆடி 15, 1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிங்கம்புணரி |

வையாபுரிப்பட்டியைச் சேர்ந்த போஸ் என்பவர் மீது தன்னுடைய நிலத்தில் ஆக்கிரமிப்புச் செய்திருப்பதாக அதே ஊரைச் சேர்ந்த பெரியண்ணன் என்பவர் வையாபுரிப்பட்டிக் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1999 ஆம் ஆண்டு ஆடிமாதம் 15ம் தேதி வழக்குத் தொடுத்தார். இதன் காரணமாக அன்று காலை 10.00 மணிக்கு வையாபுரிப்பட்டியைச் சேர்ந்த நான்கு ஊர்ப் பஞ்சாயத்துத் தலைவர்கள் கலந்து கொண்ட கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. வழக்கினை விசாரித்த பஞ்சாயத்தார் நிலத்தை நேரடியாகப் பார்வையிட்டனர். நிலம் பல வருடங்களாக விவசாயம் செய்யாமல் இருந்தது. பக்கத்து நிலத்துக்குச் சொந்தக்காரரான போஸ் பெரியண்ணன் நிலத்தில் வரிசையாக கல்லுக்கால்களை ஊண்டியிருந்தார். பஞ்சாயத்தார், போஸ் உடனே அந்த கல்லுக்கால்களைப் பிடுங்கி அவரது நிலத்திற்குள் ஊண்ட வேண்டுமென்றும் தவறினால் பஞ்சாயத்தார் பிடுங்கி அபராதம் விதிக்கப்படுமென்றும் தீர்ப்புக் கூறினர். போஸ் ஒரு வாரத்திற்குள் அந்தக் கல்லுக்கால்களை அகற்றிவிட்டார்.

**பேட்டி எண்:15**

| வழக்குத் தொடுப்பவர் | : | முத்து |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | நான்கு சகோதரர்கள் |
| வழக்கு விவரம் | : | சொத்துப்பிரச்சனை |
| ஊர் | : | கொட்டக்குடி |
| சாதி | : | இடையர் (கோனார்) |
| பஞ்சாயத்து அமைப்பு | : | ஊர்ப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆடி 10, 1989 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிவகங்கை |

கொட்டக்குடிக் கிராமத்தைச் சேர்ந்த முத்தமகன் முத்து என்பவர் தன்னுடைய தந்தையின் சொத்தில் தனக்கு பங்கு உண்டு என்று கொட்டக்குடிப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1989 ஆம் ஆண்டு ஆடிமாதம் 10ம் தேதி வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று இரவு 10.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. வழக்கினை விசாரித்த பஞ்சாயத்தாருக்குப் பதினைந்து வருடங்களுக்கு முன்னர் முத்துவின் தந்தை உயிருடன் இருக்கும் போதே பாகப்பிரிவினை செய்து எழுதிவைத்துள்ள விவரம் தெரிய வந்தது. பாகப்பிரிவினைப் பத்திரத்தைப் பஞ்சாயத்தார் படித்துப் பார்த்தனர். அப்பத்திரத்தில் மூத்தவன் படித்துவிட்டு அரசாங்க வேலை பார்க்கின்றான். அவன் ஒரு வீட்டையும் பொது நிலத்தை அவன் தங்கையையும் சேர்த்து ஆறுபங்காகப் பிரித்து ஒரு பங்கினை எடுத்துக் கொள்ளவும். பின்னர் சம்பாதித்த சொத்துக்கள் அனைத்தும் அடுத்த நான்கு மகன்களும் ஆடுமேய்த்து அவர்களால் சம்பாதிக்கப்பட்டவை. அந்தச் சொத்துக்களில் மூத்தவனுக்குப் பங்கில்லை, என்று எழுதப்பட்டிருந்தது. அந்த பத்திரத்தின்படியே பஞ்சாயத்தார் தீர்ப்பைக் கூறினர்.

**பேட்டி எண்:16**

| வழக்குத் தொடுப்பவர் | : | சுந்தரம், கனகு |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | சுப்பன் மகள் சாரதா |
| வழக்கு விவரம் | : | சொத்துத் தகராறு |
| ஊர் | : | கொட்டக்குடி |
| சாதி | : | பறையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப் பஞ்சாயத்து |
| நாள் | : | ஆனி 20, 1990 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிவகங்கை |

கொட்டக்குடிக் கிராமத்தைச் சேர்ந்த சுந்தரம், கனகு ஆகிய இருவரும் அவர்களது தம்பி மகன் சுப்பன் இறந்துவிட்டதால் ஆண்வாரிசு இல்லாத எங்கள் பெரியப்பாவின் சொத்துக்கள் அனைத்தும் எங்களுக்குத்தான் சொந்தம் என்று கொட்டக்குடி கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1990 ஆம் ஆண்டு ஆனி மாதம் 20ம்தேதி வழக்குத் தொடர்ந்தனர். வழக்கினை விசாரித்த பஞ்சாயத்துத் தலைவருக்குச் சுப்பன் மரணத்திற்கு முன்னர் நடந்த சம்பவங்கள் அனைத்தும் தெரியும். இதன் காரணமாக அன்று இரவு 9.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார் சுப்பன் அண்ணன் மகன்களான சுந்தரம், கனகு ஆகியோரை விசாரித்தனர். அவர்கள் தங்கள் பெரியப்பாவிற்கு ஆண்வாரிசு இல்லாததால் அவர் இறந்துவிட்ட பின்னர் அவருடைய சொத்துக்கள் அனைத்தும் எங்களுக்கே சொந்தமென்று பஞ்சாயத்தாரிடம் கூறினர். அதனைக் கேட்ட பஞ்சாத்துத் தலைவர் சுப்பன் இறப்பதற்கு முன்னர் என்னிடம் தன் சொத்துக்கள் அனைத்தையும் அவருடைய ஒரே மகளான சாரதாவிற்குப் பதிவு செய்து கொடுக்கும்படி சொன்னார். அத்துடன் உங்களைப் பற்றி மிகவும் மோசமானவர்கள் என்றும் கூறினார் என்றார். நானே பத்திர அலுவலகத்திற்கு அவரை ஆட்டோவில் அழைத்துச் சென்று அவர் சொத்துக்கள் அனைத்தையும் சாரதா பெயரில் பதிவு செய்து கொடுத்தேன். பதிவு செய்த மறுநாள் அவர் இறந்துவிட்டார் என்றார். வாதிகள் பஞ்சாயத்துத் தலைவரிடம் அது தவறு என்றும் செல்லாது என்றும் வாதிட்டனார். உடனே பஞ்சாயத்தார் பெண்ணுக்கும் சொத்துரிமையுண்டு ஆதலால் அவருடைய சொத்துக்கள் அனைத்தும் அவருடைய ஒரே மகள் சாரதாவிற்கே சொந்தம் எனத் தீர்ப்புக் கூறினர்.

**பேட்டி எண்:17**

| வழக்குத் தொடுப்பவர் | : | ஜெயக்குமார் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | மாரி |
| வழக்கு விவரம் | : | சொத்துப்பிரச்சனை |
| ஊர் | : | வேலூர் |
| சாதி | : | அகமுடையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | ஊர்ப்பஞ்சாயத்து |
| நாள் | : | 08.10.1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | மானாமதுரை |

மானம்பாக்கிக் கிராமத்தைச் சேர்ந்த ஜெயக்குமார், மாரி ஆகிய இருவரும் அண்ணன் தம்பியர். அவர்கள் இருவருக்கும் சொத்தைப் பாகப்பிரிவினை செய்வதில் பிரச்சனை ஏற்பட்டது. இதன் காரணமாக மானம்பாக்கிப் பஞ்சாயத்துத் தலைவரிடம் ஜெயக்குமார் என்பவர் 10.05.1995 இல் வழக்குத் தொடர்ந்தார். அதன் காரணமாக அன்று பகல் 10.00 மணிக்கு ஊர்ப்பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார் நிலங்களைப் பாகப்பிரிவினை செய்யும் போது கோயிலில் சீட்டுக் குலுக்கிப் போட்டு எடுத்தனர். பின்னர் அவர்கள் வீடு பாகப் பிரிவினை செய்யப்பட்டது. வீட்டில் மாரி என்பவர் தனக்கு மேற்குப் பக்கம் வேண்டுமென்றார். ஜெயக்குமாரும் தனக்குத் தான் மேற்குப் பக்கம் வேண்டுமென்றார். இறுதியில் மூத்தவன் ஜெயக்குமாருக்கு மேற்குப் பக்கத்தையும் இளையவன் மாரிக்குக் கிழக்குப் பக்கத்தையும் பஞ்சாயத்தார் பிரித்துக் கொடுத்தனர். அவர்கள் பஞ்சாயத்தார் தீர்ப்பை ஏற்றுக் கொண்டனர்.

**பேட்டி எண்:18**

| வழக்குத் தொடுப்பவர் | : | பஞ்சவர்ணம் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | ஆண்டிக்காளை |
| வழக்கு விவரம் | : | சொத்துப்பிரச்சனை |
| ஊர் | : | கள்ளம்பட்டி |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப் பஞ்சாயத்து |
| நாள் | : | வைகாசி 10, 1985 |
| ஒன்றியம்/வட்டம் | : | கல்லல் |

கள்ளம்பட்டிக் கிராமத்தைச் சேர்ந்த பஞ்சவர்ணம் என்பவள் தன் கணவன், தன்னுடைய சொத்தில் பாதியைத் தருவதாகக் கூறி என்னை இரண்டாந் தரமாகத் திருமணம் செய்து கொண்டுவந்தார். தற்பொழுது தரமறுக்கின்றார் என ஆண்டிக்காளை மீது கள்ளம்பட்டிப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1995 ஆம் ஆண்டு வைகாசி மாதம் 10-ம் தேதி வழக்குத் தொடர்ந்தாள். இதன் காரணமாக அன்று பகல் 10.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தில் மூத்ததாரத்தின் நான்கு பெண்களும் தங்களுக்குத்தான் சொத்துக்கள் அனைத்தும் சொந்தமென்றும், தங்களுடைய தந்தையின் இரண்டாம் தாரத்திற்குச் சொத்து இல்லையென்றும் கூறினர். பின்னர் பஞ்சாயத்தார் கலந்து பேசி முடிவெடுத்தனர். ஆண்டிக்காளை சொத்தில் பங்குதருவதாகக் கூறியே பஞ்சவர்ணத்தை இரண்டாம் தாரமாக மணந்து கொண்டார் என்பதால், அவருடைய நான்கு பெண்களையும் இரண்டாம்தாரத்தையும் சேர்த்து ஐந்து பாகங்களாகப் பிரித்து நிலம், வீடு உள்ளிட்ட அனைத்தையும் பாகப்பிரிவினை செய்து கொடுத்தனர். இதனை ஆண்டிக்காளையின் நான்கு மகள்களாகிய அங்கம்மாள், மாரியாயி, சேம்பாயி, பிச்சையம்மாள் ஆகிய நால்வரும் ஒத்துக்கொண்டனர். பிள்ளையில்லாத இரண்டாம் தாரமாகிய பஞ்சவர்ணமும் ஏற்றுக் கொண்டாள்.

**பேட்டி எண்:19**

| வழக்குத் தொடுப்பவர் | : | அடக்கி |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | வள்ளி |
| வழக்கு விவரம் | : | பாகப்பிரிவினை |
| ஊர் | : | கொட்டக்குடி |
| சாதி | : | பறையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப் பஞ்சாயத்து |
| நாள் | : | ஐப்பசி 10, 1990 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிவகங்கை |

கொட்டக்குடிக் கிராமத்தைச் சேர்ந்த அடக்கி என்பவள் தன் கணவன் இறந்ததும் அவர் சொத்துக்கள் அனைத்தும் தனக்கே சொந்தமென்றும் 1990 ஆம்

ஆண்டு ஐப்பசி மாதம் 10ம் தேதி வழக்குத் தொடர்ந்தாள். இதன் காரணமாக அன்று இரவு 9.00 மணிக்குக் கொட்டக்குடியில் கிராமப்பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. மூத்ததாரத்து மகள் வள்ளிக்கும் இளையதாரம் அடக்கிக்கும் ஏற்பட்ட சொத்துப்பிரச்சனையில் பஞ்சாயத்துதலைவர் இருவரிடமும் விசாரித்தார். பஞ்சாயத்தார் பலர் மூத்ததாரத்து மகள் வள்ளிக்குத் தான் சொத்து சொந்தம் என்றனர். கருப்பனின் இளையதாரமாகிய அடக்கி ஏற்கனவே திருமணமாகி ஒரு பெண் குழந்தையுடன் இருந்தாள். கருப்பன் அக்குழந்தையுடன் அடக்கியைத் திருமணம் செய்யும் போது அடக்கி அவரிடம் தன் பெண் குழந்தைக்கு ஆதரவு வேண்டுமெனக் கேட்டார். அப்பொழுது கருப்பன் தன் சொத்தில் பங்கு தருவதாக ஒத்துக் கொண்டுதான் அடக்கியைத் திருமணம் செய்து கொண்டார். இந்த விவரம் அனைத்தும் பஞ்சாயத்துத் தலைவருக்கு தெரியும் என்றாள் அடக்கி. இதனைப் பஞ்சாயத்துத் தலைவர் ஒத்துக்கொண்டு சொத்தை இரண்டாகப் பிரித்து அடக்கி மகள், வள்ளி ஆகிய இருவர் பெயரிலும் எழுதி அதில் இருபதுபேர்களிடம் கையெழுத்தும் வாங்கிக் கொடுத்தார். பஞ்சாயத்தார் தீர்ப்பை இருவரும் ஏற்றுக் கொண்டனர்.

**பேட்டி எண்:20**

| | | |
|---|---|---|
| வழக்குத் தொடுப்பவர் | : | எம்.சச்சிதானந்தம், நாராயண பிள்ளை |
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | கோட்டைச்சாமி |
| வழக்கு விவரம் | : | பாகப்பிரிவினை |
| ஊர் | : | திருப்பாச்சேத்தி |
| சாதி | : | வெள்ளாளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆடி, 14, 1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | திருப்புவனம் |

திருப்பாச்சேத்தி கிராமத்தைச் சேர்ந்த எம்.சச்சிதானந்தம் பிள்ளையும் நாராயண பிள்ளையும் நிலம், வீடு அனைத்திலும் அதிகமாக எடுத்துக் கொண்டு விட்டார் கோட்டைச்சாமி எனவும், சரியான முறையில் சமமாகப் பாகப்பிரிவினை

செய்து வைக்க வேண்டுமெனவும் திருப்பாச்சேத்தி பஞ்சாயத்துத் தலைவரிடம் 1999 ஆம் ஆண்டு ஆடிமாதம் 14-ம் தேதி வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று இரவு 9.00 மணிக்குத் திருப்பாச்சேத்தியில் கிராமப்பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. அண்ணன் தம்பியர் மூன்று பேர்களும் பஞ்சாயத்திற்கு வந்திருந்தனர். பஞ்சாயத்தார் வீட்டைச் சரியாக அளந்து மூத்தவருக்கு வீட்டின் வடக்குப்பாகத்தையும், நடுப்பாகத்தை இரண்டாவது நபருக்கும் தெற்குப் பாகத்தைக் கோட்டைச்சாமிக்கும் பாகப்பிரிவினை செய்து தீர்ப்புக் கூறினர். அதே போல நிலத்தையும் சமமாக அளந்த மூன்று பங்கு போட்டு பாகப்பிரிவினை செய்து கொடுத்தனர். அதன் பின்னரும் இரண்டு வருடங்களாக அடிக்கடி சண்டை போட்டுக் கொண்டிருந்தனர். ஆனால் தற்பொழுது சமாதானமாக இருக்கின்றனர்.

**பேட்டி எண்:21**

| வழக்குத் தொடுப்பவர் | : | க. பெரிய அடைக்கலம் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | சி. பாண்டி |
| வழக்கு விவரம் | : | பாகப்பிரிவினை செய்வதில் பிரச்சனை |
| ஊர் | : | வாவியரனேந்தல் |
| சாதி | : | அகமுடையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆடி 21, 1998 |
| ஒன்றியம்/வட்டம் | : | திருப்புவனம் |

க.பெரியகருப்பன் என்பவர் தனக்கும் சி.பாண்டிக்கும் இருபது வருடங்களாக உள்ள தாவாவைத் தீர்த்து நிலத்தைச் சமமாகப் பாகப்பிரிவினை செய்ய வேண்டுமென்று வாவியரனேந்தல் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1998 ஆம் ஆண்டு ஆடிமாதம் 21ம் தேதி வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று இரவு 10.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டபட்டது. க.பெரிய அடைக்கலம் உள்ளிட்ட பிரச்சனையில் சம்மந்தப்பட்ட நான்கு பேர்களையும் பஞ்சாயத்துத் தலைவர் விசாரித்து நிலத்தை அவர்களுக்கு நான்கு பாகங்களாகச் சரிசமமாகப் பிரித்துக் கொடுத்தார். இருபது வருடமாகத் தீராத பிரச்சனையைப் பஞ்சாயத்துத் தலைவர் சாதாரணமாகப் பேசித்தீர்த்துத் தீர்ப்புக் கூறினர்.

**பேட்டி எண்:22**

| | | |
|---|---|---|
| வழக்குத் தொடுப்பவர் | : | துரைராசு, அம்மாப்பிள்ளை |
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | அவர்களது மூன்று மகன்கள் |
| வழக்கு விவரம் | : | பாகப்பிரிவினை |
| ஊர் | : | பச்சேரி |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | 16.03.1998 |
| ஒன்றியம்/வட்டம் | : | மானாமதுரை |

பச்சேரிக் கிராமத்தைச் சேர்ந்த துரைராசு, அம்மாப்பிள்ளை ஆகியோர்கள் தம் மூன்று மகன்களும் தாங்கள் வைத்திருந்த கடனைக் கட்டாமல் 4½ ஏக்கர் நிலத்தையும் எடுத்துக் கொண்டார்கள் என பச்சேரி பஞ்சாயத்துத் தலைவரிடம் 16.03.1998 இல் வழக்குத் தொடர்ந்தனர். இதன் காரணமாக அன்று இரவு 9.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்துத் தலைவர் துரைராசு, அம்மாப்பிள்ளை ஆகிய இருவரையும் விசாரித்தார். அவர்கள் ரூ.55.000 வட்டிக்கடனும் ரூபாய் 5,000 வங்கிக்கடனும் இருக்கிறது என்றும் தம் மூன்று மகன்களும் இவற்றைக் கட்டமுடியாது எனச் சொல்லி விட்டு தங்களது நிலம், மோட்டார் ஆகியனவற்றை அனுபவிக்கிறார்கள் எனவும் பஞ்சாயத்துத் தலைவரிடம் விளக்கினர். இதனைக் கேட்ட தலைவர் அவர்களது மூன்று மகன்களிடமும் விசாரித்தார். அவர்கள் யாரும் கடனைக் கட்ட ஒத்துக் கொள்ளவில்லை. பின்னர் பஞ்சாயத்துத் தலைவர் ஒரு ஏக்கர் நிலத்தை மூன்று பேரில் ஒருவர் எடுத்துக் கொண்டு ரூபாய் 60,000 கொடுங்கள் எனக் கேட்டார். அவர்கள் மறுத்துவிட்டனர். பின்னர் கிராமத்தார் யாராவது எடுத்துக் கொள்கிறீர்களா எனக் கேட்டார். அவர்கள் யாரும் முன்வரவில்லை. பின்னர் பஞ்சாயத்துத் தலைவரே ரூபாய் 60,000த்தைக் கொடுத்து நிலத்தை எழுதிவாங்கிக் கொண்டு கடனை அடைத்துவிட்டு, மீதமுள்ள நிலத்தில் ஒரு ஏக்கரும் மோட்டார் கிணறும் அவர்களது பெற்றோர்கள் உயிருடன் இருக்கும் வரை அவர்களுக்குச் சொந்தம் எனவும், எஞ்சிய நிலத்தை மூன்று மகன்களுக்கும் சரிசமமாகப் பாகப்பிரிவினை செய்து கொடுத்தும் தீர்ப்புக் கூறினார்.

**பேட்டி எண்:23**

| வழக்குத் தொடுப்பவர் | : | லெட்சுமியின் மகன் (முதல் தாரத்து மகன்) |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | மருதி (இரண்டாம் தாரம்) |
| வழக்கு விவரம் | : | பாகப்பிரிவினை |
| ஊர் | : | சிறுகூடல்பட்டி |
| சாதி | : | செட்டியார் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | மாசி 17, 1990 |
| ஒன்றியம்/வட்டம் | : | திருப்பத்தூர். |

வீரப்பன் என்பவருக்கு இரண்டு மனைவிகள், முதல் தாரம் லெட்சுமி அவளுக்கு ஒரே மகன், இரண்டாவது தாரம் மருதி அவள் நான்கு மகன்களுக்கும், இரண்டு பெண்களுக்கும் தாய், இந்த இருவருக்கும் சொத்தைப் பிரிப்பதில் தகராறு ஏற்பட்டது. இதன் காரணமாக லெட்சுமியின் மகன் சிறுகூடல்பட்டிப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1990 ஆம் ஆண்டு மாசி மாதம் 17ம் தேதி வழக்குத் தொடர்ந்தான். அன்று பகல் 10.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார் லெட்சுமி ஐந்தில் ஒரு பங்காகச் சொத்தை எடுத்துக் கொள்ளலாம் எனக் கூறினர். அதனை லெட்சுமியின் மகன் ஏற்றுக் கொள்ள முடியாது என்று, தனது தாய்க்கு ஒரு பங்கும் மருதிக்கு ஒரு பங்கும் எனப் பிரித்தாக வேண்டுமென்றும் பஞ்சாயத்தாரிடம் கூறினான். அதன்படி வீரப்பனின் சொத்து, வீடு ஆகிய அனைத்தும் இரண்டாகப் பிரிக்கப்பட்டுப் பஞ்சாயத்தார் முன்னிலையில் பத்திரம் எழுதிக் கையொப்பமிடப்பட்டது.

**பேட்டி எண்:24**

| வழக்குத் தொடுப்பவர் | : | வெள்ளைச்சாமி |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | இராமையா |
| வழக்கு விவரம் | : | பாகப்பிரிவினை சிக்கல் |
| ஊர் | : | யுவற்றியூர் |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆடி 25, 1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | கல்லல் |

வெற்றியூர் கிராமத்தைச் சேர்ந்த மூத்த மகன் வெள்ளைச்சாமி தனிக்குடித்தனம் நடத்தி வந்தார். அவருடைய தம்பி இராமையா என்பவர் தன்னுடைய அண்ணன் சொத்துக்களையும் சேர்த்துத் தன் தந்தையுடன் அனுபவித்து வந்தார். இதனால் வெள்ளைச்சாமி வெற்றியூர் பஞ்சாயத்துத் தலைவரிடம் உடனே பாகப்பிரிவினை செய்ய வேண்டுமென 1999 ஆம் ஆண்டு ஆடிமாதம் 25ம் தேதி வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று இரவு 10.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டபட்டது. பஞ்சாயத்தார் இரு தரப்பினரிடமும் விசாரித்தனர். பின்னர் பஞ்சாயத்தார் கலந்து பேசி மறு நாள் காலையில் வீடு, நிலம், பாத்திரங்கள் ஆகிய அனைத்தையும் இரண்டு பங்காகப் பாகப்பிரிவினை செய்து வைத்து இனிமேல் ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக் கொள்ளக்கூடாது எனத் தீர்ப்புக் கூறினர்.

**பேட்டி எண்:25**

| வழக்குத் தொடுப்பவர் | : | எஸ்.பி. ஆதப்பன் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | எஸ்.பி.வெள்ளைச்சாமி |
| வழக்கு விவரம் | : | பாகப்பிரிவினைப் பிரச்சனை |
| ஊர் | : | யுவனியாத்தூர் |
| சாதி | : | இடையர் (கோனார்) |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | பங்குனி,28, 2000 |
| ஒன்றியம்/வட்டம் | : | கல்லல் |

வெற்றியூர் கிராமத்தைச் சேர்ந்த எஸ்.பி.ஆதப்பன், எஸ்.பி.வெள்ளைச்சாமி ஆகிய இருவரும் அண்ணன் தம்பியர். இவர்களில் அண்ணனாகிய எஸ்.பி.ஆதப்பன் தனது சொத்துக்களைப் பாகப்பிரிவனை செய்து கொடுக்க வேண்டுமென வெற்றியூர் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 2000 ஆம் ஆண்டு பங்குனி மாதம் 28ம் தேதி வழக்குத் தொடுத்தார். இதன் காரணமாக அன்று பகல் 10.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூடப்பட்டது. பாகப்பிரிவினை செய்து வைக்குமாறு ஆதப்பன் பலமுறை அடிதடியில் ஈடுபட்டது பஞ்சாயத்தாருக்குத் தெரியவந்ததால், ஆதப்பனின்

தம்பி, தந்தை ஆகி அனைவரையும் வைத்துக் கொண்டு பாகப்பிரிவினை செய்வது பற்றிப் பேசி முடித்தனர். பஞ்சாயத்தார் தீர்ப்பின்படி அனைத்துச் சொத்துக்களும் இரண்டு பங்காகப் பிரிக்கப்பட்டது. பின்னர் சீட்டுப் போட்டுக் குலுக்கி நிலம், வீடு ஆகியனவற்றை அண்ணன் தம்பியர் எடுத்துக் கொண்டனர்.

**பேட்டி எண்:26**

| | | |
|---|---|---|
| வழக்குத் தொடுப்பவர் | : | காந்தி, ரெங்கன் |
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | சங்கரலிங்கம் |
| வழக்கு விவரம் | : | வீட்டுமனைப் பிரச்சனை |
| ஊர் | : | திருப்பாச்சேத்தி |
| சாதி | : | பள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமபஞ்சாயத்து |
| நாள் | : | ஆடி 10,1997 |
| ஒன்றியம்/வட்டம் | : | திருப்புவனம் |

திருப்பாச்சேத்தி கிராமத்தைச் சேர்ந்த காந்தி, ரெங்கன், ஆகியோர் தங்கள் வீட்டுமனையில் வீடுகட்ட விடாமல் அதே ஊரைச் சேர்ந்த சங்கரலிங்கம் என்பவர் தடுப்பதாக திருப்பாச்சேத்திப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1997 ஆம் ஆண்டு ஆடிமாதம் 10ம் தேதி வழக்குத் தொடர்ந்தனர். இதன் காரணமாக அன்று இரவு 10.00 மணிக்குப் பஞ்சாயத்துக் கூட்டபட்டது. வீட்டுமனைப் பிரச்சனையில் பலமுறை அவர்களுக்குள் அடிதடி ஏற்பட்டதால் பலமுறை பெரியவர்கள் கண்டித்தனர். சங்கரலிங்கம் அடிக்கடி தாவா செய்து மிரட்டுகின்றார் என்ற விவரத்தைப் பஞ்சாயத்துத் தலைவரிடம் தெரிவித்தனர். பஞ்சாயத்துத் தலைவர் சங்கரலிங்கத்தை விசாரித்தார். பின்னர் பஞ்சாயத்தார் வீட்டுமனை அமைந்துள்ள இடத்தைப் பார்வையிட்டு பிரித்துக் குச்சி அடித்து இனிமேல் சண்டை, அடிதடியில் இறங்கினால் கிராமப் பஞ்சாயத்தார் கண்டிப்பான முறையில் மேல் நடவடிக்கை எடுப்பார்கள் எனச் சங்கரலிங்கத்தை எச்சரித்து இருவரிடமும் எழுதி வாங்கிக் கொண்டு அந்தவீட்டுமனைப் பிரச்சனையைத் தீர்த்து வைத்தனர்.

**பேட்டி எண்:27**

| வழக்குத் தொடுப்பவர் | : | தனசேகரன் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | எஸ்.சகாதேவன், ராமு |
| வழக்கு விவரம் | : | வீட்டுமனைத்தாவா |
| ஊர் | : | திருப்பாச்சேத்தி |
| சாதி | : | அகமுடையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆடி 20, 1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | திருப்புவனம் |

திருப்பாச்சேத்தியைச் சேர்ந்த எஸ்.சகாதேவன், ராமு ஆகிய இருவரும் வீடு கட்ட வானம் தோண்டிய போது, அதே ஊரைச் சேர்ந்த பக்கத்து இடத்துக்காரரான தனசேகரன் என்பவர் தாவா செய்து நிறுத்திவிட்டார். இருபத்தைந்து வருடங்களுக்குப் பின்னர் இவ்வழக்கினைத் தீர்த்து வைக்க வேண்டுமென எஸ். சகாதேவனும் ராமுவும் திருப்பாச்சேத்தி பஞ்சாயத்துத் தலைவரிடம் 1999ஆம் ஆண்டு ஆடி மாதம் 20ம் தேதி வழக்குத் தொடர்ந்தனர். இதன் காரணமாக திருப்பாச்சேத்தியில் அன்று இரவு 10.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்துத் தலைவர் எஸ். சகாதேவன், ராமு ஆகியோரிடம் விசாரித்தார். பின்னர் குற்றம் சாட்டப்பட்ட தனசேகரனை விசாரித்தார். தனசேகரன் பஞ்சாயத்தாரிடம் தனக்குச் சொந்தமான இடத்திலும் சேர்த்து வீடு கட்ட முயற்சிக்கின்றார்கள் என முறையிட்டார். பஞ்சாயத்தார் மறுநாள் இடத்தை நேரில் பார்வையிட்டு இருவரது பட்டாக்களையும் வாங்கிச் சரிபார்த்து சமமாக அளந்து இடையில் பாதை போட்டு இனி இருதரப்பினரும் வீடுகட்டிக் கொள்ளலாம் எனத் தீர்ப்புக் கூறினர். இன்று அவர்கள் வீடு கட்டிப் பிரச்சனையில்லாமல் வாழ்ந்து வருகின்றனர்.

**பேட்டி எண்:28**

| வழக்குத் தொடுப்பவர் | : | இரணியூர்க் கிராமத்தார் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | இராமகிருஷ்ணன் |
| வழக்கு விவரம் | : | வீட்டுப் பிரச்சனை |
| ஊர் | : | இரணியூர் |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஐப்பசி 13, 1996 |
| ஒன்றியம்/வட்டம் | : | திருப்பத்தூர் |

இரணியூர்க் கிராமத்தைச் சேர்ந்த இராமகிருஷ்ணன் என்பவர் கிராமத்திற்குச் சொந்தமான பொது இடத்தில் வீடுகட்டினர். இதனைக் கிராமத்தின் பெரியவர்கள் தட்டிக் கேட்டும் அவர் கேட்கவில்லை. அதனால் அவரைக் கிராமத்தார் ஊரை விட்டு ஒதுக்கி வைத்து விட்டனர். 1996 இல் இராமகிருஷ்ணன் மகள் திருமணம் நடந்தது. அந்தத் திருமணத்தில் கிராமத்தார் யாரும் கலந்து கொள்ளக்கூடாது என முடிவெடுத்தனர். அதன் காரணமாக 1996 ஐப்பசி 13ம் தேதி இல் கிராமப்பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. இராமகிருஷ்ணன் பஞ்சாயத்தாரிடம் தான் ஊர் இடத்தில் மூன்று அடியை ஆக்கிரமித்து வீடு கட்டியிருப்பதாகவும், தன்னை மன்னித்து அனைவரும் தன் மகள் திருமணத்திற்கு வரவேண்டுமெனவும் பஞ்சாயத்தார் முன்னிலையில் கும்பிட்டு விழுந்தார். பின்னர் பஞ்சாயத்தார் கலந்து பேசி அவருக்கு ரூபாய் 1001 அபராதம் விதித்தினர். பின்னர் கிராமத்தார் அனைவரும் அவரது மகள் திருமணத்தில் கலந்து கொள்ளலாம் எனத் தீர்ப்புக்கூறினர்.

**பேட்டி எண்:29**

| வழக்குத் தொடுப்பவர் | : | அடகன் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | கோபால் |
| வழக்கு விவரம் | : | பணம் கொடுக்கல்-வாங்கல் பிரச்சனை |
| ஊர் | : | இலுப்பக்குடி |
| சாதி | : | இடையர் (கோனார்) |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆடி 10, 1990 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிவகங்கை |

இலுப்பக்குடிக் கிராமத்தைச் சேர்ந்த அடகன் என்பவர் தன் மகன் கோபால் என்பவன் வெளிநாடு செல்லுவதற்காக தன்னிடம் வாங்கிய பணத்தைத் திருப்பித் தரவில்லையென இலுப்பக்குடி பஞ்சாயத்துத் தலைவரிடம் 1990 ஆம் ஆண்டு ஆடி மாதம் 10ம் தேதி வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக இலுப்பக்குடியில் அன்று இரவு 10.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. அடகனைப் பஞ்சாயத்துத் தலைவர் விசாரித்தார். அவர் பஞ்சாயத்துத் தலைவரிடம் தனக்கு இரண்டு மனைவிகள் என்றும் தன் மூத்த மனைவியின் மகன் கோபால் வெளிநாடு செல்லுவதற்காக என்னிடம் பணம் கேட்டான். நான் வெளியில் வட்டிக்கு வாங்கி ரூபாய் 60,000 கொடுத்தேன், தற்பொழுது பணத்தைக் கேட்டால் திருப்பித்தர மறுக்கின்றான் என்றும் கூறினார். பஞ்சாயத்தார் கோபாலிடம் விசாரித்தனர். தான் பணம் வாங்கியது உண்மையென்றும் தனக்கு வெளிநாட்டில் சரியான வேலை கிடைக்காததால் திரும்பி விட்டதாகவும் பணத்தைத் திருப்பித்தர தன்னிடம் தற்பொழுது ஒன்றுமில்லையென்றும் கோபால் பஞ்சாயத்தார்களிடம் கூறினான். பஞ்சாயத்தார் கலந்து பேசி கோபால் வீட்டையும் 50 செண்ட் நிலத்தையும் கடனுக்காகக் கோபாலிடம் எழுதி வாங்கி அதனை அடகனிடம் கடனை அடைக்குமாறு கொடுத்தனர்.

**பேட்டி எண்:30**

| வழக்குத் தொடுப்பவர் | : | ஆ.மூர்த்தி |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | கா. தச்சிணாமூர்த்தி |
| வழக்கு விவரம் | : | கொடுக்கல் வாங்கல் பிரச்சனை |
| ஊர் | : | செம்பனூர் |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | மார்கழி 10, 2000 |
| ஒன்றியம்/வட்டம் | : | கல்லல் |

ஆறுமுகம் மகன் மூர்த்தி என்பவர் வெளிநாட்டில் தங்கி வேலை பார்த்து வந்தார். அவர் தன் பங்காளி காசிமகன் தச்சிணாமூர்த்தி ரூபாய் 1¼ லட்சத்தைக்

கொடுத்து அதனைத் தன் வீட்டில் கொடுக்குமாறு அனுப்பினர். அந்தப் பணத்தை அவர் மூர்த்தி வீட்டில் கொடுக்கவில்லை. இதனையறிந்த மூர்த்தியின் தந்தை ஆறுமுகம் செம்பனூர்க் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 2000 ஆம் ஆண்டு மார்கழி மாதம் 10ம் தேதி வழக்குத் தொடுத்தார். இதன் காரணமாக அன்று பகல் 10.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. தச்சிணாமூர்த்தியிடம் பஞ்சாயத்துத் தலைவர் விசாரித்தார், அவர் பஞ்சாயத்துத் தலைவரிடம் மூர்த்தி பணம் கொடுத்து அனுப்பியது உண்மையென்றும் ரூபாய் 75,000 தான் கொடுத்தனுப்பினர் என்றும் சொன்னார். ஆறுமுகம் தன் மகன் மூர்த்தி எழுதிய கடிதத்தில் ரூபாய் 1¼ லட்சம் என்று எழுதி இருந்ததைப் பஞ்சாயத்தாரிடம் காண்பித்தார். பஞ்சாயத்தார் அவரிடம் வெளிநாட்டிலுள்ள உன்மகன் திரும்பிய பின்னர் தொகை எவ்வுளவு என விசாரிக்கலாம் எனவும், தற்பொழுது தச்சிணாமூர்த்தி ஒத்துக் கொண்ட ரூபாய் 75,000 த்தையும் உடனே கட்டியாக வேண்டுமெனவும் தீர்ப்புக் கூறினர். தச்சிணாமூர்த்தி பணத்தைக் கொடுக்க முடியாததால் அவருடைய இடம், புஞ்சை ஆகியவைகளை ஈடாக எழுதி வாங்கிப் பஞ்சாயத்தார் முன்னிலையில் கையெழுத்து வாங்கி இருவருக்கும் ஒரு பாதியைக் கொடுத்து வழக்கை முடித்தனர்.

**பேட்டி எண்:31**

| வழக்குத் தொடுப்பவர் | : | செல்லத்துரை (அகமுடையார்) |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | பிச்சைக்கண்ணு (பறையன்) |
| வழக்கு விவரம் | : | பணம் கொடுக்கல் வாங்கல் |
| ஊர் | : | காட்டூரணி |
| சாதி | : | அகமுடையார், பறையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | 03.05.1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | மானாமதுரை |

காட்டூரணியைச் சேர்ந்த செல்லத்துரை என்பவர் அதே ஊரைச் சேர்ந்த பிச்சைக்கண்ணு என்பவரிடம் தான் பணத்தைக் கொடுத்துப் பல வருடங்கள்

ஆகியும் அவர் திருப்பித்தர மறுக்கின்றார் என் காட்டூரணிப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 03.05.1999 இல் வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று பகல் 10.00 மணிக்குக் காட்டூரணியில் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்துத் தலைவர் செல்லத்துரையிடம் முதலில் விசாரித்தார். அவர் பஞ்சாயத்தாரிடம் நான் 100க்கு 10 ரூபாய் வீதம் வட்டிக்குக் கொடுத்தேன், பிச்சைக்கண்ணு பணத்தை வாங்கிப் பல வருடங்கள் ஆகியும் எனக்கு வட்டியையும் அசலையும் திருப்பித்தர மறுக்கின்றான் என்று பிச்சைக்கண்ணு எழுதிக் கொடுத்த கடன் பத்திரத்தைக் காட்டினார். பிச்சைக்கண்ணு பஞ்சாயத்தார் முன்னிலையில் உண்மையை ஒத்துக் கொண்டார். பின்னர் பஞ்சாயத்தாரிடம் நான் பத்து ரூபாய் வட்டி கொடுக்க முடியாது வட்டியைக் குறைத்துக் கொள்ள வேண்டுமெனக் கும்பிட்டு விழுந்தார். பின்னர் பஞ்சாயத்தார் செல்லத்துரையிடம் கலந்து பேசி 100 க்கு ரூபாய் 4 என வட்டி போட்டு அசல், வட்டி ஆகிய இரண்டையும் வாங்கிக் கொடுத்து பஞ்சாயத்தை முடித்து வைத்தனர்.

**பேட்டி எண்:32**

| வழக்குத் தொடுப்பவர் | : | கருப்பையா |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | சுப்பிரமணியன் |
| வழக்கு விவரம் | : | பணம் மோசடி |
| ஊர் | : | உலுகமங்கலம் |
| சாதி | : | முத்தரையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | மார்கழி 10, 2000 |
| ஒன்றியம்/வட்டம் | : | கல்லல் |

கருப்பையா என்பவர் வெளிநாடு சென்று வேலை செய்வதற்காக உலுகமங்கலம்பட்டி சுப்பிரமணியன் என்பவரிடம் பணம் கொடுத்தார். அவர் கருப்பையாவை வெளிநாட்டிற்கு வேலைக்கு அனுப்பவும் இல்லை, கொடுத்த பணத்தைத் திருப்பித்தரவும் இல்லை, ஆதலால் கருப்பையா தன்னுடைய பணத்தை மீட்டுத் தருமாறு உலுகமங்கலம்பட்டிக் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 2000

ஆம் ஆண்டு மார்கழி மாதம் 10ம் தேதி வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று இரவு 10.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்துத் தலைவர் கருப்பையாவிடம் விசாரித்தார். பின்னர் சுப்பிரமணியனிடம் விசாரித்தார் அவர் கருப்பையாவை வெளிநாட்டிற்கு அனுப்புவதாகச் சொல்லி அவரிடம் பணம் வாங்கியது உண்மைதான் என்ற விவரம் தெரிய வந்தது. பஞ்சாயத்துத் தலைவர் தனது தீர்ப்பில் ஒரு வார காலத்திற்குள் சுப்பிரமணியன் கருப்பையாவிடம் வாங்கிய பணத்தைத் திருப்பித்தர வேண்டுமெனக் கூறினர். இல்லையென்றால் அப்பணத்திற்கு வட்டி போட்டு வசூலிக்கப்படும் என்றார். பஞ்சாயத்தார் தீர்ப்பினை ஏற்றுச் சுப்பிரமணியன் பணத்தைக் கட்டி விட்டார்.

## II குற்றவியல் வழக்குகள்

**பேட்டி எண்:33**

| வழக்குத் தொடுப்பவர் | : | யுதாத்தன் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | கருப்பன் |
| வழக்கு விவரம் | : | திருட்டு |
| ஊர் | : | கொட்டக்குடி |
| சாதி | : | பறையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | ஊர்ப்பஞ்சாயத்து |
| நாள் | : | பங்குனி 5, 1997 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிவகங்கை |

கொட்டக்குடி கிராமத்தைச் சேர்ந்த தொத்தன் என்பவர் தன் கோழியைக் கருப்பன் பிடித்துத் தின்றுவிட்டதாக கொட்டக்குடிக் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1997 ஆம் ஆண்டு பங்குனி மாதம் ஐந்தாம் தேதி வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று இரவு 10.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார் முதலில் தொத்தனை விசாரித்தனர். பின்னர் கருப்பனிடம் விசாரித்தனர். கருப்பன் கோழியைத் திருடவில்லை எனப் பஞ்சாயத்தார் முன்னிலையில் தகராறு செய்தான். பின்னர் இருவரும் பஞ்சாயத்துத் தலைவர் தீர்ப்பிற்குக் கட்டுபடுவதாகக் கூறினர். பஞ்சாயத்தார் கருப்பனிடம் "நீ கோழியைத் திருடவில்லையென்றால் முனியாண்டி கோவிலில் வெள்ளைச்

சேவலை அறுத்து இரத்தப் பொட்டு வைத்துத் திருடவில்லை எனச் சத்தியம் செய்தால் போதும்" என்றனர். முடியாது என்றால் திருடிய உண்மையை ஒத்துக்கொள் என்றனர். பின்னர் பஞ்சாயத்தார் கருப்பனைத் தனியாக அழைத்துக் கேட்டனர், அவன் திருட்டை ஒத்துக் கொண்டான் பின்னர் பஞ்சாயத்தார் முன்னிலையில் கும்பிட்டு விழுந்து மன்னிப்புக் கேட்டான். பஞ்சாயத்தார் ரூபாய் 500 அவனுக்கு அபராதம் விதித்தனர். கருப்பன் தாங்காது என மீண்டும் பஞ்சாயத்தாரிடம் கும்பிட்டு விழுந்தான். பின்னர் பஞ்சாயத்தார் ரூபாய் 100 கிராமத்திற்கும் ரூபாய் 100 கோழிக்காரனுக்கும் செலுத்த வேண்டுமெனக் கருப்பனிடம் தீர்ப்புக் கூறினர்.

**பேட்டி எண்:34**

| | | |
|---|---|---|
| வழக்குத் தொடுப்பவர் | : | கருப்பையா |
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | கன்னியப்பன் |
| வழக்கு விவரம் | : | கடையில் திருட்டு |
| ஊர் | : | நடுவலசை |
| சாதி | : | இடையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | மாசி 13, 1995 |
| ஒன்றியம்/வட்டம் | : | இளையாண்குடி |

ஆனமையனேந்தல் கிராமத்தைச் சேர்ந்த கருப்பையா என்பவர் தன்னுடைய கடையில் நடுவலசைக் கிராமத்தைச் சேர்ந்த முனியாண்டியும் கடம்பலைக் கிராமத்தைச் சேர்ந்த கன்னியப்பனும் திருடிவிட்டதாக நடுவலசைக் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1995 ஆம் ஆண்டு மாசி மாதம் 13 ஆம் நாள் வழக்குத் தொடர்ந்தார். பஞ்சாயத்தார் முனியாண்டியையும் கன்னியப்பனையும் அழைத்து விசாரித்தனர். விசாரணையில் பூட்டிக்கிடந்த கடையில் ஆள் இல்லாத நேரம் பார்த்துத் திட்டமிட்டுத் திருடியதாகத் தெரிய வந்தது. கடையை உடைக்கும் சத்தத்தைக் கேட்டு ஓடி வந்து பார்த்தவர்கள் இவர்கள் தான் திருடிவர்கள் என அடையாளம் காட்டினர். பின்னர் பஞ்சாயத்தார் கலந்து பேசி திருடிய இருவருக்கும் தலா முந்நூறு ரூபாய் அபராதம் விதித்தனர்.

**பேட்டி எண்:35**

| வழக்குத் தொடுப்பவர் | : | சுப்பிரமணியன் (செட்டியார்) |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | மூர்த்தி,சந்தோஷ் |
| வழக்கு விவரம் | : | கடையை உடைத்துத் திருடுதல் |
| ஊர் | : | செம்பனூர் |
| சாதி | : | குறவர், அம்பட்டையன் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப் பஞ்சாயத்து |
| நாள் | : | மாசி, 10 2001 |
| ஒன்றியம்/வட்டம் | : | காளையார்கோவில் |

செம்பனூர்க் கிராமத்தைச் சேர்ந்த சுப்பிரமணியன் என்பவர் தனது பெட்டிக் கடையை உடைத்துத் திருடிவிட்டனர் எனச் சன்னாசி மகன் மூர்த்தி, கண்ணன் மகன் சந்தோஷ் ஆகிய இருவர் மீதும் செம்பனூர்க் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 2001 ஆம் ஆண்டு மாசி மாதம் 10ம் தேதி வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று பகல் 10.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்துத் தலைவர் திருடிய மூர்த்தி, சந்தோஷ் ஆகிய இருவரையும் விசாரித்தார் அவர்கள் திருடியதை ஒத்துக் கொண்டார்கள். விசாரணையில் மிட்டாய் பாக்கெட் முதலான தின்பண்டங்களை அவர்கள் திருடியது தெரிய வந்தது. ஆனால் கடைக்காரர் பல ஆயிரம் ரூபாய்க் கணக்கினைக் காட்டினார். பஞ்சாயத்தார் கடையைப் பற்றியும் அங்குள்ள சரக்குகள் பற்றியும் விசாரித்தனர். பின்னர் திருடியவர்களுக்கு ரூபாய் முந்நூறு அபராதம் போட்டு அதனைக் கடைக்காரரிடம் கொடுத்தனர். திருடியவர்களை மன்னித்து அறிவுரை சொல்லி அனுப்பினர்.

**பேட்டி எண்:36**

| வழக்குத் தொடுப்பவர் | : | பட்டமங்கலம் கிராமத்தார் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | பிரான்மலை நாடு |
| வழக்கு விவரம் | : | தண்ணீர் மோட்டார் திருட்டு |
| ஊர் | : | பிரான்மலை |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | நாட்டுப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆனி 25, 1966 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிங்கம்புணரி |

பட்டமங்கலம் நாட்டார் தமது கிராமத்தில் பொருள்களும் தண்ணீர் இறைக்கும் மோட்டாரும் திருடு போய்விட்டது என 1966 ஆம் ஆண்டு ஆனி மாதம் 25ம் தேதி பட்டமங்கலம் பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தனர். இதன் காரணமாக அன்று பகல் 11.00 மணிக்குக் பட்டமங்கலத்தில் நாட்டுப்பஞ்சாயத்துத் கூட்டப்பட்டது. பிரான்மலை நாட்டைச் சேர்ந்த ஒருவன் அவற்றைத் திருடி ஆற்றில் புதைத்து வைத்துள்ளான் என்பது தெரியவந்தது. பிரான்மலை நாட்டாருக்குப் பஞ்சாயத்தார் ஓலையெழுதி அனுப்பி விசாரித்ததில் குற்றவாளி குற்றத்தை ஒத்துக் கொண்டான். பின்னர் ஆற்று மணலில் புதைக்கப்பட்டிருந்த அப்பொருள்களை மீட்டு உரியவர்களிடம் ஒப்படைத்தனர். பிரான்மலை நாட்டைச் சேர்ந்த குற்றவாளி பக்கத்து நாட்டைச் சேர்ந்தவன் என்பதால், அவனை மன்னித்துத் திருந்தி வாழ வேண்டுமெனப் பஞ்சாயத்தார் தீர்ப்புக்கூறுதி அனுப்பி வைத்தனர்.

**பேட்டி எண்:37**

| வழக்குத் தொடுப்பவர் | : | பொன்னப்பன் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | ரமேஷ் |
| வழக்கு விவரம் | : | வாழைக்காய்த் திருட்டு |
| ஊர் | : | அரசனூர் |
| சாதி | : | வளையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | கார்த்திகை 5, 1998 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிவகங்கை |

அரசனூர் கிராமத்தைச் சேர்ந்த பொன்னப்பன் என்பவர் தன்னுடைய வயலிலுள்ள வாழைக்காயை ரமேஷ் என்பவன் திருடிவிட்டான், இதைக் கேட்டுத்தர வேண்டுமென்று அரசனூர் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1998 ஆம் ஆண்டு கார்த்தியை மாதம் 5ம் தேதி வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று இரவு 9.00 மணிக்கு அரசனூரில் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பொன்னப்பன் பஞ்சாயத்தாரிடம் ரமேஷ் என்பவன் தனது தோட்டத்திலுள்ள

வாழைக்காயைத் திருடிப்பூமியில் புதைத்து வைத்து கூடையில் அள்ளும்போது தான் கையுங்களவுமாகப் பிடித்து ஊர்ப் பெரியவர்களிடம் காட்டி சாட்சி வைத்திருப்பதாகக் கூறினார். பின்னர் பஞ்சாயத்தார் ரமேஷிடம் விசாரித்தனர். அவன் உண்மையை ஒத்துக்கொண்டான். தன்னை மன்னித்துவிடுமாறும் இனிமேல் திருடமாட்டேன் என்றும் பஞ்சாயத்தார்களிடம் கூறினான். பின்னர் பஞ்சாயத்தார் கலந்து பேசி ரமேஷ் சிறுவன் என்பதால் அவனை மன்னித்து அறிவுரை கூறி அனுப்பினர்.

**பேட்டி எண்:38**

| வழக்குத் தொடுப்பவர் | : | நாகராசு |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | கருப்பையா |
| வழக்கு விவரம் | : | மிளகாய்த் திருட்டு |
| ஊர் | : | புதுக்குளம் |
| சாதி | : | அகமுடையார் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமபஞ்சாயத்து |
| நாள் | : | 21.04.1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | மானாமதுரை |

புதுக்குளம் கிராமத்தைச் சேர்ந்த நாகராசு என்பவர் கருப்பையா என்பவர் தனது மிளகாயைத் திருடிவிட்டார் என புதுக்குளம் பஞ்சாயத்துத் தலைவரிடம் 21.04.1999 இல் வழக்குத் தொடார்ந்தார். இதன் காரணமாக அன்று இரவு 9.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்துத் தலைவர் நாகராசை முதலில் விசாரித்தார். கருப்பையா நாகராசுவின் மிளகாதைத் திருடியது சாட்சியுடன் நீருபிக்கப்பட்டது. பஞ்சாயத்துத் தலைவர் கருப்பையா செய்தது தவறு என்றும், ஆகவே அவர் நாகராசுக்கு ரூபாய் 100 செலுத்த வேண்டும் என்றும் தீர்ப்புச் சொன்னார்.

**பேட்டி எண்:39**

| | | |
|---|---|---|
| வழக்குத் தொடுப்பவர் | : | மானாகுடிக் கிராமத்தார் |
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | பக்கத்துக் கிராமத்தைச் சேர்ந்த ஐந்து பேர்கள் |
| வழக்கு விவரம் | : | நாற்றுத் திருட்டு |
| ஊர் | : | மானாகுடி |
| சாதி | : | பள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆவணி 20, 1970 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிவகங்கை |

மானாகுடிக் கிராமத்தில் நாற்றுத் திருடிய பக்கத்துக் கிராமத்தைச் சேர்ந்த ஐந்து பேர்கள் மீது 1970 ஆம் ஆண்டு ஆவணி மாதம் 20ம் தேதி வழக்குத் தொடரப்பட்டது. இதன் காரணமாக அன்று பகல் 12.00 மணிக்கு மானாகுடியில் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. மானாகுடிக் கிராமத்தில் பக்கத்துக் கிராமத்தைச் சேர்ந்த ஐந்து பேர்கள் நாற்றைப் பிடுங்கினார்கள். அவர்களைக் கையுங்களவுமாகப் பிடித்த மானாகுடிக் கிராமத்தார் ஊர் மந்தையில் கட்டி வைத்தனர். பக்கத்துக் கிராமமான காஞ்சரங்கால் பஞ்சாயத்தாருக்குத் தகவல் சொல்லி விட்டுப் பஞ்சாயத்து நடந்தது, மானாகுடிக் கிராமத்தார் அனைவரும் பஞ்சாயத்தில் கலந்து கொண்டனர். நாற்றுத் திருடிய ஐந்து பேர்களையும் பஞ்சாயத்தார் விசாரித்த போது, அவர்கள் தெரியாமல் தவறு செய்து விட்டோம் என்றும், தங்களை மன்னிக்க வேண்டுமென்றும் ஊர்ப்பஞ்சாயத்தார் முன்னிலையில் கும்பிட்டு விழுந்தனர். பக்கத்துக் கிராமமாகிய காஞ்சரங்காலில் அவர்கள் சொந்தக்காரர்கள் என்பதால் அவர்கள் ஐந்து பேர்களையும் காஞ்சரங்கால் கிராமத்தார் அடித்து விரட்டினர், பின்னர் மந்தையிலிலிருந்து அவர்கள் ஓடிவிட்டனர்.

**பேட்டி எண்:40**

| வழக்குத் தொடுப்பவர் | : | தோப்புக்காரர் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | வெள்ளக்குட்டி |
| வழக்கு விவரம் | : | தென்னங்கன்று திருட்டு |
| ஊர் | : | லாடனேந்தல் |
| சாதி | : | அகமுடையார் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | சித்திரை 20, 1997 |
| ஒன்றியம்/வட்டம் | : | திருப்புவனம் |

தோப்புக்காரர் பலநாட்களாகத் தென்னங்கன்று திருடிவந்த வெள்ளக்குட்டி என்பவரை ஒரு நாள் கையுங்களவுமாகப் பிடித்துவிட்டார். பல நாட்களாக அந்தப்பகுதியிலுள்ள தோப்புக்களில் தென்னங்கன்றுகள் காணாமல் போய்க் கொண்டிருந்ததால் தோப்புக்காரர்கள் அனைவரும் பிடிபட்ட திருடனைத் தாண்டிக்க வேண்டுமென்று லாடனேந்தல் நாட்டுப்பஞ்சாயத்துத் தலைவரிடம் 1997 ஆம் ஆண்டு சித்திரை மாதம் 20ம் தேதி வழக்குத் தொடுத்தனர். இதன் காரணமாக அன்று பகல் 11.00 மணிக்கு லாடனேந்தல் தோப்பில் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. வெள்ளக்குட்டி பல நாட்களாக இந்தத் திருட்டுக் காரியத்தைச் செய்து வந்ததால் மூன்று மாதங்களுக்கு அவரை ஊரைவிட்டு ஒதுக்கிவைப்பதாகப் பஞ்சாயத்தார் தீர்ப்புக்கூறினர்.

**பேட்டி எண்:41**

| வழக்குத் தொடுப்பவர் | : | மாசானம் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | இராமசாமி |
| வழக்கு விவரம் | : | மாடு திருட்டு |
| ஊர் | : | புதுப்பட்டி |
| சாதி | : | அகமுடையார் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | மார்கழி 10, 1995 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிவகங்கை |

புதுப்பட்டிக் கிராமத்தைச் சேர்ந்த இராமசாமி என்பவர் சிவகங்கையில் வீதியில் திரிந்து கொண்டிருக்கும் மாடுகளைக் கடத்திச் சென்று விற்பதை

வழக்கமாகக் கொண்டவர். அவர் அவ்வாறே மாசானம் என்பவரின் மாட்டைத் திருடிப் பக்கத்து ஊரில் விற்று விட்டார். இதனால் மாசானம் என்பவர் தனது மாட்டை மீட்டுத்தர வேண்டுமென்று புதுப்பட்டிக் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1995 ஆம் ஆண்டு மார்கழி மாதம் 10ம் தேதி வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று காலை 9.00 மணிக்குப் புதுப்பட்டியில் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்துத் தலைவர் முதலில் மாசானத்திடம் விசாரித்தார். அவர் பஞ்சாயத்துத் தலைவரிடம் நான் பக்கத்து ஊருக்குச் சென்றிருந்த போது அங்கு ஒரு வீட்டில் மாடு நின்றது. விசாரித்த போது இராமசாமிதான் என் மாட்டைக் கொண்டு வந்து அவர்களிடம் விற்றார் எனவும், அவர் பக்கத்து ஊர்க்காரர் என நம்பி அம்மாட்டை வாங்கியுள்ளார்கள் எனவும் கூறினார். நான் என் மாட்டைப் பிடித்துக் கொண்டு வந்து விட்டேன் என்றும் மாசானம் பஞ்சாயத்தார்களிடம் கூறினார். பின்னர் பஞ்சாயத்தார் இராமசாமியிடம் விசாரித்தனர். அவர் பல மாடுகளை இவ்வாறு திருடி வந்துள்ளார் என்பது தெரிய வந்தது. பின்னர் பஞ்சாயத்தார் இராமசாமிக்கு மாட்டுக் கிரையப் பணத்தை அபராதமாகப் போட்டு அப்பணத்தை மாடு வாங்கிய பக்கத்து ஊர்க்காரருக்குக் கொடுத்தனர். தற்பொழுது இராமசாமி திருந்தி கோடங்கி அடித்துக் குறிசொல்லிப் பிழைப்பு நடத்தி வருகின்றார்.

**பேட்டி எண்:42**

| வழக்குத் தொடுப்பவர் | : | மாட்டுக்காரர் சுந்தரம் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | வடிச்சதண்ணி மகன் |
| வழக்கு விவரம் | : | மாடு திருட்டு |
| ஊர் | : | லாடனேந்தல் |
| சாதி | : | அகமுடையார் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | பங்குனி 10, 1998 |
| ஒன்றியம்/வட்டம் | : | திருப்புவனம் |

லாடனேந்தல் கிராமத்தைச் சேர்ந்த சுந்தரம் மாட்டை வேலாங்குளம் கிராமத்தைச் சேர்ந்தவர்கள் தான் திருடியதாகத் தெரிகின்றது. எனது மாட்டைக் கண்டுபிடித்துக் கொடுக்க வேண்டுமென லாடனேந்தல நாட்டுப்பஞ்சாயத்துத் தலைவரிடம் 1998 ஆம் ஆண்டு பங்குனி மாதம் 10ம் தேதி வழக்குத் தொடர்ந்தார், இதன் காரணமாக அன்று பகல் 10.00 மணிக்கு லாடனேந்தலில் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. இதன் காரணமாகத் திருட்டுத் தொழில் செய்த வடிச்சதண்ணியும் அவனது மகனும் பஞ்சாயத்தாரால் விசாரிக்கப்பட்டனர். அவர்கள் சுந்தரம் மாட்டைத் திருடியது உண்மையென்றும் அம்மாடு தஞ்சாவூரில் நிற்கின்றது என்றும் பஞ்சாயத்தார்களிடம் ஒத்துக் கொண்டனர். பஞ்சாயத்தார் அவர்களைக் கையொடு அழைத்துச் சென்று தஞ்சாவூரில் நின்ற மாட்டை மீட்டு வந்தனர்.

**பேட்டி எண்:43**

| வழக்குத் தொடுப்பவர் | : | செலநீர் கிராமத்தார் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | செல்வம், சுப்பிரமணியம், ரெங்கன் |
| வழக்கு விவரம் | : | மீன்திருட்டு |
| ஊர் | : | எஸ்.வி. மங்களம் |
| சாதி | : | மறவன் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | எஸ்.வி. மங்களத்தைச் சேர்ந்த ஐந்து ஊர்ப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆனி 18, 1998 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிங்கம்புணரி |

செலநீர் கண்மாயில் மீன்பிடித்ததாக அக்கிராமத்தார் எஸ்.வி. மங்களம் கிராமத்தைச் சேர்ந்த மூன்று நபர்கள் மீது எஸ்.வி. மங்களத்தைச் சேர்ந்த ஐந்து ஊர்ப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1998 ஆம் ஆண்டு ஆனி மாதம் 18ஆம் தேதி வழக்குத் தொடுத்தனர். இதன் காரணமாக அன்று பகல் 10.00 மணிக்கு ஊர்ப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார் கண்மாயில் மீன்பிடித்தவர்களிடம் விசாரித்தனர். பின்னர் சாட்சிகளிடம் விசாரித்தனர். பின்னர் மீன்பிடித்த மூன்று பேர்களுக்கும் ரூபாய் 101 அபராதம் கட்டவேண்டுமெனத் தீர்ப்புக் கூறினர். அவர்கள் மூவரும் ரூ 101ஐக் கட்டிவிட்டு கிராமத்தார்கள் முன்னிலையில் கும்பிட்டு விழுந்து மன்னிப்புக் கேட்டனர்.

**பேட்டி எண்:44**

| வழக்குத் தொடுப்பவர் | : | சோணை |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | முத்து |
| வழக்கு விவரம் | : | பணத்தைத் திருடுதல் |
| ஊர் | : | நரியங்குடி |
| சாதி | : | முத்தரையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | சித்திரை 19, 1998 |
| ஒன்றியம்/வட்டம் | : | கல்லல் |

நரியங்குடிக் கிராமத்தைச் சேர்ந்த முத்து என்பவர் மீது தன்னுடைய 10,000 ரூபாய்ப் பணத்தைத்ட திருடிவிட்டார் என அதே கிராமத்தைச் சேர்ந்த சோணை என்பவர் திருட்டுக் குற்றம் சுமத்தி நரியங்குடிப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1998 ஆம் ஆண்டு சித்திரை மாதம் 19ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று இரவு 10.00 மணிக்குக் கிராமப்பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. முத்துவிடம் பஞ்சாயத்தார் விசாரித்தனர். முதலில் இல்லையென மறுத்தவர் பின்னர் திருடிய உண்மையை ஒத்துக் கொண்டார். பஞ்சாயத்தார் அபராதம் போடாமல் ரூபாய் 10,000த்தையும் சோணைக்கு வாங்கிக் கொடுத்துவிட்டு, முத்துவிற்கு அறிவுரைகூறிக் கண்டித்து அனுப்பி வைத்தனர்.

**குறிப்பு**

முத்துவும் சோணையும் முத்தரையர் இனத்தைச் சேர்ந்தவர்கள், இருவரும் நரியங்குடியைச் சேர்ந்தவர்கள், நெருங்கிய உறவினர்களும் கூட பணம் திருட்டுப் போன அன்று முத்து சோணையின் வீட்டிற்கு வந்து சென்றுள்ளார். அதன் பின்னர் தான் பணம் திருட்டுப்போன விவரம் சோணைக்குத் தெரிய வந்துள்ளது.

**பேட்டி எண்:45**

| வழக்குத் தொடுப்பவர் | : | காந்தி |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | முத்தையா |
| வழக்கு விவரம் | : | கையை வெட்டுதல் |
| ஊர் | : | திருப்பாச்சேத்தி |
| சாதி | : | பறையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | சித்திரை 10, 2000 |
| ஒன்றியம்/வட்டம் | : | திருப்புவனம் |

திருப்பாச்சேத்தி கிராமத்தைச் சேர்ந்த சுப்பன் மகன் காந்தி என்பவரை அதே ஊரைச் சேர்ந்த முத்தையா என்பவர் முன்விரோதம் காரணமாகக் கையை வெட்டிவிட்டார். இதனைக் கேட்டுக் கொடுக்க வேண்டுமென திருப்பாச்சேத்திப் பஞ்சாயத்துத் தலைவரிடம் காந்தி 2000 ஆம் ஆண்டு சித்திரை மாதம் 10ம் தேதி வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று இரவு 11.00 மணிக்குக் திருப்பாச்சேத்தியில் கிராமப்பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. வழக்கு விசாரணையில் முத்தையா காந்தியை வெட்டியதை ஒப்புக் கொண்டார், அவர் பஞ்சாயத்துத் தலைவரிடம் காவல் நிலையத்திற்குச் செல்ல வேண்டாம் எனக் கேட்டுக் கொண்டார். பின்னர் பஞ்சாயத்துத் தலைவர் முத்தையாவை இனிமேல் இவ்வாறு நடந்து கொள்ளக்கூடாது என எச்சரித்து ரூபாய் 3,000 அபராதம் விதித்துத் தீர்ப்புக் கூறினார். அந்தப் பணத்தைப் பாதிக்கப்பட்ட காந்தியிடம் பஞ்சாயத்தார் கொடுத்தனர்.

**பேட்டி எண்:46**

| வழக்குத் தொடுப்பவர் | : | முத்துக்கருப்பன் (மறவர்) |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | வெள்ளை மூப்பன் (மூப்பனார்) |
| வழக்கு விவரம் | : | ஆடுகளின் கால்களை வெட்டுதல் |
| ஊர் | : | சூரக்குளம் |
| சாதி | : | மறவர், மூப்பனார் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | ஊர்ப்பஞ்சாயத்து |
| நாள் | : | 03.11.2000 |
| ஒன்றியம்/வட்டம் | : | மானாமதுரை |

சூரக்குளத்தைச் சேர்ந்த முத்துக்கருப்பன் என்பவர் அதே ஊரைச் சேர்ந்த வெள்ளை என்பவர் தன்னுடைய நான்கு ஆடுகளின் கால்களை வெட்டிவிட்டார் என சூரக்குளம் பஞ்சாயத்துத் தலைவரிடம் 03.11.2000 இல் வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று இரவு 10.00 மணிக்குச் சூரக்குளத்தில் ஊர்ப்பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார் முதலில் முத்துக்கருப்பனை விசாரித்தனர். பின்னர் வெள்ளை மூப்பனை விசாரித்தனர். அவர் பஞ்சாயத்தாரிடம் தன் நெல் வயலில் முத்துக் கருப்பன் ஆடுகள் மேய்ந்ததால் ஆத்திரத்தில் ஆடுகளின் கால்களை வெட்டிவிட்டேன் என்னை மன்னிக்க வேண்டுமெனக் கும்பிட்டு விழுந்தார் பின்னர் பஞ்சாயத்தார் கலந்து பேசி ரூபாய் 500 ஐ அபராதத் தொகையாக வெள்ளை மூப்பனுக்கு விதித்தனர். ஆனால் ஆட்டுக்காரராகிய முத்துக்கருப்பன் எனக்குப் பணம் வேண்டாம். அவன் திருந்தினால் போதும் என்று கூறியதால், அந்தப்பணத்தைக் கோயில் உண்டியலில் சேர்க்கும்படி பஞ்சாயத்தார் தீர்ப்புக் கூறினர்.

**பேட்டி எண்:47**

| வழக்குத் தொடுப்பவர் | : | குடும்பர் மக்கள் (பள்ளர்) |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | இரண்டு பெண்கள் |
| வழக்கு விவரம் | : | கோயில் மாட்டைத் கத்தியால் வெட்டுதல் |
| ஊர் | : | எஸ்.வி. மங்களம் |
| சாதி | : | குடும்பர், மறவர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆவணி 12, 1995 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிங்கம்புணரி |

எஸ்.வி மங்களத்தில் அனைத்துத் தரப்பு மக்களாலும் வணங்கப்படும் கருப்பு அய்யனார் கோயில் மாட்டை அடையாளம் தெரியாத யாரோ ஒருவர் வெட்டியதால் எஸ்.வி மங்களம் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1995 ஆம் ஆண்டு ஆவணி மாதம் 12ம் தேதி பொதுமக்கள் அனைவரும் வழக்குத் தொடுத்தனர். இதன் காரணமாக அன்று பகல் 10.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தில் ஆடுமேய்த்துக் கொண்டிருந்த ஒருவன் கோயில் மாடு இரத்தத்துடன்

நடந்து வந்தது. உள்ளே சென்று பார்த்தேன். இரண்டு பெண்கள் கருவேல் நெற்று எடுத்துக் கொண்டிருந்தனர் எனச் சாட்சி சொன்னான், மக்கள் ஆரவாரம் செய்து அந்தப் பெண்களுக்குத் தண்டனை கொடுக்க வேண்டுமென்றனர். பஞ்சாயத்துத் தலைவர் திருமணம் ஆகாத அந்தப் பெண்களுக்கு ஆள்விட்டு விசாரித்தார். இரண்டு பெண்களும் தாங்கள் கோயில் மாட்டை வெட்டவில்லையென அழுதனர். தலைவர் பஞ்சாயத்துத் தேதியைத் தள்ளிப் போட்டார். அத்துடன் அன்று கண்மாய்க் கரையில் யார் யார் இருந்தனர் என்பதை ஆள் வைத்து விசாரித்தனர். பூசாரி ஒருவர் பகல் 12.00 மணிக்கு அந்த வழியாகச் சென்றிருக்கின்றார். அப்போது ஆடுமேய்த்துக் கொண்டிருந்த ஒருவன் கத்தியை ஆற்றில் கழுவியதைப் பார்த்ததாகப் கேள்விப் பட்டு மீண்டும் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பூசாரியை வரவழைத்தனர், அவரிடம் தலைவர் மாட்டையா வெட்டியதைப் பார்த்தாயா? எனக் கேட்டார். அவர் பஞ்சாயத்தாரிடம் தான் பார்க்கவில்லையென்றும், தான் நடந்து செல்லும் போது கோயில் மாடு இரத்துடன் வந்தது என்றும், அருகில் இரத்தத்துடன் சிங்காரம் கத்தியைக் கழுவிக் கொண்டிருந்தார் என்றும் கூறினார். பின்னர் பஞ்சாயத்தார் சிங்காரத்திற்கு அபராதம் போட்டனர், அவன் அடுத்த ஆண்டில் இறந்து விட்டான்.

**பேட்டி எண்:48**

| | | |
|---|---|---|
| வழக்குத் தொடுப்பவர் | : | கருணாகரன் |
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | கருப்பையா |
| வழக்கு விவரம் | : | மாட்டுச் சண்டை (மாட்டை வெட்டுதல்) |
| ஊர் | : | சாத்தரசன் கோட்டை |
| சாதி | : | மறவர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | வைகாசி 3, 1997 |
| ஒன்றியம்/வட்டம் | : | காளையார் கோயில் |

சாத்தரசன் கோட்டைக் கிராமத்தைச் சேர்ந்த கருணாகரன் என்பவர் 1997ம் ஆண்டு வைகாசி மாதம் 3ம் தேதி வழக்குத் தொடர்ந்தான். இதன் காரணமாக

அன்று பகல் 11.00 மணிக்குக் கிராமப் பஞ்சாத்துக் கூட்டப்பட்டது. பக்கத்துக் கிராமங்களைச் சேர்ந்த முக்கியப் பஞ்சாயத்துத் தலைவர்களும் கலந்து கொண்டனர். கருணாகரன் பஞ்சாயத்தார்களிடம் தன் மாடு கருப்பையாவின் வைக்கோல் போரில் மேய்ந்தமைக்காக வெட்டிவிட்டார் எனக் கூறினார். வெட்டுப்பட்ட மாட்டைப் பஞ்சாயத்தாரிடம் காண்பித்தார். மாட்டின் முதுப்புறத்தில் வெட்டுப்பட்ட கீரல் இருந்தது. கருப்பையா பஞ்சாயத்தாரிடம் தான் மாட்டை வெட்டவில்லையென்றும் அடித்து விரட்டியதாகவும் கூறினார். பின்னர் பஞ்சாயத்தார் கருப்பையாவிடம் ஆடு, மாடு, கோழி ஆகிய விலங்குகளுக்கு வேண்டியவன், சண்டைக்காரன் என்ற பாகுபாடு தெரியாது எனவும் அவற்றை அடிப்பதும் வெட்டுவதும் தவறு என்றும் அறிவுரை கூறினர். பின்னர் பஞ்சாயத்தார் கருப்பையாவிடம் இனிமேல் இவ்வாறு செய்தால் அபராதம் போட்டு விடுவோம் என எச்சரித்து, இருவரையும் சமாதானம் செய்து வைத்து அனுப்பினார்.

**பேட்டி எண்:49**

| | | |
|---|---|---|
| வழக்குத் தொடுப்பவர் | : | முக்குளம் கிராமத்தார் |
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | பச்சேரி கிராமத்தார் |
| வழக்கு விவரம் | : | நாடகத்தில் இரண்டு ஊர்க்காரர்களுக்கிடையே அடிதடிச் சண்டை |
| ஊர் | : | பச்சேரி |
| சாதி | : | அகமுடையார், கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | நாட்டுப்பஞ்சாயத்து |
| நாள் | : | 08.06.1995 |
| ஒன்றியம்/வட்டம் | : | மானாமதுரை |

முக்குளம் கிராமத்தார்கள் தங்கள் ஊர்க்காரர்களை பச்சேரிக் கிராமத்தைச் சேர்ந்தவர்கள் அவர்கள் ஊரில் நடைபெற்ற நாடகத்தன்று அடித்து விட்டார்கள் என்றும், தங்கள் ஊர்க்காரர்களது கெடிகாரம், துண்டு, சால்வைகளைப் பிடுங்கிக் கொண்டார்கள் என்றும் பச்சேரிக் கிராமபஞ்சாயத்துத் தலைவரிடம் 08.06.1995இல் வழக்குத் தொடர்ந்தனர். இதன் காரணமாக அன்று பகல் 11.00 மணிக்குப் பச்சேரிக்

கிராமத்தில் நாட்டுப்பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பல ஊர்களைச் சேர்ந்த நாட்டுத்தலைவர்கள் பச்சேரிக் கிராமத்திற்குச் சார்பாகக் கலந்து கொண்டனர். பஞ்சாயத்துத் தலைவர் இரண்டு கிராமத்தார் செய்த தவறுகளையும் விளக்கிப் பேசினர் இறுதியாக மாணவர்கள் பலநாட்களாகப் படிக்கச் செல்லும் போது செய்த தகராறுதான் இந்த நாடகத்தன்று இரண்டு ஊர்ப்பிரச்சனையானது தெரியவந்தது. முக்குளம் கிராமம் ஊர் விட்டு ஊர்வந்து அடித்தது தவறு, அதே போல் பச்சேரிக் கிராமத்தார்கள் அவர்களை அடித்ததும் தவறு பிடுங்கிக் கொண்ட பொருள்களை அவரவர்கள் ஒப்படைக்க வேண்டும், இரண்டு ஊர்க்காரர்களும் சமாதானமாகச் செல்ல வேண்டுமென்றும், மந்தையம்மன் கோயிலுக்கு விளக்கேற்ற இருகிராமத்தார்களும் தலா ரூபாய் 25 செலுத்த வேண்டுமென்றும் பஞ்சாயத்துத் தலைவர் தீர்ப்புக்கூறினர்.

**பேட்டி எண்:50**

| | | |
|---|---|---|
| வழக்குத் தொடுப்பவர் | : | முத்துச்சாமி |
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | அய்யாவு |
| வழக்கு விவரம் | : | வாய்க்கால் தகராறு |
| ஊர் | : | வேம்பத்தூர் |
| சாதி | : | இடையர் (கோனார்) |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | 19.01.1994 |
| ஒன்றியம்/வட்டம் | : | மானாமதுரை |

வேம்பத்தூர் கிராமத்தைச் சேர்ந்த முத்துச்சாமி என்பவர், அதே ஊரைச் சேர்ந்த அய்யாவு என்பவர் தனக்கு வாய்க்கால் விட மறுக்கிறார் என வேம்பத்தூர் பஞ்சாயத்துத் தலைவரிடம் 19.01.1994இல் வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று 10.00 மணிக்கு வேம்பத்தூரில் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார் முத்துச்சாமியை அழைத்துச் விசாரித்தார். முத்துச்சாமி பஞ்சாயத்துத் தலைவரிடம் தன் வயலுக்குத் தண்ணீர் செல்ல வாய்க்கால் இல்லையென்றும் அய்யாவு வயலில் சென்றால் தான் தண்ணீர் பாயும்

என்றும் கூறினர். பஞ்சாயத்தார் கலந்து பேசி சுற்றுப்பாதையில் வாய்க்கால் தோண்டி அய்யாவு நிலத்தில் ½ அடி அகலத்தில் சிறிய வாய்க்கால் ஒதுக்கி, இதை இருவரும் மீறக்கூடாது என இருவரிடமும் எழுதி வாங்கிக் கொண்டு தீர்ப்புக் கூறினர்.

**பேட்டி எண்:51**

| | | |
|---|---|---|
| வழுக்குத் தொடுப்பவர் | : | கானூர் கிராமம் |
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | புதுக்குளம் கிராமம் |
| வழக்கு விவரம் | : | ஊற்றுக்கால் தகராறு |
| ஊர் | : | லாடனேந்தல் |
| சாதி | : | வெள்ளாளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | நாட்டுப்பஞ்சாயத்து |
| நாள் | : | 15.01.2001 |
| ஒன்றியம்/வட்டம் | : | திருப்புவனம் |

கானூர் கிராமத்தார் வைகை ஆற்றில் ஊற்றுக்கால் வெட்டி நீர் பாய்ச்சியதை புதுக்குளம் கிராமத்தார் தடுத்தனர்.இதனால் இரண்டு கிராமத்தார்களுக்கும் தகராறு ஏற்பட்டன. இந்தப் பிரச்சனையைத் தீர்த்து வைத்துக் கானூர் கிராமத்திற்கு தண்ணீர் வர ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கானூர் கிராமத்தார் லாடனேந்தல் நாட்டார் பஞ்சாயத்துத் தலைவரிடம் 15.01.01 இல் முறையிட்டனர். இதன் காரணமாக அன்று பகல் 11.00 மணிக்கு லாடனேந்தலில் நாட்டார் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. அக்கூட்டத்தில் இரண்டு கிராமத்தார்களும் விசாரிக்கப்பட்டனர். லாடனேந்தல் நாட்டுப்பஞ்சாயத்துத் தலைவர் கானூர் கிராமம் ஊற்றுக்கால் வெட்டி நீர்ப்பாய்ச்சுவதை புதுக்குளம் கிராமம் தடுக்கக்கூடாது எனத் தீர்ப்புக் கூறினர். தீர்ப்பினை ஏற்றுக்கொண்ட புதுக்குளம் கிராமத்தார் அமைதியாகக் கலைந்து சென்றனர்.

**பேட்டி எண்:52**

| | | |
|---|---|---|
| வழக்குத் தொடுப்பவர் | : | முடிகண்டம் கிராமம் |
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | மாத்தூர் கிராமம் |
| வழக்கு விவரம் | : | தோட்டவேலைத் தகராறு |
| ஊர் | : | மாத்தூர் |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | நான்கு ஊர் நாட்டுப் பஞ்சாயத்து |
| நாள் | : | 10.04.1998 |
| ஒன்றியம்/வட்டம் | : | மானாமதுரை |

முடிகண்டம் கிராமத்தைச் சேர்ந்த கள்ளர் இனமக்களும் தோட்ட வேலைக்குச் சென்ற இடத்தில் மோதிக் கொண்டனர். இந்தச் சண்டை, பின்னர் பெரும் சாதிக்கலவரமாக மாறியது. யார் பெரியவர்? என இரு சாதியினரும் சண்டையில் இறங்கினர். முடிகண்டம் கிராமத்தார் நான்கு ஊர் நாட்டுத் தலைவர்களை அழைத்துப் பொதுவான இடத்தில் பேசிக் கொள்வோம் என 10.04.1998இல் நான்கு ஊர் நாட்டுப் பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடுத்தனர். இதன் காரணமாக அன்று பகல் 10.00 மணிக்கு நான்கு ஊர் நாட்டுப் பஞ்சாயத்துத் தலைவர்கள் இருதரப்பினரையும் அழைத்து விசாரித்தனர். பின்னர் இருதரப்பினரும் அடைந்த இழப்பிற்கு அவரவர்கள் பொறுப்பு என்றும், இனிமேல் தங்களுக்குள் எவ்விதப் பகைமையும் விரோதமும் வேண்டாம் என்றும் சமாதானம் செய்து அவர்களை ஒழுங்கு படுத்தினர்.

**பேட்டி எண்:53**

| | | |
|---|---|---|
| வழக்குத் தொடுப்பவர் | : | சுந்தரராசன் |
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | கோபால் |
| வழக்கு விவரம் | : | முன்விரோதம் காரணமாகத் தகராறு |
| ஊர் | : | கள்ளிக்குடி |
| சாதி | : | இடையர் (கோனார்) |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | கார்த்திகை 4, 1995 |
| ஒன்றியம்/வட்டம் | : | காளையார் கோயில் |

கள்ளிக்குடிக் கிராமத்தைச் சேர்ந்த சுந்தரராசன் என்பவர் தன்னைக் கோபாலும் அவருடைய சம்பந்தியும் சேர்ந்து அடித்து விட்டு வீட்டையும் நொறுக்கி விட்டதாகக் கள்ளிக்குடி பஞ்சாயத்துத் தலைவரிடம் 1995 ஆம் ஆண்டு கார்த்திகை மாதம் 4ம் தேதி வழக்குத் தொடுத்தார். இதன் காரணமாக அன்று இரவு 10.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டபட்டது. பஞ்சாயத்துத் தலைவர் சுந்தரராசனிடம் விசாரித்தார். அவர் பஞ்சாயத்தாரிடம் கோபால் தன்னுடைய தங்கை மாப்பிள்ளையென்றும், அவர் தன் அக்கா மகளைப் பெண் கேட்டபோது தாய்மாமன் என்ற முறையில்தான் அதை மறுத்ததாகவும் அதனால் கோபால் தன்மீது முன்விரோதம் கொண்டார் எனவும் விளக்கினர். இந்த முன்விரோதம் காரணமாகக் கோபாலும் தன் தங்கை குடும்பத்தாரும் தன்னை அடித்துத் தன் வீட்டு ஓடுகளை நொறுக்கியும் எனக்குப் பாதிப்பினை ஏற்படுத்தியதால் தனக்கு நியாயம் வேண்டும் என்றார் சுந்தரராசன். கோபாலையும், ஊரில் கண்ட சாட்சிகளையும் பஞ்சாயத்தார் விசாரித்தனர். பின்னர் பஞ்சாயத்தார் ரூபாய் 800 கோபாலுக்கு அபராதம் விதித்தனர். ரூபாய் 500 சுந்தரராசனுக்கு இழப்புத் தொகையாகத் தரப்பட்டது. ரூபாய் 300ஐ கிராமம் எடுத்துக் கொண்டது.

**பேட்டி எண்:54**

| | | |
|---|---|---|
| வழக்குத் தொடுப்பவர் | : | வெள்ளைச்சாமி |
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | விசயன் |
| வழக்கு விவரம் | : | செருப்பால் அடித்தல் |
| ஊர் | : | வடகளத்தூர் |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | வைகாசி 10, 1998 |
| ஒன்றியம்/வட்டம் | : | திருப்பத்தூர் |

ஆத்தரம்பட்டிக் கிராமத்தைச் சேர்ந்த வெள்ளைச்சாமி என்பவர், தன்னைச் செருப்பால் அடித்து விட்டதாக வடகளத்தூர்க் கிராமத்தைச் சேர்ந்த விசயன் என்பவர் மீது வடகளத்தூர்ப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1998 ஆம் ஆண்டு வைகாசி

மாதம் 10ம் தேதி வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று பகல் 10.00 மணிக்குக் கிராமப்பஞ்சாயத்து கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார் விசாரித்தனர் வெள்ளைச்சாமி தன் மைத்துணன் மனைவியைக் கூட்டிக் கொண்டு சென்றதாகவும் தான் அவரைச் செருப்பால் அடித்தது உண்மை என்றும் ஒப்புக் கொண்டார். வெள்ளைச்சாமி பஞ்சாயத்தாரிடம் தன் அந்தப் பெண்ணை அவளது தாயார் வீட்டிற்குப் பாதுகாப்பாக அழைத்துச் சென்றதாகக் கூறினர். அவளை அவள் கணவன் அடித்துவிடவே, அப்பெண் கோபித்துக் கொண்டு வீட்டை விட்டு வெளியே வந்துள்ளாள் என்பது பின்னர் தெரிந்தது. உண்மை தெரியாமல் செருப்பால் அடித்து விட்டேன் என்று விசயன் கும்பிட்டு விழுந்தார். பஞ்சாயத்தார் விசயனுக்கு ரூபாய் 501 அபராதம் போட்டு இனிமேல் இவ்வாறு யோசிக்காமல் எந்தக் காரியத்தையும் செய்யாதே எனத் தீர்ப்புக் கூறினர்.

**பேட்டி எண்:55**

| | | |
|---|---|---|
| வழக்குத் தொடுப்பவர் | : | முத்துச்சாமி |
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | சகாதேவன் |
| வழக்கு விவரம் | : | வைக்கோல் போரில் தீ வைத்தல் |
| ஊர் | : | பெரும்பாளை |
| சாதி | : | பள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆடி 10, 1995 |
| ஒன்றியம்/வட்டம் | : | இளையாண்குடி |

பெரும்பாளைக் கிராமத்தைச் சேர்ந்த முத்துச்சாமி என்பவரது வைக்கோல் போரில் அதே ஊரைச் சேர்ந்த சகாதேவன் என்பவர் தீ வைத்து விட்டார். அதனைக் கேட்டுத்தர வேண்டுமென்று முத்துச்சாமி 1995 ஆம் ஆண்டு ஆடி மாதம் 10ம் தேதி பெரும்பாளைக் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று இரவு 10.00 மணிக்குப் பெரும்பாளையில் கிராமப் பஞ்சாயத்துக கூட்டப்பட்டது. பஞ்சாயத்துத் தலைவர் முத்துச்சாமியிடம் முதலில் விசாரித்தார். அவர் பஞ்சாயத்துத் தலைவர் சகாதேவனின் தாயார் தனது

வைக்கோல் போரில் தீ வைத்து விட்டதாகவும் அதற்கான ஆதாரம் தன்னிடம் இருப்பதாகவும் கூறினார். சகாதேவன் தாயர் இதனை மறுத்தார். ஆனால் சாட்சிகள் அவர் தீ வைத்ததை உறுதிப்படுத்தினர். பின்னர் பஞ்சாயத்தார் சகாதேவன் தாயருக்கு ரூ.200 அபராதம் விதித்து தீர்ப்புக் கூறினர்.

**பேட்டி எண்:56**

| | | |
|---|---|---|
| வழக்குத் தொடுப்பவர் | : | முத்து |
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | இராமையா |
| வழக்கு விவரம் | : | சாரய விற்பனை |
| ஊர் | : | வாவியரனேந்தல் |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமபஞ்சாயத்து |
| நாள் | : | புரட்டாசி 10, 2000 |
| ஒன்றியம்/வட்டம் | : | திருப்புவனம் |

வாவியரனேந்தல் கிராமத்தைச் சேர்ந்த முத்து என்பவர் அதே ஊரைச் சேர்ந்த இராமையா என்பவர் பல நாட்களாகச் சாரயம் காய்ச்சி விற்று வருவதாகவும் அதைத் தடை செய்ய வேண்டுமென்றும் வாவியரனேந்தல் பஞ்சாயத்துத் தலைவரிடம் 2000 ஆம் ஆண்டு புரட்டாசி மாதம் 10ம் தேதிவழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக வாவியரனேந்தலில் அன்று பகல் 10.00 மணிக்குக் கிராமபஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்துத்தலைவர் முதலில் முத்து என்பவரை அழைத்து விசாரித்தார். அவர் பஞ்சாயத்தாரிடம் இராமையா பல நாட்களாகச் சாரயம் விற்றுவருவதாகவும், சம்பவத்தன்று நாடகம் நடந்து கொண்டிருக்கும் போது சாராயம் விற்றதாகவும் அதைத்தான் தடுத்ததாகவும் கூறினர். இராமையாவை விசாரித்து உண்மையைத் தெரிந்து கொண்ட பஞ்சாயத்துத் தலைவர், இராமையா இனிமேல் இந்தப் பகுதியில் சாராயம் விற்கக் கூடாது என்றும், கிராமக்கட்டுப்பாட்டை மீறி சாராயம் விற்றால் ஊரை விட்டு வெளியேற்றுவோம் எனவும் தீர்ப்புக் கூறினர். இராமையா இன்று திருந்தி வாழ்ந்து வருகின்றார்.

**பேட்டி எண்:57**

| | | |
|---|---|---|
| வழக்குத் தொடுப்பவர் | : | மு. மாயழகு |
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | நல்லுச்சாமி |
| வழக்கு விவரம் | : | கொலை |
| ஊர் | : | குமாரபட்டி |
| சாதி | : | இடையர் (கோனார்) |
| பஞ்சாயத்து அமைப்பு | : | நாட்டுப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆனி 5, 1967 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிவகங்கை |

குமாரபட்டியைச் சேர்ந்த மாயழகு என்பவர் தன் சகோதரர்களை அடித்துக் கொன்ற நல்லுச்சாமி மீது கொலைக்குற்றம் சுமத்தி குமாரபட்டிப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1967 ஆம் ஆண்டு ஆனி மாதம் 5ம் தேதி வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று பகல் 10.00 மணிக்குத் தமராக்கியில் நாட்டுப்பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. இப்பஞ்சாயத்தில் ஐந்து ஊர் நாட்டுப் பஞ்சாயத்துத் தலைவர்கள் கலந்து கொண்டனர். கொலை செய்தவர் மனநிலை சரியில்லாதவர் என்பதால் நடந்தவற்றை மாயழகுவிடம் பஞ்சாயத்தார் கேட்டறிந்தனர். அவர் பஞ்சாயத்தார்களிடம் ஆட்டுக்கிடையில் படுத்திருந்த தன் சகோதரர்களை நல்லுச்சாமி கட்டையால் அடித்துக் கொலை செய்து விட்டுத் தன்னையும் கொல்ல வரும் போது தான் தப்பித்து ஓடிவந்து விட்டதாகக் கூறினர். மேலும் விசாரணையில் கொலையாளியாகிய நல்லுச்சாமி அவர் தந்தையையும் வீட்டு வேலைக்காரனையும் கொலை செய்து விட்டார் என்பது புலனாகியது. கொலையாளி பைத்தியம் என்பதால் அவர் குடும்பத்தார் குற்றத்தை ஏற்றுக் கொண்டனர். பின்னர் பஞ்சாயத்துத் தலைவரும் உறுப்பினர்களும் சேர்ந்து முடிவெடுத்தனர். ஒரு ஏக்கர் நிலம் பலித்தீர்ப்பு என்ற முறையில் மாயழகுவிற்கு வழங்கப்பட்டது. நல்லுச்சாமி நீதிமன்றத்தில் ஒப்படைக்கப்பட்டார். நீதிமன்றமும் மனநோயாளி என அவரை விடுதலை செய்தது.

**பேட்டி எண்:58**

| | | |
|---|---|---|
| வழக்குத் தொடுப்பவர் | : | மாட்டுவண்டிக்காரர் |
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | டிராக்டர் தங்கராசு |
| வழக்கு விவரம் | : | சாலை விபத்து |
| ஊர் | : | பச்சேரி |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | 10.02.2000 |
| ஒன்றியம்/வட்டம் | : | மானாமதுரை |

பச்சேரிக் கிராமத்தைச் சேர்ந்த மாட்டு வண்டிக்காரர், ஆவரம்பட்டியைச் சேர்ந்த தங்கராசு என்பவர் தனது மாட்டுவண்டி மீது டிராக்டரை மோதச் செய்து விட்டார். ஆதலால் தனது மாட்டின் கால் ஒடிந்து விட்டது என்று 10.02.2000 இல் பச்சேரிக் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று பகல் 10.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. வழக்கினை விசாரித்த பஞ்சாயத்துத் தலைவர் மாடு ரூபாய் 9500 வாங்கியது என்பதையும், அதன் கால்கள் ஒடிந்துவிட்டதால் மாட்டுக்காரரின் பிழைப்புக்கு வழியில்லை என்பதையும் விளக்கிச் சொல்லி ரூபாய் 2500 மாட்டுக்காரருக்கு இழப்பீடு தரவேண்டுமெனத் தீர்ப்புக் கூறினர்.

**பேட்டி எண்:59**

| | | |
|---|---|---|
| வழக்குத் தொடுப்பவர் | : | கோபி |
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | சிறுகுடி விலாத்திப்பிள்ளை |
| வழக்கு விவரம் | : | சைக்கிள் விபத்து |
| ஊர் | : | திருப்பாச்சேத்தி |
| சாதி | : | வெள்ளாளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | புரட்டாசி 4, 1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | திருப்புவனம் |

திருப்பாச்சேத்தியைச் சேர்ந்த கோபி என்பவர் தான் சாலையில் சைக்கிளில் செல்லும்போது சிறுகுடி விலாத்திப்பிள்ளையின் டிராக்டர் ஓட்டுநர், டிராக்டரை தனது சைக்கிளில் மோதவிட்டார் எனவும், அதனால் சைக்கிள் நொறுங்கி விட்டது

எனவும் 1999 ஆம் ஆண்டு புரட்டாசி மாதம் 4ம் தேதி திருப்பாச்சேத்தி பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று பகல் 11.00 மணிக்குத் திருப்பாச்சேத்தியில் வழக்கு மன்றம் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார் கோபியிடம் விசாரித்தனர். அவர் நான் சரியான வழியில் தான் சைக்கிளில் சென்று கொண்டிருந்தேன், டிராக்டர் தான் தவறுதலாக வந்து என் சைக்கிளில் மீது இடித்தது, சைக்கிள் அப்பளம் போல நொறுங்கி விட்டது என்றார். பஞ்சாயத்தார் பின்னர் விலத்திப்பிள்ளையின் ஓட்டுநரையும் விசாரித்தனர். உண்மையைத் தெரிந்து கொண்டு கோபியின் சைக்கிளுக்காக சிறுகுடி விலத்திப்பிள்ளை ரூபாய் 2,000 கொடுக்க வேண்டுமெனத் தீர்ப்பளித்தனர்.

**பேட்டி எண்:60**

| | | |
|---|---|---|
| வழக்குத் தொடுப்பவர் | : | பன்னையா |
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | மாதவன் |
| வழக்கு விவரம் | : | கோழிப்பிரச்சனை |
| ஊர் | : | முறையூர் |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஐப்பசி 10, 1995 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிங்கம்புணரி |

முறையூர் கிராமத்தைச் சேர்ந்த பன்னையா என்பவர் தன் வான்கோழியை மாதவன் என்பவர் டிராக்டரில் அடித்துக் கொன்றுவிட்டதாக மாதவன் என்பவர் மீது முறையூர் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1995 ஆம் ஆண்டு ஐப்பசி மாதம் 10ம் தேதி வழக்குத் தொடுத்தார். வழக்கினை விசாரித்த பஞ்சாயத்துத் தலைவர் இருவரையும் சமாதானம் செய்தார். பன்னையா சமாதானத்தை ஒத்துக் கொள்ளாததால் மறுநாள் பஞ்சாயத்துக் கூடியது. வான்கோழி என்ன விலைப் பெறும் என்று பன்னையாவிடம் பஞ்சாயத்துத் தலைவர் கேட்டார், அவர் ரூபாய் 250 பெறும் என்றார். பஞ்சாயத்தார் ரூபாய் 250 ஐ மாதவன் பன்னையாவிற்குக் கொடுத்துவிட வேண்டுமென்று தீர்ப்புச் சொன்னார்.

## குற்றவியல், தீங்கியல் வழக்குகள்

**பேட்டி எண்:61**

| | | |
|---|---|---|
| வழக்குத் தொடுப்பவர் | : | ஹேமலதாவின் பெற்றோர் |
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | மணிவாசகம் & ஹேமலதா |
| வழக்கு விவரம் | : | பெண்ணைக் கடத்தல் |
| ஊர் | : | பாகனேரி |
| சாதி | : | பறையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | சாதிப்பஞ்சாயத்து |
| நாள் | : | வைகாசி 6, 1990 |
| ஒன்றியம்/வட்டம் | : | கல்லல் |

பாகனேரிக் கிராமத்தைச் சேர்ந்த மணிவாசகம் என்பவர் ஹேமலதா என்ற பம்பாய்ப் பெண்ணைக் கடத்திக் கொண்டு வந்துவிட்டார். பெண்ணின் பெற்றோர் சாதிப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1990 ஆம் ஆண்டு வைகாசி மாதம் 6ம் தேதி வழக்குத் தொடுத்தனர். வழக்கை விசாரித்த பஞ்சாயத்துத தலைவர் மதகுபட்டியில் பஞ்சாயத்தைக் கூட்டி சாதிக்காரர்களை அழைத்துச் பேசினார். மணிவாசகத்தைத் தலைவர் விசாரித்தார், ஹேமலதா வயசுக்கு வராத பெண் அவளை நான் காதலித்தேன். அவள சம்மதத்துடன் தான் அவளை நான் அழைத்து வந்தேன் என்றான் மணிவாசகம். ஹேமலதாவை விசாரித்தபொழுது நான் இங்கு வந்த ஒரு வாரத்தில் பெரிய பெண்ணாகி விட்டேன், நான் என் அப்பா, அம்மாவிடம் செல்ல விரும்பவில்லை, மணிவாகத்துடன் தான் வாழ்வேன் எனச் சொல்லி விட்டாள், அவள் தாய், தந்தையார் ஏமாற்றத்துடன் பம்பாய் திரும்பிச் சென்றனர், பஞ்சாயத்தார் அவர்கள் இருவருக்கும் திருமணம் செய்து வைத்தனர்.

**பேட்டி எண்:62**

| | | |
|---|---|---|
| வழக்குத் தொடுப்பவர் | : | முத்தாயி |
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | முத்தையா கோனார் |
| வழக்கு விவரம் | : | திருமணமான பெண்ணைப் பாலியல் பலாத்காரம் செய்ய முயற்சித்தல் |
| ஊர் | : | கட்டக்கான்பட்டி |
| சாதி | : | முத்தரையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆடி 25, 2000 |
| ஒன்றியம்/வட்டம் | : | கல்லல் |

கட்டான்கான்பட்டியில் வாழும் முத்தரையர் இனத்தைச் சேர்ந்த முத்தாயி என்ற பெண்ணை அதே கிராமத்தைச் சேர்ந்த முத்தையாக் கோனார் என்பவர் கெடுக்க முயன்றார் என அப்பெண் பஞ்சாயத்துத் தலைவரிடம் 2000 ஆண்டு ஆடி மாதம் 25ம் தேதி வழக்குத் தொடர்ந்தாள். இதன் காரணமாக அன்று இரவு 9.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. வழக்கை விசாரித்த பஞ்சாயத்துத் தலைவர் முத்தையாக் கோனார், முத்தாயி என்ற பெண் தனியாக இருக்கும் பொழுது அவளைப் பலாத்காரம் செய்து கெடுக்க முயன்றார் என்பது தெளிவாகத் தெரிகின்றது என்றும், ஆதலால் அவருக்கு ரூபாய் 5000 அபராதம் விதிக்கப்படுகின்றது என்றும் தீர்ப்புக்கூறினர். அத்துடன் வெளிநாட்டில் இருவருக்கும் (சிங்காப்பூர்) முத்தாயியின் கணவனுக்கும் இந்தத் தகவலைப் பஞ்சாயத்தார் தெரிவித்து அவனைச் சமாதானம் செய்து முத்தாயியுடன் வாழ வைத்தனர்.

**பேட்டி எண்:63**

| | | |
|---|---|---|
| வழக்குத் தொடுப்பவர் | : | மோகன் |
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | அருச்சுணன் |
| வழக்கு விவரம் | : | பெண்ணைப் பிடித்து இழுத்தல் |
| ஊர் | : | கொத்தங்குளம் |
| சாதி | : | இடையர் (கோனார்) |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | கார்த்திகை 25, 1998 |
| ஒன்றியம்/வட்டம் | : | திருப்புவனம் |

கொத்தங்குளம் கிராமத்தைச் சேர்ந்த மோகன் என்பவர் தம் மனைவி வள்ளி மாடுமேய்க்கும் பொழுது அதே ஊரைச் சேர்ந்த பறையர் இனத்தைச் சேர்ந்த அருச்சுணன் என்பவர் அவள் கையைப் பிடித்து இழுத்து தகாத முறையில் நடந்து கொண்டார் என 1998 ஆம் ஆண்டு கார்த்தியை மாதம் 25ம் தேதி கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடுத்தார். அதன் காரணமாக அன்று மாலை பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார் மோகன் மனைவியை விசாரித்த போது அப்பெண், அருச்சுணன் என்னைக் கையைப் பிடித்து இழுத்தது உண்மை ஆனால்,

எந்தத் தவறும் நடக்கவில்லையென்று உண்மையை ஒத்துக் கொண்டாள். பின்னர் பஞ்சாயத்தார் அருச்சுணனுக்கு ரூபாய் 5,000 தண்டத் தொகை விதித்தனர், அவர் கிராமப் பஞ்சாயத்து சபையில் கும்பிட்டு விழுந்து தாங்காது என்றும், கிராமம் மன்னிக்க வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார், பஞ்சாயத்துத் தலைவர் இறுதியாக ரூபாய் 1500 அபராதம் கட்டிடவிட வேண்டுமெனத் தீர்ப்புக் கூறினர்.

**பேட்டி எண்:64**

| | | |
|---|---|---|
| வழக்குத் தொடுப்பவர் | : | வெள்ளைச்சாமி |
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | கணேசன் |
| வழக்கு விவரம் | : | குடிஓ?விட்டுப் பிரச்சனை செய்தல் |
| ஊர் | : | மறக்குளம் |
| சாதி | : | மறவர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | சித்திரை 3, 1995 |
| ஒன்றியம்/வட்டம் | : | இளையான்குடி |

மறக்குளம் கிராமத்தைச் சேர்ந்த வெள்ளைச்சாமி என்பவர், கொண்ணக்குளம் கிராமத்தைச் சேர்ந்த கணேசன் என்பவர் இரவில்தான் சைக்கிளில் வந்து கொண்டிருந்த பொழுது அடித்து உதைத்துத் தன்னுடைய சைக்கிளையும் கெடிகாரத்தையும் பிடுங்கி விட்டார் என மறக்குளம் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1995 ஆண்டு சித்திரை மாதம் 3ம் தேதி வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று இரவு 10.00 மணிக்கு மல்லலில் கிராமப் பஞ்சாயத்து கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார் முதலில் வெள்ளைச்சாமியிடம் விசாரித்தனர். பின்னர் கணேசனிடம் விசாரித்தனர். பறையர் இனத்தைச் சேர்ந்த கணேசன் குடித்து விட்டு யாருக்கும் கட்டுப்படாமல் பேசுபவன், பஞ்சாயத்தார் அவனைப் பஞ்சாயத்திற்குக் கட்டுப்படாவிட்டால் காவல் துறையில் ஒப்படைத்து விடுவோம் என எச்சரித்தனர். அவன் பஞ்சாயத்தாரிடம் நடந்த உண்மையை ஒத்துக் கொண்டான். குடிபோதையில் தெரியாமல் செய்துவிட்டேன் எனக் கும்பிட்டு விழுந்து மன்னிப்புக் கேட்டான். பஞ்சாயத்தார் அவனுக்கு ரூபாய் 3000 அபராதம் போட்டனர், அவன் தாங்காது எனப் பலமுறை விழுந்தான் அவன் இறுதியில் ரூபாய் 300 அபராதம் கட்ட வேண்டுமெனப் பஞ்சாயத்தார் தீர்ப்புக் கூறினர்.

**குடும்பவழக்குகள் காதல், கலப்புத்திருமணம், திருமணச் சிக்கல்கள்**

**பேட்டி எண்:65**

| வழக்குத் தொடுப்பவர் | : | ஜெயபாரதி |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | கல்யாணகுமார் |
| வழக்கு விவரம் | : | காதல் பிரச்சனை |
| ஊர் | : | திருப்பாச்சேத்தி |
| சாதி | : | பள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | | பங்குனி 2, 2001 |
| ஒன்றியம்/வட்டம் | : | திருப்புவனம் |

ஜெயபாரதி என்பவள் தன்னைத் திருமணம் செய்து கொள்வதாக வாக்குக் கொடுத்துக் காதலித்து ஏமாற்றி விட்டுத் தற்பொழுது திருமணம் செய்ய கல்யாணகுமார் என்ற இளைஞன் மறுப்பதாக திருப்பாச்சேத்திப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 2000 ஆம் ஆண்டு பங்குனி மாதம் 2ம் தேதி வழக்குத் தொடர்ந்தாள். இதன் காரணமாக அன்று இரவு 9.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. தலைவர் ஜெயபாரதியிடம் விசாரித்தார். பின்னர் கல்யாணகுமாரிடம் விசாரித்தனர். கல்யாணகுமார் குடும்பத்தார் ஜெயபாரதி-கல்யாணகுமார் காதலை ஏற்றுக் கொள்ள மறுத்தனர். பஞ்சாயத்தார் இரு குடும்பங்களையும் அழைத்துப் பேசியும் அவர்கள் திருமணத்திற்கு ஒத்துக் கொள்ளவில்லை. பின்னர் பஞ்சாயத்தார் கல்யாணகுமாரிடம் இனிமேல் இந்தப் பெண்ணுடன் எந்தத் தொடர்பும் வைத்துக் கொள்ளக்கூடாது என எச்சரித்தனர். இந்தப் பெண் கேவலப்படுத்தப்பட்டுவிட்டாள். இதற்குக் காரணமான கல்யாணகுமார் ரூபாய் 10,000 அந்தப் பெண்ணிற்குத் தரவேண்டுமெனத் தீர்ப்புக் கூறினர். அபராதம் செலுத்தி விட்டு இரு குடும்பத்தாரும் பஞ்சாயத்தார் முன்னிலையில் எழுதிக் கொடுத்தனர்.

**பேட்டி எண்:66**

| வழக்குத் தொடுப்பவர் | : | கருப்பையா |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | சின்னப்பொண்ணு |
| வழக்கு விவரம் | : | காதல் திருமணம் |
| ஊர் | : | வேலூர் |
| சாதி | : | அகமுடையார் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | ஊர்ப்பஞ்சாயத்து |
| நாள் | : | 3.3.1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | மானாமதுரை |

கருப்பையா என்பவர் தன் மகன் காதல் திருமணத்தைத் தான் ஏற்றுக்கொள்ள முடியாது என்றும், சின்னப்பொண்ணு தனக்கு மருமகளாக வருவதற்குத் தான் சம்மதிக்க முடியாது என்றும், 3.3.1999 இல் வேலூர் பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று இரவு 10.00 மணிக்கு ஊர்ப்பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. சின்னப்பொண்ணும் குமாரசாமியும் காதலித்துத் திருமணம் செய்து கொண்டனர். இருவர் குடும்பத்தார்களும் அவர்கள் காதல் திருமணத்தை ஏற்றுக்கொள்ளவில்லை. பஞ்சாயத்தார்களிடம் குமாரசாமியின் தந்தை கருப்பையா தான் இவர்கள் திருமணத்தை ஏற்றுக் கொள்ள முடியாது எனத் திட்டவட்டமாகச் சொன்னார். பஞ்சாயத்தார் காதல் திருமணம் செய்து கொண்ட இருவரையும் விசாரித்தனர். அவர்கள் இருவரும் பஞ்சாயத்தார் முன்னிலையில் கும்பிட்டு விழுந்து நீங்கள் தான் எங்கள் காதலை ஏற்றுக் கொண்டு, திருமணத்தை நடத்தி வைத்து வாழ வைக்கவேண்டுமென்று கேட்டுக் கொண்டனர். உடனே பஞ்சாயத்தார் அவர்கள் இருவருக்கும் கோவிலில் திருமணம் செய்து வைத்தனர். ஆறு மாதங்களுக்குப் பின்னர் இருகுடும்பத்தாரும் ஒன்று சேர்ந்து விட்டனர்.

**பேட்டி எண்:67**

| வழக்குத் தொடுப்பவர் | : | மேல்குடி வண்ணார் பெண் அமிர்தம் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | இளைஞனின் பெற்றோர்கள் |
| வழக்கு விவரம் | : | காதல் திருமணம் |
| ஊர் | : | நடுவிக்கோட்டை கீழயூர் |
| சாதி | : | வண்ணார் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | புரட்டாசி 23, 1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | கல்லல் |

மேல்குடி கிராமம் வண்ணார் இனத்தைச் சேர்ந்த பெண் தன்னுடைய காதல் திருமணத்தைச் செல்லாது என்று தன் காதலனின் பெற்றோர்கள் (கண்டரமாணிக்கம் கள்ளர் இன இளைஞனின் பெற்றோர்கள்) எதிர்க்கின்றார்கள் என்று பஞ்சாயத்துத் தலைவரிடம் 1999 ஆம் ஆண்டு புரட்டாசி மாதம் 23ம் தேதி வழக்குத் தொடுத்தாள். இதன் காரணமாக அன்று பகல் 10.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்துத் தலைவர் இருசாதித் தலைவர்களையும் அழைத்துப் பேசி விசாரித்தார். மாப்பிள்ளை வீட்டார் வண்ணார் இனப்பெண்ணை ஏற்றுக் கொள்ள முடியாது என்று பிடிவாதமாகப் பேசினர், அவளைத் தீர்த்து வைத்துவிடுமாறு பஞ்சாயத்தாரிடம் வேண்டினர். பின்னர் பஞ்சாயத்தார் கலந்து பேசி காதல் திருமணம் செய்து கொண்ட அவ்விருவரையும் வெளியில் சென்று பிழைத்துக் கொள்ளுங்கள் என்று தீர்ப்புக் கூறினர். அவர்கள் இப்பொழுது சென்னையில் டெலிபோன் பூத் வைத்துப் பிழைத்து வருகின்றனர்.

**பேட்டி எண்:68**

| வழக்குத் தொடுப்பவர் | : | பாப்பாள் (கிராம பொதுமக்கள்) |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | முத்து |
| வழக்கு விவரம் | : | காதல் திருமணம் |
| ஊர் | : | பொன்னாகுளம் |
| சாதி | : | வளையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | சாதிப்பஞ்சாயத்து |
| நாள் | : | வைகாசி 6, 1990 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிவகங்கை |

பொன்னாகுளத்தைச் சேர்ந்த பாப்பாள் என்ற பறையர் இனப்பெண்ணை அதே ஊரைச் சேர்ந்த முத்து என்ற வளையர் இனத்தைச் சேர்ந்த இளைஞன் ஊரைவிட்டு வெளியே கூட்டிச் சென்று திருமணம் செய்து கொண்டதன் காரணமாக பொன்னாகுளம் ஊர்ப் பொதுமக்கள் அனைவரும் சாதிப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1990 ஆண்டு வைகாசி மாதம் 6ம் தேதி வழக்குத் தொடுத்தனர். அன்று இரவு 9.00 மணிக்கு மேல் சாதிப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்துத் தலைவர் வழக்குத் தொடுத்தவர்களான ஊர் பொதுமக்களை விசாரிக்கும் போது அவர்கள் அனைவரும் ஊர்க் கௌரவம் என்ன ஆவது? இவன் இப்படிச் செய்து விட்டானே என்று கூறி இதற்குத் தக்கதொரு முடிவெடுக்க வேண்டுமெனக் கூறினார்கள். குற்றம் சாட்டப்பட்டவரான முத்துவை அழைத்து விசாரிக்கும் போது, நான் அப்பெண்ணுடன் தான் வாழ்வேன், இல்லையென்றால் இருவரும் செத்துவிடுவோமென்று கூறினான். பஞ்சாயத்துத் தலைவர் சாதியவழக்கப்படி ஊர்ப்பொதுமக்கள் கருத்தைக் கேட்டுக்கொண்டு இருவரையும் பிரியும்படி கூறினார். முத்து, பாப்பாள் ஆகிய இருவருமே அதற்கு மறுத்துவிடவே, சட்டப்படி அவர்கள் பதிவுத்திருமணம் செய்து கொள்ள வேண்டுமெனத் தீர்ப்புக் கூறினர், இருவரும் அதனையேற்றுப் பதிவுத்திருமணம் செய்து கொண்டனர்.

**பேட்டி எண்:69**

| வழக்குத் தொடுப்பவர் | : | பெண் (தனம்) வீட்டார் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | முடியரசன், |
| வழக்கு விவரம் | : | கலப்புத்திருமணம் செய்து கொள்ளல் |
| ஊர் | : | கட்டாணி |
| சாதி | : | பறையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | நாட்டுப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஐப்பசி 10, 1990 |
| ஒன்றியம்/வட்டம் | : | காளையார் கோவில் |

கீரனூர் கிராமத்தைச் சேர்ந்த தனம் என்ற இடையார் இனப்பெண்ணை அதே ஊரைச் சேர்ந்த முடியரசன் ஊரைவிட்டுக் கூட்டிச்சென்று பதிவுத் திருமணம் செய்து கொண்டான். இதன் காரணமாக அப்பெண்ணின் பெற்றோர் தன் சாதிக்காரர்கள் துணையுடன் 1990 ஆம் ஆண்டு ஐப்பசி மாதம் 10ம் தேதி பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தனர். இதன் காரணமாக அன்று பகல் 11.00 மணிக்கு நாட்டார் முன்னிலையில் நாட்டுப்பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பறையர், இடையர் இனத்தார்கள் பெருந்திரளாகக் கூடினர். நாட்டுப்பஞ்சாயத்தின் தலைவர் குற்றம் சாட்டப்பட்ட முடியரசனை விசாரித்தார். அவன் தன்னைப் பெண்ணின் வீட்டாரும் இடையர் இனத்தவர்களும் மிரட்டுகிறார்கள் என்றும், நான் என் மனைவி தனத்துடன் தான் வாழ்வேன், இல்லையென்றால் செத்துவிடுவேன் என்றும் பஞ்சாயத்துத் தலைவரிடம் கூறினான். பின்னர் தனத்தை நாட்டுப்பஞ்சாயத்துத் தலைவர் விசாரித்தார். அவள் நான் கர்ப்பமாக இருக்கிறேன் என் கணவனுடன் தான் வாழ்வேன், என் தாய், தந்தையர் எனக்குத் தேவையில்லை என்றாள். தனத்தின் பெற்றோர்களும் அவர்கள் சாதிக்காரர்களும் விசாரிக்கப் பட்டனர். அவர்கள் எங்களுக்கு எங்கள் பெண் வேண்டும். நாங்கள் கர்ப்பத்தைக் களைத்துக் கொள்கிறோம், பறையனுடன் எங்கள் பெண் வாழக்கூடாது என்றனர். மீண்டும் பஞ்சாயத்தார் அப்பெண்ணிடம் உன் தந்தையுடன் உனக்குச் செல்லச் சம்மதமா? என்று கேட்டனர், அப்பெண் தனக்கு விருப்பமில்லை என்று கூறி அழுதாள் பின்னர் பஞ்சாயத்தார் கலந்து பேசி, பெண் அவள் தந்தையுடன் செல்ல மறுப்பதால் அவர்களை யாரும் தொந்தரவு செய்யக்கூடாது அவர்கள் சேர்ந்து வாழட்டுமெனத் தீர்ப்புக் கூறினர்.

**பேட்டி எண்:70**

| வழக்குத் தொடுப்பவர் | : | பெண் (கோமதி) |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | மணிவாசகம் |
| வழக்கு விவரம் | : | கலப்புத்திருமணம் செய்து கொள்ளல் |
| ஊர் | : | மதகுபட்டி |
| சாதி | : | பறையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | நாட்டுப்பஞ்சாயத்து |
| நாள் | : | கார்த்திகை 15, 1990 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிவகங்கை |

மதகுபட்டியைச் சேர்ந்த மணிவாசகம் என்ற பறையர் சாதி இளைஞர் கோமதி என்ற ஆசாரிப் பெண்ணை காதலித்துப் பதிவுத்திருமணம் செய்து கொண்டார். இதன் காரணமாகப் பெண் வீட்டார் 1990 ஆம் ஆண்டு கார்த்திகை மாதம் 25ம் தேதி நாட்டுப்பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தனர். அன்று பகல் 12.00 மணிக்குப் பஞ்சாயத்துக் கூடியது. பத்து ஊர்களைச் சேர்ந்த தலைவர்கள் பஞ்சாயத்தில் கூடினர். அவர்கள் கோமதியின் பெற்றோரிடம் விசாரித்தனர், அவர்கள் எங்கள் பெண் எங்களுக்கு வேண்டும் என்றனர். அவர்கள் பெண் கோமதியை அழைத்து விசாரித்தனர். அவள் நான் மணிவாசகத்துடன் தான் வாழ்வேன், இல்லையெனில் சாவேன் என்று கூறினாள், கோமதியை வாழவிடமாட்டோம். நாங்கள் அழித்து விடுவோம் என அவள் பெற்றோர்கள் மிரட்டினார்கள். உடனே மணிவாகத்திற்காக வாதாடிய பஞ்சாயத்தார் நாங்கள் உங்கள் பெண் கோமதியை உங்களுடன் அனுப்பி வைக்கிறோம். ஆனால் நாளைக்கு அப்பெண் உயிருக்கு ஏதாவது நேர்ந்தால் நீங்கள் தான் பொறுப்பு என எழுதிக் கொடுத்து விட்டு அவளை அழைத்துச் செல்லுங்கள் என்று கூறினர். இதனைக் கேட்ட பெண்ணின் பெற்றோர்களும் உறவினர்களும் வாய்திறக்கவில்லை. பின்னர் பஞ்சாயத்தார் மணிவாசகமும் கோமதியும் விரும்பிப் பதிவுத்திருமணம் செய்து கொண்டனர், அவர்களைப் பிரிக்க

வேண்டாம், யாரும் அவர்களை இனிமேல் மிரட்ட வேண்டாம் எனக் கூட்டத்தில் முடிவு செய்து தீர்ப்புக் கூறினர்.

**பேட்டி எண்:71**

| வழக்குத் தொடுப்பவர் | : | கருப்பையா |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | பாண்டி, லெட்சுமி |
| வழக்கு விவரம் | : | பெண்ணைக் கூட்டிக் கொண்டு ஓடுதல் |
| ஊர் | : | கொட்டக்குடி |
| சாதி | : | பறையன் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | ஊர்ப்பஞ்சாயத்து |
| நாள் | : | பங்குனி 20, 1989 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிவகங்கை |

கொட்டக்குடிக் கிராமத்தைச் சேர்ந்த கருப்பையா என்பவர் தன் மகள் லெட்சுமியைப் பாண்டி என்பவர் கூட்டிக் கொண்டு ஓடிவிட்டதாகப் பஞ்சாயத்துக் தலைவரிடம் 1989 ஆம் ஆண்டு பங்குனி மாதம் 20ம் தேதி வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று இரவு ஊர்ப்பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. கருப்பையா தன் வாதத்தில் பாண்டியின் பெற்றோர்தான் தன் மகளைத் தன்னிடம் ஒப்படைக்க வேண்டுமென்றார். பஞ்சாயத்தார் பாண்டி, லெட்சுமி ஆகிய இருவரையும் வெளியூரிலிருந்து கூட்டி வருவதற்கு இரண்டு ஆட்களை நியமித்தனர். அவர்கள் இருவரும் பாண்டியையும் லெட்சுமியையும் அழைத்து வந்து, மதுரையில் வைகை ஆற்றில் வைத்துப் பாண்டியை வெட்டிக் கொன்று விட்டு, லெட்சுமியை மட்டும் அழைத்து வருவதற்குத் திட்டமிட்டருந்தனர். இந்த மறைமுகத்திட்டம் பஞ்சாயத்தாருக்குத் தெரிய வந்ததால், அவர்கள் அந்த இரு ஆட்களையும் நிறுத்தி விட்டு, அவர்களுக்குப் பதிலாக வயதான இரண்டு பெரியவர்களை ஏற்பாடு செய்தனர். அவர்கள் வந்ததும் மறுநாள் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. கருப்பையா தலைவரிடம் தன் மகள் தனக்கு வேண்டும் என்றார். லெட்சுமியைப் பஞ்சாயத்தார் விசாரித்தனர். அதற்கு அவள் தான் தன் தந்தையிடம் செல்ல விருப்பமில்லை

யென்றும் பாண்டியுடன் வாழவே விருப்பம் என்றும் கூறினாள். பாண்டியிடம் விசாரித்த போது அவன் நான் லெட்சுமியுடன் தான் வாழ்வேன். என்னை லெட்சுமியின் வீட்டார் மிரட்டுகின்றனர். நீங்கள் தான் பாதுகாப்புத் தர வேண்டும், என்றான். பாண்டியின் பெற்றோர் அவ்விருவரையும் ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டனர். பின்னர் பஞ்சாயத்தார் கலந்து பேசி பாண்டி, லெட்சுமி ஆகிய இருவரையும் எங்காவது ஓடிச் சென்று பிழைத்துக் கொள்ளுங்கள் என அனுப்பி வைத்தனர்.

**பேட்டி எண்:72**

| வழக்குத் தொடுப்பவர் | : | யுவள்ளையம்மாளின் தந்தை |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | அழகு |
| வழக்கு விவரம் | : | பெண்ணைக் கூட்டிக்கொண்டு ஓடுதல் |
| ஊர் | : | காலாப்பூர் |
| சாதி | : | மறவர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | 18.06.2000 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிங்கம்புணரி |

மதுரை மாவட்டம் கோவளம்பட்டி கிராமத்தில் இருந்த என்மகள் வெள்ளையம்மாள் என்பவளைக் காலாப்பூர் கிராமத்தைச் சேர்ந்த அழகு என்ற இளைஞன் கூட்டிக் கொண்டு வந்துவிட்டான் எனக் காலாப்பூர் பஞ்சாயத்துக் தலைவரிடம் வெள்ளையம்மாளின் தந்தை 18.06.2000 அன்று வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாகக் காலாப்பூரில் அன்று பகல் 10.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. காலாப்பூர் மற்றும் கோவளம்பட்டி ஆகிய இரண்டு ஊர்களிலும் உள்ள முக்கியமான பஞ்சாயத்தார்கள் காலாப்பூரில் கூடி விவாதித்தனர். காலாப்பூர் பஞ்சாயத்துத் தலைவர் பெண்ணின் வயது என்ன என்பதை முதலில் விசாரித்தார். பின்னர் அப்பெண்ணிடம் நீ உன் தந்தையிடம்

செல்ல விரும்புகிறாயா? இல்லை உன் காதலன் அழகுடன் வாழ விருப்பமா? எனக் கேட்டார். வெள்ளையம்மாள் அழகுவாழவே தனக்கு விருப்பம் என்று கூறினாள். பஞ்சாயத்தார் கலந்து பேசி பெண்ணைத் தந்தையுடன் அனுப்ப முடியாது என்று கூறி, பஞ்சாயத்தாரே அவர்களுக்கு திருமணம் செய்து வைத்தனர்.

**பேட்டி எண்:73**

| வழக்குத் தொடுப்பவர் | : | செல்வியின் தந்தை |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | ரஜினி, செல்வி |
| வழக்கு விவரம் | : | பெண்ணைக் கூட்டிக் கொண்டு ஓடுதல் |
| ஊர் | : | க.கோவில்பட்டி |
| சாதி | : | முத்தரையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப் பஞ்சாயத்து |
| நாள் | : | 20.5.2000 |
| ஒன்றியம்/வட்டம் | : | கல்லல் |

ரஜினி என்பவர் என் மகளைக் கூட்டிக் கொண்டு ஓடிவிட்டார், ஆதலால் என் மகள் செல்வியை என்னிடம் ஒப்படையுங்கள் என்று செல்வியின் தந்தை 20.05.2000 அன்று கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று பகல் 11.00 மணிக்குப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார் செல்வியின் தந்தையிடம் விசாரித்தனர். அவர் எனக்கு என் மகள் வேண்டும் எனத் தகராறு செய்தார். பஞ்சாயத்தார் செல்வியிடம் விசாரித்தனர். அவள் எனக்கு என் புருசன் தான் வேண்டும், நான் என் தந்தையிடம் செல்ல முடியாது எனக் கூறினாள். பின்னர் பஞ்சாயத்தார் கலந்து பேசி, செல்விக்கும் அவள் கணவன் ரஜினிக்கும் பஞ்சாயத்தார் பாதுகாப்புத் தருவார்கள், இருவரும் கிராமத்தார் முன்னிலையில் திருமணம் செய்து கொள்ள வேண்டுமெனத்

தீர்ப்பளித்தனர். அத்தீர்ப்பின்படி திருமணம் செய்து கொண்ட அவர்கள் தற்பொழுது சந்தோசமாக வாழ்ந்து வருகின்றனர்.

**பேட்டி எண்:74**

| வழக்குத் தொடுப்பவர் | : | வெள்ளைக்காளை |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | முத்து |
| வழக்கு விவரம் | : | பெண்ணைக் கூட்டிக் கொண்டு ஓடுதல் |
| ஊர் | : | சூரக்குடி |
| சாதி | : | இடையர் (கோனார்) |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆவணி 5, 1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிங்கம்புணரி |

'சூரக்குடியைச் சேர்ந்த வெள்ளைக்காளை என்பவர் தன்மகள் அரசியை அதே ஊரைச் சேர்ந்த முத்து என்ற இளைஞன் கூட்டிக் கொண்டு ஓடிவிட்டதாகக் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1999 ஆம் ஆண்டு ஆவணி மாதம் 5ம் தேதி வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று பகல் 10.00 மணிக்குக் கிராமப் பஞ்சாத்துக் கூட்டப்பட்டது. விசாரித்ததில் முத்துவை விரும்பித்தான் வெள்ளைக்காளையின் மகள் அரசி சென்றுள்ளாள் எனவும், வெள்ளைக்காளை முத்துவை மிரட்டியது உண்மையெனவும் தெரிய வந்தது. இதனைத் தெரிந்து கொண்ட கிராமப் பஞ்சாயத்துத் தலைவர் அவர்கள் இருவர்க்கும் கிராமத்தார் முன்பு திருமணம் செய்து வைத்தார். அவர்கள் இருவரும் இன்று குழந்தையைப் பெற்று மகிழ்ச்சியாகக் குடும்பம் நடத்தி வருகின்றனர்.

**பேட்டி எண்:75**

| வழக்குத் தொடுப்பவர் | : | பெண் வீட்டார் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | மாப்பிள்ளை வீட்டார் |
| வழக்கு விவரம் | : | மீட்டிக் கொண்டு ஓடுதல் |
| ஊர் | : | யுசண்பகம் பேட்டை |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆவணி, 20, 1995 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிங்கம்புணரி |

செண்பகம் பேட்டை கிராமத்தைச் சேர்ந்த கள்ளர் இளைஞன் இரணியூர் கிராமத்தைச் சேர்ந்த மறவர் இனப்பெண்ணைக் கூட்டிக் கொண்டு ஓடிவிட்டதால், இரணியூர் கிராமத்தார் (பெண் வீட்டார்) பஞ்சாயத்துத் தலைவரிடம் 1995ஆம் ஆண்டு ஆவணி மாதம் 20-ம் தேதி வழக்குத் தொடர்ந்தனர். இதன் காரணமாக அன்று பகல் 11.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார் முன்னிலையில் செண்பகம் பேட்டை கிராமத்தார், வேறுசாதியப் பெண்ணை எங்கள் கிராமத்து இளைஞன் கூட்டிக் கொண்டு ஓடியது தப்புத்தான் என ஒப்புக் கொண்டனர். பெண் வீட்டார் எங்களுக்குப் பெண் வேண்டாம், அவள் இறந்துவிட்டதாகக் கருதிக் கொள்கிறோம் என்று கோபமாகப் பேசினர், பஞ்சாயத்தார் பின்னர் கலந்து பேசி மாப்பிள்ளையும் பெண்ணும் ஊருக்குள் இருக்கக் கூடாது எனவும், மாப்பிள்ளையின் பெற்றோர் அபராதமாக ரூபாய் 100 செலுத்த வேண்டுமென்றும் தீர்ப்புக் கூறினர்.

**பேட்டி எண்:76**

| வழக்குத் தொடுப்பவர் | : | சோதி |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | வீரன், சோதியின் பெற்றோர் |
| வழக்கு விவரம் | : | கூட்டிக்கொண்டு ஓடுதல் |
| ஊர் | : | எழுமாப்பட்டி |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | மார்கழி 25, 1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | கல்லல் |

எழுமாப்பட்டி கிராமத்தைச் சேர்ந்த சோதி என்பவள் தன்னைத் தன் காதலன் வீரனுடன் சேர்ந்துவாழவைக்க வேண்டுமென்று பஞ்சாயத்துத் தலைவரிடம் 1999 ஆம் ஆண்டு மார்கழி 25ம் தேதி வழக்குத் தொடர்ந்தாள், இதன் காரணமாக அன்று இரவு கிராமப்பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்துத் தலைவர் சோதி, வீரன் பெற்றோர்களை அழைத்து விசாரித்தனர். சோதி, வீரன் ஆகிய இருவரும் காதலர்கள். இவர்களின் பெற்றோர்கள் இவர்களது காதல் திருமணத்திற்கு எதிர்ப்புத் தெரிவித்தனர். இதனை அறிந்த பஞ்சாயத்தார்கள், சோதி, வீரன் ஆகிய இருவர்க்கும் ஊர்ப்பஞ்சாயத்துக் கூட்டத்தில் திருமணம் செய்து வைத்தனர். அவர்களை யாரும் எந்தத் தொந்தரவும் செய்யக்கூடாது எனவும் பஞ்சாயத்தார்கள் கேட்டுக் கொண்டனர்.

**பேட்டி எண்:77**

| வக்ஷக்குத் தொடுப்பவர் | : | சித்ரா |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | கருப்பையா |
| வழக்கு விவரம் | : | கூட்டிக்கொண்டு ஓடுதல் |
| ஊர் | : | செவரக்கோட்டை |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | தை 24, 2000 |
| ஒன்றியம்/வட்டம் | : | கல்லல் |

செவரக்கோட்டையைச் சேர்ந்த சித்ரா என்பவள் அதே ஊரைச் சேர்ந்த கருப்பையா என்ற இளைஞனைக் காதலித்து வந்தாள். அவர்களுடைய காதல் ஊருக்குத் தெரிந்ததும் சித்திரா கருப்பையாவுடன் ஊரைவிட்டு ஓடிவிட்டாள். இவர்கள் தங்கள் ஊருக்குள் நுழையமுடியாத சூழ்நிலையில் பஞ்சாயத்துத் தலைவரைச் சந்தித்துத் தங்களை காப்பற்ற வேண்டுமென 2000 ஆண்டு தைமாதம் 24ம் தேதி முறையிட்டு வழக்குத் தொடர்ந்தனர். இதன் காரணமாக அன்று இரவு 9.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தில் சித்திரா, கருப்பையா ஆகிய இருவருக்கும் பஞ்சாயத்தார் முறைப்படி திருமணம் செய்து வைத்தனர். தற்பொழுது இருவருக்கும் ஒரு குழந்தை பிறந்துள்ளது.

**பேட்டி எண்:78**

| வழக்குத் தொடுப்பவர் | : | காந்தி (பள்ளர்) |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | செகநாதன் (அகமுடையார்) |
| வழக்கு விவரம் | : | கூட்டிக் கொண்டு ஓடுதல் |
| ஊர் | : | பச்சேரி |
| சாதி | : | பள்ளர், அகமுடையார் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | 15.05.1995 |
| ஒன்றியம்/வட்டம் | : | மானாமதுரை |

பச்சேரிக் கிராமத்தைச் சேர்ந்த காந்தி என்பவர் தனது மகளை அதே ஊரைச் சேர்ந்த செகநாதன் என்பவர் கூட்டிக் கொண்டு ஓடிவிட்டார் எனவும், அவர்களைச் சேர்த்து வாழ வைக்க வேண்டுமெனவும் பச்சேரிக் கிராப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 15.05.1995 இல் வழக்குத் தொடுத்தார். இதன் காரணமாக அன்று இரவு 10.00 மணிக்குக் கிராமப்பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்துத் தலைவர் காந்தியிடம் முதலில் விசாரித்தார், அவர் தன் மகளைச் செகநாதன் என்பவர் கடத்திச் சென்று திருப்பூரில் ஆறுமாதகாலம் குடும்பம் நடத்தி இருக்கின்றார்.

அவளை இனி யாரும் திருமணம் செய்து கொள்ளமாட்டார்கள், இருவரையும் சேர்த்து வாழவையுங்கள் என்றார். காந்தி பள்ளர் இனத்தைச் சேர்ந்தவர் செகநாதன் ஏற்கனவே திருமணமானவர், அவர் அகமுடையார் இனத்தைச் சேர்ந்தவர். ஆதலால் செகநாதன் மனைவியும் அவர்கள் குடும்பத்தாரும் இதனை ஒப்புக் கொள்ள மறுத்தனர். பின்னர் பஞ்சாயத்தார் கலந்து பேசி செகநாதன் ஏற்கனவே திருமணமானவர் என்பது தெரிந்தும் இந்தப் பெண் அவனுடன் சென்றது தவறு என்றும், எனவே செகநாதன் அந்தப் பெண்ணிற்கு ரூபாய் 50,000 தந்துவிட வேண்டுமென்றும், இந்தப் பணத்தைக்கொண்டு அந்தப் பெண்ணை வேறிடத்தில் மணம் முடித்துக் கொடுக்க வேண்டுமென்றும் தீர்ப்புக் கூறினர். தீர்ப்பினைப் பெண் வீட்டார் ஏற்றுக் கொள்ள வில்லை, இன்று வரை பணத்தையும் பெற்றுக் கொள்ளவில்லை அந்தப் பெண் தற்பொழுது காவல் துறையில் பணியாற்றி வருகின்றாள்.

**பேட்டி எண்:79**

| வழக்குத் தொடுப்பவர் | : | முத்துலெட்சுமியின் தந்தை ஆனந்தம் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | முத்துலெட்சுமியின் மாமன் மகன் |
| வழக்கு விவரம் | : | பெண்ணின் திருமணத்தைத் தடுத்தல் |
| ஊர் | : | கொட்டக்குடி |
| சாதி | : | பறையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | மாசி 17, 1985 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிவகங்கை |

கொட்டக்குடி கிராமத்தைச் சேர்ந்த முத்துலெட்சுமியின் தந்தை ஆனந்தம் என்பவர் தன்மகள் முத்துலெட்சுமியின் திருமணத்தை முத்துலெட்சுமியின் மாமன் மகள் தடுப்பதாக 1985 ஆம் ஆண்டு மாசி மாதம் 17-ஆம் தேதி பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தார். அதன் காரணமாக அன்று இரவு எட்டு

மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்துத் தலைவர் முத்துலெட்சுமியின் தந்தை ஆனந்திடம் விசாரித்தனர். அதற்கு அவர் நான் என் மகளை வேறு ஒருத்தருக்கு மணம் பேசி முடித்துவிட்டேன், அத்திருமணத்தை முத்துலெட்சுமியின் மாமன்மகன் தடுக்கிறான் என்றார். முத்துலெட்சுமியின் மாமன் மகனிடம் பஞ்சாயத்தார் விசாரித்தனர். முத்துலெட்சுமி ஏற்கனவே திருமணமாகி விவாகரத்துப் பெற்றவள், அவளுக்குக் குழந்தையில்லை. நான் ஏற்கனவே திருமணமாகிக் குடும்பமாக இருப்பவன் எனத் தெரிந்தும் முத்துலெட்சுமி என்னுடன் தொடர்பு வைத்திருந்தாள். இருவரும் யாருக்கும் தெரியாமல் மதுரை மீனாட்சியம்மன் கோவிலில் திருமணம் செய்து கொண்டோம். நடைபெறவுள்ள திருமணத்தைத் தடுத்து நிறுத்த வேண்டுமென்றும் முத்துலெட்சுமியின் மாமன் மகன் பஞ்சாயத்தாரிடம் கூறினான். பஞ்சாயத்தார் அவனிடம் நீ திருமணம் செய்து கொண்டதற்கு ஆதாரம் உண்டா? எனக் கேட்டார், அதற்கு அவன் பேசாமல் இருந்தான். பஞ்சாயத்தார் தீர்ப்பில் திருமணமான நீ இந்தத் திருமணத்தில் தலையிடக்கூடாது என்று எச்சரித்து, முத்துலெட்சுமி திருமணத்திற்கு உதவினர். இப்போது முத்துலெட்சுமி ஆறு குழந்தைகளுக்குத் தாயாக உள்ளாள்.

**பேட்டி எண்:80**

| | | |
|---|---|---|
| வழக்குத் தொடுப்பவர் | : | ராக்கு |
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | ஆனந்து |
| வழக்கு விவரம் | : | காதலித்துத் திருமணத்திற்கு மறுத்தல் |
| ஊர் | : | வீழனேரி |
| சாதி | : | பறையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | சாதிப்பஞ்சாயத்து |
| நாள் | : | மார்கழி 16, 1995 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிவகங்கை |

வீழனேரி கிராமம் ராக்கு என்ற பெண், ஆனந்து என்பவர் தன்னை காதலித்து ஏமாற்றிவிட்டுத் திருமணம் செய்து கொள்ள மறுக்கிறார் எனச் சாதிப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1995 ஆம் ஆண்டு மார்கழி மாதம் 16-ம் தேதி வழக்குத் தொடுத்தார். இதன் காரணமாக அன்று இரவு எட்டு மணிக்குச் சாதிப்பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார் வழக்குத் தொடுத்த ராக்குவை அழைத்து விசாரித்தனர். அவள் ஆனந்து என்னைத் திருமணம் செய்து கொள்ளுவதாகச் சொல்லி என்னை ஏமாற்றி விட்டார், நான் கர்ப்பமாக இருக்கிறேன். ஆனந்து வீட்டில் என்னைத் திருமணம் செய்து கொள்ள மறுக்கின்றனர். என்னை ஆனந்துக்கு கட்டி வைக்க வேண்டுமென அழுதாள், பஞ்சாயத்தார் ஆனந்துவை அழைத்து விசாரித்தனர், அவன் நான் எந்தத் தவறும் செய்யவில்லை, அவன் கர்ப்பத்திற்கு நான் காரணமில்லை நான் என் மாமன் மகளைத் திருமணம் செய்து கொள்ளப் போகிறேன் என்றான். பஞ்சாயத்தார் ஊர்க்காரர்களையும் விசாரித்தனர், ராக்குவும் ஆனந்தும் தவறாகப் பழகிய உண்மை தெரிய வந்தது. உடனே பஞ்சாயத்தார் கலந்து பேசி, ஆனந்து ராக்குவைத் திருமணம் செய்து கொள்ள வேண்டுமெனவும் வேறுயாரும் அவனுக்குப் பெண்தரக்கூடாது எனவும் தீர்ப்புக் கூறி, ராக்குவை ஆனந்துக்குத் திருமணம் முடித்து வைத்தனர்.

**பேட்டி எண்:81**

| | | |
|---|---|---|
| வழக்குத் தொடுப்பவர் | : | சாந்தி என்ற முத்துப்பாண்டி |
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | பழனி |
| வழக்கு விவரம் | : | காதலித்துத் திருமணத்திற்கு மறுத்தல் |
| ஊர் | : | கண்டாங்கிப்பட்டி |
| சாதி | : | இடையர் (கோனார்) |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | வைகாசி 27, 1992 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிவகங்கை |

இராமன் மகன் சாந்தி என்பவள் பழனி என்பவர் தன்னைத் திருமணம் செய்து கொள்வதாகக் கூறிக் காதலித்து ஏமாற்றிவிட்டதாக 1992 ஆம் ஆண்டு வைகாசி மாதம் 27-ம் தேதி பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தாள். இதன் காரணமாக அன்று இரவு 8.00 மணிக்குப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. கிராமப் பஞ்சாயத்துத் தலைவர் சாந்தியிடம் விசாரித்தார். சாந்தி தனக்கு அப்பா இல்லையென்றும் அம்மா மட்டுமே இருப்பதாகவும் கூறினாள். மேலும் அவள் பஞ்சாயத்துத் தலைவரிடம் நான் பழனியை விரும்பினேன், அவரும் என்னைக் காதலித்தார், அவர் என்னைத் திருமணம் செய்து கொள்வதாக என்னிடம் சத்தியம் செய்தார். அன்று முதல் என்னுடன் உறவும் வைத்துக் கொண்டார், என்னைக் கர்ப்பிணி ஆக்கிவிட்டு இன்று என்னைத் திருமணம் செய்து கொள்ள மறுக்கிறார். அவருக்கு என்னைத் திருமணம் செய்து வைக்க வேண்டுமென்று பஞ்சாயத்துத் தலைவரிடம் முறையிட்டு அழுதாள், பஞ்சாயத்தார் குற்றம் சாட்டப்பட்ட பெரியகருப்பன் மகன் பழனியை விசாரித்தனர். அதற்கு அவர் நான் கர்ப்பிணியை மணக்க முடியாது என்றார். பஞ்சாயத்தார் தந்தையில்லாத பெண்ணை ஏமாற்றிக் கெடுத்துவிட்டுத் திருமணம் செய்து கொள்ள மறுக்கிராயா? எனக் கண்டித்தனர். பின்னர் பஞ்சாயத்தார் கலந்து பேசி பக்கத்திலுள்ள கோவிலில் இருவருக்கும் திருமணம் முடித்துவைத்தனர். இப்போது சாந்தி இரண்டு குழந்தைகளுக்குத் தாயாக உள்ளாள். கணவன்-மனைவி இருவரும் மகிழ்ச்சியாக வாழ்ந்து வருகின்றனர்.

**பேட்டி எண்:82**

| | | |
|---|---|---|
| வழக்குத் தொடுப்பவர் | : | அந்தோணி அம்மாள் |
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | பாஸ்கரன் |
| வழக்கு விவரம் | : | பெண்ணைக் காதலித்து ஏமாற்றுதல் |
| ஊர் | : | நெடுங்குளம் |
| சாதி | : | கிருத்துவர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமபஞ்சாயத்து |
| நாள் | : | மார்கழி8, 1998 |
| ஒன்றியம்/வட்டம் | : | காளையார்கோயில் |

அந்தோணி அம்மாள் என்பவள் நெடுங்குளத்தைச் சேர்ந்த பாஸ்கரன் என்பவர் தன்னைக் காதலித்து ஏமாற்றி விட்டதாக நெடுங்குளம் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1998 ஆம் ஆண்டு மார்கழி மாதம் 8-ம் தேதி வழக்குத் தொடுத்தாள். இதன் காரணமாக அன்று பகல் 11.00 மணிக்கு நெடுங்குளத்தில் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தில் தனக்கும் அந்தப் பெண்ணுக்கும் எந்தத் தொடர்பு இல்லை என்று பாஸ்கரன் கூறினான். சாட்சி யார் என அந்தோணி அம்மாளிடம் பஞ்சாயத்தார் கேட்டனர், அவள் ஒரு பையனைக் கூட்டிக்கொண்டு வந்தாள். அந்தப் பையனிடம் விசாரித்ததில் அந்தோணி அம்மாளும் பாஸ்கரனும் காதலித்து உண்மைதான் என்ற விவரத்தைப் பஞ்சாயத்தார் தெரிந்துகொண்டனர். பின்னர் பஞ்சாயத்தார் அந்தோணி அம்மாளைப் பாஸ்கரன் காதலித்துக் கெடுத்தது உண்மைதான் எனமுடிவு செய்து அவர்களுக்குத் திருமணம் செய்து வைத்தனர். பின்னர் ஒருவாரம் கழித்து வேறு பஞ்சாயத்தாரை வைத்து அந்தோணி அம்மாளைத் தீர்த்து விட்டு பாஸ்கரன் சிங்காப்பூர் சென்று விட்டான். அந்தப் பெண் வேறு ஆடவனைத் திருமணம் செய்து கொள்ளாமல் வயிற்றில் குழந்தையைச் சுமந்து கொண்டு வாழ்ந்து வருகின்றாள்.

**பேட்டி எண்:83**

| வழக்குத் தொடுப்பவர் | : | சந்திரா |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | குமார் |
| வழக்கு விவரம் | : | பெண்ணைத் திருமணம் செய்து கொள்வதாகக் கூறி ஏமாற்றுதல் |
| ஊர் | : | இடையமேலூர் |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | நான்கு ஊர்ப் பஞ்சாயத்து |
| நாள் | : | சித்திரை 5, 1990 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிவகங்கை |

இடையமேலூர் கிராமத்தைச் சேர்ந்த சந்திரா என்ற பெண் தன்னைத் திருமணம் செய்து கொள்ளுவதாகக் கூறி ஏமாற்றிவிட்டதாகக் குமார் என்பவர் மீது 1990ஆம் ஆண்டு சித்திரைமாதம் 5ம் தேதி பஞ்சாயத்துக் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தாள். இதன் காரணமாக நான்கு ஊர்ப்பஞ்சாயத்து அன்று பகல் 10.00மணிக்குக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்துத் தலைவர் சந்திராவை விசாரித்தார் அதற்கு அவள் குமார் என்பவர் என்னைக் காதலித்தார். என்னுடன் நெருங்கிப் பழகினர் நாங்கள் அடிக்கடி பனங்காட்டில் சந்தித்தோம். ஆதலால் நான் கர்ப்பமாக இருக்கிறேன். அவர் என்னைத் திருமணம் செய்து கொள்ளுவதாக ஏமாற்றிப்பழகி கர்ப்பமடையச் செய்து விட்டார். இப்பொழுது என்னைத் திருமணம் செய்து கொள்ள மறுக்கிறார். எனக்கு அவரைத் திருமணம் செய்து வையுங்கள் என்று கூறி அழுதாள். பஞ்சாயத்துத்தலைவர் குமாரிடம் விசாரித்தார். பின்னர் ஊர்க் காரர்களையும் விசாரித்தனர். குமாரும் சந்திராவும் நெருங்கிப் பழகிய உண்மை பஞ்சாயத்தாருக்கு தெரிய வந்தது. பஞ்சாயத்தார் கலந்துபேசி குமார் வேறு எங்கும் திருமணம் செய்யக்கூடாது என்றும், சந்திராவைத்தான் திருமணம் செய்து கொள்ளவேண்டுமென்றும் தீர்ப்புக் கூறினர்.

**பேட்டி எண்:84**

| வழக்குத் தொடுப்பவர் | : | பஞ்சு |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | சேகர் |
| வழக்கு விவரம் | : | காதலித்துப் பெண்ணை ஏமாற்றுதல் |
| ஊர் | : | மேலாப்பிடாவூர் |
| சாதி | : | பறையன் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | ஊர்ப்பஞ்சாயத்து |
| நாள் | : | 5.10.2000 |
| ஒன்றியம்/வட்டம் | : | மானாமதுரை |

பஞ்சு என்ற பெண் சேகர் என்பவர் வேலைக்குச் சென்ற இடத்தில் தன்னைக் காதலித்து ஏமாற்றிவிட்டார் என்றும், அவரைத் திருமணம் முடித்து வைக்க வேண்டுமென்றும் மேலாப்பிடாவூர் பஞ்சாயத்துத் தலைவரிடம் 5.10.2000 அன்று வழக்குத் தொடுத்தாள். இதன் காரணமாக அன்று இரவு 10.00 மணிக்கு ஊர்ப்பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. சேகர் பஞ்சாயத்தார் முன்னிலையில் தான் பஞ்சுவைக் காதலித்தது உண்மையென ஒத்துக் கொண்டார். பஞ்சாயத்தார் அவர்கள் இருவரையும் மானாமதுரை கோவிலுக்கு அழைத்துச் சென்று திருமணம் செய்து வைத்தனர். அவர்கள் இப்பொழுது சேர்ந்து வாழ்ந்து வருகின்றனர்.

**குடும்ப வழக்குகள்- கணவன், மனைவியர் குடும்பச்சண்டை**

**பேட்டி எண்:85**

| வழக்குத் தொடுப்பவர் | : | மெய்யன் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | இராமாயி |
| வழக்கு விவரம் | : | குடும்ப வழக்கு |
| ஊர் | : | திருமுருகாணிப்பட்டி |
| சாதி | : | அம்பட்டையன் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆனி 20, 1995 |
| ஒன்றியம்/வட்டம் | : | திருப்பத்தூர் |

மெய்யன் என்பவர் தன் மகள் திருமணத்தில் ஈடுபட்டு தனக்கு அவமானத்தைத் தேடித் தந்ததாக தன் மனைவியுடன் சேர்ந்திருந்தவர் மீது குற்றம் சுமத்தி, தன் மனைவிமீது 1995ஆம் ஆண்டு ஆனிமாதம் 20ம் தேதி திருமுருகாணிப்பட்டி பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று இரவு 9.00 மணிக்கு கிராமப்பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. விசாரணையில் இராமாயியுடன் ஆரம்ப காலத்திலிருந்து சேர்ந்திருந்தவர், மெய்யன் மகளுக்குத் திருமணச்செலவு செய்ய முன்வந்ததைப் பொறுக்க முடியாமல் மெய்யன்

பங்காளிகள் பெரிய கலவரத்தில் ஈடுபட்டது தெரிய வந்தது. இனிமேல் இவ்வாறு நடந்துகொள்ளக்கூடாது என இராமாயிடம் பஞ்சாயத்தார் கண்டித்துக் கேட்டுக் கொண்டனர். இராமாயி வைத்திருந்த காதலனை அழைத்து நீ பெண்ணுக்குத் தகப்பனாக நடந்து கொள்ள முயற்சிக்காதே என கண்டித்து அறிவுரை கூறினார், அந்தப்பெண்ணிற்கு மெய்யன்தான் தகப்பன் என்றும் அவர் சொல்லுப்படிதான் இராமாயி நடந்து கொள்ள வேண்டுமென்றும் தீர்ப்புக் கூறினர்.

**பேட்டி எண்:86**

| வழக்குத் தொடுப்பவர் | : | ரெத்தினம் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | பிச்சை |
| வழக்கு விவரம் | : | கணவன்-மனைவி தகராறு |
| ஊர் | : | நாட்டரசன் கோட்டை |
| சாதி | : | இடையர் (கோனார்) |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | வைசாசி 7, 1996 |
| ஒன்றியம்/வட்டம் | : | காளையார் கோயில் |

நாட்டரசன் கோட்டைக் கிராமம் பிச்சை மனைவி ரெத்தினம் என்பவள், தன் கணவர் குடித்துவிட்டு கொடுமைப்படுத்துகின்றார் என்றும், எங்களுக்குள் விவாகரத்துச் செய்து வையுங்கள் என்றும் 1996 ஆம் ஆண்டு வைகாசி மாதம் 7ம் தேதி பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று இரவு எட்டுமணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. ரெத்தினம் பிச்சைக்கு இரண்டாவது மனைவியாவாள். ரெத்தினம், பிச்சை இருவரையும் விசாரித்து உண்மையான விவரங்களைத் தெரிந்து கொண்ட பஞ்சாயத்துத் தலைவர் இருவரையும் அழைத்து அறிவுரை சொன்னார். ரெத்தினத்தின் அக்காள் தான் பிச்சைக்கு முதல் மனைவியாவாள். ஆதலால் பஞ்சாயத்தார் அக்காள், தங்கை ஆகிய இருவரும் ஒற்றுமையாக இனிமேல் வாழவேண்டுமெனத் தீர்ப்புக் கூறினர்.

பஞ்சாயத்தார் தீர்ப்பின் படி அவர்கள் இருவரும் இன்று வரை மகிழ்ச்சியாகவும் ஒற்றுமையாகவும் வாழ்ந்து வருகின்றனர்.

**பேட்டி எண்:87**

| வழக்குத் தொடுப்பவர் | : | ராக்கு |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | செல்வம் |
| வழக்கு விவரம் | : | கணவன்-மனைவியர் குடும்பச்சண்டை |
| ஊர் | : | மேலச்சூரவந்தி |
| சாதி | : | இடையர் (கோனார்) |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமபஞ்சாயத்து |
| நாள் | : | ஐப்பசி 10, 1997 |
| ஒன்றியம்/வட்டம் | : | இளையாண்குடி |

சிறுவாளைக் கிராமத்தைச் சேர்ந்த ராக்கு என்பவள் தன் கணவர் கன்டக்டர் செல்வம் என்னை அடித்துத் துன்புறுத்துகின்றார். ஆதலால், நான் அவருடன் வாழ விரும்பவில்லை எனப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1997 ஆம் ஆண்டு ஐப்பசி மாதம் 10ம் தேதி வழக்குத் தொடுத்தார். இதன் காரணமாக அன்று இரவு 9.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. இருதரப்பினரும் விசாரிக்கப்பட்டனர். ஊர்காரர்கள் சிலரும் விசாரிக்கப்பட்டனர். விசாரிக்கப்பட்டதிலிருந்து கன்டக்டர் செல்வம் ஒருபேராசைக்காரன் என்பதையும், அவன்தன் மனைவியைக் கொடுமைப்படுத்தியது உண்மைதான் என்பதையும் தெரிந்து கொண்ட கிராமப் பஞ்சாயத்தார் கன்டக்டர் செல்வத்திடம் இனிமேல் நீ உன்மனைவி ராக்குவிடம் அன்பாக நடந்துகொள், மாட்டை அடிப்பது போல் அப்பெண்ணை அடிக்காதே, மீறி அப்பெண்ணைக் கொடுமைப்படுத்தினால் பஞ்சாயத்து மீண்டும் கூடி உன்மீது நடவடிக்கையெடுக்கும் எனத் தீர்ப்புக்கூறி, செல்வத்தையும் ராக்குவையும் வாழ வைத்தனர். மூன்று வருடங்கள் வாழாமல் இருந்த ராக்கு தற்போது மகிழ்ச்சியாக வாழ்ந்து வருகின்றாள்.

**பேட்டி எண்:88**

| வழக்குத் தொடுப்பவர் | : | காளியம்மை |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | பஞ்சவர்ணம் |
| வழக்கு விவரம் | : | கணவன்-மனைவி குடும்பச் சண்டை |
| ஊர் | : | திருவள்ளூர் |
| சாதி | : | தச்சர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | மார்கழி 2, 1991 |
| ஒன்றியம்/வட்டம் | : | இளையான்குடி |

திருவள்ளூர்க் கிராமத்தைச் சேர்ந்த காளியம்மை என்பவள், என் கணவன் குடித்துவிட்டு வந்து தினமும் என்னைக் கொடுமைப்படுத்துகின்றான் எனப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1991ஆம் ஆண்டு மார்கழிமாதம் 2ம் தேதி வழக்குத் தொடர்ந்தாள். இதன் காரணமாகக் கிராமப் பஞ்சாயத்து அன்று இரவு 9.00 மணிக்குக் கூட்டப்பட்டது. காளியம்மையிடம் பஞ்சாயத்துத் தலைவர் முதலில் விசாரித்தார். அதற்கு அவள், பஞ்சவர்ணம் தினமும் இரவு நேரத்தில் குடித்துவிட்டு வந்து என்னை அடித்துத் கொடுமைப்படுத்தி என்னிடம் தகாத முறையில் நடந்து கொள்கின்றார். நான் அன்றாடம் உழைத்துச் சம்பாதிக்கும் பணத்தை எடுத்துக் குடித்து விடுகின்றார். அவர் ஒழுங்காக வேலைக்கும் செல்வதில்லை. எத்தனை நாட்களுக்குத்தான் இந்தக் கொடுமையை அனுபவிக்கமுடியும் எனத் தெரிவித்தாள். பின்னர் குற்றம் சாட்டப்பட்ட பஞ்சவர்ணத்திடம் பஞ்சாயத்தார் விசாரித்தனர். அவர் குற்றத்தை ஒப்புக் கொண்டு பஞ்சாயத்தார் முடிவிற்குக் கட்டுப்படுவதாகக் கிராமத்தில் கும்பிட்டு விழுந்தார். பின்னர் பஞ்சாயத்துத் தலைவர் மற்ற உறுப்பினர்களுடன் கலந்து பேசித் தனது தீர்ப்பினைக் கூறினர். தீர்ப்பில் பஞ்சவர்ணம் நாள் ஒன்றுக்கு ரூபாய் 20 தன் மனைவியிடம் கொடுக்க வேண்டும், வேலையில்லாத நாட்களில் பணம் கொடுக்கத் தேவையில்லை. பஞ்சவர்ணம் இனிமேல் தன் மனைவி காளியம்மையை அடிக்கக் கூடாது குடிக்கவும் கூடாது என அறிவுரை கூறியும் கண்டித்தும் அனுப்பினர்.

**பேட்டி எண்:89**

| வழக்குத் தொடுப்பவர் | : | மாரியம்மாள் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | மகேஷ் |
| வழக்கு விவரம் | : | கணவன்-மனைவி குடும்பப் பிரச்சனை |
| ஊர் | : | பெரும்பாளை |
| சாதி | : | பள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | புரட்டாசி 7, 1998 |
| ஒன்றியம்/வட்டம் | : | இளையான்குடி |

பெரும்பாளைக் கிராமத்தைச் சேர்ந்த மாரியம்மாள் என்பவள் தன் கணவர் தன்னை அடித்துத் துன்புறுகின்றார், அவர் என்னை என் உறவினர் வீடுகளுக்குச் செல்ல அனுமதிப்பதில்லை, அடிக்கடி காரணமில்லாமல் என்னிடம் சண்டை போடுகின்றார் என 1998 ஆம் ஆண்டு புரட்டாசி மாதம் 7ம் தேதி பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடுத்தாள். இதன் காரணமாக அன்று இரவு 8.00மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. மாரியம்மாளிடம் பஞ்சாயத்துத் தலைவர் விசாரித்தார். பின்னர் மகேஷிடம் தலைவர் விசாரித்தார், அவர் தன் மனைவியிடம் அடிக்கடி சண்டை போடுவது தெரிய வந்தது. பின்னர் பஞ்சாயத்தார் கலந்து பேசி மகேஷிடம் 'இனிமேல் நீ ஒழுங்காகவும் சண்டை போடாமல் அமைதியாகவும் குடும்பம் நடத்த வேண்டும், தவறினால் பஞ்சாயத்தார் உன்மீது நடவடிக்கை எடுப்போம்' என அறிவுரை சொல்லி அனுப்பினர்

**பேட்டி எண்:90**

| வழக்குத் தொடுப்பவர் | : | கண்ணன் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | விசயா |
| வழக்கு விவரம் | : | கணவன்-மனைவி குடும்பச் சண்டை |
| ஊர் | : | கீழச்செவல்பட்டி |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | மார்கழி 20, 1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | திருப்பத்தூர் |

விசயா என்பவள் ஒரு பெண் குழந்தைக்குத் தாயான பின்னர் தன் கணவன் கண்ணன் பெரிய குடிகாரன் என்றும் தான் அவனுடன் வாழ முடியாது என்றும் கூறிக் கணவனை விட்டுப் பிரிந்து பதினைந்து ஆண்டுகளாக துவரங்குறிச்சியிலுள்ள தன் தந்தை வீட்டில் வாழ்ந்து வந்தாள். விசயா-கண்ணன் ஆகியோரின் மகன் பெரிய பெண் ஆனபின் கணவனும் மனைவியும் சேரவேண்டுமென அவர்களின் உறவினர்கள் கேட்டுக் கொண்டனர். இதன் காரணமாக 1999ஆம் ஆண்டு மார்கழி மாதம் 20ம் தேதி பகல் 10.00 மணிக்குக் கீழச்செவல்பட்டியில் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார் முன்னிலையில் கண்ணன் ஒரு பெரிய குடிகாரர், அதனால் நான் அவருடன் வாழமுடியாது என்று வாதாடினாள் விசயா, கண்ணன் திருந்தி விட்டான் என்றும், இனிமேல் குடிக்கமாட்டான் என்றும் பஞ்சாயத்தார் விசயாவிற்கு உறுதி வழங்கி அவர்களைச் சேர்த்து வைத்தனர். இன்று அவர்கள் மகிழ்ச்சியாகக் குடும்பம் நடத்தி வருகின்றனர்.

**பேட்டி எண்:91**

| வழக்குத் தொடுப்பவர் | : | சரசு |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | சுப்பையா |
| வழக்கு விவரம் | : | கணவன்-மனைவி குடும்பச் சிக்கல் |
| ஊர் | : | எஸ்.வி.மங்களம் |
| சாதி | : | வண்ணார் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | மார்கழி 10, 1995 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிங்கம்புணரி |

எஸ்.வி மங்களத்தைச் சேர்ந்த சரசு என்பவள் தன் கணவன் குடித்து விட்டு வந்து தன்னைக் கொடுமைப்படுத்துவதாகக் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1995 ஆம் ஆண்டு மார்கழி மாதம் 10ம் தேதி வழக்குத் தொடுத்தாள். இதன் காரணமாக அன்று பகல் 10.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார்

கணவன், மனைவி ஆகிய இருவரையும் அழைத்து விசாரித்தனர். அவர்களுக்கு +2 படிக்கும் ஒரு மகனும் இரண்டு பெண்பிள்ளைகளும் உள்ளனர். +2 படிக்கும் அவர்களது மகன் தங்களுக்குத் தந்தை வேண்டாம் என்றும், அவர் தங்களுடன் தங்கி இருக்கக் கூடாது என்றும் பஞ்சாயத்தார்களிடம் கூறினான். சரசுவும் தன் கணவன் சுப்பையாவைத் தீர்த்து வைத்து விடுமாறு பஞ்சாயத்தார்களிடம் அழுதாள். பஞ்சாயத்தார் சுப்பையாவை அழைத்துப் பேசிப் பின்னர் முடிவெடுத்தனர். பஞ்சாயத்தார் தீர்ப்பின்படி அன்றிலிருந்து சுப்பையா துணிகள் தேய்க்கும் வருமானத்தை அப்படியே தன் மனைவி சரசுவிடம் கொடுத்துவிட வேண்டும் என்றும், நாளொன்றுக்கு பத்து ரூபாய் மட்டும் பெற்றுக் கொள்ள வேண்டுமெனவும், இனிமேல் குடிக்கக்கூடாது என்றும் கூறப்பட்டது. இதை மீறினால் சுப்பையா மீது மேல்நடவடிக்கையை இந்தப் பஞ்சாயத்து எடுக்குமெனத் தீர்ப்புக் கூறினர். மூன்று நாட்களாக தொடர்ந்து இந்தப் பஞ்சாயத்து நடைபெற்றது. இன்று வரை அவர்கள் மகிழ்ச்சியாகக் குடும்பம் நடத்தி வருகின்றனர்.

**பேட்டி எண்:92**

| வழக்குத் தொடுப்பவர் | : | வய்ந்தி |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | தினகரன் |
| வழக்கு விவரம் | : | கணவன்-மனைவி குடும்பச் சண்டை |
| ஊர் | : | முருகப்பஞ்சான் (எ)புதுக்குளம் |
| சாதி | : | அகமுடையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆனி 15, 2000 |
| ஒன்றியம்/வட்டம் | : | மானாமதுரை |

முருகப்பஞ்சான் கிராமத்தைச் சேர்ந்த வசந்தி என்பவள் தனது கணவன் தினகரன் தன்னுடன் வாழ விருப்பமில்லாமல் கொடுமைப்படுத்துகிறான் என முருகப்பஞ்சான் பஞ்சாயத்துத் தலைவரிடம 2000 ஆம் ஆண்டு ஆனி மாதம் 15ம்

தேதி வழக்குத் தொடர்ந்தாள். இதன் காரணமாக அன்று இரவு 9.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்துக் தலைவர் முதலில் வசந்தியையும் தினகரனையும் விசாரித்தார். தினகரன் தான் வாழ விரும்புவதாகவும் ஆனால் அவன் மனைவி வசந்தி ஒழுங்காக நடந்து கொள்ளவதில்லை எனவும் பஞ்சாயத்துத் தலைவரிடம் கூறினான். பின்னர் பஞ்சாயத்துத் தலைவர் இனிமேல் இருவரும் சண்டை போடாமல் ஒற்றுமையாக வாழவேண்டுமெனவும், வசந்தி அடிக்கடி அவள் தாயார் வீட்டிற்குச் செல்லக்கூடாது எனவும், அப்படிச் செல்ல வேண்டுமென்றால் அவள் தன் கணவன் தினகரனுடன் தான் செல்ல வேண்டுமெனவும் தீர்ப்புக் கூறினார். இதன்படி பஞ்சாயத்தார் அவர்களிடம் எழுதி வாங்கிக் கொண்டனர் இன்று அவர்கள் மகிழ்ச்சிகரமாக குடும்பம் நடத்திவருகின்றனர்.

**பேட்டி எண்:93**

| வழக்குத் தொடுப்பவர் | : | வள்ளி |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | முத்து |
| வழக்கு விவரம் | : | கணவன், தன் மனைவியை ஒழுங்காக வாழவைக்காமல் விடுதல் |
| ஊர் | : | கருப்பட்டி |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆனி 20, 1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | திருப்புவனம் |

வள்ளி என்பவள் தன் கணவன் முத்து என்பவர் தன்னை இரண்டு வருடங்களாகச் சரியாக வாழவைக்கவில்லை என்றும் ஆதலால் தன் தாய்வீட்டில் தங்கியிருப்பதாகவும் தன்னைத் தன்கணவனுடன் சேர்ந்து வாழவைக்க வேண்டுமெனவும் 1999ஆம் ஆண்டு ஆனிமாதம் 20ம் தேதி கருப்பட்டி பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தாள். இதன் காரணமாக அன்று பகல் 10.00

மணிக்குக் கருப்பட்டியில் கிராமப்பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார் கணவன் மனைவி ஆகிய இருவரையும் அழைத்துப் பேசி, இருவரும் அன்பாக குடும்பம் நடத்த வேண்டுமெனவும், ஒருக்கொருவர் விட்டுக்கொடுத்து ஒத்து வாழ வேண்டுமெனவும் அறிவுரை கூறி அவர்களைச் சேர்த்து வாழ வைத்தனர். அவர்கள் இன்று ஒழுங்காக வாழ்ந்து வருகின்றனர்.

**பேட்டி எண்:94**

| வழக்குத் தொடுப்பவர் | : | சீரம்பட்டி சாந்தி |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | ரமேஷ் |
| வழக்கு விவரம் | : | குடும்பச்சண்டை |
| ஊர் | : | வேலூர் |
| சாதி | : | அகமுடையார் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | ஊர்ப்பஞ்சாயத்து |
| நாள் | : | 10.05.1997 |
| ஒன்றியம்/வட்டம் | : | மானாமதுரை |

சீரம்பட்டியைச் சேர்ந்த சாந்தி என்பவள் தன் கணவன் தன்னை அடித்துத் துன்புறுத்தி விரட்டிவிட்டதாகவும், கடந்த 1½ வருடமாகத் தன்னை தேடவில்லை என்றும் வேலூர் பஞ்சாயத்துத் தலைவரிடம் 10.05.1997 இல் வழக்குத் தொடர்ந்தாள். இதன் காரணமாக அன்று பகல் 10.00 மணிக்கு வேலூரில் ஊர்ப்பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. வழக்கு விசாரணையில் சாந்தியின் கணவன் ரமேஷ் தான் அவளை அடிக்கவில்லை என்றும் அவள் பொய் சொல்கிறாள் என்றும் சொன்னாள். இதனை சாந்தி மறுத்தாள். பின்னர் பஞ்சாயத்தார் அவர்களை இனிமேல் சண்டை சத்தம் இல்லாமல் இருவரும் சேர்ந்து வாழ வேண்டுமென அறிவுரைகூறிச் சேர்த்து வைத்தனர். இன்று அந்தப்பெண் குழந்தைப்பெற்று மகிழ்ச்சியாகக் குடும்பம் நடத்திவருகின்றாள்.

**பேட்டி எண்:95**

| வழக்குத் தொடுப்பவர் | : | தர்மலிங்கம் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | லெட்சுமி |
| வழக்கு விவரம் | : | கணவன்-மனைவி பிரிந்து வாழ்தல் |
| ஊர் | : | வேம்பத்தூர் |
| சாதி | : | இடையர் (கோனார்) |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | 25.08.1995 |
| ஒன்றியம்/வட்டம் | : | மானாமதுரை |

வேம்பத்தூரைச் சேர்ந்த தர்மலிங்கம் தன் மனைவி லெட்சுமி என்பவள் தன்னுடன் சேர்ந்து வாழாமல் அவள் தாயார் வீட்டிற்குச் சென்றுவிட்டாள் என்றும் அவளைத் தன்னுடன் சேர்ந்து வாழவைக்க வேண்டுமென்றும் வேம்பத்தூர் பஞ்சாயத்துத் தலைவரிடம்ட 25.08.1995 இல் வழக்குத் தொடுத்தார். இதன் காரணமாக அன்று இரவு 9.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்துத் தலைவர் முதலில் தர்மலிங்கத்தையும் அடுத்து லெட்சுமியையும், பின்னர் பக்கத்து வீட்டார்களையும் அதனையடுத்து லெட்சுமியின் தாய், தந்தையர்களையும் விசாரித்தனர். எல்லோரும் லெட்சுமியை அவள் கணவனுடன் சேர்த்து வாழவைக்க வேண்டுமெனக் கேட்டுக் கொண்டனர். தொடர்ந்து லெட்சுமி ஒருவருடம் தாயார் வீட்டில் தங்கியிருந்தது தவறு என்றும் இனிமேல் லெட்சுமி ஒழுங்காக கணவனுடன் சேர்ந்து வாழவேண்டுமென்றும் பஞ்சாயத்துத் தலைவர் தீர்ப்புக் கூறினார். தற்பொழுது அவர்கள் மகிழ்ச்சியாகக் குழந்தைகளைப் பெற்று குடும்பம் நடத்தி வருகின்றனர்.

**பேட்டி எண்:96**

| வழக்குத் தொடுப்பவர் | : | விசயா |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | மீளகனூர் கண்ணன் |
| வழக்கு விவரம் | : | கணவன்-மனைவி பிரிந்து வாழ்தல் |
| ஊர் | : | வேம்பத்தூர் |
| சாதி | : | இடையர் (கோனார்) |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | 26.09.1997 |
| ஒன்றியம்/வட்டம் | : | மானாமதுரை |

விசயா என்பவள் தன் கணவனுடன் சேர்ந்து வாழாமல் இரண்டு வருடம் தாயார் வீட்டில் தனியாக வாழ்ந்து வந்தாள். வேம்பத்தூர் கிராமத்தார் இது முறையில்லையென 26.09.1997இல் வேம்பத்தூர் பஞ்சாயத்துத் தலைவர் மூலமாக வழக்கைத் தொடர்ந்தனர். இதன் காரணமாக அன்று இரவு 10.00 மணிக்கு வேம்பத்தூரில் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. விசயா, கண்ணன் ஆகிய இருவரும் விசாரிக்கப்பட்டனர். இருவருமே சாதாரணமான எளிய கருத்துவேறுபாடு காரணமாகத்தான் இரண்டு வருடம் பிரிந்து வாழ்ந்தனர் என்பது பஞ்சாயத்தார்களுக்குத் தெரிந்தது. பஞ்சாயத்துத் தலைவர் கருத்து வேறுபாடுகளை மறந்து இருவரும் ஒன்று சேர்ந்து மகிழ்ச்சியாகக் குடும்பம் நடத்த வேண்டுமெனத் தீர்ப்புக் கூறினார். அவர்கள் பஞ்சாயத்தார் தீர்ப்பை ஏற்று இன்றுவரை மகிழ்ச்சியாக குடும்பம் நடத்தி வருகின்றனர்.

**பேட்டி எண்:97**

| வழக்குத் தொடுப்பவர் | : | பீர்முகமது |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | ரசியா பீபீ |
| வழக்கு விவரம் | : | கணவன் மனைவி மீது சந்தேகம் |
| ஊர் | : | முறையூர் |
| சாதி | : | முசுலீம் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | புரட்டாசி 5, 1998 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிங்கம்புணரி |

முறையூரைச் சேர்ந்த பீர்முகமது என்பவர் தன் மனைவியின் நடத்தையின் மீது சந்தேகப்பட்டு குடும்பத்தில் அடிக்கடி சண்டை போட்டார், இதன் காரணமாக அவர் மனைவி தாய்வீட்டிற்குச் சென்று விட்டாள். பீர்முகமது தன் மனைவி தன்னுடன் வந்து வாழவேண்டுமென 1998 ஆம் ஆண்டு புரட்டாசி மாதம் 5ம் தேதி கிராமப்பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தாள். வழக்கை விசாரித்த பஞ்சாயத்துத் தலைவர் சத்தியமூர்த்தி பீர்முகமது சந்தேகப்படக்கூடியவர் என்பதையும், அவர் தன் மனைவி தாய் வீட்டுக்குபோனாலும் வீட்டை விட்டு வெளியே வந்தாலும் சந்தேகப்படுகின்றார் என்பதையும் அறிந்து கொண்டு தீர்ப்புக் கூறினர். பீர்முகமது இனிமேல் ஒழுங்காக இருந்து குடும்பம் நடத்த வேண்டுமென்று அறிவுரை சொல்லி, மீறினால் தீர்த்துவிடுவதாகச் தீர்ப்புச் சொல்லப்பட்டது. அவர்க்ள இருவரும் இன்று குழந்தைகளைப் பெற்று இன்பமாகக் குடும்பம் நடத்தி வருகின்றனர்.

**பேட்டி எண்:98**

| வழக்குத் தொடுப்பவர் | : | வெள்ளையன் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | இருளி |
| வழக்கு விவரம் | : | மனைவியின் நடத்தையில் சந்தேகம் |
| ஊர் | : | சூரக்குடி |
| சாதி | : | இடையர் (கோனார்) |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆடி 10, 1991 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிங்கம்புணரி |

சூரக்குடியைச் சேர்ந்த இருளியின் நடத்தையில் சந்தேகப்பட்டு கணவர் அடித்துத் துன்புறுத்துகிறார் என்று கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1991ஆம் ஆண்டு ஆண்டு ஆடிமாதம் 10ம் தேதி வழக்குத் தொடர்ந்தாள். இதன் காரணமாகக் கிராமப் பஞ்சாயத்து அன்று பகல் 10.00 மணிக்குக் கூட்டப்பட்டது. முதலில்

பஞ்சாயத்தார் வெள்ளையனிடம் விசாரித்தனர். வெள்ளையன் தனது குற்றத்தைப் பஞ்சாயத்தில் ஒப்புக் கொண்டார். அவர் குற்றத்தை பஞ்சாயத்தாரிடம் ஒப்புக் கொண்டதால் அவரை மன்னித்து, இனிமேல் இருவரும் சேர்ந்து வாழவேண்டுமென்று இருவர்க்கும் அறிவுரை சொல்லி அவர்களைச் சேர்த்து வைத்தனர். பஞ்சாயத்தார் தீர்ப்புக் கட்டுப்பட்டு அவர்கள் இன்றுவரை மகிழ்ச்சியாக வாழ்ந்து வருகின்றனர்.

**பேட்டி எண்:99**

| வழக்குத் தொடுப்பவர் | : | சுப்பம்மாள் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | அடைக்கப்பன் |
| வழக்கு விவரம் | : | மனைவியர் நடத்தையில் சந்தேகம் |
| ஊர் | : | வேலங்குடி |
| சாதி | : | இடையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | தை 15, 1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிங்கம்புணரி |

வேலங்குடியைச் சேர்ந்த சுப்பம்மாள் என்பவள் தன்னைப் பழனிஆயி கேவலப்படுத்துகின்றாள் எனக் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1999 ஆம் ஆண்டு தை மாதம் 15ம் தேதி வழக்குத் தொடர்ந்தாள். இதன் காரணமாக அன்று பகல் 11.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார் பழனி ஆயியையும் அவள் கணவன் அடைக்கப்பனையும் அழைத்து விசாரித்தனர். பழனி ஆயி சந்தேகப் பேர்வழி என்றும், அவள் பலமுறை சுப்பம்மாள் தன் கணவனுடன் சேர்ந்திருக்கின்றாள் எனச் சந்தேகப்பட்டு தவறுதலாகப் பேசி வருகின்றாள் என்பதும், தெரிய வந்தது. வழக்கினை விசாரித்த பஞ்சாயத்துத் தலைவர் அந்தக் கிராமத்தில் அடைக்கப்பன் அப்படிப்பட்டவர் அல்ல என்றும், இனி மேல்

சுப்பம்மாளைத் தவறாகப் பேசினால் பஞ்சாயத்தார் உனக்கு அபராதம் விதிக்க வேண்டியிருக்குமென பழனிஆயியை எச்சரித்து அறிவுரை கூறி தீர்ப்புச் சொன்னார்.

**பேட்டி எண்:100**

| வழக்குத் தொடுப்பவர் | : | அன்னப்பூர்ணம் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | பெல்ட் முருகன் |
| வழக்கு விவரம் | : | மனைவியைக் கொடுமைப்படுத்துதல் |
| ஊர் | : | லாடனேந்தல் |
| சாதி | : | அகமுடையார் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | கார்த்திகை 19, 2000 |
| ஒன்றியம்/வட்டம் | : | திருப்புவனம் |

லாடனேந்தல் கிராமத்தைச் சேர்ந்த அன்னப்பூர்ணம் என்பவள் தன் கணவன் குடித்துவிட்டு நாள்தோறும் தன்னைக் கொடுமைப்படுத்துவதாக 2000 ஆம் ஆண்டு கார்த்திகை மாதம் 19ஆம் தேதி லாடனேந்தல் பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தாள். இதன் காரணமாக அன்று இரவு 9.00 மணிக்கு லாடனேந்தல் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டபட்டது. முதலில் அன்னபூர்ணத்திடம் பஞ்சாயத்துத் தலைவர் விசாரித்தார். அவள் தன் கணவன் குடித்துவிட்டு வந்து தன்னைப் பெல்ட்டால் அடித்துத் துன்புறுத்துவதாகக் கூறினாள். இதனைக் கேட்ட பஞ்சாயத்தார் பெல்ட் முருகனை கடுமையாகக் கண்டித்தனர். இனிமேல் இவ்வாறு நடந்துகொண்டால் கிராமம் உன்மேல் கடுமையான நடவடிக்கை எடுக்கும் என எச்சரித்துத் தீர்ப்புக் கூறினர். இன்று அவன் திருந்தி ஒழுங்காக வாழ்ந்து வருகின்றான்.

**பேட்டி எண்:101**

| வழக்குத் தொடுப்பவர் | : | முதல் மனைவி |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | முதல் மனைவியின் கணவன் |
| வழக்கு விவரம் | : | "கணவன் யாருக்குச் சொந்தம்" என்ற பிரச்சனை |
| ஊர் | : | செம்பூர் (ஏனாதி) |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | ஐந்து ஊர் நாட்டுப்பஞ்சாயத்து |
| நாள் | : | வைகாசி 18, 1980 |
| ஒன்றியம்/வட்டம் | : | திருப்புவனம் |

கணவன் முதல் மனைவியும் பிள்ளைகளும் இருக்கும் போது இரண்டாவதாக வேறொரு பெண்ணைத் சேர்த்துக் கொண்டான். இரண்டு மனைவிமார்களும் கணவன் எங்களுக்குத்தான் சொந்தம் (எனக்கு) என ஐந்து ஊர் நாட்டுப் பஞ்சாயத்துத் தலைவர் நாட்டாமை கரு. நாகராசனிடம் 1980 ஆம் ஆண்டு வைகாசி மாதம் 18ம் தேதி வழக்குத் தொடர்ந்தனர். இரண்டு மனைவிகளும் கணவன் எனக்குத்தான் வேண்டுமென்றும் வாதாடினர். வழக்கை விசாரித்த நாட்டாமை கரு. நாகராசன் தனது தீர்ப்பில் முதல் மனைவியிடம் உள்ளதுதான் இரண்டாவது மனைவியிடமும் உள்ளது. முதல் மனைவியை விட்டு விட்டு இரண்டாவது மனைவியைக் கட்டக்காரணம் கணவனது காமப்பசி எனவே அவர் தனது இரண்டாவது மனைவியுடன் தான் வாழ வேண்டும் என்றார். ஆனால் அவர் சம்பாதித்த சொத்துக்கள் அனைத்தையும் முதல் மனைவிக்கும் அவளது பிள்ளைகளுக்கும் எழுதிக்கொடுத்துவிட வேண்டும். சொத்துக்கள் அனைத்தும் அவர்களுக்கே சொந்தம் அவர் இரண்டாவது மனைவியுடன் எவ்வித உடைமைகளும் இல்லாமல் தனியாக வெளியேற வேண்டும் என்றார். அதன்படி அவர் வீட்டைவிட்டு வெளியேறி பிள்ளைகளைப் பெற்று பின்னர் சொத்து சேர்த்து வாழ்ந்து வருகின்றனர்.

## குறிப்பு

இந்த வழக்கின் தீர்ப்பு உச்ச நீதிமன்றத் தலைமை நீதிபதி ரங்கநாத் மிஸ்ராவால் ஏற்றுக்கொள்ளப்பட்டு மிகவும் பாரட்டப்பட்டதாகும். தீர்ப்பினை வழங்கிய நாட்டாமை கரு. நாகராசன் 18.8.1988 இல் உச்ச நீதிமன்றத் தலைமை நீதிபதி ரங்கநாத்மிஸ்ரா பாரட்டினார். (புகைப்படம் இணைக்கப்பட்டுள்ளது)

**பேட்டி எண்:102**

| வழக்குத் தொடுப்பவர் | : | அஞ்சலை |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | சேவுகன் |
| வழக்கு விவரம் | : | மருமகளை மாமியார் கொடுமைப்படுத்துதல் |
| ஊர் | : | வஞ்சினிப்பட்டி |
| சாதி | : | இடையர் (கோனார்) |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமபஞ்சாயத்து |
| நாள் | : | பங்குனி 23, 1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | கல்லல் |

வஞ்சினிப்பட்டியைச் சேர்ந்த அஞ்சலை என்ற பெண் தன் கணவனுடன் தன்னை நிம்மதியாக வாழவிடாமல் தன்னுடைய மாமியார் கொடுமைப் படுத்துவதாகவும் தன்னைத்தன் கணவனுடன் நிம்மதியாக வாழவைத்து உதவ வேண்டுமெனவும் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1999 ஆம் ஆண்டு பங்குனி மாதம் 23ம் தேதி வழககுத் தொடர்ந்தாள். இதன் காரணமாக அன்று இரவு 9.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டபட்டது. பஞ்சாயத்துத் தலைவர் அஞ்சலையிடம் முதலில் விசாரித்தார், அவள் தலைவரிடம் என் கணவனுடன் என்னைச் சேரவிடாமல் என் மாமியார் என்னைக் கொடுமைப்படுத்துகின்றாள் என்று கூறினாள். மேலும் அவள் திருமணம் ஆனதிலிருந்து நான் என் கணவனுடன் எங்கும் தனியாகச் சென்றதில்லை, என் மாமியார் தொந்தரவும் இடையீடும் இல்லாமல் கண்டிக்கவேண்டுமெனக் கூறி அழுதாள். பஞ்சாயத்தார் அஞ்சலையின்

கணவர் மற்றும் மாமியரை அழைத்து விசாரித்ததில் அஞ்சலை சொன்னது உண்மை எனத் தெரிய வந்தது. பஞ்சாயத்தார் அஞ்சலையின் மாமியாரைக் கண்டித்து அஞ்சலையையும் அவள் கணவனையும் இரண்டு மாதங்கள் தனியாக வெளியூருக்கு அனுப்பி வைத்தனர். அஞ்சலையின் மாமியரை இரண்டு மாதங்கள் கழித்து ஊருக்குத் திரும்பும் அவள் மகனையும் மருமகளையும் எந்தத் தொந்தரவு செய்யக்கூடாது எனக் கண்டித்து அனுப்பினர்.

**பேட்டி எண்:103**

| வழக்குத் தொடுப்பவர் | : | ஆறுமுகம் மகள் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | கொத்தங்குளம் முருகன் |
| வழக்கு விவரம் | : | மாமியார் மருமகள் கொடுமை |
| ஊர் | : | லாடனேந்தல் |
| சாதி | : | அகமுடையார் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமபஞ்சாயத்து |
| நாள் | : | ஆடி 20, 1998 |
| ஒன்றியம்/வட்டம் | : | திருப்புவனம் |

லாடனேந்தல் கிராமத்தைச் சேர்ந்த ஆறுமுகம் மகள், கொத்தங்குளம் முருகன் என்பவருக்கு வாழ்க்கைப்பட்டாள். அவள் தன்னைத் தன்னுடைய மாமனும், மாமியாரும் கொடுமைப்படுத்துவதாக 1998 ஆம் ஆண்டு ஆடி மாதம் 20ம் தேதி லாடனேந்தல் பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்கு தொடர்ந்தாள். இதன் காரணமாக அன்று பகல் 10.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. முதலில் ஆறுமுகம் மகளை அழைத்துப் பஞ்சாயத்தார் விசாரித்தனர். பின்னர் அவள் கணவன் முருகனிடம் விசாரித்தனர். இனிமேல் இவ்வாறு நடந்து கொள்ளக்கூடாது என பஞ்சாயத்தார் ஆறுமுகம் மகள் மாமன்-மாமியாரைக் கண்டித்து கணவன்-மனைவியர் ஒற்றுமையாக இருக்க வேண்டுமெனத் தீர்ப்புக் கூறினர். இப்போது அவர்கள் மகிழ்ச்சியாக வாழ்ந்து வருகின்றனர்.

## குடும்ப வழக்குகளில் வரதட்சணை வழக்குகள்

**பேட்டி எண்:104**

| வழக்குத் தொடுப்பவர் | : | பஞ்சவர்ணம் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | செல்லப்பாண்டி |
| வழக்கு விவரம் | : | வரதட்சணை கேட்டல் |
| ஊர் | : | சித்தாலங்குடி |
| சாதி | : | பள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆனி 10, 1997 |
| ஒன்றியம்/வட்டம் | : | காளையார்கோவில் |

சித்தாலங்குடி கிராமத்தைச் சேர்ந்த பஞ்சவர்ணம் என்பவள் தன் கணவன் செல்லப்பாண்டி தன்னிடம் வரதட்சணை கேட்டுத் தன்னை கொடுமைப் படுத்துவதாகவும் அதனைக் கேட்டுக் கொடுக்க வேண்டுமெனவும் 1997 ஆம் ஆண்டு ஆனிமாதம் 10ம் தேதி கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தாள். பஞ்சவர்ணத்தைத் தலைவர் விசாரித்தார். பின்னர் செல்லப்பாண்டியிடம் விசாரித்தனர். அதற்குச் செல்லப்பாண்டி தன் மனைவி அடிக்கடி உறவினர் வீட்டிற்குச் சென்று விடுகின்றாள். என்னுடன் வாழ அவளுக்கு விருப்பம் இல்லை என்றார். இதனைப் பஞ்சவர்ணத்திடம் விசாரித்தனர். அடிக்கடி அவர்களுக்குள் தகராறு ஏற்படுவதும் அதைக் காரணமாக வைத்துக் கொண்டு பஞ்சவர்ணம் கணவன் வீட்டிலிருந்து ஓடிவந்து விடுவதும் தெரிய வந்தது. இதனால் பஞ்சாயத்தார் பஞ்சவர்ணத்திடம் இன்றியிலிருந்து ஆறுமாத்திற்கு நீ எங்கும் செல்லக்கூடாது என உத்தரவு போட்டனர், அத்துடன் உன் கணவன் சொல்லைக் கேட்டு நடந்து கொள்ள வேண்டுமென அறிவுரையும் கூறினர். அதே போல் செல்லப் பாண்டியிடம் நீ இனிமேல் உன் மனைவியை அடித்து விரட்டுவதை நிறுத்து சீர் கொண்டு வரவில்லை, எந்தப் பொருளும் கொண்டு வரவில்லை எனப் பேசக்கூடாது, மீறினால் உன் மீது பஞ்சாயத்து மீண்டும் நடவடிக்கை எடுக்கமென எச்சரித்தும் கண்டித்தும் அவர்களை வாழவைத்தனர்.

**பேட்டி எண்:105**

| வழக்குத் தொடுப்பவர் | : | பஞ்சவர்ணம் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | மகேஸ்வரன் |
| வழக்கு விவரம் | : | வரதட்சணைச் சிக்கல் |
| ஊர் | : | சீத்தூரணி |
| சாதி | : | பள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆனி 6, 1997 |
| ஒன்றியம்/வட்டம் | : | இளையான்குடி |

சீத்தூரணிக் கிராமத்தைச் சேர்ந்த பஞ்சவர்ணம் என்பவள் தன் கணவர் என்னிடம் வரதட்சணைப் பணம் கேட்டுத் துன்புறுத்துகின்றார் எனப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1997ஆம் ஆண்டு ஆனிமாதம் ஆறாம் தேதி வழக்குத் தொடர்ந்தாள். இதன்காரணமாக அன்றுஇரவு 9.00மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்துத் தலைவர் பஞ்சவர்ணத்திடம் விசாரித்தார். அதற்கு அவள் திருமணமாகிப் பத்து வருடத்திற்குப் பின்னரும் என் அப்பாவிடம் சென்று பணம் வாங்கிவா, சொத்து வாங்கிவா எனக்கேட்டுத் என்னைத் துன்புறுத்துகின்றார் என்று கூறினாள். பின்னர் பஞ்சாயத்தார் மகேஸ்வரனையும் அக்கம் பக்கத்தார் சாட்சிகளையும் விசாரித்தனர். வாதியான பஞ்சவர்ணத்தின் குற்றச்சாட்டு உண்மையெனத் தெரிய வந்தது. பின்னர் பஞ்சாயத்தார் கலந்து பேசி மகேஸ்வரனிடம் இனிமேல் பஞ்சவர்ணத்தை நீ வரதட்சிணை கேட்டு அடித்தால் உன்னைப் போலீசில் கிராமத்தார்கள் ஒப்படைப்பார்கள், இந்த முறை மன்னித்து விடுகிறோம், எனக் கூறினர்.

**பேட்டி எண்:106**

| வழக்குத் தொடுப்பவர் | : | வைரம்பட்டி லெட்சுமி |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | பாண்டி |
| வழக்கு விவரம் | : | வரதட்சிணை கேட்டல் |
| ஊர் | : | கோவானூர் |
| சாதி | : | பறையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | மாசி 5, 1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிவகங்கை |

வைரம்பட்டியைச் சேர்ந்த லெட்சுமி என்பவள் தன் கணவன் பாண்டி வரதட்சிணை கேட்டுத் துன்புறுத்துவதாகவும் தான் அவருடன் வாழவிரும்பவில்லையென்றும் 1999 ஆம் ஆண்டு மாசி மாதம் 5ம் தேதி வழக்குத் தொடுத்தாள். இதன் காரணமாக அன்று இரவு 10.00 மணிக்குக் கோவானூரில் கிராமப்பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்துத் தலைவர் இருதரப்பினரையும் அழைத்து விசாரித்தார். பஞ்சாயத்துத தலைவர் லெட்சுமியின் குடும்பம் ஏழ்மையான வறுமைப்பிடிப்பிலுள்ள குடும்பம் ஆதலால் அவர்கள் எதுவும் செய்ய முடியாது என்று சொன்னார், பாண்டி லெட்சுமியுடன் வாழ விரும்பவில்லை என்றார். பின்னர் பஞ்சாயத்தார் கலந்து பேசி இருவரும் பிரிந்து சென்று வேறு திருமணம் செய்து கொள்ளலாம் எனத் தீர்ப்புக் கூறினர். அவர்கள் இருவரும் பிரிந்து விட்டனர்.

## குடும்ப வழக்குகள் பாலுறவுச் சிக்கல்கள்

**பேட்டி எண்:107**

| வழக்குத் தொடுப்பவர் | : | இராமலிங்கம் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | கருப்பையா |
| வழக்கு விவரம் | : | தகாத பாலுறவுச் சிக்கல் |
| ஊர் | : | பாவாகுடி |
| சாதி | : | இடையர் (கோனார்) |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | மார்கழி 23, 1998 |
| ஒன்றியம்/வட்டம் | : | காளையார் கோவில் |

இராமலிங்கம் என்பவர் தன் மனைவி விசயலெட்சுமியுடன் கருப்பையா என்பவர் பாலுறவு வைத்திருந்ததை நானும் என் குடும்பத்தாரும் நேரடியாகப் பார்த்தோம். ஆதலால் என் மனைவியை விவகாரத்துச் செய்து தர வேண்டுமென 1998 ஆம் ஆண்டு மார்கழி மாதம் 23ம் தேதி பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடுத்தார். இதன் காரணமாகக் கிராமப் பஞ்சாயத்து அன்று பகல் 11.00 மணிக்குக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தில் இருதரப்பினரும் விசாரிக்கப்பட்டனர். கருப்பையா பஞ்சாயத்துத் தொடக்கத்தில் தான் எந்தத் தவறும் செய்ய வில்லை எனக் கூறினர். பின்னர் தன்னுடைய குற்றத்தை ஒத்துக் கொண்டார். பின்னர் அந்தப் பெண்ணிடம் நீ திருமணமாகி இருண்டு வருடத்தில் தவறு செய்திருக்கின்றாய் இனிமேல் தவறு செய்யாமல் திருந்தி உன் கணவனுடன் வாழச் சம்மதமா? எனக் கேட்டனர். அதற்கு விசயலெட்சுமி பஞ்சாயத்தாரிடம் சம்மதம் எனக் கூறினாள். பஞ்சாயத்தார் கருப்பையாவிடம் இனிமேல் நீ இந்தக் குடும்ப விவகாரத்தில் தலையிட்டால் உனக்கு கடுமையான தண்டனை வழங்குவோம். நீ உண்மையை ஒத்துக்கொண்டு மன்னிப்புக் கேட்டதால் உன்னை விடுகின்றோம். என எச்சரித்து ஒரு பேப்பரில் அவரிடம் இனிமேல் நான் இந்தக் குடும்ப விவகாரத்தில் தலையிடுவதில்லை, தலையிட்டால் பஞ்சாயத்தார் முடிவை ஏற்றுக் கொள்வேன் என எழுதி வாங்கிக் கொண்டு கருப்பையாவை அனுப்பினர். அதன்பின்னர் இராமலிங்கமும் விசயலெட்சுமியும் மகிழ்ச்சியாக வாழ்ந்து வருகின்றனர்.

**பேட்டி எண்:108**

| வழக்குத் தொடுப்பவர் | : | உமாராணி |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | பாண்டி |
| வழக்கு விவரம் | : | திருமணத்திற்குப் பின்னர் கணவன்-மனைவி இருவரும் கள்ளவுறவு கொண்டிருத்தல் |
| ஊர் | : | கண்டாங்கிபட்டி |
| சாதி | : | குறவர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | மாசி 10,1990 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிவகங்கை |

கண்டாங்கிபட்டியைச் சேர்ந்த உமாராணி என்ற பெண் தன் கணவன் அதே ஊரைச் சேர்ந்த சானார் வீட்டுப் பெண்ணுடன் தொடர்பு வைத்திருப்பதால் அவருடன் வாழ முடியாது என்று 1990-ஆம் ஆண்டுமாசி மாதம் 10ம் தேதி பஞ்சாயத்துத் தலைவரிடம வழக்குத் தொடர்ந்தாள். இதன் காரணமாக அன்று இரவு 8.00 மணிக்கு கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. உமாராணியிடம் பஞ்சாயத்துத் தலைவர் விசாரித்தார். பாண்டி சானார் வீட்டுப் பெண்ணுடன் தொடர்பு வைத்துள்ளார். நான் அவருடன் வாழமாட்டேன் என்றாள். பாண்டியிடம் பஞ்சாயத்துத் தலைவர் விசாரித்தார். அதற்கு அவர், உமாராணி சிவகங்கையில் டெய்லர் ஒருவனுடன் சேர்ந்திருக்கின்றாள். நான் அவளுடன் வாழமுடியாது என்றார். இதனை உமாராணியும் பஞ்சாயத்தார் முன்னிலையில் ஒத்துக் கொண்டாள். இதே போல் பாண்டியும் உண்மையை ஒத்துக் கொண்டார். பின்னர் பஞ்சாயத்தார் கலந்து ஆலோசித்துத் தீர்ப்புக் கூறினர். திருமணத்திற்குப் பின்னர் ஒழுக்கக் கேடாகவும் நடந்திருக்கின்றார்கள். இனிமேல் அவர்கள் இருவரும் இதுபோல் நடந்துகொண்டால் இருவருக்கும் தண்டனை கிடைக்கும் இனி மேலாவது திருந்தி வாழுங்கள் என அவர்களைச் சேர்த்து வைத்து அறிவுரைகூறி சமாதானம் செய்து வைத்தனர்.

**பேட்டி எண்:109**

| வழக்குத் தொடுப்பவர் | : | பூமாரி |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | மனோகரன் |
| வழக்கு விவரம் | : | பெண் நடத்தை கெட்டவளாக இருத்தல் |
| ஊர் | : | வாவியரனேந்தல் |
| சாதி | : | அகமுடையார் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | வைகாசி 27, 2000 |
| ஒன்றியம்/வட்டம் | : | திருப்புவனம் |

பூமாரி என்பவள் மூன்று குழந்தைகளுக்குத் தாயான பின்னர் தன் கணவனுடன் வாழமுடியாது என 2000 ஆம் ஆண்டு வைகாசி மாதம் 27ம் தேதி வாவியரனேந்தல் பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தாள். இதன் காரணமாக அன்று இரவு 10.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. முதலில் பூமாரியிடம், பின்னர் மனோகரனிடம் விசாரித்தனர். விசாரணையில் பூமாரி நடத்தை கெட்டவள் எனத் தெரிய வந்ததால், அப்பெண்ணைக் கண்டித்துப் பிள்ளைபெற்ற பின் இனிமேல் இவ்வாறு நடந்து கொள்ளக்கூடாது என எச்சரித்து சமாதானம் செய்து அவர்களை வாழ வைத்தனர்.

**பேட்டி எண்:110**

| வழக்குத் தொடுப்பவர் | : | நாடிமுத்து |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | வேலாயுதம் |
| வழக்கு விவரம் | : | மனைவியின் நடத்தையில் சந்தேகம் |
| ஊர் | : | செம்பனூர் |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | சித்திரை 20, 2001 |
| ஒன்றியம்/வட்டம் | : | கல்லல் |

செம்பனூர் கிராமத்தைச் சேர்ந்த நாடிமுத்து என்பவள் தன் கணவன் வேலாயுதம் தன்னை நடத்தையில் சந்தேகப்பட்டுக் கொடுமைப்படுத்துகின்றான் என செம்பனூர் பஞ்சாயத்துத் தலைவரிடம் 2001 ஆம் ஆண்டு சித்திரை மாதம் 20ம் தேதி வழக்குத் தொடர்ந்தாள். இதன் காரணமாக அன்று பகல் 10.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்துத தலைவர் இருவரையும் அழைத்து விசாரித்தார். பஞ்சாயத்தார் வேலாயுதத்திடம் உங்களுக்குப் பிள்ளைகள் இருப்பதால் நீ உன் மனைவியைச் சந்தேகப்பட்டுக் கொடுமைப்படுத்துவது தப்பு இனிமேல் இவ்வாறு நடக்கக்கூடாது எனப் புத்தி சொல்லி அவர்களைச் சமாதானப்படுத்தி அனுப்பினர். அவர்கள் தற்பொழுது மகிழ்ச்சியாக வாழ்ந்து வருகின்றனர்.

**பேட்டி எண்:111**

| வழக்குத் தொடுப்பவர் | : | ஆராவயல் வள்ளி |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | இராமய்யா |
| வழக்கு விவரம் | : | நடத்தையில் ஒழுங்கீனம் |
| ஊர் | : | கல்லல் |
| சாதி | : | செட்டியார் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | நாட்டுக்கூட்டம் |
| நாள் | : | பங்குனி 4, 1995 |
| ஒன்றியம்/வட்டம் | : | கல்லல் |

ஆராவயல் வள்ளி என்பவள் வீட்டுவேலை செய்வதாக கல்லலில் இராய்யா வீட்டிற்குப் பக்கத்தில் தங்கி இருந்தாள். இராமய்யாவிற்கும் வள்ளிக்கும் தொடர்பு ஏற்பட்டது. இராமய்யாவிற்கு பாகனேரியில் பெண் பார்ப்பது தெரிந்ததும் ஆராவயல் வள்ளி தனக்கு ஒரு வழி சொல்ல வேண்டுமென 1995 ஆம் ஆண்டு பங்குனி மாதம் 4ம் தேதி வழக்குத் தொடர்ந்தாள். ஆராவயல் நாட்டார், கல்லல் நாட்டாரிடம் பெண்ணை அழைத்துக் கொண்டு வந்தனர். இதன் காரணமாக அன்று பகல் 10.00 மணிக்குக் கல்லலில் நாட்டார் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது.

நாட்டார்கள் பஞ்சாயத்தில் பெண்ணை அழைத்து விசாரித்தனர். அவள் ஏற்கனவே திருமணம் ஆனவள் என்றும், அவள் கணவன் ஆராவயலில் இருக்கிறான் எனவும் தெரிய வந்தது. கணவன் இருக்கும் போது ஒரு பெண் வேறொரு ஆடவனுக்குத்தான் கர்ப்பம் அடைந்ததாகக் கூறுவதைக் கேட்டு நாட்டார் பஞ்சாயத்துக்கு வந்துள்ளது நியாயமா? எனக் கல்லல் நாட்டுத் தலைவர் ஆராவயல் நாட்டுத் தலைவரிடம் கேட்டார். உடனே ஆராவயல் நாட்டார் தவறுதான் என ஒப்புக்கொண்டனர். இராமய்யா பாகனேரியில் திருமணம் செய்து கொள்ளத் தடையில்லை எனத் தீர்ப்புக் கூறினர்.

**பேட்டி எண்:112**

| வழக்குத் தொடுப்பவர் | : | இராமாயி |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | முருகன் |
| வழக்கு விவரம் | : | கணவனின் கள்ளத் தொடர்பு |
| ஊர் | : | திருவள்ளூர் தெற்கு |
| சாதி | : | பள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | தை 10, 1992 |
| ஒன்றியம்/வட்டம் | : | இளையாண்குடி |

திருவள்ளூர் (தெற்கு) கிராமத்தைச் சேர்ந்த இராமாயி என்பவள், தன் கணவன் முருகன் இன்னொரு பெண்ணுடன் தொடர்பு வைத்து என்னை ஒதுக்கி விட்டார், என்னுடைய இரண்டு பிள்ளைகளுக்கும் எனக்கும் வழிசொல்ல வேண்டுமெனப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1992 ஆம் ஆண்டு தைமாதம் 10ம் தேதி வழக்குத் தொடுத்தார். இதன் காரணமாக அன்று பகலில் திருவள்ளூர் தெற்குக் குடியிருப்பில் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்துத் தலைவர் இராமாயியை முதலில் விசாரித்தார். அவள் தன் கணவன் முருகன் இன்னொரு பெண்ணுடன் சேர்ந்து கொண்டு தன்னையும் தன் இரண்டு பிள்ளைகளையும் ஒதுக்கி விட்டதாக கூறினாள். அத்துடன் அவள் என் மாமன்-மாமியர் இருவரும் ஆசிரியர்கள், அவர்கள் சொல்லியும் என் கணவன் கேட்கவில்லை, நீங்கள் தான் என் கணவனை என்னிடம் மீண்டும் சேர்த்து வைக்க வேண்டும் என்றாள். பின்னர் முருகனைப் பஞ்சாயத்துத் தலைவர் விசாரித்தார், முருகன் வைத்திருந்த பெண் வீட்டாரையும் விசாரித்தனர், அவர்கள் எங்கள் பெண் இரண்டாந்தாரமாக வாழ வேண்டும் அல்லது எங்கள் பெண்ணிற்கு இழப்பீடு தர வேண்டும் எனக் கேட்டனர். பின்னர் பஞ்சாயத்தார் கலந்துபேசித் தீர்ப்புக் கூறினர். "ஏற்கனவே திருமணமாகி இரண்டு பிள்ளைகளுக்குத் தந்தைஎனத் தெரிந்தும் அவருடன் தகாத முறையில் பழகித் தொடர்பு வைத்து ஒரு பெண்ணின் குடும்ப வாழ்க்கையைக் கெடுத்தற்காக

இந்த பெண்ணிற்கு ரூபாய் 500 அபராதம் விதிக்கிறேன்" என்று தீர்ப்புக் கூறி, முருகன் வைத்திருந்த பெண்ணை ஒதுக்கிவிட்டு, முருகன் இராமாயி ஆகிய இருவரையும் மீண்டும் சேர்த்து வாழவைத்தனர்.

**பேட்டி எண்:113**

| வழக்குத் தொடுப்பவர் | : | ஈஸ்வரியின் கணவன் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | நாச்சியப்பன் |
| வழக்கு விவரம் | : | கள்ளத்தொடர்பு |
| ஊர் | : | கண்டரமாணிக்கம் |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | கார்த்திகை 25, 1985 |
| ஒன்றியம்/வட்டம் | : | கல்லல் |

ஈஸ்வரி என்ற பெண்ணின் கணவன் தன் மனைவி ஈஸ்வரியுடன் நாச்சியப்பன் என்பவர் கள்ளத்தொடர்பு வைத்துள்ளார். இதனைக் கேட்டுக் கொடுக்கவேண்டுமென 1985 ஆம் ஆண்டு கார்த்திகை மாதம் 25ம் தேதி கண்டரமாணிக்கம் பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடுத்தார். வழக்கில் சம்பந்தப்பட்டவர்களை பஞ்சாயத்துத் தலைவர் ரகசியமாக விசாரித்தார். விசாரனையில் நாச்சியப்பன், ஈஸ்வரி கள்ளத் தொடர்பு உண்மை என்பதையும், ஈஸ்வரிக்கு நாச்சியப்பன் கடிதம் எழுதியது உண்மை என்பதையும் ஒத்துக் கொண்டனர். உண்மையைத் தெரிந்துகொண்ட பஞ்சாயத்தார், ஈஸ்வரியை அவள் கணவனுடன் சேர்த்து வாழவைக்க வேண்டுமெனத் தீர்மானித்து, நாச்சியப்பனைப் பஞ்சாயத்தில் பொய்சொல்லச் சொன்னார்கள். அதன்படி நாச்சியப்பன், நான் ஈஸ்வரியை விரும்பினேன் ஆனால் ஈஸ்வரி என்னை விருப்ப மறுத்தாள். ஆதலால் தான் ஈஸ்வரிக்கு நான் கடிதம் எழுதினேன். ஈஸ்வரிமேல் தவறு இல்லை, என்னை மன்னித்து விடுங்கள் எனப் பஞ்சாயத்தார் முன்னிலையில் கும்பிட்டு விழுந்தான். ஈஸ்வரியிடம் இதுவரை நான் பேசியது கூட இல்லை எனத்தலைவர் சொல்லிக் கொடுத்ததையே நாச்சியப்பன் சொன்னான். பின்னர் பஞ்சாயத்தார் ஈஸ்வரியின்

கணவனை அழைத்து உன் மனைவியை இப்பாவாவது நம்புகிறாயா? இல்லையா? என்று கேட்டனர், அவள் கணவன் இப்பொழுது என் மனைவியை நான் நம்புகிறேன், அவள் உத்தமி என்றான். பின்னர் பஞ்சாயத்தார் கணவன் மனைவியைச் சேர்த்து வைத்தனர். அவர்கள் இப்பொழுது மகிழ்ச்சியாகவே குடும்பம் நடத்தி வருகின்றனர்.

**பேட்டி எண்:114**

| வழக்குத் தொடுப்பவர் | : | முத்து |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | வீரம்மாள் |
| வழக்கு விவரம் | : | கள்ளத்தொடர்பு |
| ஊர் | : | தவசியேந்தல்பட்டி |
| சாதி | : | பறையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | வைகாசி 9, 2000 |
| ஒன்றியம்/வட்டம் | : | கல்லல் |

தவசியேந்தல் பட்டியைச் சேர்ந்த முத்து என்பவர் தன் மனைவி வீரம்மாள் நடத்தை தவறி விட்டாள் என்றும் அவளுடன் தனக்கு வாழ விருப்பமில்லை என்றும் 2000 ஆண்டு வைகாசி மாதம் 9ம் தேதி கிராமப்பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று இரவு 9.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டபட்டது. முத்து பம்பாயில் தங்கியிருக்கும் போது வீரம்மாள் செங்கல் காலவாயிலுக்கு வேலைக்குச் சென்றாள். அங்கு அவளுக்கும் வேன் ஓட்டுநருக்கும் கள்ளத்தொடர்பு ஏற்பட்டது. வீரம்மாள் நான்கு குழந்தைகளுக்குத் தாயாவாள், வழக்கினை விசாரித்த பஞசாயத்துத் தலைவர் வீரம்மாளைக் கடுமையாகக் கண்டித்தார். வேன்ஓட்டுநரையும் கண்டித்தார். இனிமேல் இந்தப் பகுதிக்கு வரக்கூடாது என வேன் ஓட்டுநரை எச்சரித்து, வீரம்மாளுக்கு நான்கு பிள்ளைகள் இருப்பதால், அவளை ஏற்றுக்கொண்டு தொடர்ந்து வீரம்மாளைக் காப்பற்ற வேண்டுமென முத்துவிடம் பஞ்சாயத்தார் கேட்டுக் கொண்டனர்.

**பேட்டி எண்:115**

| வழக்குத் தொடுப்பவர் | : | செல்வராசு |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | பாண்டியம்மாள் |
| வழக்கு விவரம் | : | கள்ளத்தொடர்பு |
| ஊர் | : | நரியங்குடி |
| சாதி | : | முத்தரையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | வைகாசி 6, 1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | கல்லல் |

நரியங்குடி கிராமத்தைச் சேர்ந்த செல்வராசு என்பவர் தன் மனைவி பாண்டியம்மாள் நடத்தை சரியில்லை எனவும், அவளுடன் தனக்கு வாழவிருப்பமில்லை எனவும் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1999 ஆம் ஆண்டு வைகாசி மாதம் 6-ம் தேதி வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று இரவு 9.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. முதலில் செல்வராசைப் பஞ்சாயத்துத் தலைவர் விசாரித்தார். அடுத்து அவருடைய மனைவி பாண்டியம்மாளிடம் விசாரித்தார். விசாரணையில் பாண்டியம்மாள் அவள் கொழுந்தனுடன் சேர்ந்திருந்தது தெரியவந்தது. பின்னர் கிராமப் பஞ்சாயத்தார்கள் கலந்து பேசி பாண்டியம்மாள் கொழுந்தனை வெளிநாட்டிற்கு வேலைக்கு அனுப்பி வைத்தனர். இப்போது அமைதியாகவும் இன்பமாகவும் செல்வராசும் பாண்டியம்மாளும் குடும்பம் நடத்திவருகின்றனர்.

**பேட்டி எண்:116**

| வழக்குத் தொடுப்பவர் | : | மெய்யப்பன் ஆசிரியர் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | சோதி |
| வழக்கு விவரம் | : | கள்ளத்தொடர்பு |
| ஊர் | : | தவசியேந்தல்பட்டி |
| சாதி | : | பறையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | மார்கழி 22, 1998 |
| ஒன்றியம்/வட்டம் | : | கல்லல் |

தவசியேந்தல்பட்டி கிராமத்தைச் சேர்ந்த மெய்யப்பன் ஆசிரியர் தன் மனைவி சோதி என்பவள் வேறொருவனுடன் ஓடிவிட்டதாக 1998 ஆம் ஆண்டு மார்கழி மாதம் 22ம் தேதி பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடுத்தாள். இதன் காரணமாக அன்று இரவு 9.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்துத் தலைவர் பாதிக்கப்பட்ட மெய்யப்பனை முதலில் விசாரித்தார். அவர் தனக்கு இரண்டு குழந்தைகள் உள்ளனர் என்றும், தன் மனைவி சோதி வேறொருவனைக் கூட்டிக் கொண்டு ஓடிவிட்டாள் என்றும், தனக்கு நியாயம் வேண்டும் என்றும் பஞ்சாயத்துத் தலைவரிடம் கூறினார். பின்னர் பஞ்சாயத்தார் சோதியை அழைத்து விசாரித்தனர். அவள் தான் மெய்யப்பனுடன் வாழ முடியாது என்று கூறினாள். பஞ்சாயத்தார் கலந்து பேசி சோதிக்கு ரூபாய் 30,000 அபராதம் போட்டு, அந்தப் பணத்தை மெய்யப்பனிடம் கொடுத்தனர். மெய்யப்பனிடமிருந்து சோதியை விலக்கி வைத்தனர். குழந்தைகள் இரண்டும் சோதியைச் சேர்ந்தது என்றும், அவள் விருப்பப்பட்டு ஓடிய காதலனை சோதி மணந்து கொண்டு வாழலாம் என்றும் பஞ்சாயத்தார் தீர்ப்புக் கூறினர்.

**பேட்டி எண்:117**

| வழக்குத் தொடுப்பவர் | : | பாக்கியராசு |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | லெட்சுமி |
| வழக்கு விவரம் | : | கள்ளத்தொடர்பு |
| ஊர் | : | நடுவிக்கோட்டை மேலயூர் |
| சாதி | : | பறையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆடி 25, 1998 |
| ஒன்றியம்/வட்டம் | : | கல்லல் |

நடுவிக்கோட்டை மேலயூர் கிராமத்தைச் சேர்ந்த பாக்கியராசு என்பவர் தன் மனைவி லெட்சுமி நடத்தை கெட்டவள் என்றும், அவளுடன் தான் வாழமுடியாது

என்றும், அவளைத் தீர்த்து வையுங்கள் என்றும் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1998 ஆம் ஆண்டு ஆடிமாதம் 25ம் தேதி வழக்குத் தொடுத்தார். இதன் காரணமாக அன்று இரவு 8.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்துத் தலைவர் பாக்கியராசுவிடம் முதலில் விசாரித்தார். அவர் பஞ்சாயத்துத் தலைவரிடம் லெட்சுமி செங்கல் காளவாயிலில் வேலைபார்க்குமிடத்தில் அங்கு வந்து செல்லும் மதுரை லாரி ஓட்டுநருடன் கள்ளத்தொடர்பு வைத்துள்ளாள் என்று கூறினான். இரண்டு குழந்தைக்குத் தாயான அவள் இவ்வாறு நடத்தை தவறி நடப்பதால் அவளுடன் தான் வாழமுடியாது என்று வாதாடினார். பஞ்சாயத்தார் லாரி ஓட்டுநரை அழைத்து அடித்துக் கண்டித்தனர். லெட்சுமியை அழைத்து ஒழுக்கமில்லாமல் நீ நடந்துகொண்டால் உன் பிள்ளைகள் வாழ்வு என்னவாகும் எனக் கண்டித்தனர். கணவனும் மனைவியும் சேர்ந்து வாழவேண்டுமெனவும் லெட்சுமி இனிமேல் ஒழுக்கமாக இருக்க வேண்டுமெனவும் பஞ்சாயத்தார் தீர்ப்புக் கூறினர்.

**பேட்டி எண்:118**

| வழக்குத் தொடுப்பவர் | : | சொக்கலிங்கம் செட்டியார் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | குழந்தைவேல் மகள் |
| வழக்கு விவரம் | : | கள்ளத்தொடர்பு |
| ஊர் | : | கல்லல் |
| சாதி | : | செட்டியார் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | நாட்டார் பஞ்சாயத்து |
| நாள் | : | வைகாசி 5, 1979 |
| ஒன்றியம்/வட்டம் | : | கல்லல் |

கல்லல் கிராமத்தைச் சேர்ந்த சொக்கலிங்கம் என்பவர் தன் மனைவியின் நடத்தை (குழந்தைவேல் மகள்) சரியில்லையென்றும் அவளுடன் தான் வாழவிருப்பமில்லையென்றும் கல்லல் நாட்டார் கண்ணப்பா வள்ளியப்பாவிடம்

1979ஆம் ஆண்டு வைகாசி மாதம் 5ம் தேதி வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாகக் கல்லல் நாட்டார்கள் அன்று சொக்கலிங்கம் செட்டியார் வீட்டில் கூடினர். விசாரனையில் சொக்கலிங்கம் தன் மனைவி மதுரையைச் சேர்ந்த துணிக்கடை உரிமையாளர் மகனுடன் கள்ளத்தொடர்பு வைத்திருப்பதைத் தான் நேரில் கண்டதாகப் பஞ்சாயத்தார்களிடம் கூறினார். அவர் மனைவியிடம் விசாரித்ததில் தான் இவ்வாறு ஆனதற்குத் தன் கணவன் சொக்கலிங்கமே காரணம் எனக் கூறினாள். மதுரையைச் சேர்ந்த துணிக்கடை உரிமையாளர் மகன் துணியை அடிக்கடி கல்லலுக்குச் சொக்கலிங்கம் வீட்டிற்கே கொண்டு வந்து கொடுத்து வந்தான். மதுப்பழக்கத்திற்கு அடிமையான சொக்கலிங்கமும் துணிக்கடை உரிமையாளர் மகனும் நண்பர்களாகப் பழகினர். சொக்கலிங்கம் தன் மனைவியிடம் துணிக்கடை உரிமையாளர் மகன் விருப்படி நடக்குமாறு கட்டாயப்படுத்தினர். இதனால் துணிக்கடை உரிமையாளர் மகனுக்கும் சொக்கலிங்கம் செட்டியார் மனைவிக்கும் கள்ளத்தொடர்பு ஏற்பட்டது. இதனைக் கேட்ட பஞ்சாயத்தார் இரண்டு பெண் குழந்தைகளும் சொக்கலிங்கத்திடம் இருக்கட்டும்மென்றும், அவரது மனைவி அவளது பெற்றோர்களிடம் வாழட்டும் என்றும் அவர்களைப் பிரித்து வைத்துத் தீர்ப்புக் கூறினர்.

**குடும்ப வழக்குகள் மணவிலக்கு**

**பேட்டி எண்:119**

| வழக்குத் தொடுப்பவர் | : | கன்னையா |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | அன்புக்கரசி |
| வழக்கு விவரம் | : | மணமுறிவு வேண்டுதல் |
| ஊர் | : | கோவினிப்பட்டி |
| சாதி | : | பறையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | சாதிப்பஞ்சாயத்து |
| நாள் | : | மாசி 5, 1991 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிவகங்கை |

கோவினிபட்டியைச் சேர்ந்த கன்னையா என்பவர் என் மனைவி என்னுடன் வாழ மறுக்கின்றாள், அவளை என்னுடன் சேர்ந்து வாழ வையுங்கள் என்று சாதிப்பஞ்சாயத்துத் தலைவரிடம் 1991ம் ஆண்டு மாசி மாதம் 5ம் தேதி வழக்குத் தொடுத்தார். இதன் காரணமாக அன்று இரவு 9.00 மணிக்குப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. தலைவர் வழக்குத் தொடர்ந்த கன்னையாவை அழைத்து விசாரித்தார். பின்பு குற்றம்சாட்டப்பட்ட அன்புக்கரசியை விசாரித்தார். இருவருக்கும் திருமணமாகி இரண்டு வருடம் ஆகின்றது. இப்போது எதற்கு இப்படி விவாகரத்துக் கேட்கிறாய் என அன்புக்கரசியிடம் பஞ்சாயத்துத் தலைவர் கேட்டார். அதற்கு அன்புக்கரசி கன்னையா ஆண்மையில்லாதவர் எனவே நான் அவருடன் வாழமாட்டேன், பஞ்சாயத்தார் பிரித்து வைக்காவிட்டால் நான் செத்துவிடுவேன் என்று அழுதாள். அதன்படி பஞ்சாயத்தார் கன்னையாவிற்கு நஷ்ட ஈட்டுத் தொகை ரூபாய் 20,000மும் அபராதத் தொகை ரூபாய் 240-ம் கட்டிவிட்டு அன்புக்கரசி பிரியலாம் என விவாகரத்துச் செய்து வைத்தனர்.

**பேட்டி எண்:120**

| வழக்குத் தொடுப்பவர் | : | அழகி |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | இராமன் |
| வழக்கு விவரம் | : | மனமுறிவு வேண்டுதல் |
| ஊர் | : | பாப்பாகுடி |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | வைகாசி 5, 1995 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிவகங்கை |

பாப்பக்குடி கிராமத்தைச் சேர்ந்த அழகி என்பவள் தான் தன் கணவனுடன் வாழ விரும்பவில்லையென்றும் விவாகரத்துச் செய்து வைக்கும்படியும் 1995ஆம் ஆண்டு வைகாசிமாதம் 5ம் தேதி கிராமப்பஞ்சாயத்துக் தலைவரிடம் வழக்குத்

தொடர்ந்தாள். இதன் காரணமாக அன்று இரவு 9.00 மணிக்குப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. குற்றம் சாட்டப்பட்ட அழகியின் கணவன் இராமனை அழைத்து விசாரித்தனர். தன் மனைவ ஒழுங்காக தன்னுடன் வாழவில்லை என்றும் அடிக்கடி அவள் அப்பன் வீட்டிற்குச் சென்று தங்கிக் கொள்கிறாள் என்றும் இராமன் கூறினார். அடுத்து அழகியிடம் பஞ்சாயத்துத் தலைவர் விசாரித்தார். அதற்கு அவள் அவர் என்னைச் சந்தேகப்படுகின்றார். அடிக்கடி அடித்துக் கொடுமைப் படுத்துகின்றார். இனிமேல் நான் அவருடன் வீட்டிற்குச் சென்றால் என்னைக் கொன்றும் விடுவார். மிக மோசமானவர் என்னைப் பிரித்து விடுங்கள், நான் அவருடன் வாழ விரும்பவில்லை என்றாள். இரு தரப்பினரையும் மீண்டும் விசாரித்த பஞ்சாயத்துத் தலைவர் பஞ்சாயத்தாருடன் கலந்து பேசி முடிவாக ரூ 12,000 பெண்ணிற்குத் தீர்வைத் தொகை வாங்கிக் கொடுத்து விவாகரத்துச் செய்து வைத்தனர்.

**பேட்டி எண்:121**

| வழக்குத் தொடுப்பவர் | : | பிரேமசுந்தரி |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | இராமகிருஷ்ண ஐயர் |
| வழக்கு விவரம் | : | மணமுறிவு வேண்டுதல் |
| ஊர் | : | பாகனேரி |
| சாதி | : | பண்டாரம் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | நாட்டுப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆனி 9, 1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | கல்லல் |

பாகனேரிக் கிராமத்தைச் சேர்ந்த எனது கணவர் ஆசிரியரான இராமகிருஷ்ண ஐயரை விவாகரத்துச் செய்து வையுங்கள் என அதே ஊரைச் சேர்ந்த பிரேமசுந்தரி நாட்டுப்பஞ்சாயத்துத் தலைவரிடம் 1999ஆம் ஆண்டு ஆனி மாதம் 9ம் தேதி வழக்குத் தொடர்ந்தாள். அதன் காரணமாக அன்று பகல் கூடிய நாட்டுப்பஞ்சாயத்தில் பல கிராமங்களைச் சேர்ந்த இருவருக்கும் வேண்டியவர்கள்

கலந்து கொண்டனர். பிரேமசுந்தரி நாட்டரசன் கோட்டைக் கிராமத்தில் பிறந்தவள். ஏற்கனவே திருமணமாகி ஒரு குழந்தைக்குத் தாயாகி விவாகரத்துப் பெற்றவள் என்பதனால் நாட்டரசன் கோட்டைக் கிராமத்தலைவர்களும் பெண் சார்பாகப் பஞ்சாயத்தில் கலந்து கொண்டனர். சத்துணவு அமைப்பாளரான பிரேமசுந்தரி ஆசிரியர் இராமகிருஷ்ண ஐயரைக் காதலித்துத் திருமணம் செய்து கொண்டவள். பன்னிரண்டு வருடங்கள் சேர்ந்து வாழ்ந்திருக்கின்றனர். ஆதலால் 12 வருடங்களுக்குப் பின்னர் விவாகரத்துக் கேட்டபதன் காரணத்தை நாட்டுப் பஞ்சாயத்துத் தலைவர் இருவரிடமும் விசாரித்தார். விசாரனையில் இராமகிருஷ்ண ஐயருக்கு பிரேமசுந்தரியுடன் சேர்ந்து வாழ விருப்பமில்லை என்பது தெரியவந்தது. இராமகிருஷ்ண ஐயருக்கும் பிரேமசுந்தரிக்கும் குழந்தை இல்லாததால் பின்னர் பிரேமசுந்தரியின் வாழ்க்கைக்கு ஆதரவு வேண்டுமெனப் பஞ்சாயத்தார் முடிவு செய்து மதுரையில் திருநகரில் இருந்த இராமகிருஷ்ண ஐயரின் வீட்டை பிரேமசுந்தரி பெயரில் எழுதிக் கொடுத்துப் பஞ்சாயத்தார் அவர்களுக்கு விவாகரத்துச் செய்து வைத்தனர்.

**பேட்டி எண்:122**

| வழக்குத் தொடுப்பவர் | : | அமிர்தம் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | யுசல்வராசு |
| வழக்கு விவரம் | : | மணமுறிவு வேண்டுதல் |
| ஊர் | : | நாயனேந்தல் |
| சாதி | : | இடையர் (கோனார்) |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | சித்திரை 3, 1995 |
| ஒன்றியம்/வட்டம் | : | காளையார்கோவில் |

நாயனேந்தல் கிராமத்தைச் சேர்ந்த அமிர்தம் என்பவள் தன் கணவன் கருப்பன் மகன் செல்வராசு பல பெண்களுடன் தொடர்பு வைத்துள்ளதால் அவரை

விவகாரத்துச் செய்து வைக்க வேண்டுமெனப் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1995 ஆம் ஆண்டு சித்திரை மாதம் 3ம் தேதி வழக்குத் தொடுத்தார். இதன் காரணமாக அன்று பகல் 11.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்துத் தலைவர் அமிர்தத்திடம் விசாரித்தார். பின்னர் செல்வராசிடம் விசாரித்தார். செல்வராசு மோசமான நடத்தை உள்ளவர், பலபெண்களுடன் அவருக்குத் தொடர்பு உண்டு என்றும் பஞ்சாயத்துத் தலைவர் தெரிந்து கொண்டார். தன்னுடைய குற்றத்தை செல்வராசு ஒப்புக் கொண்டார். பின்னர் பஞ்சாயத்தார் கலந்து பேசி இரண்டு குழந்தைகளுக்குத் தந்தையான நீ இனிமேல் ஒழுங்காக இருந்து உன் மனைவியை வாழவைக்க வேண்டும். தவறினால் உன்னை ஊரிலிருந்து ஒதுக்கி வைப்போம் எனத் தீர்ப்புக் கூறினர். செல்வராசு பஞ்சாயத்தார் தீர்ப்பினை ஏற்றுக் கொண்டு மனம் திருந்தி தற்போது ஒழுங்காக வாழ்ந்து வருகின்றனர்.

**பேட்டி எண்:123**

| வழக்குத் தொடுப்பவர் | : | கோமதி |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | காளிமுத்து |
| வழக்கு விவரம் | : | மணவிலக்கு வேண்டுதல் |
| ஊர் | : | கோதுகுடி (திருவள்ளுவர்) |
| சாதி | : | பள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | மாசி 25, 1995 |
| ஒன்றியம்/வட்டம் | : | இளையான்குடி |

கோதுகுடிக் கிராமத்தைச் சேர்ந்த கோமதி என்பவள் நான் என் கணவனுடன் வாழ விரும்பவில்லை, என்னைத் தீர்த்து வையுங்கள் எனப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1993 ஆம் ஆண்டு மாசி மாதம் 25ம் தேதி வழக்குத் தொடர்ந்தாள். இதன் காரணமாகக் கிராமப் பஞ்சாயத்து அன்று பகல் 11.00

மணிக்குக் கூட்டப்பட்டது. கோமதி பஞ்சாயத்தாரிடம் தன் கணவன் காளிமுத்து ஆண்மையில்லாதவன் எனக் கூறினாள், பஞ்சாயத்துத் தலைவர் விசாரித்ததில் கோமதி ஆறுமாதக் கர்ப்பமாக இருப்பது தெரிய வந்தது. ஆனால் கோமதியின் கணவனை ஆண்மையில்லாதவன் என்று சொல்லுவதை ஏற்க முடியாது என்றார். கோமதி என் கர்ப்பத்திற்கு என் கணவன் காரமில்லை என்றாள். அப்போது தகராறு ஏற்பட்டது. குழந்தை எனக்குத்தான் சொந்தம் என்று கோமதியின் கணவன் கூறினான். இதன் காரணமாகப் பஞ்சாயத்து ஐந்துமுறை வாயிதா வாங்கித் தள்ளி போடப்பட்டது. ஆறாவது முறையாகக் கூடிய கூட்டத்தில் தீர்ப்புச் சொல்லப்பட்டது. அத்தீர்ப்பின் படி காளிமுத்து ரூ. 500 தீர்வைத் தொகை செலுத்த வேண்டும், அவர்தான் ஆண்மையற்றவர் எனத் தெரிந்திருந்தும் ஒரு பெண்ணைத் திருமணம் செய்தது குற்றமாகும், குழந்தை பிறந்ததும் தாயிடம் தான் வளரவேண்டும் அக்குழந்தை விரும்பினால் தந்தையாகிய காளிமுத்துவிடம் வரலாம் என்று பஞ்சாயத்து முடிவடைந்தது.

**பேட்டி எண்:124**

| வழக்குத் தொடுப்பவர் | : | ராக்கு |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | நந்தனார் |
| வழக்கு விவரம் | : | மணவிலக்குக் கோருதல் |
| ஊர் | : | காளையார் கோவில் |
| சாதி | : | இடையார் (கோனார்) |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | மாசி 20, 1995 |
| ஒன்றியம்/வட்டம் | : | காளையார்கோவில் |

சத்துணவுப் பொறுப்பாளராக பணியாற்றிய ராக்கு என்பவள், என் கணவன் நந்தனார் (அவரும் சத்துணவுப் பொறுப்பாளர்) குடும்ப உறவுக்குத் தகுதியில்லாதவர். அவரை விவாகரத்துச் செய்து வையுங்கள் எனப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1995 ஆம் ஆண்டு மாசிமாதம் 20ம் தேதி வழக்குத் தொடர்ந்தாள். இதன் காரணமாக

அன்று பகல் 11.00 மணிக்குக் கிராமப்பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. ராக்குவிடம் தலைவர் விசாரித்தார், அவள் பஞ்சாயத்துத் தலைவரிடம் நந்தனார் என்னைக் காதலித்துத் திருமணம் செய்து கொண்டார், திருமணம் ஆனபின்புதான் அவர் ஆண்மையில்லாதவர் என்ற விவரம் எனக்குத் தெரிந்தது. இனிமேல் நான் அவருடன் வாழ முடியாது என்று கூறினாள். பின்னர் தலைவர் நந்தனாரிடம் விசாரித்தார். அதற்கு அவர் நான் ராக்குவுடன் வாழ விரும்புகின்றேன். எங்களைப் பிரித்து விடாதீர்கள் என்று வேண்டினார். மீண்டும் பஞ்சாயத்தார் ராக்குவிடம் விசாரிக்கும்போது எனக்கு விவாகரத்துச் செய்து தராவிட்டால் நான் செத்துவிடுவேன் என்று கூறி அழுதாள். பின்னர் பஞ்சாயத்தார் கலந்து பேசி மாப்பிள்ளையாகிய நந்தனாருக்கு ரூபாய் 5000 கொடுத்து விட்டு ராக்கு பிரிந்து செல்லலாம் எனத் தீர்ப்புக் கூறிப் பிரித்து வைத்தனர்.

**பேட்டி எண்:125**

| வழக்குத் தொடுப்பவர் | : | வீரப்பன் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | செகப்பி |
| வழக்கு விவரம் | : | மணமுறிவு வேண்டுதல் |
| ஊர் | : | இரணியூர் |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | மார்கழி 13, 1997 |
| ஒன்றியம்/வட்டம் | : | திருப்பத்தூர் |

இரணியூர் கிராமத்தைச் சேர்ந்த செகப்பி என்பவள் தன் கணவன் வீரப்பனுடன் வாழ முடியாது என்று பஞ்சாயத்துத் தலைவரிடம் 1997 ஆம் ஆண்டு மார்கழி மாதம் 13ம் தேதி வழக்குத் தொடர்ந்தாள். இதன் காரணமாக அன்று பகல் 12.00 மணிக்குக் கூடிய கிராமப்பஞ்சாயத்தார் அவர்களைத் தீர்த்து வைத்தனர். பின்னர் இரண்டு வருடங்கள் கழித்து அவர்கள் இருவரும் மீண்டும் சேர்ந்து கொண்டனர். இன்று குழந்தைகளுடன் மகிழ்ச்சிகரமாக வாழ்ந்து வருகின்றனர்.

**பேட்டி எண்:126**

| வழக்குத் தொடுப்பவர் | : | தெய்வேந்திரன் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | தெய்வேந்திரன் மனைவி |
| வழக்கு விவரம் | : | மணவிலக்குக் கோருதல் |
| ஊர் | : | கண்டநல்மாணிக்கம் |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஐப்பசி 20, 1990 |
| ஒன்றியம்/வட்டம் | : | கல்லல் |

தெய்வேந்திரன் என்பவர் தன் மனைவி தன் தாயாரை மதிப்பதில்லை என்றும் அதனால் அவளை விவாகரத்துச் செய்து வைக்க வேண்டுமென்றும் 1990 ஆம் ஆண்டு ஐப்பசி மாதம் 20ம் தேதி வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று பகல் 11.00 மணிக்குக் கிராமப்பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. முதலில் தெய்வேந்திரனிடமும் அதன்பின்னர் தெய்வேந்திரன் மனைவியிடமும் பஞ்சாயத்துத் தலைவர் விசாரித்தார். பின்னர் தெய்வேந்திரனின் பெற்றோர்களிடம் விசாரித்தனர். விசாரணையில் தெய்வேந்திரன் தன் மனைவி சேர்ந்திருப்பது தெய்வேந்திரன் தாயாருக்கு பிடிக்கவில்லை எனவும், தெய்வேந்திரனின் தந்தை தன் மருமகளிடம் பாசமிக்கவர் என்பதும் தெய்வேந்திரன் தன் தாயார் சொல்லுப்படி நடப்பவர் என்பதும் தெரிய வந்தது. பஞ்சாயத்துத் தலைவர் அனைவரையும் அழைத்து ஒன்றாக நிறுத்தி முதலில் தெய்வேந்திரன் மனைவியை அவள் மாமியார் காலில் விழுந்து வணங்கும்படி சொன்னார். அதே போல் தெய்வேந்திரன் தாயும் இனிமேல் என் மருமகளை மகளாக மதிப்பேன், இது சத்தியம் எனச் சொன்னார். அனைவரும் திருநீறு பூசிக் கொண்டனர். இன்று பேரன், பேத்திகளுடன் அவர்கள் மகிழ்ச்சியாக வாழ்ந்து வருகின்றனர்.

**பேட்டி எண்:127**

| வழக்குத் தொடுப்பவர் | : | ஜானகி |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | சுப்பிரமணியன் |
| வழக்கு விவரம் | : | மணவிலக்குக் கோருதல் |
| ஊர் | : | கண்டரமாணிக்கம் |
| சாதி | : | வளையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | வைகாசி 16, 1985 |
| ஒன்றியம்/வட்டம் | : | கல்லல் |

ஜானகி என்ற பெண் தன் கணவன் தன்னை ஏமாற்றிவிட்டு வேறொரு பெண்ணைத் திருமணம செய்து கொண்டதாகவும் தனக்கு ஒரு வழி சொல்ல வேண்டுமெனவும் கண்டரமாணிக்கம் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1985 ஆம் ஆண்டு வைகாசி மாதம் 6ம் தேதி வழக்குத் தொடர்ந்தாள். இதன் காரணமாக அன்று பகல் 11.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார் விசாரணையில் ஜானகி சானார் சாதிப்பெண் என்பதும், சுப்பிரமணியன் வளையர் சாதி இளைஞன் என்பதும் அவர்கள் இருவரும் காதலித்துத் திருமணம் செய்து கொண்டவர்கள் என்பதும் தெரிய வந்தது. அவர்களுக்கு ஒரு மகன் பிறந்து பின்பு சுப்பிரமணியன் வேறொரு வளையர் சாதிப் பெண்ணைக் காதலித்துக் கர்ப்பம் அடையச் செய்து விட்டான். இனிமேல் சுப்பிரமணியனின் முதல்தரம் ஜானகி அவனுடன் வாழவிரும்பவில்லை என்பதைத் தெரிந்து கொண்ட பஞ்சாயத்தார் , அவள் வாழ்க்கைக்குப் பாதுகாப்புத் தொகையாக ரூ.10,000த்தை சுப்பிரமணியன் கொடுக்க வேண்டுமெனத் தீர்ப்புக் கூறினர். ரூ.10,000த்தை ஜானகிக்குக் கட்டிவிட்டு சுப்பிரமணியன் தன் சாதிப் பெண்ணை மணம் முடித்துக் கொண்டு வாழ்ந்து வருகின்றான்.

**பேட்டி எண்:128**

| வழக்குத் தொடுப்பவர் | : | அழகி |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | பாண்டி |
| வழக்கு விவரம் | : | மணவிலக்கு கோருதல் |
| ஊர் | : | கருப்பூர் கோவில்பட்டி |
| சாதி | : | முத்தரையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | ஊர்ப்பஞ்சாயத்து |
| நாள் | : | வைகாசி 10, 1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிங்கம்புணரி |

அழகி என்ற பெண் தன்னைப் பாண்டி என்பவர் திருமணம் செய்து கொள்வதாகக் கூறி ஊரைவிட்டுக் கூட்டிச் சென்றுவிட்டு, இப்பொழுது திருமணம் செய்து கொள்ள மறுக்கிறார் என 1999 ஆம் ஆண்டு வைகாசி மாமட 10ம் தேதி கருப்பூர் கோவில்பட்டி பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தாள். இதன் காரணமாக அன்று பகல் 11.00 மணிக்கு ஊர்ப்பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. வழக்கை விசாரித்த பஞ்சாயத்துத் தலைவர் பாண்டியிடம், பெண்ணைக் கூட்டிக் கொண்டு ஓடிய மறுநாளே அப்பெண் வேண்டாம் என்றால் அப்பெண்ணின் வாழ்க்கை என்னவாகும் எனக் கேட்டார். அதற்குப் பாண்டி பஞ்சாயத்துத் தலைவரிடம் இந்தப்பெண் தனக்கு வேண்டாம் என்றும், இந்தப் பெண்ணுடன் வாழச் சொன்னால் தான் கிணற்றில் விழுந்து செத்துவிடுவதாகவும் கூறி அழுதார். அதன்பின்னர் தலைவர் பஞ்சாயத்தை ஒத்தி வைத்தார். மூன்று மாதம் மூன்று நாட்கள் பஞ்சாயத்து நடைபெற்றும் பாண்டியின் மனம் மாறவில்லை. ஆதலால் பஞ்சாயத்துத் தலைவர் நீ பிரிந்து செல்லலாம் எனத் தீர்ப்புக் கூறினர். அதன்படி பாண்டி அபராதத் தொகையைக் கட்டிவிட்டு வேறு பெண்ணைத் திருமணம் செய்து கொண்டார்.

**பேட்டி எண்:129**

| வழக்குத் தொடுப்பவர் | : | சுகந்தி |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | மணிவண்ணன் |
| வழக்கு விவரம் | : | மணவிலக்கு கோருதல் |
| ஊர் | : | சிவபுரிப்பட்டி |
| சாதி | : | இடையர் (கோனார்) |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | வைகாசி 20, 1992 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிங்கம்புணரி |

மனக்குடியில் பிறந்த சுகந்தி என்பவள் சிவபுரிப்பட்டியில் மணிவண்ணன் என்பவருக்கு வாழ்க்கைபட்டவள் அவள் 1992 ஆம் ஆண்டு வைகாசி மாமத் 20ம் தேதி சிவபுரிப்பட்டி கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம் தன் கணவன் மணிவண்ணன் தன்னைக் கொடுமைப்படுத்துவதாக வழக்குத் தொடுத்தாள். இதன் காரணமாக அன்று பகல் 10.00 மணிக்கு சிவபுரிப்பட்டியில் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. மணிவண்ணனைப் பஞ்சாயத்தார் விசாரித்தனர். அவர் சுகந்தியுடன் தான் வாழமுடியாது என்றார். அவரிடம் அதற்கான காரணத்தைப் பஞ்சாயத்தார் கேட்டனர். முடிந்த வரையில் சமாதானமும் செய்து பார்த்தனர். எதனையும் மணிவண்ணன் ஏற்றுக் கொள்ளாததால் அவர் சுகந்திக்கு ரூபாய் 30,000 அபராதம் கட்ட வேண்டுமெனத் தீர்ப்புக் கூறினர். பஞ்சாயத்தார் தீர்ப்பின்படி மணிவண்ணன் ரூபாய் 30,000த்தை சுகந்திக்குக் கட்டிவிட்டுப் பிரிந்து சென்று தற்போது வேறு பெண்ணைத் திருமணம் செய்து கொண்டு வாழ்ந்து வருகின்றார்.

**பேட்டி எண்:130**

| வழக்குத் தொடுப்பவர் | : | தெய்வானை |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | சொக்கலிங்கம் |
| வழக்கு விவரம் | : | மணவிலக்கு கோருதல் |
| ஊர் | : | கல்லல் |
| சாதி | : | செட்டியார் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | நகரத்தார் பஞ்சாயத்து |
| நாள் | : | சித்திரை 20, 1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | கல்லல் |

கல்லலைச் சேர்ந்த தெய்வானை என்பவள் தன் கணவன் சொக்கலிங்கம் தன்னையும் தன்னுடைய இரண்டு குழந்தைகளையும் கைவிட்டு விட்டு, நாட்டரசன் கோட்டையில் வேறொரு பெண்ணைத் திருமணம் செய்து கொண்டதாகவும், தன் கணவன் தனக்குத்தான் சொந்தம் எனவும் கல்லல் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1989 ஆம் ஆண்டு சித்திரை மாதம் 20ந் தேதி வழக்குத் தொடர்ந்தாள். இதன்காரணமாக அன்று காலை 10.00 மணிக்கு நகரத்தார் பஞ்சாயத்துக் கல்லலில் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார் தெய்வானையிடம் முதலில் விசாரித்தனர். அவள் பஞ்சாயத்தாரிடம் சொக்கலிங்கம் தன்னைத் திருமணம் செய்து கொண்ட புகைப்படங்களையும் அதில் கலந்து கொண்ட கல்லல் கிராமத்தைச் சேர்ந்த முக்கியப்புள்ளிகளையும் காட்டி நியாயம் கேட்டாள். பஞ்சாயத்தர் திருமணத்தில் கலந்து கொண்ட சொக்கலிங்கம் பங்காளிகளை அழைத்து விசாரித்தனர். பஞ்சாயத்தார் அவர்களிடம் திருமணமாகி இரண்டு குழந்தைகளுக்கு தந்தையானவனுக்கு எப்படித் திருமணம் செய்து வைத்தீர்கள் எனக் கேட்டனர். பின்னர் சொக்கலிங்கத்தை விசாரித்தனர். அவர் தன் முதல் மனைவி இரவில் தன்னை ஒதுக்குவதாகவும் தன்னை மதிப்பதில்லை எனவும் கூறினர். பஞ்சாயத்தார் பின்னர் நாட்டரசன் கோட்டை கிராமத்தாரை அழைத்து விசாரித்தனர். பெண்ணின் பெற்றோர்கள் தெரியாமல் எங்கள் பெண்ணைக் கொடுத்துவிட்டோம். எங்கள் பெண்ணை வாழவையுங்கள் எனப் பஞ்சாயத்தாரிடம் வேண்டினர். அதனைப் பஞ்சாயத்தார் ஏற்க மறுத்துவிட்டனர். நாட்டரசன் கோட்டைப் பெண்ணைத் திருமணம் செய்து கொண்டதற்காகச் சொக்கலிங்கத்திற்கு ரூபாய் 90,000 ஆயிரம் அபராதம் போட்டு அந்தப் பணத்தைப் பெற்று நாட்டரசன் கோட்டைப் பெண்ணிற்கு கொடுத்து அந்தப் பெண்ணைத் தீர்த்து வைத்தனர். பின்னர் தெய்வானைக்கு அறிவுரை கூறி எச்சரித்து அனுப்பினர். அவர்கள் தற்பொழுது நன்றாக வாழ்ந்து வருகின்றார்கள்.

**பேட்டி எண்:131**

| வழக்குத் தொடுப்பவர் | : | ராதா, பி.ஏ |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | நாச்சியப்பன் |
| வழக்கு விவரம் | : | மணவிலக்கு கோருதல் |
| ஊர் | : | கல்லல் |
| சாதி | : | செட்டியார் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | நாட்டார் பஞ்சாயத்து |
| நாள் | : | ஆனி 15, 1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | கல்லல் |

ராதா என்ற பெண் தன்கணவன் ஆண்மை இல்லாதவர் என்றும் அவரிடமிருந்து விவாகரத்துப் பெற்றுத்தர வேண்டுமென்றும் கல்லல் நாட்டார் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1999 ஆம் ஆண்டு ஆனி மாதம் 15ம் தேதி வழக்குத் தொடர்ந்தாள். இதன்காரணமாக அன்று பகல் 11.00 மணிக்குக் கல்லல் நாட்டார் பஞ்சாயத்துத் தலைவர் முன்னிலையில் கல்லல் நகரத்தார் மண்டபத்தில் நாட்டார் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்துத் தலைவர் ராதாவிடம் முதலில் விசாரித்தார். அவள் தன் கணவன் நாச்சியப்பன் ஆண்மை இல்லாதவன் என்றும் அவன் தன்னை உண்மையை வெளியே சொன்னால் கொன்றுவிடுவேன் என மிரட்டிச் சித்திரவதை செய்வதாகவும், ஒரு நாள் இரவில் தான் சென்னையில் தங்கியிருக்கும் போது இரவு 11.00 மணிக்குத் தன்னை அவன் மிரட்டியதாகவும், அவள் அவனிடமிருந்து தப்பித்து தனது உறவினர்கள் உதவியுடன் தன் தாய்-தந்தையரிடம் வந்து சேர்ந்ததாகவும் பஞ்சாயத்துத் தலைவரிடம் கூறினாள். பின்னர் பஞ்சாயத்துத் தலைவர் நாச்சியப்பனை விசாரித்து அவனுக்கு ரூபாய் 80,000 அபராதம் விதித்து, சீதனப் பொருட்களைக் திரும்பப் பெற்று, மாமியார் சீதனத்திற்காக ரூபாய் 30,000 மும் அவனிடமிருந்து வாங்கிக் கொண்டு அதனை அந்தப் பெண்ணிடம் கொடுத்து அப்பெண்ணைத் தீர்த்து வைத்தனர். பின்னர் நாச்சியப்பன் வேறொரு பெண்ணைத் திருமணம் செய்து கொண்டான். அந்தப் பெண் எப்படியோ கர்ப்பம் அடைந்து விட்டாள். இப்பொழுது அந்தப் பெண்ணும் அவன் ஆண்மையில்லாதவன் என விவாகரத்திற்கு ஏற்பாடு செய்திருக்கின்றனர்.

**பேட்டி எண்:132**

| வழக்குத் தொடுப்பவர் | : | ராஜேஸ்வரி |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | கோவிந்தன் செட்டியார் மகன் |
| வழக்கு விவரம் | : | மணவிலக்கு கோருதல் |
| ஊர் | : | கல்லல் |
| சாதி | : | செட்டியார் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | நகரத்தார் பஞ்சாயத்து |
| நாள் | : | வைகாசி 8, 1988 |
| ஒன்றியம்/வட்டம் | : | கல்லல் |

செம்பனூரில் பிறந்த ராஜேஸ்வரி என்பவள் பி.ஏ பட்டதாரி ஆவாள். அவள் மூன்று வருடங்களுக்கு முன்னர் காரைக்குடி கோவிந்தன் செட்டியார் மகனைத் திருமணம் செய்து கொண்டாள். இரண்டு நாள் அவனுடன் வாழ்ந்த அவள் அவன் நடவடிக்கைகளைக் கவனித்து அவனுடன் தான் வாழமுடியாது என நகரத்தார் தலைவரிடம் 1988 ஆம் ஆண்டு வைகாசி மாம் 8ம் தேதி வழக்குத் தொடர்ந்தாள். இதன் காரணமாக அன்று பகல் 10.00 மணிக்குக் கல்லல் நகரத்தார் கோவிலில் நகரத்தார் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. வழக்கினை விசாரித்த பஞ்சாயத்தார் கோவிந்தன் செட்டியார் மனைவி தன் மகனுக்குக் இவ்வாறு பல பெண்களைக் கட்டி வைத்து ஏமாற்றிய உண்மையைத் தெரிந்து கொண்டனர். திருமணத்தில் வரதட்சணையாகக் கொடுத்த ரூபாய் 10,000த்தையும் மாமியர் சீதனத்திற்காக ரூபாய் 90,000மும் கோவிந்தன் செட்டியார் மகன் கொடுக்க வேண்டுமென பஞ்சாயத்தார் தீர்ப்பளித்தனர். ஆனால் கோவிந்தன் செட்டியார் மனைவி சீதனப்பொருட்களைத் திருப்பித்தர மறுத்தார். ஆனால், பஞ்சாயத்தார் கோவிந்தன் செட்டியார் மனைவியைக் கண்டித்து மாமியார் சீதனப் பணத்தையும் பொருட்களையும் அப்பெண்ணிற்கு வாங்கிக் கொடுத்து அப்பெண்ணைத் தீர்த்து வைத்தனர்.

**குறிப்பு**: கோவிந்தன் செட்டியார் மகன் ஆண்மை இல்லாதவன் ஆவான்

**பேட்டி எண்:133**

| வழக்குத் தொடுப்பவர் | : | முனியாண்டி |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | முத்துப்பாண்டி |
| வழக்கு விவரம் | : | மணவிலக்கு கோருதல் |
| ஊர் | : | படமாத்தூர் |
| சாதி | : | இடையர் (கோனார்) |
| பஞ்சாயத்து அமைப்பு | : | நாட்டுப் பஞ்சாயத்து |
| நாள் | : | 10.02.1998 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிவகங்கை |

முனியாண்டி என்பவர் தன் மனைவி முத்துப்பாண்டி என்பவள் திருமணம் முடிந்த ஒரு வாரத்திலேயே தன்னுடன வாழாமல் தன்னை விட்டு ஓடிவிட்டார் என்றும், ஆதலால் அவளை விவகாரத்துச் செய்து வைக்க வேண்டுமென்றும் 10.2.1998இல் படமாத்தூர் பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடர்ந்தார். இதன் காரணமாக அன்று பகல் 11.00 மணிக்குப் படமாத்தூரில் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. படமாத்தூர் நாட்டார் தலைமையில் பஞ்சாயத்து நடைபெற்றது. பஞ்சாயத்துத் தலைவர் முதலில் முனியாண்டியையும் பின்னர் முத்துப்பாண்டியையும் விசாரித்தார். இருவருமே தங்களைத் தீர்த்து வைக்க வேண்டுமென்று வேண்டினர். இருவருக்கும் ஆறுமாத காலம் வாயிதா கொடுக்கப்பட்டது. ஆறுமாதம் கழித்தும் இருவரும் சேர்ந்து வாழ விருப்பமில்லை எனச் சொன்னதால் ரூ. 35,000 தீர்வைத் தொகையாக பெண்ணிற்கு முனியாண்டியிடம் வாங்கிக் கொடுத்தனர். பின்னர் இருவரும் இன்றிலிருந்து பிரிந்து வாழலாம் எனப்பத்திரம் எழுதிக் கொடுத்தனர்.

**பேட்டி எண்:134**

| வழக்குத் தொடுப்பவர் | : | கணேசன் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | முத்து |
| வழக்கு விவரம் | : | மணவிலக்கு கோருதல் |
| ஊர் | : | அரசனூர் |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | நாட்டுப் பஞ்சாயத்து |
| நாள் | : | 07.05.1985 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிவகங்கை |

பச்சேரிக் கிராமத்தைச் சேர்ந்த கணேசன் என்பவர் தன் மனைவி முத்து தன்னுடன் சேர்ந்து வாழ மறுக்கிறாள் என்றும், குழந்தை இல்லாததால் அவளை விவாகரத்துச் செய்து வைக்க வேண்டுமென்றும் அரசனூர் பஞ்சாயத்துத் தலைவரிடம் 07.5.1985 இல் வழக்குத் தொடர்ந்தாள். இதன் காரணமாக அன்று இரவு 10.00 மணிக்கு நாட்டுப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. தீர்வு சொல்லாமல் அரசனூர் நாட்டுப் பஞ்சாயத்துக் கூட்டம் முடிந்தது. பின்னர் பக்கத்து நாட்டு' தலைவர்கள் முன்னிலையில் கூட்டம் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார் முதலில் கணேசனை விசாரித்தனர். அவர் பஞ்சாயத்தாரிடம் என் மனைவி 2 வருடம் அம்மா வீட்டில் தங்கியிருந்து விட்டு இப்போது வந்துள்ளாள். எங்களுக்குக் குழந்தையில்லை நான்வேறு திருமணம் செய்ய வேண்டும் அவளைத் தீர்த்து வையுங்கள் என்று முறையிட்டார். பின்னர் பஞ்சாயத்தார் முத்துவிடம் விசாரித்தனர். பின்னர் பஞ்சாயத்தார் கலந்து பேசி, நாட்டுத் தலைவர்கள் முன்னிலையில் எழுதி விவாகரத்துச் செய்து வைத்து இருவரையும் வேறு யாரையாவது திருமணம் செய்து கொள்ளலாம் என தீர்ப்பளித்தனர். பின்னர் கணேசன் வேறு பெண்ணை மணந்து கொண்டார், ஆறு மாதத்தில் அவள் ஓடி விட்டாள் மீண்டும் முத்து கணேசனுடன் ஆறுமாதகாலம் வாழ்ந்து வந்தாள். இப்போது கணேசன் மீண்டும் மூன்றாவதாக ஒரு பெண்ணை திருமணம் செய்துள்ளார். முத்து பஞ்சாயத்தார் எழுதிக் கொடுத்த தீர்ப்பைக் காட்டி கணேசனை விரட்டி விட்டாள்.

**பேட்டி எண்:135**

| | | |
|---|---|---|
| வழக்குத் தொடுப்பவர் | : | கமலம் |
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | விரகனூர் சந்திரன் |
| வழக்கு விவரம் | : | மணவிலக்கு கோருதல் |
| ஊர் | : | வேம்பத்தூர் |
| சாதி | : | அகமுடையார் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | நாட்டுப் பஞ்சாயத்து |
| நாள் | : | ஆனி 3, 1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | மானாமதுரை |

வேம்பத்தூரைச் சேர்ந்த கமலம் என்பவள் தான் தன் கணவனுடன் சேர்ந்து வாழ விரும்பவில்லையென்றும் தங்களுக்குள் கருத்துவேறுபாடுகள் அதிகமாக இருப்பதால் எங்களுக்கு 'மணமுறிவு' செய்து வையுங்கள் என்றும் வேம்பத்தூர் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1999 ஆம் ஆண்டு ஆனிமாதம் மூன்றாம் தேதி வழக்குத் தொடர்ந்தாள். இதன் காரணமாக அன்று இரவு 9.00 மணிக்கு நாட்டுப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்துத் தலைவர் கமலத்திடம் முதலில் விசாரித்தார். பின்னர் குற்றம் சாட்டப்பட்டவரான சந்திரனிடம் விசாரித்தார், திருமணமான ஒரு மாதத்தில் இவ்வாறு குறை சொல்வது முறையல்ல என இருவருக்கும் அறிவுரை சொன்னார். ஆனால் இருவரும் பிரிய வேண்டுமெனக் கட்டாயப்படுத்தினர். ஆதலால் பெண்ணுக்கு ரூபாய் 35,000த்தைச் சந்திரன் கொடுத்துவிட்டுப் பிரியலாம் எனப் பஞ்சாயத்துத் தலைவர் தீர்ப்புக் கூறினார். அதன்படி சந்திரன் பணத்தைக் கட்டிவிட்டுப் பிரிந்து சென்றார்.

## IV. பொதுப்பிரச்சனைகள் தொடர்பான வழக்குகள்

### பேட்டி எண்:136

| | | |
|---|---|---|
| வழக்குத் தொடுப்பவர் | : | அம்மாபட்டிக் கிராமத்தார் |
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | செண்பகம் பேட்டைக் கிராமத்தார் |
| வழக்கு விவரம் | : | அய்யனார் கோவில் திருவிழாவில் முதல் மரியாதை யாருக்குச் சொந்தம் என்பது |
| ஊர் | : | அம்மாபட்டி |
| சாதி | : | இடையர் (கோனார்) |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | வைகாசி 25, 1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | திருப்பத்தூர் |

அம்மாப்பட்டி செண்பகம் பேட்டை ஆகி இரண்டு கிராமங்களுக்கும் சொந்தமானது அய்யனார் கோயில் ஆகும். செண்பகம் பேட்டைக் கிராமத்து வேளாளர் தான் கோயில் பூசாரியாக இருந்து வருகின்றார். இதில் அம்மாபட்டி பெரிய கிரமமாகும். அம்மாபட்டிக் கிராமத்தார் அக்கோயிலுக்குக் குதிரையெடுப்புத் திருவிழா நடத்தக்கூடாது என்று செண்பகம் பேட்டைக் கிராமத்தார் 1999 ஆம் ஆண்டு வைகாசி மாதம் 25ஆம் தேதி வழக்குத் தொடர்ந்தனர். இதன் காரணமாக அன்று பகல் 10.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. செண்பகம் பேட்டைக் கிராமத்தாரைப் பஞ்சாயத்தார் விசாரித்தனர். அவர்கள் பஞ்சாயத்தாரிடம் தாங்கள் தான் முதல் மரியாதைக்குரியவர்கள் என்றும், தங்கள் ஊர் வேளாளர் தான் அக்கோயிலின் பூசாரி என்றும், தங்களுக்கு முதல் மரியாதை இல்லையென்றால் குதிரையெடுப்பு நடைபெறாது என்றும் கூறினர். பின்னர் அம்மாப்பட்டிக் கிராமத்தாரிடம் விசாரித்தனர். இரண்டு கிராமத்தார் வாதங்களையும் கேட்ட பஞ்சாயத்தார் தனித்தனியாக வேறு வேறு தேதிகளில் அவர்கள் குதிரையெடுப்பு நடத்தலாம் எனத் தீர்ப்புக் கூறினர். 1999 ஆம் ஆண்டு சித்திரை மாதம் செண்பகம் பேட்டைக் கிராமத்தாரும், வைகாசி மாதம் அம்மாபட்டிக் கிராமத்தாரும் தனித்தனியாகக் குதிரையெடுப்பு விழாவினை நடத்தினர்.

**பேட்டி எண்:137**

| வழக்குத் தொடுப்பவர் | : | முதல் கரையினர் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | இரண்டாம்கரையினர் |
| வழக்கு விவரம் | : | கோயிலில் முதல் மரியாதை |
| ஊர் | : | எஸ்.வி மங்களம் |
| சாதி | : | குடும்பர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | 10.05.2000 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிங்கம்புணரி |

எஸ். வி. மங்களம் ஆலடிக் கருப்புக்கோயில் ஆறுகரையைச் சேர்ந்த குடும்பர்களால் வணங்கப்பட்டு வருவதாகும். முதல் கரையினர் பூசாரியாக இருந்து அனைத்து மக்களுக்கும் வேண்டிய பூசைகளை செய்து வந்தனர். சாமிச் வீட்டிற்குள் முதல் கரையினர்தான் செல்ல வேண்டும். வழக்கத்திற்கு மாறாக இரண்டாம் கரைப் பங்காளிகள் தங்களுக்கும் உரிமையுண்டு எனக் கோயில் வீட்டிற்குள் நுழைந்ததால் முதல் கரையினர் பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடுத்தனர். இதனால் 10.05.2000 அன்று பகல் 10.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. வழக்கினை விசாரித்த பஞ்சாயத்துத் தலைவர் ஆறுகரைக்கும் சொந்தமான ஆலடிக்கருப்பர் கோயில் அத்துடன் சேர்ந்த ஐயனார் கோவிலில் முதல் மரியாதை வழங்குவதில் பிரச்சனை என்பதால் நான் தீர்ப்புச் சொல்ல அக்கோவில் தெய்வத்தையே நம்பி இருக்கிறேன் எனக் கூறித் தீர்ப்புச் சொன்னார். மூன்று நாட்கள் அவர்கள் கோவிலில் உறங்கினர். பஞ்சாயத்துத் தலைவர் கனவில் வந்த தெய்வம் பற்றிச் சொல்லி 15.05.2000 இல் கூட்டத்தைக் கூட்டினார். அப்போது கனவில் தெய்வம் சொன்னதையே அவர் தீர்ப்பாகக் கூறினார். அதை ஆறுகரையினரும் ஏற்றுக்கொண்டனர். "சுத்தமான வீட்டில் அழகுடன் உயர்ந்த பட்டு அணியுடனும் சாவிக்கொத்துடனும் மாமியார் நின்று கொண்டிருக்கிறாள், மருமகள் அந்த வீட்டில் எனக்கும் உரிமை இருக்கிறது அது என் மாமனார் வீடுதான்

என்றாள். தந்தை இல்லாமல் மகன் இல்லை என்பதே அக்கனவாகும் அக்கனவின்படி முதல் கரையினர் சாமிபூசைகளைச் செய்யட்டும் மற்ற கரையினர் அவர்களுக்கு உதவியாக இருக்க வேண்டுமென முடிவு செய்யப்பட்டது.

**பேட்டி எண்:138**

| வழக்குத் தொடுப்பவர் | : | மறவர் இனப் பொதுமக்கள் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | இடையர் இன பொது மக்கள் |
| வழக்கு விவரம் | : | கோயிலில் முதல் மரியாதை யாருக்கு என்பது |
| ஊர் | : | நெம்மேனி |
| சாதி | : | மறவர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | பத்து ஊர்நாட்டுப் பஞ்சாயத்து |
| நாள் | : | வைகாசி 10, 1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | இளையான்குடி |

நெம்மேனிக் கிராமத்தைச் சேர்ந்த மறவர் இனப்பொதுமக்கள் அதே ஊரைச் சேர்ந்த இடையர் இனப்பொதுக்களிடம் அவ்வூர்க் கோயில் விழாவில் முதல் மரியாதை தங்களுக்குத்தான் தரப்பட வேண்டுமென்றும் நெம்மேனியைச் சேர்ந்த பத்து ஊர் நாட்டுப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1999ஆம் ஆண்டு வைகாசி மாதம் பத்தாம் தேதி வழக்குத் தொடர்ந்தனர். இதன் காரணமாக நெம்மேனியில் அன்று பகல் 10.00 மணிக்கு பத்துஊர் நாட்டுப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தில் பத்துஊர் நாட்டுத் தலைவர்கள் கலந்து பேசினர். இருபது ஆண்டுகளாக அய்யனார் கோயில் திருவிழா நடைபெறாமல் இருக்கின்றது. மறவர் இனப்பொதுமக்களும் இடையர் பொதுமக்களும் தங்களுக்குத்தான் முதல் மரியாதை என்று கேட்கின்றனர். இதனைக் கேட்ட பஞ்சாயத்துத் தலைவர் இரண்டு சமுதாயத்தைச் சேர்ந்த முக்கியத்தலைவர்களிடமும் வருடத்திற்கு ஒருவர் எனவே இரு சமுதாயத்திலும் இருவரைத் தேர்ந்தெடுத்துச் சமமாக முதல் மரியாதை வழங்கப்பட வேண்டுமென்று பஞ்சாயத்தார் தீர்ப்புக் கூறினர். பஞ்சாயத்தார் தீர்ப்பினை ஏற்றுக் கொண்டு நெம்மேனியில் இருபது வருடங்களுக்குப் பின்னர் அய்யனார் கோயில் திருவிழா நடைபெற்றது.

**பேட்டி எண்:139**

| வழக்குத் தொடுப்பவர் | : | சேதுசேர்வை |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | துரை |
| வழக்கு விவரம் | : | முதல் மரியாதை வேண்டுதல் |
| ஊர் | : | மீனாட்சிபுரம் |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆடி 23, 1976 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிவகங்கை |

மீனாட்சிபுரம் கிராமத்தைச் சேர்ந்த ஊர் அம்பலகாரர் மகன் சேதுசேர்வை என்பவர் தன் தந்தைக்குப்பின்னர் தான்தான் அம்பலகாரர் என்று 1976 ஆம் ஆண்டு ஆடிமாதம் 25ம் தேதி நாலூர் பஞ்சாயத்துத் தலைவரிடம் வழக்குத் தொடுத்தார். வழக்கினை விசாரித்த பஞ்சாயத்துத் தலைவர்கள் சேதுசேர்வை, துரை ஆகிய இருவரையும் அழைத்துப் பேசினர். தம்பி தான்தான் அம்பலகாரர் என்றான். அண்ணன் பரம்பரையாக மூத்தவன்தான் அம்பலகாரர் என்று உள்ளதை எப்படி மாற்ற முடியும் என்றான். பின்னர் பஞ்சாயத்துத் தலைவர்களும் உறுப்பினர்களும் கலந்து பேசி, இருவருமே ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகள் எனவே வருடத்துக்கு ஒருவர் அம்பலகாரராக இருந்து கொள்ளுங்கள். இனிமேல் எந்தத் தகராறும் உங்களுக்குள் இருக்கக்கூடாது எனச் சமாதானம் செய்து வைத்து பஞ்சாயத்தை முடித்தனர். அவ்வாறே அவர்கள் மாறி மாறி வருடத்திறகு ஒருவர் ஊர் அம்பலகாரராக இதுநாள் வரை இருந்து வருகின்றனர்.

**பேட்டி எண்:140**

| வழக்குத் தொடுப்பவர் | : | பாண்டி |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | நாகராசு |
| வழக்கு விவரம் | : | கோயில் பிரச்சனை |
| ஊர் | : | லாடனேந்தல் |
| சாதி | : | அகமுடையார் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | பங்குனி 5, 1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | திருப்புவனம் |

லாடனேந்தல் கிராமத்தைச் சேர்ந்த பாண்டி தலைமையில் 25 ஆட்களும் நாகராசு தலைமையில் 24 ஆட்களும் லாடனேந்தல் அம்மன் கோயில் பிரச்சனையில் மோதிக்கொண்டு காவல் நிலையத்தில் அகப்பட்டுக்கொண்டனர். இதனைக் கேள்விப்பட்ட ஊர்க்காரர்கள் காவல் நிலையத்தில் பேசி தங்கள் ஊர்க் கிராமப்பஞ்சாயத்தில் தீர்த்துக் கொள்வதாக அவர்களை அழைத்து வந்தனர். இதன் காரணமாக 1999ஆம் ஆண்டு பங்குனி மாதம் 5ம் தேதி பகல் 11.00 மணிக்கு லாடனேந்தல் நாட்டுப்பஞ்சாயத்துத் தலைவர் முன்னிலையில் கிராமப்பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார் பாண்டியிடம் விசாரித்த போது முதலில் நாகராசுதான் தகராறு செய்தார் என்று கூறினார். மீண்டும் இரண்டு குழுவினரும் மோதிக்கொள்ளும் நிலையில் பஞ்சாயத்தார் கட்டுப்படுத்தினார்கள். பின்னர் பஞ்சாயத்தார் பாண்டி, நாகராசு ஆகிய இருவரும் பகைமை பாராட்டக்கூடாது எனவும், இருகுழுவினரும் ஒற்றுமையாக இருந்து வருடாவருடம் சாமி கும்பிட உதவ வேண்டுமெனவும் சமாதானம் செய்து வைத்துத் தீர்ப்புக் கூறினர்.

**குறிப்பு**

பாண்டி, நாகராசு, ஆகிய இரு குழுவினரும் ஒரே சாதியைச் சேர்ந்தவர்கள் உறவினர்கள், கோயில் விழாவில் மரியாதை பெறுவதில் யார் பெரியவன் என்பதைக் காட்டுவதற்காக இருகுழுவினரும் மோதிக் கொண்டனர்.

**பேட்டி எண்:141**

| வழக்குத் தொடுப்பவர் | : | வெளியாத்தூர்க் கிராமத்தார் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | நயினார்பட்டி அரசப்பன் |
| வழக்கு விவரம் | : | கோயில் பிரச்சனை |
| ஊர் | : | வெளியாத்தூர் |
| சாதி | : | இடையர் (கோனார்) |
| பஞ்சாயத்து அமைப்பு | : | நாட்டுக்கூட்டம் |
| நாள் | : | கார்த்திகை மாதம் 17, 2000 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிங்கம்புணரி |

வெளியாத்தூர்க் கிராமத்திற்கும் நயினார்பட்டிக் கிராமத்திற்கும் ஒரே அம்பலகாரர் தான் அதன் தலைமையிடம் வெளியாத்தூர் ஆகும். வெளியாத்தூர்க் கிராமத்திற்கும் நயினார்பட்டி அரசப்பனுக்கும் பஞ்சாயத்துத் தேர்தலில் முன்விரோதம் இருந்து வந்தது. இதன் காரணமாக வெளியாத்தூர் நயினார்கோயில் திருவிழா தடைப்பட்டுவந்தது. இக்கோயில் திருவிழாவை உடனே நடத்தவேண்டுமென வெளியாத்தூர் கிராம மக்கள் அனைவரும் பட்டமங்கலம், கண்டமாணிக்கம் நாட்டார்கள் தலைமையிடம் 2000 ஆம் ஆண்டு கார்த்திகை மாதம் 17ஆம் தேதி வழக்குத் தொடுத்தனர். இதன் காரணமாக அன்று பகல் 10.00 மணிக்கு நாட்டுக்கூட்டம் கூட்டபட்டது. பஞ்சாயத்தார்கள் வெளியாத்தூர் தலைவரையும் மற்றும் முக்கியமானவர்களையும் விசாரித்தனர். நயினார்பட்டி அசரப்பன் நாடகத்தில் முதல் மரியாதை கேட்டும், கண்மாய் ஏலத்தில் ஆள் வைத்து அடிதடி நடத்தியும், நயினார்கோயில் திருவிழாவைத் தடுத்தும் வெளியாத்தூர்க் கிராமத்திற்குப் பலகெடுதல்களைச் செய்து வந்துள்ளார். இதனை விசாரணையில் தெரிந்து கொண்ட நாட்டு அம்பலகாரர் அரசப்பனிடம் விசாரித்தனர். அவர் இவையாவும் போன ஆட்சியில் நடந்தது. இப்போது நான் அப்படியில்லை, எனக்கும் வெளியாத்தூர் குடியுரிமை வேண்டுமென்றார். இதனை வெளியாத்தூர்க் கிராமத்தார் ஏற்றுக் கொள்ளவில்லை, பின்னர் பஞ்சாயத்தார் இருதரப்பினரையும்

ஒத்துப் போகச் சொல்லி நயினார்கோயிலில் சாமி கும்பிட்டுத் திருவிழாவினை நடத்த ஏற்பாடு செய்தனர். அந்த ஆண்டு முதல் அமைதியாகத் திருவிழா நடைபெற்று வருகின்றது.

**பேட்டி எண்:142**

| வழக்குத் தொடுப்பவர் | : | நரியங்குடிக் கிராமத்தார் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | கட்டக்கான்பட்டி கிராமத்தார் |
| வழக்கு விவரம் | : | கருப்பன் கோயில் பிரச்சனை |
| ஊர் | : | நரியங்குடி |
| சாதி | : | முத்தரையர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | பங்குனி 28, 1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | கல்லல் |

நரியங்குடிக் கிராமத்தார் தங்களுக்குச் சொந்தமான கருப்பர் கோயில் திருவிழாவில் பக்கத்துக் கிராமமான கட்டக்கான்பட்டிக்கு மரியாதை கொடுத்து வந்தனர். இதைக் காரணம் காட்டிக் கட்டக்கான்பட்டிக் கிராமத்தார் கருப்பர் கோயில் திருவிழாவில் தங்களுக்கு முதல் மரியாதை வேண்டுமெனக் கேட்டனர். இதை நரியங்குடிக் கிராமத்தார் மறுத்ததால் இரண்டு கிராமத்தார்களுக்கும் போட்டி ஏற்பட்டன. இதன் காரணமாக 1999ஆம் ஆண்டு பங்குனி மாதம் 23ம் தேதி கிராமப்பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. இரண்டு கிராமத்தார்களும் கூட்டத்தில் கலந்து கொண்டனர். நரியங்குடிக் கிராமத்தார் பஞ்சாயத்தார்களிடம் கருப்பர் கோயில் தங்களுக்குத்தான் சொந்தமானது என்றும், நாட்டார் என்ற அடிப்படையில் கட்டக்கான்பட்டிக்கு மரியாதை கொடுத்தோம் என்று கூறினர், தொடர்ந்து அவர்களை உரிமை கொண்டாட அனுமதிக்க முடியாது என்றனர். இதனைக் கேட்ட கட்டக்கான்பட்டிக் கிராமத்தார் அதனை ஏற்றுக் கொண்டு, நரியங்குடிக் கிராமம் விரும்பி மரியாதை கொடுத்தால் ஏற்றுக் கொள்ளலாம். மரியாதை கேட்டுக் கட்டாயப்படுத்தக்கூடாது என வழக்கினை முடித்தனர்

**பேட்டி எண்:143**

| வழக்குத் தொடுப்பவர் | : | குமாரபேட்டைக் கிராமத்தார் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | வெங்கலப்ப நாயக்கர் வாரிசு |
| வழக்கு விவரம் | : | கோயில் பிரச்சனை |
| ஊர் | : | குமாரபேட்டை |
| சாதி | : | நாயக்கர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | கார்த்திகை 10, 1980 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிங்கம்புணரி |

அழகிய நாச்சியம்மன் கோயிலை உடைத்து அக்கோயிலின் பொருட்களை வெங்கலப்ப நாயக்கர் வாரிசு விற்பதற்கு ஏற்பாடு செய்ததால் குமாரபேட்டைக் கிராமத்தார் அவர் மீது 1980 ஆம் ஆண்டு கார்த்திகை மாதம் 10ம் தேதி வழக்குத் தொடர்ந்தனர். இதன் காரணமாக அன்று பகல் 10.00 மணிக்குக் குமாரபேட்டையில் கிராமப்பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. அம்மாபேட்டைக் கிராமத்தார் நாயக்கர் கோயிலை உடைத்தது தவறு என்று கூறினர். நாயக்கர் தனக்குச் சொந்தமான கோயில் என்று வாதிட்டார். வழக்கினை விசாரித்த பஞ்சாயத்தார் அக்கோயில் வெங்கலப்ப நாயக்கரால் கட்டப்பட்டதாதலால் அவரது வாரிசாக நாயக்கர் இருந்து முதல்மரியாதையை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கூறினர். கோயிலை அனைவரும் சேர்ந்து பணம் வசூலித்துப் புதுப்பித்துக் கட்டலாம் என முடிவு செய்யப்பட்டு பல்வேறு தடைகளையும் எதிர்ப்புக்களையும் தாண்டி 1997 இல் கும்பாபிசேகம் செய்யப்பட்டது. இன்றும் நாயக்கர் வாரிசுகள் முதல் மரியாதையை ஏற்றுக் கொள்கின்றனர்.

**பேட்டி எண்:144**

| வழக்குத் தொடுப்பவர் | : | கள்ளாப்பேட்டைக் கிராமத்தார் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | ஆவணிபட்டிக் கிராமத்தார் |
| வழக்கு விவரம் | : | கோயில் தாவா |
| ஊர் | : | கள்ளாப்பேட்டை |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆனி 22, 2000 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிங்கம்புணரி |

கள்ளாப்பேட்டைக் கிராமத்தார் ஆவணிபட்டியிலுள்ள ஆகாசக்கருப்பர் கோயில் தங்களுக்குத்தான் சொந்தமென்று கள்ளாப்பேட்டைக் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரிடம 2000 ஆம் ஆண்டு ஆனி மாதம் 22ம் தேதி வழக்குத் தொடர்ந்தனர். இதன் காரணமாக அன்று பகலில் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. பஞ்சாயத்துத தலைவர் முத்தையா கூட்டத்திற்குத் தலைமை தாங்கினார். ஆவணிப்பட்டியிலிருந்து பிரிந்து சென்ற பங்காளிகள்தான் கள்ளாப்பேட்டையில் குடிபுகுந்துள்ளனர். எனவே இரண்டு கிராமத்தார்களுக்கும் சொந்தமான கோயில் ஆகாசக் கருப்பர் கோயில் என்று சொல்லிப் பஞ்சாயத்துத் தலைவர் விசாரணையைத் தொடங்கினார். கள்ளாப்பேட்டைக் கிராமத்தார்கள் எங்களுக்குத்தான் அக்கோயில் உரிமையுடையது என்றும் நாங்கள் தான் பூசைபோடுவோம் என்றும் வாதாடினர். பஞ்சாயத்துத் தலைவர் 1962இல் தயாரிக்கப்பட்ட பத்திரத்தைக் காட்டி, இரண்டு கிராமத்தார்களும் தனித்தனியாக பூசை போடலாம் என்றார். பூசைபோடுவதற்கு முன்னர் பஞ்சாயத்துத் தலைவரிடம் சொல்லி அனுமதி பெற்றுக் கொள்ள வேண்டுமென்றும், திருவிழாவிற்கு வேண்டிய வசதிகளைப் பஞ்சாயத்து செய்துதரும் என்றும் தீர்ப்புச் சொல்லப்பட்டது. அந்தத் தீர்ப்பினை இரண்டு கிராமத்தார்களும் ஏற்றுக்கொண்டனர்.

**பேட்டி எண்:145**

| வழக்குத் தொடுப்பவர் | : | மட்டிக்கரைப்பட்டி கிராமத்தார் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | சிவபுரிப்பட்டிக் கிராமத்தார் |
| வழக்கு விவரம் | : | கோயில் மாட்டுப்பிரச்சனை |
| ஊர் | : | சிவபுரிப்பட்டி |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | ஊர்ப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆனி 25, 1993 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிங்கம்புணரி |

சிவபுரிபட்டிக் கிராமத்தார் மட்டிக்கரைப்பட்டியிலுள்ள கருப்பர் கோயிலுக்குக் கோயில் மாடு கட்டி வந்தனர். இதனை மறுத்து மட்டிக்கரைப்பட்டிக் கிராமத்தார் எங்கள் ஊர்க்கோயிலுக்கு நாங்கள் தான் மாடு கட்டுவோம் எனப் பஞ்சாயத்துத் தலைவரிடம் 1993ஆம் ஆண்டு ஆனி மாதம் 25ம் தேதி வழக்குத் தொடுத்தனர். இதன் காரணமாக அன்று பகல் 10.00 மணிக்கு ஊர்ப்பஞ்சாயத்துக் கூட்டபட்டது. சிவபுரிப்பட்டிக் கிராமத்தார் பல வருடங்களாக நாங்கள் தான் கருப்பர் கோயிலுக்கு முதல் காளை கட்டுவது வழக்கம். ஆனால் இந்த ஆண்டு மட்டிக்கரைப்பட்டிக் கிராமத்தார் முதல் காளையை கட்டிவிட்டனர். இதைக் கண்டிக்க வேண்டுமெனப் பஞ்சாயத்தாரிடம் பிரச்சனை செய்தனர். இதனால் இரண்டு கிராமத்தார்களும் பெரிய அளவில் மோதிக் கொள்ளவும் தயார் நிலையில் இருந்தனர். அதனைத்தடுத்து சமாதானப்படுத்திப் பஞ்சாயத்தார் மீண்டும் கூடிப்பேசி ஒரு முடிவெடுத்தனர். அதன்படி இரண்டு கிராமத்தார்களும் முதல் காளையைக் கட்டி அவிழ்த்து விடலாம் எனத் தீர்ப்பு கூறினர். அதன்படி இன்றும் கருப்பர் கோயில் மஞ்சு விரட்டு நடைபெற்று வருகின்றது.

**பேட்டி எண்:146**

| வழக்குத் தொடுப்பவர் | : | அரசனூர்க்கிராமத்தார் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | சுண்ணாம்பூர் கிராமத்தார் |
| வழக்கு விவரம் | : | மஞ்சுவிரட்டுத் தகராறு |
| ஊர் | : | பூவந்தி |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | ஐந்து ஊர்நாட்டுப் பஞ்சாயத்து |
| நாள் | : | பங்குனி 5, 1985 |
| ஒன்றியம்/வட்டம் | : | திருப்புவனம் |

பூவந்தியில் நடைபெற்ற மஞ்சுவிரட்டில் அரசனூர் கிராமத்தைச் சேர்ந்த இளைஞர்களுக்கும் சுண்ணாம்பூர் கிராமத்தைச் சேர்ந்த இளைஞர்களுக்கும் மாடு பிடிப்பதில் மோதல் ஏற்பட்டது. இரண்டு கிராமத்தார்களும் ஒரே சாதியைச் சேர்ந்தவர்கள். அந்தக் கலவரத்தைக் கேட்டுக்கொடுக்க வேண்டுமென்று அரசனூர்க் கிராமத்தார் ஐந்து ஊர் நாட்டு நாட்டாமையிடம் பண்டாரம் மூலமாக ஓலை கொடுத்து அனுப்பினர். அதன்படி 1985 ஆம் ஆண்டு இடமாகிய திருமாஞ்சோலையில் பஞ்சாயத்து நடைபெற்றது. ஏனாதி, பூவந்தி, கீரனூர், மடப்புரம், செம்பூர் உள்ளிட்ட அஞ்சூர் நாட்டுக்கு உள்ளடக்கிய 60 கிராமங்களும், அதற்கு எதிராக நான்கு ஊர் நாட்டு தலைக்கிராமம் தமராக்கிக்கிராமம் தலைமையிலும் மக்கள் கூடினர். இருதரப்பிலும் தலா 100 பேர்கள் மட்டுமே கூடிப் பேச வேண்டும் என்றும், மற்றவர்கள் ஒதுங்கியிருக்கவேண்டுமென்றும் முடிவு செய்தனர். அதன்படி இருதரப்பிலும் தலா 100 பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு அவர்கள் சேர்ந்து நியாயம் பேசினர். அந்தக் கூட்டம் எந்த முடிவினையும் எட்டாமல் முடிவடைந்தது. இன்றும் இவ்விரு நாட்டுத் தலைவர்களின் பிரச்சனையில் இவ்விரு நாட்டைச் சேர்ந்த கிராமங்களின் மக்களும் தங்களுடைய சொந்தங்களை இழந்து வாழ்கின்றனர்.

**பேட்டி எண்:147**

| வழக்குத் தொடுப்பவர் | : | சாத்தாத்தன்குடி கிராமத்தார் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | நேமத்தம்பட்டிக் கிராமத்தார் |
| வழக்கு விவரம் | : | கிராம மோதல் (நாய்ச்சண்டை) |
| ஊர் | : | பிள்ளையார்பட்டி |
| சாதி | : | அனைத்து பிரிவினரும் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | நாட்டுப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஆவணி 20, 1999 |
| ஒன்றியம்/வட்டம் | : | திருப்பத்தூர் |

சாத்தாத்தன்குடிக் கிராமத்தைச் சேர்ந்த நாயை நேமத்தம்பட்டிக் கிராமத்தைச் சேர்ந்த ஒருவன் எரித்துவிட்டதால் ஏற்பட்ட வாய்த் தகராறு அவ்விரண்டு கிராமங்களின் மோதலாக மாறியது. இதன் காரணமாக பக்கத்து ஊர் நாட்டார்கள் 20பேரைக் கொண்டு நாட்டுப்பஞ்சாயத்து 1999 ஆம் ஆண்டு ஆவணி மாதம் 20ம் தேதி நாட்டுப்பஞ்சாயத்து இரண்டு கிராமங்களுக்கும் பொதுவான பிள்ளையார் பட்டியில் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார் இரண்டு கிராமங்களையும் சேர்ந்த முக்கியத் தலைவர்களிடம் விசாரித்தார். இரண்டு கிராமங்களையும் சேர்ந்தவர்கள். மோதுவது தவறு என்றும் இனிமேல் பகையை மறந்து ஒற்றுமையாக இருக்க வேண்டுமென்றும் தீர்ப்புகூறி இரண்டு ஊர்க்காரர்களையும் சமாதானப்படுத்தி பஞ்சாயத்தார் அனுப்பி வைத்தனர்.

**பேட்டி எண்:148**

| வழக்குத் தொடுப்பவர் | : | கண்டாங்கிப்பட்டிக் கிராமத்தார் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | பெருமாள்மகன் |
| வழக்கு விவரம் | : | மீன்பிடித்தலில் பிரச்சனை |
| ஊர் | : | கண்டாங்கிப்பட்டி |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | நாட்டுப்பஞ்சாயத்து |
| நாள் | : | ஐப்பசி 26, 1995 |
| ஒன்றியம்/வட்டம் | : | சிவகங்கை |

கண்டாங்கிப்பட்டிக் கிராமத்தார் பக்கத்திலுள்ள புளிக்கண்மாயில் பல ஆண்டுகளாக மீன்பிடித்து வந்தனர். புளிக்கண்மாய்க் கிராமாத்தார் திடீரெனத் தங்களுக்குத்தான் மீன்பிடிக்கும் உரிமையுண்டு எனத் தாவாச் செய்தனர். இதன் காரணமாகக் கண்டாங்கிப்பட்டிக் கிராமத்தார் 1995 ஆம் ஆண்டு ஐப்பசி மாதம் 26ஆம் தேதி வழக்குத் தொடுத்தனர். ஆதலால் அன்று பகல் 10.00 மணிக்குத் தமராக்கியில் நாட்டுப்பஞ்சாயத்தார் தலைமையில் நாட்டுக்கூட்டம் கூட்டப்பட்டது. பஞ்சாயத்தார் முதலில் கண்டாங்கிப்பட்டிக் கிராமத்தாரை விசாரித்தனர். அவர்கள் பஞ்சாயத்துத் தலைவரிடம் பல வருடங்களாக நாங்கள் தான் புளிக்கண்மாயில் மீன்பிடித்து வருகின்றோம். கண்மாய்ப் பாசனம் முழுவதும் எங்கள் நிலங்களுக்குத்தான் சொந்தமாக உள்ளது. கண்மாய் உடைந்த போது எங்கள் கிராமத்தார்கள் தான் சென்று அடைத்தார்கள், இதற்கு மாவட்ட ஆட்சித் தலைவரே சாட்சியாக உள்ளார். இதனை நீங்கள்தான் கேட்டுக்கொடுக்க வேண்டுமென்று முறையிட்டனர். பஞ்சாயத்தார் புளிக்கண்மாய்த் தலைவர் பெருமாள் மகனை அழைத்து விசாரித்தனர். பின்னர் பஞ்சாயத்தார் தங்களது தீர்ப்பில் கண்மாய்ப் பராமரிப்பு, பாசனம் முதலிய அனைத்தும் பல வருடங்களாகக் கண்டாங்கிப்பட்டிக் கிராமம் செய்து வந்திருப்பதால், மீன்பிடிக்கும் முழு உரிமையும் அக்கிராமத்திற்கே தரப்படுகின்றது எனத் தீர்ப்புக் கூறினர். புளிக்கண்மாய்த் தலைவருக்கும் கிராமத் தலைவருக்கும் மீன்கொடுக்க விரும்பினால் கொடுக்கலாம். ஆனால் யாரும் யாரையும் கட்டாயப்படுத்தும் உரிமையில்லை எனத் தீர்ப்பில் தெளிவாகக் கூறினர்.

**பேட்டி எண்:149**

| வழக்குத் தொடுப்பவர் | : | புதுவளவுக்கிராமத்தார் |
|---|---|---|
| குற்றம் சாட்டப்பட்டவர் | : | அம்மாச்சி |
| வழக்கு விவரம் | : | ஊரைவிட்டு ஒதுக்கி வைத்தல் |
| ஊர் | : | புதுவளவு |
| சாதி | : | கள்ளர் |
| பஞ்சாயத்து அமைப்பு | : | கிராமபஞ்சாயத்து |
| நாள் | : | புரட்டாசி 10, 1991 |
| ஒன்றியம்/வட்டம் | : | இளையான்குடி |

புதுவளவுக் கிராமத்தார் அக்கிராமத்தைச் சேர்ந்த அம்மாச்சி மகள் திருமணத்திற்கு யாரும் செல்லக்கூடாது என 1991 ஆம் ஆண்டு புரட்டாசி மாதம் 10ம் தேதி வழக்குத் தொடர்ந்தார்கள். இதன்காரணமாக அன்று பகல் 10.00 மணிக்குக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டப்பட்டது. அம்மாச்சி என்பவள் ஊரில் யாருக்கும் மதிப்புக் கொடுக்காமல் அடங்காப்பிடாரியாகத் திரிகின்றாள். அவளை ஊரைவிட்டு ஒதுக்கி வைத்துள்ளோம். எனவே அவள் மகள் திருமணத்திற்கு யாரும் செல்லக்கூடாது எனப் புதுவளவுக் கிராமத்து மக்கள் பஞ்சாயத்துத் தலைவரிடம் கேட்டுக் கொண்டனர். தலைவர் அம்மாச்சியைக் கூட்டிவரச் சொல்லி விசாரித்தார், அவள் பஞ்சாயத்துத் தலைவரிடம் இதுவரை நான் ஊர்க்காரர்களை மதிக்காமல் நடந்து கொண்டது தவறு தான், இனிமேல் ஒழுங்காகவும் மரியாதையாகவும் நடந்து கொள்வேன் என்னை மன்னித்து விடுங்கள் தந்தை இல்லாத பெண்ணிற்கு நீங்கள் தான் உதவ வேண்டுமென்று அழுதாள். பஞ்சாயத்துத் தலைவர் அவளைக் கண்டித்து இனிமேல் வாய்த்துடுக்காகப் பேசக்கூடாது எனக் கண்டித்து அவளை மன்னித்து அவள்மகள் திருமணத்தில் ஊர்காரர்கள் கலந்து கொள்ளலாம் எனத் தீர்ப்புக் கூறினர்.